# விவகார சட்ட போதினி.



இது

பெரும்பாலும் பர்மா தேசத்திலுள்ள செட்டிப்பிள்ளைகள் முதலிய

தென்னிந்தியர்களுடைய உபயோகத்திற்காக

அப்பர் பர்மா, பின்மனுவிலிருக்கும்

ஐகோர்ட்டு வக்கீலும் அட்வோகேட்டுமான

**என். எஸ். அய்யர், B.A., B.L.**

அவர்களால்

எழுதப்பட்டது.



குற்றங் களைந்தும் குணம் அளைந்தும்—வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.





சென்னை:

தாம்ஸன் அண்டு கம்பெனி

மினெர்வா அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1911

# பொருளடக்கம்.

# முகவுரை.

திரைகடல் ஓடியும் திரவியம் தேடு என்பதற்கேற்ப தென்னிந்தியாவில், மதுரை ராமநாதபுரம் ஜில்லாக்களிலும், புதுக்கோட்டை சமஸ்தானத்திலும் உள்ள செட்டிமார்கள் பர்மா தேசத்தில் பணம் லேவாதேவி (கொண்டு விலை) செய்து ஏராளமான திரவியம் சம்பாதித்தார்களென்பது யாவருக்கும் தெரிந்த விஷயமே. இருந்தாலும் சென்ற சுமார் 6, 7 வருஷங்களாக செட்டிப் பிள்ளைகளின் கடைகள் நிலைமைகெட்டுத் தடுமாறுவதை இல்லை யென்று ஒருவரும் சொல்லத் துணிவரென்று நான் நம்பவில்லை. ஆதியில் அவர்கள் கடைகளிருந்த மேன்மையான ஸ்திதியிலிருந்து தற்கால நிலைமைக்கு வந்ததின் காரணங்களையும், பிரதி கணக்குக்கும் முந்தி லாபம் கட்டிக்கொண்டு போனவர்கள், தற்காலம் நஷ்டத்தையே பெரும்பாலும் அடைந்தும் சொற்ப லாப மட்டில் கிடைத்தால் போதுமென்று தப்பி வழி ஓட நினைக்கும் காரணங்களையும் முழுவதும் இந்த விடத்தில் எடுத்துச் சொல்ல வேண்டியது அனுவசியமாயிருந்தபோதிலும், இந்த புஸ்தகம் வெளியிட்ட விஷயம் சம்பந்தப் பட்டவரையில் அவைகளை ஒருவாறு சுட்டிக் காட்டுவது இன்றியமையாததாயிருக்கிறது.

ஆரம்பத்தில் சொல்ப கடைகள் இங்கு இருந்தன. வரவர அந்தக் கடைகளுக்கு ஏற்பட்ட பெருத்த லாபங்களைக் கண்டும், கேட்டும் பெருமுச்செரிந்து அப்பர் பர்மாவிலும், லோயர் பர்மாவிலும் ஒவ்வொரு ஊரிலும் கடைகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனதுபற்றி இவ்வளவு கடைகளுக்கும் தகுந்த ஏஜண்டுகள் அனுப்பினுலொழிய, எந்தவிதமாய் வேலை நன்றாய்ச் செய்ய முடியும்? இவ்விடம் அனுப்பும் ஏஜண்டுகளைப்பற்றி நான் விஸ்தாரமாய்ச் சொல்லவேண்டிய தவசியமில்லை. வயது முதிராத

வாலிபர்களும் அனுபோகமும், சட்டத்தேர்ச்சியும் இல்லாதவர்களும், பெரும்பாலும் இவ்விடத்திற்கு ஏஜண்டுகளாக அனுப்பப்படுகிறார்கள். சில கடைகளில் யாதொரு ஐவேஜூம் இல்லாத ஒருவனுக்கு ஆயிரக்கணக்கான தொகைகளைக் கடன் கொடுக்கிறார்கள். அந்த விதம் கொடுக்கும் கடன்களுக்கு ஏஜண்டுகள் அதற்கென்றிருக்கும் அச்சுப்புரோநோட்டு பாரங்களில் சரிவர பூர்த்திசெய்து வாங்குகிறார்களு மில்லை. அவைகளில் தேதி போட்டிருந்தால், தொகை போடாமலும், தொகைபோட்டிருந்தால், தேதி போடாமலும், இரண்டும் போட்டிருந்தால் வட்டி போடாமலும், இவை எல்லாம் போட்டிருந்தால் ஆசாமி தன் உண்மையான பெயரைப் போடாமலும், இருந்து வருவது ஏஜெண்டுகளும் அறிந்த விஷயமே. அவ்வித புரோநோட்டுகளின் பேரில் வியாஜ்ஜியம் கொண்டுவந்தால் ஏதாவது ஒரு காரணத்தை முன்னிட்டு, தள்ளுபடியாய் விடுகிறது. சில ஏஜண்டுகள் ஷை புரோநோட்டுகளில் எழுதவிட்டிருக்குமிடத்தில் தாங்களே நல்ல எண்ணத்துடன் பூர்த்திசெய்தாலும், அதன் பேரில் கொண்டுவரும் தாவாக்களும் திருத்தப்பட்ட காரணத்தால் சட்ட விரோதமாக போய்விட்டதென்று தள்ளுபடி செய்யப்படுகிறது. சில ஏஜண்டுகள் 10,000, 20,000 ரூபாய்க்கு எழுதிவாங்கும் அசையாப்பொருள் மார்ட்கேஜ் பத்திரங்களை இரண்டு சாட்சிகள் இல்லாமல் எழுதிவாங்குகிறார்கள். அந்தப் பத்திரங்களின்பேரில் கொண்டுவரும் வியாஜ்ஜியங்களில் எந்த விதத்தில் சொத்தைப் பொறுத்து டிக்ரி கொடுக்கக்கூடும்? சில கேசுகளில் எழுதி வாங்கப்பட்ட பந்தகப் பத்திரங்களை ரிஜிஸ்டர் செய்யாமல் சும்மாயிருந்து விடுவதுடன், மார்ட்கேஜ் பத்திரம் என்று நினைத்து மூன்று வருஷத்திற்குமேல் பிராது செய்கிறார்கள். ரிஜிஸ்டர் பத்திரங்கள் உள்ள சில கேசுகளில் 6 வருஷத்திற்குமேல் வியாஜ்ஜியம் தொடருவதால் கொதுவை சொத்து விற்று தங்களுக்கு பாக்கி இருக்கும் கடனுக்காக ஆளைப் பொறுத்து டிக்ரி வாங்க இசைகிறதில்லை. மேலும் ரிஜிஸ்டர் பத்திரத்தில் கண்ட சொத்து போபாயினு (பூர்வீக

சொத்து) அல்லது அயாடோவா (கவர்ன்மெண்டு சொத்து) என்றும் விசாரியாமல் கண்மூடித்தனமாய்ப் பத்திரம் எழுதி வாங்குகிறார்கள். அயாடோ நிலத்தின்பேரில் டிக்ரி வாங்க முடியாதாகையால், ஆளைப்பொறுத்து மட்டும் டிக்ரி வாங்க முடியும். இது மாத்திரமல்ல. நாலு பேர்களிடம் பத்திரத்தை எழுதி வாங்கி அவர்களில் ஒருவரைக்கொண்டு மட்டில் ரிஜிஸ்டர் செய்து கொள்ளுகிறார்கள். அந்தக் கேசிலும் எந்தவிதம், மற்ற மூவர்களைக் கட்டுப்படுத்தி ஏஜண்டுகள் டிக்ரி வாங்க முடியும் ?

இது நிற்க, அதிர்ஷ்ட வசத்தால் ஒரு கேசில் டிக்ரி ஏற்பட்டாலும், அதற்கு வேண்டிய பிந்திய நடவடிக்கைகள் காலாகாலத்தில் சுறுசுறுப்புடனும், கவனத்துடனும் நடத்தாததால் பெருத்த நஷ்டம் ஏற்பட்டிருப்பது எனக்கு சொந்தத்திலேயே தெரியும். உதாரணமாக :—ஒரு கேசில் பங்கு வீதம் கிடைக்கும்பொருட்டு நிறைவேற்றும் நடவடிக்கையில் தொகையை வைத்துக்கொண்டிருக்கும் கோர்ட்டாருக்கு அரை ரூபாய் செலவு செய்து காலாகாலத்தில மனுசெய்யத் தவறியதால் 3,000 ரூபாய் நஷ்டமாய்ப் போய்விட்டது. இந்த விதம் உதாரணங்களை விரிக்கிற் பெருகும். இப்போது சொல்லிய உதாரணங்கள் யாவற்றும் யுக்தியாய் எடுத்து எழுதப்பட்டவைகளல்ல. என் வக்கீல் ஹோதாவில் இந்த பர்மா தேசத்தில் என் அனுபோகத்தில் தென்பட்டதைத் தான் எடுத்துக் கூறியிருக்கிறேன்.

மேற்கண்டவிதம் முதலாளிகளுக்கு கூடியவரையில் நஷ்டம் நேரிடாதபடிக்கு ஏஜெண்டுகள் சட்ட விஷயங்களை எளிதில் தெரிந்துகொண்டு நடவடிக்கைகளைச் சரிவர நடத்த வுதவி செய்யும், எண்ணங்கொண்டு இப்புஸ்தகம் எழுதலாயினேன். இப்புஸ்தகம் 18 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இந்த தேசத்தில் வைக்கப்பட்டிருக்கும் கடைகளில் சிலவைகள் பலர் கூட்டாகச் சேர்த்து வைத்திருப்பதால் முதலாவது அத்தியாயத்தில் கூட்டுப்பங்கைக் குறித்து எழுதப்பட்டிருக்கிறது.

அவர்களால் அனுப்பப்படும் ஏஜண்டுகளுக்குக் கொடுக்கும் அதிகாரத்தைப் பற்றியும், அவர்களிடமிருந்து தாங்கள் எழுதி வாங்கும் சம்பளச்சீட்டுகளைப் பற்றியும் இரண்டாவது அத்தியாயத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. 3-வது அத்தியாயம் ஷை ஏஜண்டுகள் இவ்விடத்தில் தங்களுக்குக் கொடுத்திருக்கும் அதிகாரத்தை ஒட்டிச் செய்யவேண்டிய காரியங்களைக்கூறுகிறது. பெரும்பாலும் ஏஜெண்டுகள் ஆசாமிக்காரர்களுக்குக் கடன் கொடுத்து எழுதி வாங்கும் புரோநோட்டுகளைப்பற்றி 4-வது அத்தியாயத்திலும், நகைகளின்பேரில் கடன் கொடுப்பதைப் பற்றி 5-வது அத்தியாயத்திலும், மார்ட்கேஜ், சிக்யூரிட்டி, சாஸனம் இவைகளின்பேரில் கடன் கொடுப்பதை 6-வது அத்தியாயத்திலும்காணலாம். வெகுவாய் ஆசைப்படும் வட்டியின் சம்பந்தமான யாவற்றின் விவரங்களையும் 7-வது அத்தியாயத்தில் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆசாமிக்காரர்களால் திரும்பிகொண்டுவந்து கொடுக்கப்படும் தொகைகளை வரவு வைக்கவேண்டிய விஷயங்களைப்பற்றி 8-து அத்தியாயத்தில் காணலாம். பத்திரங்களில் ஜாமீனக கையெழுத்து செய்யும் ஜவாப்தாரிகளைக் குறித்து 9-வது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றது. பொதுவாக உடன்படிக்கை முதலிய கான்ட்ராக்டுகளை 10-வது அத்தியாயத்தில் எடுத்தெழுதப்பட்டிருக்கின்றது. ஆதரவுகள் எவ்வளவு ரூபாய் கிரயமுள்ள ஸ்டாம்பு தாளில் எழுதவேண்டியது என்பது 11-வது அத்தியாயத்தில் தெரிந்து கொள்ளலாம். அதற்கு அடுத்த அத்தியாயத்தில் ரிஜிஸ்ட்ரேஷன் சம்பந்தமாயுள்ள எல்லா விஷயங்களும் கூறப்பட்டிருக்கின்றன. லாயர் நோட்டீஸ் கொடுத்த பிறகு ஆசாமிக்காரர்களின்பேரில் வியாஜ்ஜியம் கொண்டுவரவேண்டியதிருந்தால் அப்படி கொண்டு வருவதற்கு பிடிக்கும் வியாஜ்ஜியச்செலவுகளை 13-வது அத்தியாயத்தில் அண்டித்திருக்கும் அட்டவணையால் தெரிந்து கொள்ளலாம். வியாஜ்ஜியங்கள் தொடரவோ, மனுக்கள் கொடுக்கவோ, அப்பீல் ரிவ்யூ, ரிவிஷன் முதலானதுகள் செய்யவோ, எவ்வளவு காலத்

திற்குள் செய்யவேண்டு மென்பது 14-வது அத்தியாயத்தில் எழுதப்பட்டிருக்கும் காலாவதி நிர்ணயச்சட்டத்தால் அறிந்து கொள்ளக்கூடும். அந்தவிதம் தொடரப்படும் விவகாரங்களில் விடவேண்டிய கணக்கு முதலான எழுத்து சாட்சியம், வாய் மொழி சாட்சியம் இவைகளைப்பற்றி 15-வது அத்தியாயத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. கோர்ட்டில் பிராது செய்வது முதல் டிக்கிரிவாங்கி நிறைவேற்றி சொத்தை ஜப்தி செய்து ஏலத்துக்குக் கொண்டுவந்து தங்கள் டிக்ரி தொகைகளை வசூலிக்கும் வரையிலுள்ள யாவற்று நடவடிக்கைகளையும் விஸ்தாரமாக 16-வது அத்தியாயத்தில் ஸிவில் புரோஸீஜர் கோடு என்ற தலைப்பின் கீழ் வரையப்பட்டிருக்கின்றன. ரொம்பவும் கஷ்டத்தின் பேரில் டிக்கிரி வாங்கப்பட்ட பிறகு கடனாளிகள் சுலபமாக கொடுக்கும் நீவாளி மனுக்களைப் பற்றி 17-வது அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. செட்டிப் பிள்ளைகளுக்கும் கிரிமினல் நடவடிக்கைகளுக்கும் வெகு தூரமாய் இருந்த போதிலும், ஸிவில் சம்பந்தமான கிரிமினல் விஷயங்கள் மட்டும் கடைசி அத்தியாயத்தில் கோர்த்தெழுதி சேர்க்கப்பட்டிருக்கிறது

மேற் கண்ட அட்டவணையைப் பார்ப்பதைக்கொண்டு செட்டிப் பிள்ளைகளுக்கு அத்தியாவசியமாய் வேண்டிய எல்லா ஸிவில் கிரிமினல் சட்டங்களையும் அதை நன்கு விளக்கும் தீர்ப்புகளுடனும், எளிய நடையில் யாவரும் தெரிந்து கொள்ளும் விதமாய் எழுதப்பட்டிருக்கிறதென்று புலப்படும். தவிர, இந்த பர்மா தேசத்து லா ரிபோர்ட்டுகளில் செட்டிப் பிள்ளைகள் வாதியாகவோ, பிரதிவாதியாகவோ, ஏற்பட்டு பிரசுரிக்கப்பட்டிருக்கும் எல்லாத் தீர்ப்புகளையும், அந்தந்த இடத்தில் எடுத்தெழுதப்பட்டிருக்கின்றன.

பொதுவாய்ச் செட்டிப்பிள்ளைகள் ஆரம்பத்தில் பீசை உத்தேசித்தோ அல்லது வேறு காரணத்தாலோ நடவடிக்கைகளைப் பர்மா லாயர்களைக் கொண்டு நடத்துகிறார்கள். அவர்களுக்கு கேவலம் தீர்ப்புகள் அடங்கிய விருத்திஉரையும் விபரமும் இல்

லாத செக்ஷன்கள் (பிரிவுகள்) மட்டும் அடங்கிய ஊப்படே மட்டில் படித்தவர்கள். அவர்களுக்கு எண்ணிறந்த இங்கலீஷ் லா ரிப்போர்ட்டுகளில் என்ன இருக்கிறதென்றும் தெரியாது. ஷெ ரிப்போர்ட்டுகளிலிருந்து பெரும்பாலும் தீர்மானங்களை இப்புஸ்தகத்தில் இடையிடையே எடுத்தெழுதப்பட்டிருப்பதால் அவசியம் ஏற்படும் காலங்களில் பர்மா லாயர்களுக்கும் எடுத்துச் சொல்லலாம். மேலும் அவர்கள் இந்த புஸ்தகத்தில் கண்டிருக்கும் லா ரிப்போர்ட்டுகளின் பெயரையும் பக்கத்தையும் கோர்ட்டாருக்குத் தெறிவித்தால் அவர்கள் தங்கள் கோர்ட்டிலிருக்கும் புஸ்தகங்களை எடுத்துப் பார்த்துக்கொள்ளலாம்.

ஒவ்வொரு கடைக்கும், கோர்ட்டு நடவடிக்கைகளைப் பார்ப்பதற்கு ஏற்பட்டிருக்கும் பிரதிநபரும் இந்தப்புஸ்தகத்தை வாங்கி படிப்பதுடன் சீட்டு சொக்கட்டான் இடைவிடாமல் விளையாடி வரும் ஏஜெண்டுகளும் கொஞ்ச நேரம் இதில் கவனம் செலுத்தி வந்தால் ரொம்பவும் நன்மை ஏற்படுமென்று கூறத்துணிகின்றேன். இந்தப் புஸ்தகம் எழுதுவதற்காக பிடித்த சுமார் 12 மாச காலத்தையும் இதில் அடங்கிய எல்லா ஸிவில் கிரிமினல் சம்பந்தமான அருமையான விஷயங்களை முன்னிட்டும் இப்புஸ்தகத்திற்கு ஏற்படுத்தி யிருக்கும் விலை அதிகமென்று விஷயம் தெரிந்தவர்கள் நினைக்கமாட்டார்களென்பது திண்ணம். இதில் குற்றம் குறைகள் இல்லாதிருப்பது அசாத்தியமாகையால் நீரைப் பிரித்து பாலைப் பருகும் அன்னப்பறவையைப் போல் இதிலுள்ள குற்றம் குறைகளை க்ஷமித்து, குணத்தைக் கைக்கொள்ளுமாறு, முருகக்கடவுள் திருவருளை முன்னிட்டுப் பிரார்த்திக்கின்றேன்.

திருவல்லிக்கேணி, 16—3—1910. } என். எஸ். அய்யர்.

# இந்தப் புஸ்தகத்தில் பிரஸ்தாபித்திருக்கும் சட்ட ரிப்போர்ட்டுகளின் சுருக்கத்துக்கு விவரம்.

உதாரணம் :—

20. அ. 83. என்பதற்கு இந்தியன் லா ரிபோர்ட்டு அலஹபாத் ஐகோர்ட்டு தீர்மானங்களடங்கிய 20-ம் வால்யம் 83-ம் பக்கம்.
5. ப. 12. ஷை ஷை பம்பாய் ஷை 5-ம் ஷை 12-ம் ஷை
7. க. 27. ஷை ஷை கல்கத்தா ஷை 7-ம் ஷை 27-ம் ஷை
12. ம. 81. ஷை ஷை மதரூஸ் ஷை 12-ம் ஷை 81-ம் ஷை
1. இ. கே. 18 ஷை இந்தியன் கேசுகளடங்கிய 1-வது வால்யம் 18-வது பக்கம்.
ம. லா. ஜ. ஷை மதரூஸ் லா ஜர்ணல் என்னும் சட்ட தீர்மானங்களடங்கிய ரிபோர்ட்டு.
ம. லா. ட. ஷை மதரூஸ் லா டயம்ஸ் ஷை ஷை
ப. லா. ரி. ஷை பம்பாய் லா ரிபோட்டர் ஷை ஷை
அ. வீ. நோ. ஷை அலஹபாத் வீக்லி நோட்ஸ் ஷை ஷை
அ. லா. ஜ. ஷை அலஹபாத் லா ஜர்னல் ஷை ஷை
க. வீ. நோ. ஷை கல்கத்தா வீக்கிலி நோட்ஸ் ஷை ஷை
க. லா. ஜ. ஷை கல்கத்தா லா ஜர்னல் ஷை ஷை
ப. ரி. ஷை பஞ்சாப் ரிக்கார்ட்டு ஷை ஷை
ப. வீ. ரி. ஷை பஞ்சாப் வீக்லி ரிபோர்ட்டு ஷை ஷை
வீ. ரி. ஷை (கல்கத்தா) வீக்லி ரிபோர்ட்டு ஷை ஷை
லோ. ப. ரூ. ஷை லோயர் பர்மா ரூலிங்ஸ் ஷை ஷை
அ. ப. ரூ. ஷை அப்பர்பர்மா ரூலிங்ஸ் ஷை ஷை
நா. வெ. பி. ஷை நார்த்வெஸ்ட் பிராவின்ஸஸ் அதாவது வடமேற்கு மகாண ஐகோர்ட்டு தீர்மானங்கள்.
பர்மா. லா. ரி. ஷை பர்மா லா ரிப்போர்ட்டு சட்ட தீர்மாணங்களடங்கிய ரிபோர்ட்டு.

# விவகார சட்ட போதினி.

## 1-வது அத்தியாயம்.

### கூட்டுப்பங்கைக்குறித்து.

ஏதோ ஒரு வியாபாரத்தில் கூட்டமாய் தங்கள் சொத்தை விற்ருகிலும், கூட்டாய் உழைத்தாகிலும், கூட்டாய் தங்கள் திறமையை உபயோகித்தாகிலும், அதினுல் வருகிற லாபத்தை தங்களுக்குள் பங்கிட்டுக்கொள்வதாக சம்மதிக்கிற நபர்களுக்குள் இருக்கிற சம்பந்தமே கூட்டுப்பங்கென்று சொல்லப்படும். ஒருவரோடு ஒருவர் கூட்டுப்பங்காகப் பிரவேசித்திருக்கிற நபர்கள் தொகுப்பாய் வியாபாரக்கூட்டம் அல்லது பர்ம் என்று சொல்லப்படும். லாபத்தில் ஒருபாகம் பெற்றுக்கொள்வதைக்கொண்டு மாத்திரம் ஒரு ஏஜெண்டு பங்குக்காரனுக பாவிக்கப்படமாட்டான். அந்த உடன் பங்குக்காரரும் கூட்டுப்பங்கு சம்பந்தமாய் செய்யும் வேலை அதை நடத்துவதற்கு அவசியமாகயிருந்தால் அது மற்ற பங்குக்காரர்களையும் கட்டுப்படுத்தும். பங்குக்காரர்களில் ஒருவருடைய அதிகாரத்திற்கு ஏதாவது வரையறை யாதொரு உடன்படிக்கை மூலமாய் ஏற்பட்டிருக்குமாகில், அப்படிப்பட்ட உடன்படிக்கைக்கு விரோதமாய்ச் செய்யப்பட்ட யாதொரு காரியம் அந்த உடன்படிக்கையைத் தெரிந்துகொண்டவர்கள் சம்பந்தப்பட்டவரையில் அந்த வியாபாரக்கூட்டத்தைக் கட்டுபடுத்தாது. பங்கு கூட்டத்தின் க்ஷேமத்திற்காக சில பங்குக்காரர்கள்மட்டில் பங்குக்கூட்டத்தைக் கட்டுபடுத்தும்படியான விதத்தில் சொத்தை ஈடுவைக்கலாம் அல்லது மார்ட்கேஜ் செய்யலாம். 31-ட-206, பங்குக்கூட்டத்

திற்கும் மூன்றும் மனிதர்களுக்கும் அதற்கடுத்த நபர்களுக்கு மிருக்கும் விவகாரங்களை மற்ற பங்குக்காரர்களின் அதிகாரம் இல்லாமல் பஞ்சாயத்கார் தீர்மானம் செய்யும்படி சம்மதம் கொடுக்க முடியாது. 6. இ. கே. 63; 22. அ. 135. பங்குக்கூட்டநிமித்தம் உண்டியல் முதலானதுகள் எழுதிக்கொடுக்கவும், இண்டார்சு செய்யவும் ஒரு பங்குக்காரருக்கு அதிகாரம் உண்டு. 9. ப. லா. ரி. 274. தவிர பங்குக்கூட்டத்திற்கும் மூன்றும் மனிதர்களுக்கும் உள்ள கணக்குகளைத் தீர்க்க அதிகாரமுண்டு. 26-ம-186.

பங்குக்கூட்டத்திற்கு வரவேண்டிய கடனை ஒருபங்குக்காரர் பெற்றுக்கொள்ளலாம். அதற்காக கிரமமான ரசீதும் கொடுக்கலாம். ஆனால் மற்ற பங்குக்காரர்களை மோசம்செய்ய எண்ணி ஒரு பங்குக்காரரும் கடன்காரனும் சேர்ந்து செய்யும் நடவடிக்கை பங்குக்கூட்டத்தைக் கட்டுப்படுத்தாது. 19-ம-471 ; 1. இ. கே. 200 பங்குக்கூட்டம் கொடுக்கவேண்டிய கடனை ஒரு பங்குக்காரர் மட்டில் ஒப்புக்கொண்டால் அப்படி ஒப்புக்கொள்ளுதல் கூட்டத்திற்கு அவசியமான விஷயமென்று ஏற்பட்டாலொழிய அந்தக் கடனுக்கு கூட்டம் சம்பந்தப்பட்டவரையில் புது காலாவதி ஏற்படாது. 26-ப-42. உடனே புரோநோட்டு எழுதிக்கொடுத்தாவது, பிறகு கணக்குப்பார்த்து அந்தவிதம் எழுதிக்கொடுக்கவாவது அல்லது வேறு விதமாய் ஒப்புக்கொள்ள அதிகாரமுண்டு. ஆனால் நல்ல எண்ணத்துடன் செய்திருக்கவேண்டும். 32-அ-51. கடனில் ஒரு பாகத்தை ஒரு பங்குக்காரர் செலுத்துவதால் அது முதல் கூட்டத்தைக் கட்டுபடுத்தும்படியான புது காலாவதி ஏற்படும். ஆனால் அந்தவிதம் செய்ய அதிகாரமிருந்ததென்று ஏற்பட்டாலொழிய புது காலாவதி ஏற்படாது. 2. இ. கே. 309. கூட்டு பிரிந்தபிறகு அந்தவிதம் ஒருவர் ஒப்புக்கொண்டால் கடன் கொடுத்தவனுக்கு பிரிந்த விஷயம் தெரியுமாகில் அவன் கடனுக்கு புதிதான காலாவதி ஏற்படாது. 26-ப-42. பங்குக்கூட்டமானது ஒரு பங்குக்காரர் இறந்துபோவதால் ரத்தாகும்காலத்தில் பாக்கி இருக்கிற பங்குக்காரர் தங்கள் கடனை கொடுக்கவேண்டியது உண்டென்று ஒப்புக்கொள்வதால் இறந்த பங்குக்காரர்களின் வார்சுகளைக் கட்டுபடுத்தாது. 8. ம. லா. ஜ. 261. ஒவ்வொரு பங்குக்காரரும், கூட்டுப்பங்கு சம்பந்தமாய் வியாபாரம் நடந்துகொண்டிருக்கிற வழக்கமான தோரணியில் தான்

பங்குக்காரராய் இருக்கும்போது ஏற்படும் கடன்களுக்கு மட்டில் உத்தரவாதம் செய்யவேண்டும். வியாபாரக்கூட்டத்தின் வேலையை நடத்துவதில் யாதொரு பங்குக்காரனுடைய அஜாக்கிரதையினாலாவது ஏற்படும் நஷ்டத்தைக்குறித்து மூன்றும் மனிதர்களுக்கு ஈடு செய்யவேண்டும். கூட்டுப்பங்கைச்சேர்ந்த காரியத்தாலுண்டாகும் யாதொரு பிரயோசனத்தை ஒரு பங்குக்காரர் அந்த வியாபாரக்கூட்டத்திற்கு சேர்ப்பிக்கவேண்டும். பங்குக்காரர்கள் கூட்டுப் பங்கு வியாபாரத்தை பொதுப்பிரயோசனத்திற்காக நடத்தவும், ஒருவருக்கொருவர் நியாயமாயும், நம்பிக்கையாயுமிருக்கவும், கூட்டுப்பங்கைச்சேர்ந்த சகல காரியங்களையுங்குறித்து உண்மையான கணக்கையும், முழுச்சங்கதியையும், யாதொரு பங்குக்காரருக்காவது அல்லது அவர் வார்சுகளுக்காவது தெரிவிக்கவேண்டும். பங்குக்காரருடைய பாத்தியங்களைப்பற்றி விபரமாய்க்கண்டு உடன்படிக்கை ஏற்பட்டிருந்தால் அந்த உடன்படிக்கையை எல்லாருடைய சம்மதத்தின்பேரில் மட்டில் ரத்து செய்யலாம் அல்லது மாற்றலாம். வேறுவிதமான உடன்படிக்கை இல்லாமலிருந்தால் பங்குக்காரர்களுக்குள் உள்ள சம்பந்தங்கள் அடியில் வருகிற விதிகளின்படி நிர்ணயிக்கவேண்டும்.

(1) கூட்டுப்பங்கு ஆஸ்திக்குள் ஆரம்பத்தில் கொண்டுவரப்பட்டாவது, கூட்டுப்பங்கைச்சேர்ந்த பணத்தைக்கொண்டு வாங்கப்பட்டாவது, அல்லது கூட்டுப்பங்கு வியாபாரத்தின் விஷயங்களுக்குள்ளாக சம்பாதிக்கப்பட்டாவது இருக்கும் சகல சொத்தும் எல்லாப் பங்குக்காரர்களுக்கும் சொந்தமாகும்.

(2) லாப நஷ்டத்தைச் சமமாய்ப் பங்கிட்டுக்கொள்ளவேண்டும்.

(3) கூட்டுப்பங்கு வியாபாரத்தை ஒவ்வொரு பங்குக்காரரும் கூடச்சேர்ந்து நடத்த பாத்தியமுண்டு.

(4) ஒவ்வொரு பங்குக்காரரும் வியாபாரத்தில் ஜாக்கிரதையாக நடக்கவேண்டும். அதற்காகச் சம்பளம் கிடையாது.

(5) சாதாரண சங்கதிகளில் அபிப்பிராயம் வேறுபட்டால் பங்குக்காரர்களில் மெஜாரட்டியார் அபிப்பிராயப்படி தீர்மானம் செய்யவேண்டும். ஆனால் எல்லாப் பங்குக்

காரருடைய சம்மதம் இல்லாமல் வியாபாரத்தின் தன்மையில் ஒரு மாறுதலும் செய்யக்கூடாது.

(6) எல்லாருடைய சம்மதி இல்லாமல் ஒருவரும் அதில் புதிதாய் வேறொருவரையும் பங்குக்காரராகச் சேர்க்கக் கூடாது.

(7) எந்த காரணத்தினாலாவது தான் பங்காயிருப்பதைவிட்டு விட்டால் மற்றப் பங்குக்காரர் எல்லோருக்கும் அந்தக் கூட்டுப்பங்கு ரத்தாய்விடும்.

(8) கூட்டுப்பங்கு இவ்வளவு காலத்துக்கென்று ஏற்பட்டிருந்தாலொழிய ஒரு பங்குக்காரர் எப்போதாவது அதை விட்டுவிடலாம்.

(9) இவ்வளவு காலத்துக்கென்று ஏற்பட்டிருந்தால் அந்தக் கெடுவுகாலத்தில் ஒரு பங்குக்காரர் மற்றவருடைய சம்மதியில்லாமல் விட்டுவிடக்கூடாது. மேலும் அவனைக் கோர்ட்டாருடைய உத்திரவினாலன்றி, எந்தக் காரணத்தைக்கொண்டும், மற்ற பங்குக்காரர்கள் தள்ளக்கூடாது.

(10) இவ்வளவு காலத்துக்கென்று ஏற்பட்டிருந்தாலும், இல்லாவிட்டாலும் ஒரு பங்குக்காரர் இறந்துபோனால் அதனாலேயே அந்தக் கூட்டுப்பங்கு கலைந்துபோகும். ஒரு பங்குக்காரர் வியாஜ்ஜியம் கொண்டுவந்தால் அடியில் வருகிற விஷயங்களில் கோர்ட்டார் கூட்டுப்பங்கைக் கலைத்து விடலாம்:—

(a) ஒரு பங்குக்காரனுக்கு புத்தி மாருட்டமுண்டானால்,

(b) வியாஜ்ஜியம் கொண்டுவரும் பங்குக்காரன் தவிர மற்ற யாதொரு பங்குக்காரர் இன்ஸால்வென்டாக தீர்மானிக்கப்பட்டாலும், அல்லது, அவருடைய சகல சம்பந்தமும், மூன்றும் மனிதருக்குச் சட்டப்படி டிரான்ஸ்பராயிருந்தாலும்,

(c) யாதொரு பங்குக்காரன் கூட்டுப்பங்கில் உடன்படிக்கைப்படி. தான் நடக்க முடியாமல்போனாலும்,

(d) வியாஜ்ஜியம் கொண்டுவரும் பங்குக்காரன் தவிர யாதொரு பங்குக்காரன் கூட்டுவிஷயத்திலாவது, பங்குக்காரர்கள் விஷயத்திலாவது கெடுதல் செய்திருந்தாலும்,

(e) கூட்டுவியாபாரத்தை நடத்துவதால், நஷ்டம் ஏற்படுவதாயிருந்தாலும்;

யாதொரு பங்குக்காரர் மற்ற பங்குக்காரர்களுக்கு தெரிவிக்காமலும், இவர்களுடைய சம்மதியில்லாமலும், அந்த வியாபாரக்கூட்டத்தைச்சேர்ந்த வர்த்தகத்திற்கு போட்டியாகவாவது, பாதகமாகவாவது யாதொரு வியாபாரத்தை நடத்தினுல் அப்படிப்பட்ட வியாபாரத்தால் கிடைக்கும் சகல லாபத்தையும் அவன் அந்த வியாபாரக் கூட்டத்திற்குச் சேர்ப்பிக்கவேண்டும். மேலும் அதனுலே யாதொரு நஷ்டமுண்டானுல் அதை அந்த வர்த்தகக்கூட்டத்திற்கு கட்டிக் கொடுக்கவேண்டும். கூட்டுப்பங்கு கலைந்துபோனபின்பு பங்குக்காரர்களுடைய சுதந்தரங்களும், பொறுப்புகளும், கூட்டுப்பங்கை முடிவுசெய்வதற்கு அவசியமான சகல காரியங்களிலும், முன்போலவே நடந்துவருவதாய் பாவிக்கப்படும். ஒரு வியாபாரக்கூட்டம் கலைந்துபோவதைக்குறித்து பகிரங்கமாய் நோட்டீஸ் செய்யப்பட்டிராத பட்சத்தில் மூன்றும் மனிதர்களைக் கட்டுப்படுத்தாது. கூட்டுப்பங்கு கலைந்துபோவதன்மேலாவது, அற்றுப்போன பின்பாவது, விரோதமான எக்ரிமெண்ட் இல்லாதவனாயில் கோர்ட்டார் அந்தக் கூட்டுப் பங்கின் தொழிலை முடிவுசெய்து அதன் கடன்களை செலுத்துவதற்கு ஏற்பாடு செய்து, மிகுதியை பங்குக்காரர்களுடைய வீதப்படி பாகித்துக்கொடுக்கலாம். கூட்டுப்பங்கின் நிமித்தம் செலுத்தவேண்டிய கூட்டான கடன்களும், யாதொரு பங்குக்காரர் கொடுக்கவேண்டிய பிரத்தியேகமான கடன்களும், இருந்தால் கூட்டுப்பங்கைச்சேர்ந்த சொத்தை அந்த வியாபாரக்கூட்டத்தின் கடன்களைச் செலுத்துவதற்கு முதலில் உபயோகிக்கவேண்டும். ஏதாவது மிகுதியிருந்தால் பின்பு அந்த பங்குக்காரனுடைய பாகத்தை அவன் பிரத்தியேகமான கடனுக்காவது செலுத்தவேண்டும். அல்லது அவனுக்காவது செலுத்திவிடவேண்டும். யாதொரு பங்குக்காரனுடைய பிரத்தியேகமான சொத்தை அவனுடைய பிரத்தியேகமான கடன்களை செலுத்துவதற்கு முதலில் உபயோகிக்கவேண்டும். பின்பு பாக்கி யேதாவது இருந்தால் அந்த வியாபாரக்கூட்டத்தின்

கடன்களை செலுத்துவதற்கு உபயோகிக்கவேண்டும். ஒரு பங்குக்காரருக்கு மற்றவர்கள்பேரில் கூட்டுப்பங்கு விஷயமாய் குறையிருந்தால் கூட்டைக்கலைக்க தான் தாவா கொண்டுவரவேண்டும். 31. ம. 343. கூட்டுவிஷயமாய் அந்தவிதம் தாவா செய்யாமல் எது காரியத்திற்காகவும் மற்றவர்கள்பேரில் தாவா செய்யமுடியாது. இருந்தாலும், ஒரு பங்குக்காரர், கூட்டத்துக்கு கொடுத்த கடனுக்காக மற்ற பங்குக்காரர்கள் எழுதிக்கொடுக்கும் புரோநோட்டின் பேரில் வியாஜ்ஜியம் தொடரலாம். 31. ம. 343. மேலும், ஒரு கேசில் பங்குக்காரர்களிருவரும் செய்துகொண்ட உடன்படிக்கையில் ஒருவர் வேலைக்கு வேண்டிய தொகை முழுவதும் கொடுக்கிறதென்றும், மற்றவர் அது சம்பந்தமாய் வரும் பணம் செக்குகளை அவரிடம் திரும்ப கொடுத்துவிடுவதாய் கண்டிருந்தது. ரூ. 936 - க்கு வந்த செக்கை அதுபோல கொடாததினால் செக்கை எண்டார்சு செய்துகொடுக்கும்படியாவது கொண்டுவந்த வியாஜ்ஜியத்தில் இந்தவிதமான தாவா கொண்டுவரமுடியாதென்று பிரதிவாதி கட்சி சொல்ல, அதை அங்கீகாரம் செய்யவில்லை. 32. ம. 76. தவிர கணக்குக்காகவும், பாகத்திற்காகவும் கொண்டுவரக்கூடிய வியாஜ்ஜியம் காலாவதி யாகிவிட்டாலும், கூட்டுக்கு கடன் கொடுத்தவர்கள் கொண்டுவந்த வியாஜ்ஜியத்தில் பெற்ற டிக்ரி தொகையை முழுவதும் கொடுத்த ஒரு பங்குக்காரராவது, அவர் வார்சாவது தான் மற்றவர்களுக்காக ஜாஸ்தியாகக் கொடுத்த தொகையைக் கைப்பற்ற வியாஜ்ஜியம் தொடரலாம். அதில் பிரதிவாதிகள் கணக்கு பார்த்ததால் அந்தத்தொகை தீர்ந்துபோய்விட்டதென்று கட்சி சொல்லி ரூபிக்கலாம். 28. ம. 344 ; 32. ம. 203. இவ்வளவு வருஷம் வரையில் கூட்டு நடத்திவருவதென்று கண்டிருந்தபோதிலும், அதற்கு முன் கலைந்தாலும் அதுமுதல் 3-வருஷக் கெடுவுக்குள் தான் கணக்குக்காகவும், பங்குக்காகவும் வியாஜ்ஜியம் கொண்டுவரவேண்டும். 11. ப. லா. ரி. 1354. பங்குக்காரர்கள் கணக்கு பார்த்து தீர்த்துக்கொண்டபிறகு ஏதாவது விட்டுப்போயிருந்தால் அது சம்பந்தப்பட்டவரையில்தான் வியாஜ்ஜியம் கொண்டுவரலாமே ஒழிய மறுபடியும் எல்லாக் கணக்குகளையும் பார்க்க கொண்டுவரமுடியாது. அவர்களுக்குள் கலைந்ததால் ஏற்படும் யாதொரு ரசீது அல்லது தஸ்தாவேஜில் எல்லாம் தீர்ந்துபோனதாகக் காணப்பட்டிருந்தாலும் பர

வாயில்லை. 11. க. வி. ரோ. 776. கூட்டுப்பங்கு கலையுமுன் கணக்குக்காக தாவா கொண்டுவரமுடியாது. 9. அ. 120. பிரிந்துபோன கூட்டுப்பங்கின் லாபத்தைக் குறித்து கணக்குக்காகவும், அதன் பங்குக்காகவும், பிரிவினைத்தேதி முதல் மூன்று வருஷத்திற்குள் வியாஜ்ஜியம் கொண்டுவரவேண்டுமென்று இ. வி. அ. 106-வது பிரிவில் சொல்லியிருக்கிறது. கூட்டுப்பங்கு ரிஜிஸ்டர் ஆயிருந்தாலும் மேலே சொன்ன மூன்றுவருஷத்திற்குள்தான் வியாஜ்ஜியம் கொண்டுவரவேண்டும். 22. ம. 14. ஆனால் நஷ்டத்தில் இன்னபங்கு வீதமாய் கொடுக்கிறதென்று கண்டு கூட்டுப்பங்கு பத்திரம் ரிஜிஸ்டராயிருந்து அவர்களுக்குள் தீர்த்துக்கொண்ட கணக்கை அனுசரித்து நஷ்டத்திற்காக பிரதிவாதி கொடுக்கவேண்டிய பாகத்திற்காக கொண்டுவரும் வியாஜ்ஜியத்திற்கு 116-வது பிரிவின்படி 6-வருஷம் காலாவதியுண்டு. இறந்துபோன கூட்டுப்பங்குக்காரரின் வார்சு மற்ற பங்குக்காரரின்பேரில், இறந்தவருடைய பாகத்தைப் பெற்றுக்கொள்ளுவதற்கு கொண்டுவரும் வியாஜ்ஜியமும், மூன்று வருஷத்திற்குள் கொண்டுவரவேண்டும். 9. க. வீ. ரோ. 537. வாதி கூட்டுப்பங்குக்காரரென்றும், கோர்ட்டார் கூட்டுப்பங்கிருக்கிறதென்றும் கண்டுபிடித்தால் கணக்கு பார்க்கவேண்டுமென்று கொண்டுவரும் வியாஜ்ஜியத்திற்கு 120-வது பிரிவின்படி 6 - வருஷம் காலாவதியுண்டு. 2. அ. வீ. ரோ. 87. கூட்டிலிருந்து விலக்கப்பட்ட பங்குக்காரர், கூட்டை ரத்துபண்ணவும், தன் பங்குக்காகவும் 120-வது பிரிவின்படி விலக்கப்பட்ட தேதியிலிருந்து 6 - வருஷத்திற்குள் வியாஜ்ஜியம் கொண்டுவரவேண்டும். 12. க. வீ. ரோ. 455. கூட்டுப்பங்குக்காரர்களின்பேரில் கொண்டுவரும் வியாஜ்ஜியங்களைப்பற்றி சி. பு. கோ. 30 - வது ஆடரில் பார்க்கலாம். வாதியாயிருந்தாலும், பிரதிவாதியாயிருந்தாலும், பங்குக்கூட்டத்தின் பேரால் நடவடிக்கை நடத்தலாம். அப்படி வியாஜ்ஜியம் வியாபாரக்கூட்டத்தின் பேரால் கொண்டுவருகிற விஷயத்தில் பிரதிவாதி மனு செய்துகொள்வதின்பேரில் பங்குக்கூட்டத்தைச்சேர்ந்த எல்லோருடைய பெயர்களையும், இருப்பிடங்களையும் வாதி எழுத்துமூலமாய்த் தெரிவிக்கவேண்டும். யாராவது ஒருவர் யாதொரு கூட்டுப்பங்கின்பேரில் வியாஜ்ஜியம் தொடர்ந்தால் கோர்ட்டார் உத்திரவின் பிரகாரம் கூட்டுப்பங்குக்காரர்கள் பேரிலாவது பிரிட்டிஷ் இந்தியாவுக்குள்ளே

ஷை பங்குக்காரர்கள் தொழில் நடத்தும் இடத்தில் சம்மன் சேர்ப்பிக்கிறகாலத்தில் அந்தத்தொழில் யார் வசத்தில் அல்லது நிர்வாகத்திலிருக்கிறதோ அவரிடத்திலாவது சேர்ப்பிக்கவேண்டும். ஆனால் ஷை கூட்டுப்பங்கு வியாஜ்ஜியம் கொண்டுவருவதற்கு முன்னமேயே கலைந்துவிட்டதென்று வாதிக்குத் தெரிந்தால், பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள எந்த பங்குக்காரர்களைக் கட்டுப்படுத்தவேண்டுமென்று கேட்கிறானோ அப்படிப்பட்ட ஒவ்வொருவருக்கும் சம்மன் கொடுக்கவேண்டும். மேல்கண்டபடி யாதொரு வியாபாரக் கூட்டத்தின் பெயரால் வியாஜ்ஜியம் கொண்டுவந்தாலும் சரி, கொண்டுவரப்பட்டாலும் சரி, யாதொரு வியாஜ்ஜியம் கொண்டுவரப்படுவதற்கு முந்தியோ, அது பைசல் ஆகாமலிருக்கையிலோ, அப்படிப்பட்ட பங்குக்காரர்களில் யாராவது இறந்துபோனால் இறந்தவர்களுடைய வாரிசுகளை வியாஜ்ஜியத்தில் கட்சிக்காரராகச் சேர்க்க அவசியமில்லை. ஆனால் அந்த வாரிசு தன்னைக் கட்சிக்காரராகச் சேர்த்துக்கொள்ளவோ, அல்லது இறந்தவர்போக, ஜீவித்திருக்கும் பங்குக்காரர்கள்பேரில் வியாஜ்ஜியம் கொண்டுவரவோ பாத்தியமுண்டு. கூட்டுப்பங்கின் பிரிவினைக்காவது, கணக்கெடுக்கப்படுவதற்காவது கொண்டுவரப்பட்ட வியாஜ்ஜியமாயிருந்தால் முடிவான டிக்ரி செய்வதற்குமுன் கோர்ட்டார் கட்சிக்காரர்களுக்கு வீதப்படிக்குள்ள பாகங்களை நிச்சயித்து இன்ன தினத்தில் பிரிவினை செய்யவேண்டும் அல்லது பிரிவினை செய்தாய்விட்டதாக எண்ணப்படுமென்று ஒரு தினத்தைக்குறித்தும், தங்களுக்குத் தோணும் கணக்குகள் எடுக்கவேண்டுமென்று உத்திரவுசெய்து சி. பி. கோ. 20-வது ஆடர் 15-வது பிரிவின்பிரகாரம் ஒரு பிரதம டிக்ரி பண்ணலாம். யாதொரு கூட்டுப்பங்குக்காரருடைய சொத்தை, வியாபாரக்கூட்டத்தின் மேலாவது, அந்த வியாபாரக்கூட்டத்தின் பங்குக்காரர்களென்னும் ஹோதாவிலே அந்தப் பங்குக்காரர்கள் மேலாவது பிறப்பிக்கப்பட்ட டிக்ரியல்லாமல் வேறே யாதொரு டிக்ரியை நிறைவேற்றும் பொருட்டு ஜப்தி பண்ணவுங்கூடாது. விற்பனை செய்யவும்கூடாது. யாதொரு பங்குக்காரர்மேல் பிறப்பிக்கப்பட்ட டிக்ரியை வைத்திருப்பவர் விண்ணப்பம் செய்துகொள்வதின்பேரில், கோர்ட்டார் அந்தக் கூட்டுப்பங்கின் சொத்திலும், லாபங்களிலும், ஷை பங்குக்காரருக்குள்ள பாத்தியதையின்மேல் டிக்ரியின்படி பாக்கியாயிருக்

கும் தொகையைச் செலுத்துவதற்கான பொறுப்பேற்றி உத்திரவு செய்யலாம். மேலும், ஷை கோர்ட்டார் (ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்டோ அல்லது சேர்ந்துவருகிறதாகவோ யிருக்கிற) லாபங்களில் அந்தப் பங்குக்காரர் பாத்தியமாயுள்ள பங்குக்காகவும், அந்தக் கூட்டுப்பங்கு விஷயமாய் அவருக்கு வந்துக்கொண்டிருக்கக்கூடிய வேறே யாதொரு பணத்துக்காகவும், ஒரு ரிஸீவரை மேலே கண்ட உத்திரவு மூலமாகவோ அல்லது பிற்பாடு செய்யப்படும் யாதொரு உத்திரவுமூலமாகவோ நியமிக்கலாம். அன்றியும், ஷை கோர்ட்டார் கணக்குகள் தயார்செய்யும்படிக்கும் விசாரணைகள் நடத்தும்படிக்கும், கட்டளையிட்டு, மேலே கண்ட பாத்தியதையை விற்பனை செய்வதற்கான உத்திரவையாகிலும், வேறே உத்திரவையாகிலும் பிறப்பிக்கலாம். ஷை உத்திரவுக்காகச் செய்துகொள்ளப்படும் ஒவ்வொரு விண்ணப்பத்தையும், தீர்ப்பான கடனாளிக்கும், அவருடைய கூட்டுப்பங்குக்காரர்கள் அல்லது அவர்களில் யார் பிரிட்டிஷ் இந்தியாவுக்குள் இருக்கிறார்களோ அவர்களுக்கும் சேர்ப்பிக்கவேண்டும். பொறுப்பேற்றப்பட்ட பாத்தியதையை மீட்டுக்கொள்ளவோ, விற்பனைசெய்யும்படிக் கட்டளை யிடப்பட்டிருக்கிறபட்சத்திலே அதைக் கிரயத்திற்கு வாங்கிக்கொள்ளவோ, மற்ற பங்குக்காரர் அல்லது பங்குக்காரர்களுக்கு இஷ்டமிருந்தால் அவர்கள் எப்போதாகிலும் அந்தப்படியே செய்யலாம். தீர்ப்பான கடனாளி யொரு பங்குக்காரரா யிருக்கும் யாதொரு நபரால் செய்துக்கொள்ளப்படும், ஒவ்வொரு விண்ணப்பத்தையும், டிக்ரி பெற்றவருக்கும், தீர்ப்பான கடனாளிக்கும், மற்ற பங்குக்காரர்களிலே விண்ணப்பத்திற் சேராமல் பிரிட்டிஷ் இந்தியாவுக்குள்ளே யிருக்கும் பங்குக்காரர்களுக்கும் சேர்ப்பிக்கவேண்டும்.

யாதொரு வியாபாரக்கூட்டத்தாரின்மேல் டிக்ரி செய்யப்பட்டிருக்கிற விஷயத்திலே,—

(1) கூட்டுப்பங்கைச்சேர்ந்த யாதொரு சொத்தின்மேலாவது,

(2) தம் பெயராலேயே ஆஜராயிருக்கிற அல்லது தாம் கூட்டுப்பங்குக்காரரென்று வாதப்பத்திரங்களிலே ஒத்துக்கொண்டிருக்கிற, அல்லது கூட்டுப்பங்குக்காரரென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிற, யாதொரு நபரின்மேலாவது,

(3) யாதொரு நபரைக் கூட்டுப்பங்குக்காரராகப் பாவித்து அவருக்குத் தனியாய் சம்மன் சேர்ப்பிக்கப்பட்டிருந்தும், அவர் ஆஜராகத் தவறியிருந்தால் அவர்மேலாவது, ஷை டிக்ரியை நிறைவேற்றும்படி உத்திரவு பண்ணலாம்.

2, 3-ல் சொல்லியிருக்கும் நபரல்லாத வேறே யாதொரு நபர் ஷை வியாபாரக்கூட்டத்திலே, கூட்டுப்பங்குக்காரரா யிருப்பதனல் அவர்மேல் டிக்ரியை நிறைவேற்றுவிக்கத் தமக்குச் சுதந்தரமுண்டென்று டிக்ரி பெற்றவர் சொல்லிக்கொண்டால், அவர் அந்த டிக்ரியை ஜாரிசெய்த கோர்ட்டாரிடத்தில் அனுமதிக்காக மனு பண்ணிக்கொள்ளலாம். அப்போது அந்த கோர்ட்டார், அந்த பொறுப்பைப்பற்றி எவ்வித விவாதமும் இல்லாவிட்டால், அந்தப்படி அனுமதி கொடுக்கலாம். அல்லது, அந்த பொறுப்பைப்பற்றி விவாதமிருக்கிறபட்சத்தில் மேலே கண்ட நபரின் பொறுப்பைக்குறித்து, ஒரு வியாஜ்ஜியத்திலே யாதொரு விவாத அம்சத்தைக்குறித்து எப்படி விசாரணைபண்ணித் தீர்மானம் செய்யலாமோ அப்படியே தீர்மானம் செய்யவேண்டுமென்று உத்திரவு பிறப்பிக்கலாம். இந்தப்படி விசாரணை பண்ணித் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிற விஷயத்திலே, அதன்மேல் செய்யப்படும் உத்திரவானது, அப்பீல் சம்பந்தமாகவோ, மற்றபடியோ, அது ஒரு டிக்ரி இருந்தாற்போலவே செலாவணி யாவதோடுங்கூட, அப்படி டிக்ரியாயிருந்தால் என்ன ஷரத்துக்குட்பட்டிருக்குமோ அந்த ஷரத்துகளுக்கே உட்பட்டிருக்கவேண்டும். கூட்டுப்பங்கைச்சேர்ந்த யாதொரு சொத்துக்கு விரோதமாகவன்றி மற்றப்படி யாதொரு வியாபாரக்கூட்டத்தைச்சேர்ந்த யாதொரு கூட்டுப்பங்குக்காரர் ஆஜராகி உத்திரவு சொல்லும்படி அவருக்குச் சம்மன் சேர்ப்பிக்கப்பட்டிருந்தாலொழிய அந்தக் கூட்டத்தார்மேல் செய்யப்பட்ட டிக்ரியினல் ஷை பங்குக்காரருக்கு விடுதலையாவது, பொறுப்பாவது, வேறே விதமான பாதகமாவது உண்டாகமாட்டாது. கூட்டுக்கடையிலுள்ள கணக்குப் புஸ்தகங்களிலுள்ள பதிவுகள் பொதுவாக எல்லாப் பங்குக்காரர்களையும் கட்டுப்படுத்தும். ஆனாலும் எவர் அவைகளைச் சரியல்லவென்று முறையிடுகிறார்களோ அவர்கள் அதைக் கிரமமாக ருஜுப்பிக்கவேண்டும். அதுவிஷயம் செவ்வையாய் ருஜு செய்யாது சந்தேகமிருந்தால் அது அவருக்கு விரோதமாகத்தான்

கோர்ட்டார் நிர்ணயம் செய்வார்கள். அவர்தான் ரொம்பவும் கவனித்துப் பார்க்கிறதில்லையென்றாவது, மற்றவர்கள் மானேஜ்பண்ணி வந்ததால் தன்னைக் கட்டுப்படுத்தாதென்றாவது சொல்லமுடியாது. 10. ப. லா. ரி. 811.

---

# 2 - வது அத்தியாயம்.

## பவரும் சம்பளச் சீட்டும்.

இந்தியாவிலுள்ள முதலாளிகள் பர்மா தேசத்திலுள்ள தங்கள் கடைகளில் விற்கவும் கொள்ளவும் ஏஜெண்டுகளையும் கூட்டாளிகளையும் அனுப்புகிறார்கள். ஏஜெண்டுகளை அனுப்புமுன், முதலாளி சம்பளச்சீட்டு ஒன்று எழுதி வாங்கிக்கொண்டு, சிலசமயங்களில் பவரும் (அதிகாரப்பத்திரம்) எழுதிக்கொடுத்தனுப்புகிறார்கள். சில சமயங்களில் ஏஜெண்டுகள் இவ்விடம் வந்து இங்கு இருப்பவரிடம் பவர் பெற்றுக்கொள்ளுகிறார்கள். இங்கிருப்பவர்கள் விசேஷமாய் ஏஜெண்டு ஸ்தானத்தில் வேலைசெய்கிறவர்களாக இருப்பதால் இவர்கள் தங்கள் சம்பளச்சீட்டில் கண்ட கெடுவுகாலம் கழிந்தபிறகு தங்களுக்குப்பதிலாக வருபவர்களுக்கு சட்டப்படி எந்தவிதம் அதிகாரம் கொடுக்கக்கூடும்? ஏஜெண்டு வேலையைப்பற்றிய அதிகாரத்தைப்படிப்பதால் ஏஜெண்டு வேலை முடிவு அடைந்தவுடன் ஏஜெண்டு அதிகாரம் அற்றுப்போனதாகப் பாவிக்கப்படுமென்று தெரிய வரும். ஒரு ஏஜெண்டு தன் கணக்கைப் பதில் ஆளுக்கு எழுதிக் கொடுத்து ஊருக்குக்கிளம்புவதால் அவர் ஏஜெண்டு வேலை முடிந்ததாகத்தானே எண்ணவேண்டும். சம்பளச்சீட்டுப் பிரகாரம் விபூதிப்பையையும் ஐந்தொகைக் கணக்கையு மட்டில் கொடுக்க வேண்டியது பாக்கியிருக்கிறதே ஒழிய வேறே மற்றொன்றுமில்லை. தவிர கணக்கெழுதி வாங்கும் பதிலாள் இவ்விடத்தில் இந்தியாவிலுள்ள முதலாளிக்கு ஏஜெண்டா? அல்லது கணக்கெழுதிக்கொடுத்து ஊருக்குப்போகிறவருக்கு ஏஜெண்டா? இந்த விஷ

யத்தைக் கிஞ்சித்தும் கவனியாது எந்தக்காலத்திலோ ஏற்பட்ட காரணமில்லாத வழக்கப்படி எல்லாக் கடைகளிலும் விசேஷமாய் கடையை விட்டு ஊருக்குத்திரும்பும் ஏஜெண்டுகளிட மிருந்து பவரைப் பெற்றுக்கொள்ளுகிறார்கள். அதனால் ஏற்படும் நஷ்டம் எவ்வளவென்று சொல்லமுடியாது. அவ்வித பவரைக் கொண்டுவந்தால் அது முதலாளி பவர் அல்லவென்று கட்சிசொல்ல இடம் ஏற்படுகிறது. அந்தக்காரணத்தினால் சிலகேசுகளில் பிராதைத்தள்ளியும் விடுகிறார்கள். ஆனதால் முதலாளிகள் ஒரு ஏஜெண்டை இவ்விட மனுப்புமுன் கிரமமான பவர் ஒன்று அவர்களுக்குக் கொடுக்க வேண்டும். கூட்டுப்பங்குக்காரர்கள் பலர்களாயிருந்தால் எல்லாரும் ஒன்று சேர்ந்து பவர்கொடுப்பது ரொம்பவும் நலம். சில கேசுகளில் ஒரு பங்குக்காரர் மட்டில் கொடுக்கும் பவரை வைத்து தாவா செய்யப்படுகிறது. அதில் எல்லா பங்குக்காரர்களும் சேர்ந்து பவர் கொடுக்கவில்லை என்று கட்சி சொல்லி நாளைக் கடத்த இடம் கொடுக்கும்; ஆனதால் எல்லாரும் ஒருமிக்கச்சேர்ந்து கொடுப்பது நல்லது. இப்போது ஏஜெண்டுகள் பெற்றிருக்கும் பவர்களை எந்த விதம் அர்த்தம் செய்யவேண்டுமென்பதைப் பற்றிச் சொல்லுவோம். அதுசம்மந்தமான விதிகள் S. R. M. M. அருணாசல செட்டிக்கும், இப்ருகீம் மம்மது பேட்டேலுக்கும் 1902-ம் வருஷத்தில் நடந்த கேசில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. பவர்களிலுள்ள வாசகங்களைச் சரியாகப்படித்து அர்த்தம் செய்யவேண்டும். தவிர பவரில் கண்ட அதிகாரத்துக்கு அதிகமாக ஒரு காரியம் செய்யப்பட்டதாகக் கட்சி சொன்னால் வெளிப்படையாகவாவது, குறிப்பாகவாவது அந்தவேலையைச் செய்ய அதிகாரம் அந்தப்பவரில் இருந்தால் அந்தக் கட்சி சொல்லாது மேலும் ஒரு ஏஜெண்ட்டுடன் ஒருவன் நடவடிக்கை நடத்தினால் அந்த ஏஜெண்டின் அதிகாரம் எவ்வளவென்று தெரிந்து கொள்ளவேண்டும். அதிகாரப்பத்திரம் இருக்கிறதென்று தெரிந்தால் அதின் ஷரத்துக்கள் தெரியாதென்று சொல்ல முடியாது. நல்ல எண்ணத்துடன் மூன்றும் மனிதன் ஒரு ஏஜெண்ட்டுடன் பத்து வரவு செய்துவந்தால், ஏஜெண்டு மோசமாய் நடவடிக்கை நடத்திவந்தாலும் அது முதலாளியைக் கட்டுப்படுத்தும். ஒரு குறிப்பிட்ட விஷயத்திற்குமட்டில் புரோநோட்டுகள் எழுத அதிகாரம் கொடுத்திருந்தால் அந்த விஷயத்திற்குமட்டில்

தால் செல்லும். கடன் வாங்குவதற்கென்று வெளிப்படையான அதிகாரம் பவரில் இல்லாவிட்டால் பொது வாசகத்திலிருந்து அந்த விதமான அதிகாரம் உண்டென்று ஊகிக்கக்கூடாது. தவிர ஒரு ஜனரல் பவர் இருப்பதைக் கொண்டு எல்லையில்லாத கடன்களை வாங்க அதிகாரம் உண்டென்று ஏற்படாது. 3. இ. கே. 330. கடன் வாங்குவதற்கு அதிகாரம் ஏற்படாமல் வாங்கியகடன் முதலாளிக்குத்தெரிந்து முதலாளியினுடைய வேலைக்காக உபயோகப்பட்டிருந்தால், முதலாளி யெவ்வளவுவரையில் பிரயோசனப்பட்டிருக்கிறரோ அவ்வளவு தொகையைத் திருப்பிக்கொடுக்க முதலாளி கடமைப்பட்டிருக்கிறர். 6. க. லா. ஜ. 639. விற்பதற்கென்று கண்டிருக்கும் அதிகாரத்தை முன்னிட்டு ஈடு வைக்கவோ, மார்ட்கேஜ் செய்யவோ ஏஜெண்டுக்கு அதிகாரம் கிடையாது. 14. ப. 590. பிராதுகள் கொண்டுவரலாமென்றும் கொண்டுவரப்பட்ட கேசுகளில் கட்சி சொல்லலாமென்றும் கண்டிருக்கும் அதிகாரத்தை முன்னிட்டு கேசை ராஜி செய்வதற்குப் பஞ்சாயத்தார்களை கோறுவதற்கு அதிகாரம் கிடையாது. ம. நா. வெ. பி. 210. கடையின் வேலையை நடத்தலாமென்று கண்டிருக்கும் அதிகாரத்தைக்கொண்டு கூட்டுப் பங்கைக் கலைப்பதற்குவேண்டிய தாவா கொண்டுவர அதிகாரம் கிடையாது. 1392-96. அ. ப. ரூ. 525. ஜனரல் பவர் உள்ள ஒரு ஏஜெண்டு முதலாளிகளுக்குவரும் ஸம்மனை தனக்கு இஷ்டமிருந்தால்தான் பெற்றுக்கொள்ளலாம். 8. க. 317.

ஒரு ஏஜெண்டு இங்கு கொண்டு விலை செய்து வருகையில், இந்தியாவிலுள்ள முதலாளி இறந்து போகிறர். அவர் இறந்ததும் அவரால் ஏஜெண்டுக்கு கொடுக்கும் அதிகாரமும் முடிந்துவிடுகிறது. அப்படி இருந்தும் பழைய பவரை வைத்தே சிலர் கேசுகள் செய்கிறர்கள். அந்தவிதம் செய்தால் வியாஜ்ஜியங்களை தள்ளிவிடக்கூடும். ஆனதால் மறுபடியும் புது பவர் தருவித்துக்கொள்ளவேண்டும்.

ஒருவீட்டை விற்க பொதுவாய் ஒரு ஏஜெண்டுக்கு அதிகாரம் கொடுத்தால், விலை முதலிய விஷயங்களில் முதலாளி தகவலன்னியில் முடிவுசெய்ய அதிகாரம் இல்லை என்றும், அந்தப் பவரைக் கொண்டு கிரய சாஸனத்தொகையை வாங்க அதிகாரம் இல்லையென்றும் தீர்மானமாயிருக்கிறது. 7. இ. கே. 189.

# 3 - வது அத்தியாயம்.

## ஏஜென்டின் காரியம்.

வேறொருவருக்காக யாதொரு காரியத்தைச் செய்பவராவது, மூன்றும் மனிதர்களோடு நடத்தும் காரியங்களில் வேறொரு வருக்கு பிரதிநிதியாயிருக்கவாவது ஏஜென்டென்பவர் அமர்த்தப் பட்டவருகிறர். எவருக்காக அப்படிப்பட்ட காரியம் செய்யப் படுகிறதோ அல்லது யாருக்கு அப்படி பிரதிநிதியாயிருக்கலா கிறதோ அவருக்கு முதலாளியென்று பெயர். மைனராவது, சித்த ஸ்வாதீனமில்லாதவராவது யாரையும் தனக்காக ஏஜென்டாக நியமிக்கமுடியாது. ஒரு ஏஜெண்டின் அதிகாரம் வெளிப்படையா கவாவது குறிப்பாகவாவதிருக்கலாம். வாய்மொழியாக வாவது எழுத்துமூலமாக வாவது அதிகாரம் கொடுக்கப்பட்டால் அது வெளிப்படையான அதிகாரமென்று சொல்லப்படும். சங்கதியின் வயணங்களினுலே அதிகாரம் ஊகிக்கப்பட்டால் அது குறிப்பான அதிகாரம் என்றுசொல்லப்படும். எழுத்துமூலமாய் கொடுக்கப்படும் பவர்கள் எவ்வளவு ரூபாய் முத்திரை ஸ்டாம்பில் எழுதவேண்டு மென்பதை ஸ்டாம்பு ஆக்ட்டு அதிகாரத்தை படித்து தெரிந்து கொள்ளவேண்டும். யாதொரு காரியத்தைச்செய்ய அதிகார முடையவனுயிருக்கிற ஒரு ஏஜென்டுக்கு அப்படிப்பட்ட காரியத் தை செய்ய அவசியமான சட்டசம்மதமான பிரதி வேலையையும் செய்யவும் வேலையை நடத்துந் தோரணியில் வழக்கமாய்ச் செய்யப் பட்டுவருகிற சட்ட சம்மதமான பிரதி காரியத்தையும் செய்ய அதிகாரமுண்டு. தவிர அவசரமான தறுவாயில் தன்னுடைய முதலாளிக்கு நஷ்டம் வரவொட்டாமல் காக்கும்பொருட்டு சாதா ரணமான விவேகசாலி ஒருவன் தன்னுடைய சொந்த விஷயத்தில் அப்படிப்பட்ட சகல காரியங்களையும் செய்ய அதிகாரமுண்டு.

முதலாளி விஷயத்தில் ஏஜென்ட் நடந்துகொள்ள வேண்டிய கடமையைப்பற்றி இங்கு கூறுவோம். தன் முதலாளியின் காரியத்

தை முதலாளி உத்தரவின்படிக்காவது அப்படிப்பட்ட உத்தரவு யாதொன்றுமில்லாவிட்டால் அப்படிப்பட்டகாரியத்தை ஏஜென்ட் நடத்துகிற இடத்தில் அதேகவிதமானகாரியம் என்னவிதமாய் நடத்தப்படுகிறதோ அந்த வழக்கப்படிக்காவது நடத்தவேண்டும். வேறு விதமாய் நடத்துவதால் நேரிடும் நஷ்டத்துக்கு அவர் முதலாளிக்கு வகை சொல்லவேண்டும். லாபம் ஏதாவது ஏற்பட்டால் அதை முதலாளி கணக்கில் சேர்க்கவேண்டும். தவிர தகுந்த திறமையுடனும் ஜாக்கிரதையுடனும் வேலையை செய்யவேண்டும். மேலும் தன்னுடைய அஜாக்கிரதையினலாவது, திறமைக்குறைவினலாவது, துர்நடத்தையினலாவது நேராய் சம்பவிக்கும் நஷ்டங்களுக்குமட்டில் ஜவாப்தாரியாவார். முதலாளி எப்போது கேட்டாலும் அப்போது அவருக்குச் சரியான கணக்கு கொடுக்கவேண்டும். கஷ்டமானதும் முக்கியமானதுமான சங்கதிகளிலே தன் முதலாளிக்கு தெரியப்படுத்தி அவர் உத்திரவுகளைப் பெற்று வேலையை நடத்தவேண்டும். முதலாளி நிமித்தம்வரும் தொகையில் தனக்கு சேரவேண்டிய சகல பணத்தையும் சம்பளத்தையும் நிறுத்திக்கொண்டு பாக்கித் தொகை முழுமையும் முதலாளிக்கு செலுத்தவேண்டும். மூன்றும் மனிதரோடு செய்துகொண்ட சட்ட சம்மதமில்லாத கண்டிராக்ட்டு மூலமாய் ஏஜெண்டிடம் தொகை கிடைத்தாலும் அது முதலாளியைச் சேர்ந்ததே. அதற்கு எவ்வித ஆக்ஷேபணையும் ஏஜென்ட்சொல்ல முடியாது. 25. அ. 639. தான் அந்தவிதம் வசூலாகும் தொகைக்கு முதலாளிக்கு கணக்கு சொல்லவோ அல்லது கொடுக்கவோவேண்டியது அனுவசியமென்று சொல்லக்கூடாது. 30. க. 1011. ஏஜெண்ட்டுக்கு லஞ்சமாக கிடைத்திருந்தாலும் அது முதலாளியைத்தான் சேரும். 30. க. 1011.

அப்போது ஏஜெண்டுக்கு முதலாளியின் கடமையைப் பார்ப்போம். முதலாளி உத்தரவுப்படி சட்டசம்மதமாக செய்யும் சகல காரியங்களிலும் ஏஜெண்டுக்கு உண்டாகும் நஷ்டம் செலவு இவைகளுக்கு முதலாளி ஒத்துக்கொடுக்கவேண்டும். யாதொரு காரியத்தை ஒரு ஏஜெண்டு நல்ல எண்ணத்தோடு செய்தால் அதனலே மூன்றும் மனிதர்களின் சுதந்தரங்களுக்கு கெடுதி உண்டானபோதிலும் அந்த காரியத்தால் ஏற்படும் நஷ்டத்தை முதலாளி ஈடு செய்யவேண்டும். இதற்கு சாதரணமான திருஷ்டாந்தம் ஒன்றுண்டு. டிக்

கிரிபெற்ற ஒருவர் சில சொத்துக்களைக் காட்டி அவைகள் கடன் காரன் சொத்தென்று சொல்வதின்பேரில் கோர்ட்டு பேதா பிடித்து பிறகு அந்த சொத்துக்கு எதார்த்தமான சொந்தக்காரன் பேதாப் பேரில் வியாஜ்ஜியம் தொடர்ந்து பெறும் தொகையை டிக்கிரிபெற்ற வர் கொடுக்கவேண்டும். முதலாளி தன் அஜாக்கிரதையினலாவது திறமைக் குறைவினலாவது தன் ஏஜெண்டுக்கு உண்டாகும் கெடு திக்கு ஈடு செய்யவேண்டும். ஏதோ ஓர் காலம்வரையில் ஏஜெண்டு வேலை பார்த்து வரவேண்டுமென்று ஏற்பட்டிருந்தால் போதுமான காரணமில்லாமல் அந்தக்காலத்துக்கு முன் ஏஜெண்டை நீக்கிவிட் டால் முதலாளி ஏஜெண்டுக்கு காம்பன்சேஷன் (ஈடு) கொடுக்கவேண் டும். ஏஜெண்டின் அலுவலைச்சேர்ந்த காரியத்தில் ஆரம்பத்தில் முதலாளி அனுமதி அன்னியில், அவர் நிமித்தம் செய்யவேண்டி யதைவிட்டு ஏஜெண்டு தன் சொந்தத்திற்கு யாதொரு காரியத்தைச் செய்தால், அதனல் ஏஜெண்டுக்கு கிடைக்கும் லாபத்தை பெற் றுக்கொள்ள முதலாளிக்கு பாத்தியமுண்டு. முதலாளி நிமித்தம் வரும் தொகையில் தனக்கு சேரவேண்டிய சகல பணத்தையும், சம் பளத்தையும் நிறுத்திக்கொள்ளலாம். வேறுவிதமான உடன்படிக்கை ஏற்பட்டிராதவரையில் அந்த தொகைகளைத் தனக்குகொடுக்கும்வரை யில் முதலாளி நிமித்தம் தான் பெற்றிருக்கும் தஸ்தாவேஜுகளையும் வேறு சொத்தையும் தன்கையில் நிறுத்திவைத்துக் கொள்ளலாம். பிரத்தியேகமான உடன்படிக்கை ஏதாவது இருக்குமானல் அதில் கண்ட காலத்தில் ஏஜெண்டுக்கு சம்பளத்தை கொடுக்கவேண்டும். அப்படியில்லாதவரையில் வேலை பூர்த்தியானபிறகுதான் கொடுக்கப் படும்.

ஒரு ஏஜெண்டின் அதிகாரத்தை பலவிதமாய் ரத்துசெய்யலாம்.

(1) முதலாளி தன் அதிகாரத்தை ரத்து செய்வதினல் ஏஜெ ண்டுவேலை அற்றுப்போகும். ஆனல் அதிகாரம் கொஞ் சம்மட்டில் செலுத்தப்பட்டபின்பு அந்த ஏஜெண்டின் அதி காரத்தைக் கொண்டு அதுவரையில் செய்யப்பட்டிருக்கிற செய்கைகள் சம்பந்தமா யுண்டான காரியங்களுக்கும் பொறுப்புக்கும் சம்மந்தப்படுகிறமட்டிலே, அந்த அதி காரத்தை முதலாளி ரத்துசெய்யமுடியாது. இவ் வளவுகாலம் வரையில் வேலைபார்த்து வருகிறதென்று

உடன்படிக்கை யிருந்தால் அந்த டயத்துக்குமுன் யாதொரு காரணமில்லாமல் முதலாளி அதிகாரத்தை ரத்து செய்தால் முதலாளி ஏஜெண்டுக்கு ஈடு செய்யவேண்டும். மேலே சொல்லியபடி ரத்து செய்தல் தன் செய்கையினாலே வெளிப்படையாக வாவதிருக்கலாம், குறிப்பாக வாவதிருக்கலாம்.

(2) ஏஜெண்டு தன் வேலையை விட்டுவிடுவதனாலும் வேலை அற்றுப்போகும். ஏதோ ஓர் காலம் வரையில் வேலையை நடத்திவருகிறதென்று ஏற்பாடிருந்தால் நிஷ்காரணமாய் அந்த டயத்துக்கு முந்தியே ஏஜெண்டு வேலையை விட்டுவிட்டால் முதலாளிக்கு காம்பன்சேஷன் கொடுக்கவேண்டும். அப்படி விட்டுவிடுதல் தன் செய்கையினாலே வெளிப்படையாகவு மிருக்கலாம், குறிப்பாகவு மிருக்கலாம்.

(3) ஏஜெண்டு வேலை முடிந்து போவதாலும் வேலை அற்றுப்போகும்.

(4) முதலாளியாவது ஏஜென்டாவது இறந்துபோவதனாலாவது பயித்தியம் பிடிப்பதனாலாவது அற்றுப்போகும்; இந்தவிதம் முதலாளி இறந்துபோவதனாலாவது, பயித்தியம் பிடிப்பதனாலாவது ஏஜென்டின்வேலை அற்றுப்போனால் அந்த ஏஜெண்டு தன் வசமிருக்கும் சொத்துக்களை முதலாளி பிரதிநிதிகளுக்காக காப்பாற்றி பந்தோபஸ்த்து செய்யவேண்டும்.

(5) முதலாளி இன்சால்வெண்டு பேர்வழியாக தீர்மானிக்கப்படுவதினும் அற்றுப்போகும்.

முதலாளி ஏஜென்டின் அதிகாரத்தை ரத்து செய்துவிட்டால் அது ஏஜெண்டு சம்மந்தப்பட்டவரையில் அவருக்கு தெரிவித்தாலொழிய அவரைக் கட்டுப்படுத்தாது. மூன்றும் மனிதர்கள் சம்மந்தப்பட்டவரையில் அவர்களுக்கு தெரிவிக்கப்பட்டாலொழிய அவர்களை கட்டுப்படுத்தாது. ஏஜெண்டு அதிகாரம் ரத்தான சங்கதியை தெரியாத கடனாளி ஒருவன் ஏஜென்டிடம் கடனை கொடுத்தால் செல்லுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 7. ம. லா. ஜ. 218. ஒரு தஸ்தாவேஜை ரிஜிஸ்டர்செய்து கொடுக்கும்படி நியமித்த

3

ஏஜென்ஸை ரத்துசெய்த சங்கதி ஏஜெண்டுக்கும் ஸப் ரிஜிஸ்டாருக்கும் தெரியாது. ரிஜிஸ்டர் செய்யப்படவே அது சரியென்று கல்கத்தாவில் தீர்மானிக்கப்பட்டது. 30. க. 265.

பொதுவாக முதலாளி உத்தரவுப்படி ஏஜெண்டு செய்யும் யாவத்து காரியங்களையும் முதலாளியே செய்ததாக பாவிக்கப்படும். ஆனால் அதிகாரத்தை மிஞ்சி அதிகமாய் செய்தால், அவன் செய்ததில் அவனுடைய அதிகாரத்திற்கு உட்பட்டிருக்கிற பாகம் அதிகாரத்திற்குமிஞ்சின பாகத்திலிருந்து பிரிக்கக்கூடுமானால் அதிகாரத்திற்குட்பட்டிருக்கும் பாகத்திற்கு மட்டில் முதலாளி ஜவாப்தாரியாவார். அந்தவிதம் பிரிக்கக்கூடாத பட்சத்தில் முழுவதையும் முதலாளி ஒப்புக்கொள்ளமாட்டார். பொதுவாக ஒரு ஏஜெண்டு சுதாவாய் பிரவர்த்திக்கும்படியாவது நேராய் உடன்படும்படியாவது யாதொரு உடன்படிக்கை பிறந்திராதபட்சத்தில் ஏஜெண்டு தன் முதலாளிக்காக தான் செய்த காண்டிராக்டுகளை நிறைவேற்றும்படி சுதாவாய் நடவடிக்கை எடுக்கமுடியாது. முதலாளிபேரில்தான் செய்யவேண்டும். தவிர தனக்கு சொந்த ஜவாப்தாரியுமில்லை. ஆனால் ஏஜெண்டு தன் முதலாளியின் பெயரை வெளிப்படுத்தாதவிஷபத்தில், ஏஜெண்டு தானே பிரவர்த்திக்கலாம். தவிர அவருக்கு சொந்த ஜவாப்தாரியுமுண்டு. மேலும் அந்த கேசுகளில் மூன்றாம் மனிதர்கள் முதலாளியை உத்தரவாதியாக்கலாம். அதிகாரமில்லாமல் ஏஜெண்டு தன் முதலாளிக்காக மூன்றாம் மனிதர்களுக்கு காரியங்கள் செய்திருந்தால், அப்படிப்பட்ட காரியங்கள் ஏஜெண்டின் அதிகாரத்துக்குட்பட்டவைகளென்று நம்பும்படி அந்த மூன்றாம் மனிதர்களை முதலாளி தன் சொற்களினாலாவது, நடத்தையினாலாவது செய்திருந்தால் அந்த முதலாளி அப்படிப்பட்ட காரியங்களுக்கு உடன்படவேண்டும். முதலாளிக்கு வேலையை நடத்திக்கொண்டிருக்கும் தோரணியில் ஏஜெண்டுகளால் சொல்லப்படும் மாறுபாடுகளாவது, செய்யப்பட்ட மோசங்களாவது அந்த ஏஜெண்டால் செய்யப்பட்ட உடன்படிக்கைகள் விஷயமாய் முதலாளிகள் செய்தவைகளாக பாவிக்கப்படும். ஆனால் தன் அதிகாரத்துக்குட்படாத விஷயங்களில் சொல்லுகிற மாறுபாடுகளாவது செய்கிற மோசங்களாவது அவர் முதலாளியை பாதிக்கமாட்டாது. இந்த விஷயத்தை மிகவும் தெளிவாக அடியில் எடுத்தெழுதப்பட்டிருக்கின்றது.

I. ஏஜெண்டு சொல்லுவது பொய்யென்று முதலாளிக்கு தெரியும் கேசில்,—

(A) அந்த விதம் சொல்ல ஏஜெண்டுக்கு முதலாளி அனுமதி கொடுத்தால் ஏஜெண்டுக்கு வாஸ்தவமென்று நினைத்தாலும், பொய்யென்று நினைத்தாலும் முதலாளி ஜவாப்தாரியாவார்.

(B) முதலாளி வேலை தோரணையில் ஆனால் முதலாளியின் குறிப்பிட்ட அதிகாரமில்லாமல் ஏஜெண்டு சொல்லியிருந்தால்:—

(1) அது பொய்யென்று ஏஜெண்டுக்கு தெரியுமானால், முதலாளி ஜவாப்தாரியாவார்.

(2) அது நிஜமென்று ஏஜெண்டு நினைத்தால், முதலாளி மோச எண்ணத்தாலாவது அஜாக்கிரதையாலாவது ஏஜெண்டிடம் தெரிவிக்காமலிருந்தால், முதலாளி ஜவாப்தாரியாவார்.

II. ஏஜெண்டு சொல்வது வாஸ்தவம் என்று முதலாளி நினைத்தால்.—

(A) அந்தவிதம் சொல்ல முதலாளி ஏஜெண்டுக்கு அனுமதி கொடுத்தால்:—

(1) பொய்யென்று ஏஜெண்டுக்கு தெரியவந்தால் முதலாளி அப்போதும் ஜவாப்தாரிதான்.

(2) ஆனால் நிஜமென்று ஏஜெண்டு நினைத்தால் முதலாளி ஜவாப்தாரி அல்ல.

(B) முதலாளி வேலை தோரணையில் ஆனால் முதலாளியின் குறிப்பிட்ட அதிகாரமில்லாமல் ஏஜெண்டு சொல்லியிருந்தால்:—

(1) ஏஜெண்டுக்கு பொய்யென்று தெரிந்தால், முதலாளி ஜவாப்தாரியாவார்.

(2) உண்மையென்று ஏஜெண்டு நினைத்தால் முதலாளி ஜவாப்தாரியல்ல.

மூந்திய கடன்களுக்காக பாண்டுகள் எழுதிக்கொடுக்கும்படி பவர்பெற்ற ஏஜென்டு, காலாவதியாகிவிட்ட கடன்களுக்காக புது பாண்டுகள் முதலாளியை கட்டுப்படுத்தும்படி எழுதிக்கொடுக்க முடியாது. 11. க. லா. ரி. 581. இறந்த முதலாளி எஸ்டேட் சம்மந்தமான தஸ்தாவேஜுகளை கைப்பற்ற இறந்த ஏஜென்டின் சட்டசம்மதமான வார்சுகள்பேரில் இ. லி. ஆ. முதலாவது அட்டவணை 20-வது பிரிவுப்படி முதலாளி இறந்த 1 வருஷத்திற்குள் தாவா கொண்டுவரலாம். 2. நா. வெ. பி. ஐ. கோ. 103. ஏஜென்டு வாங்கிக்கொண்டு வகை சொல்லாத பணம் முதலான அசையும் பொருளைக்குறித்து அந்த ஏஜென்டின்பேரில் அவர் முதலாளி 3 வருஷத்துக்குள் தாவா செய்யலாம். ஏஜென்டுவேலை நடந்துகொண்டிருக்கையில் கணக்கு கேட்கப்பட்டு மறுதளிக்கப்படும்போது அல்லது அப்படி கேட்கப்படாவிட்டால் ஏஜென்டு வேலை முடிகிறபோது வியாஜ்ஜியமூலம் உற்பத்தியாகிறதென்று இ. லி. ஆ. 89-வது பிரிவால் தெரியும். இந்தப்பிரிவுப்படி, தான் ஒரு முதலாளி கணக்குக்காகவும் அதைப் பரிசோதிக்க கொடுக்கவேண்டியதாக ஏற்படும் தொகைக்காகவும் ஏஜென்டுபேரில் வியாஜ்ஜியம் செய்யவேண்டும். 8. க. வீ. நோ. 113. 32. க. 719.

ஆனால் கணக்கு சம்மந்தமான புஸ்தகங்கள் முதலியவைகளை கைப்பற்ற இ. லி. ஆ. 120-வது பரிவுப்படி 6 வருஷத்திற்குள் கொண்டுவரலாம். கட்சிக்காரர்களுக்குள் ஏற்பட்டிருக்கும் கண்டிராக்ட்படி எப்போது அவைகளை கொடுக்கவேண்டுமோ அதுமுதல் வியாஜ்ஜியமூலம் உற்பத்தியாகிறது. 1. க. லா. ஜ. 147. கிரமமாக ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கும் தஸ்தாவேஜ் மூலமாக ஒரு ஏஜென்டு நியமிக்கப்பட்டிருந்தால் ஷெயார் பெற்று கையாடிய தொகைக்காக ஷெயார் இறந்த பிறகு அவர் வார்சுகளின்பேரில் 116-வது பிரிவுப்படி 6 வருஷத்திற்குள் கொண்டுவரவேண்டும். 12. க. 357 ; 14. ம. 465. ஆனால் ரிஜிஸ்ட்டர் பத்திரமில்லாத கேசுகளில் மேலே சொன்னபடி 3 வருஷத்திற்குள் கொண்டுவரவேண்டும். 12. க. 357. ஏஜெண்டு தான் செலவு செய்ததாக சொல்லும் ஒவ்வொரு இனத்துக்கும் வவுச்சர் இருக்கவேண்டும். 13. க. வீ. நோ. 212. உத்தியோகஸ்தர்களுக்கு லஞ்சம் கொடுத்ததாக சொல்லும் பட்சத்தில் அதை ருஜிப்பிக்கவேண்டும். 13. க. வீ. நோ. 212.

அஜாக்கிரதையைக் குறித்தாவது, துர்நடத்தையைக் குறித்தாவது ஏஜெண்டுபேரில் முதலாளி வியாஜ்ஜியம் 3 வருஷத்திற்குள் இ. லி. ஆ. 90-வது பிரிவுப்படி கொண்டுவரவேண்டும். அஜாக்கிரதை அல்லது துர்நடத்தை முதலாளிக்கு தெரியும் காலத்தில்தான் வியாஜ்ஜியமூலம் உற்பத்தியாகிறது. தான் ஏஜெண்டல்லவென்று சொல்லும் ஏஜெண்டின்பேரில் கோர்ட்டார் கணக்குபார்த்து ஏற்படும் தொகையை கொடுக்கும்படி கொண்டுவரும் வியாஜ்ஜியம் இ.லி ஆ. 120-வது பிரிவுப்படி 6 வருஷத்திற்குள் கொண்டுவரவேண்டும். ஏஜெண்டுவேலை முடிந்த தேதிமுதல் வியாஜ்ஜியமூலம் உற்பத்தி. 14. க. 147.

முதலாளிக்கும் ஏஜெண்டுக்கும் உண்டாயிருக்கிற லேவாதேவி கணக்குக்காக கொண்டுவரப்படும் வியாஜ்ஜியத்தில் சி. பு. கோ. 20-வது ஆடர் 16-வது பிரிவுப்படி கோர்ட்டார் முடிவான டிக்ரி செய்யுமுன் தங்களுக்கு யுக்தமாகத்தோன்றும் கணக்கு எடுக்கும்படி உத்தரவு செய்து ஒரு பிரதம டிக்கிரி செய்யவேண்டும்.

---

# 4-வது அத்தியாயம்.

## ப்ராமிஸெரி நோட், செக், உண்டி முதலிய கைமாறிச் செல்லத்தக்க ஆதரவுகளைக் குறித்து.

கைமாறிச் செல்லத்தக்க ஆதரவுகள் டில்லியில் ஆண்டு வந்த மகம்மதிய சக்கரவர்த்திகளில் ஒருவரால் 14-வது நூற்றுண்டின் ஆரம்பத்தில் சீனதேசத்தில் வழங்கிவருவதைப்பார்த்து இந்தியாவிலும் வழங்கிவர ஏற்பாடு செய்ததாகத் தெரிகிறது. கைமாறிச் செல்லத்தக்க ஆதரவுகளைக்குறித்த 1881-ம் வருஷத்து 26-வது ஆக்டில் ப்ராமிஸெரி நோட்டு, பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ் செக் இவைகளைப்பற்றி சொல்லியிருக்கின்றது. கைமாறிச் செல்லத்தக்க ஆதரவு என்னும் பதத்திற்கு அர்த்தம்.—குறித்த ஓர் நபர் அல்லது

அவனுடைய உத்திரவு பெற்றவனுக்காவது, குறித்த நபரினுடைய உத்திரவு பெற்றவனுக்காவது, அதைக் கொண்டுவருபவனுக்காவது குறித்த ஒரு நபர் அல்லது அதைக் கொண்டுவருபவனுக்காவது செலுத்தத்தக்கதாக் கண்டெழுதியிருக்கிற பிராமிஸெரி நோட், பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ் அல்லது செக் என்று அர்த்தமாகும். யாதொரு குறித்த நபர் அல்லது அவனுடைய உத்திரவு பெற்றவனுக்கு மாத்திரமாவது அந்த ஆதாரவைக் கொண்டுவருகிறவனுக்காவது ஒரு குறித்த தொகை செலுத்துவதாக ஷரத்தொன்றுமில்லாமல் ஏற்றுக்கொண்டதாய் கண்டெழுதி அதைச் செய்கிறவனால் கைவெழுத்து போடப்பட்டிருக்கிற யாதொரு ஆதாரவானது "ப்ராமிஸெரி நோட்" என்று சொல்லப்படும். யாதொரு குறித்த நபர் அல்லது அவனுடைய உத்திரவு பெற்றவனுக்கு மாத்திரமாவது, ஆதாரவைக் கொண்டுவருகிறவனுக்காவது ஒரு குறித்த தொகை செலுத்தும்படி ஓர் குறித்த நபருக்கு ஷரத்தொன்றுமில்லாமல் உத்திரவு செய்வதாய் கண்டெழுதி அதைச் செய்கிறவனால் கைவெழுத்து போடப்பட்டிருக்கிற யாதொரு ஆதரவானது "பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ்" என்று சொல்லப்படும்.

குறித்த ஒரு பாங்கர் செலுத்தும்படி அவன் பேரில் எழுதப்பட்டு கேட்டவுடனே யல்லாமல் மற்றபடி செலுத்தப்படத்தக்கதென்று கண்டெழுதியிராத பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜானது 'செக்' என்று சொல்லப்படும். பர்மாவில் விசேஷமாக கோர்ட்டுகளில் செட்டிப்பிள்ளைகள் போடும் வியாஜ்ஜியங்கள் ப்ராமிஸெரி நோட்டுகளின்பேரில் போடுவதால் அவைகளைப்பற்றி சற்று ஜாஸ்தியான விவரங்கள் கொடுத்திருக்கிறோம். ப்ராமிஸெரி நோட்டில் எந்த வித கண்டிஷனும் கண்டிருக்கக்கூடாது. பணத்தை திருப்பிக் கொடுக்கும் இடம் கண்டிருப்பதைக்கொண்டு ப்ராமிஸெரி நோட்டின் யோக்கியதை இல்லாமல் போகாது. கடன் கொடுக்க வேண்டியிருக்கிறதென்று மட்டில் ஒப்புக்கொள்ளுவது புரோநோட்டாகாது. எந்த இடத்தில் பிறந்ததென்று எழுதவேண்டிய அவசியமில்லை யென்றும், பல்லாரியில் எழுதிய புரோநோட்டில் திருமங்கலத்தில் தேதி போடலாமென்றும் ஜட்ஜ் மணி அய்யர் அவர்கள் தீர்ப்பு செய்திருக்கிறார்கள். 28. ம. 19. பெற்றுக் கொண்ட தொகை பொறுமானத்தை புரோநோட்டில் எழுத

வேண்டிய கடமையில்லை. முதலாளிகளின் காரியங்களை மற்ற விஷயங்களில் ஏஜண்டுகள் நடத்துவதுபோல கைமாறிச்செல்லத் தக்க ஆதரவுகளின்பேரில் முதலாளிகள் மட்டில் ஜவாப்தாரியாகும்படி எழுதிக்கொடுக்கலாம். ஆனால் வேறொருவனுடைய ஏஜண்டு என்று செவ்வையாகத் தெரியும்படி தன் பெயரைக் கையெழுத்து செய்யாமலிருந்தால் அந்த ஆதரவின்மேல் தானே உத்தரவாதஞ் செய்யவேண்டிவரும். அவ்விதமாகவே ஒருவன் இறந்த பிறகு அவனுடைய வாரிசு அல்லது பிரதிநிதியும் இறந்தவனுடைய ஆஸ்தியில் தான் பற்றியிருக்கும் தொகைக்கு உத்தரவாதஞ் செய்கிறதாக வெளிப்படையாக காட்டாவிட்டால் அப்படிப்பட்டவன் அதன்மேல் தானே உத்தரவாதம் செய்வதற்குள்ளாவான். மற்ற ஆதரவுகளுக்கும் இந்த அத்தியாயத்தில் சொல்லும் ஆதரவுகளுக்கும் உள்ள முக்கிய வித்தியாசம் என்னவென்றால், இந்த ஆதரவுகளை பிறருக்கு மேடோவர் செய்யலாம் அதாவது மாற்றலாம். அப்படி இரண்டு விதம் கைமாறும்படி செய்யலாம். (1) கொண்டுவருகிறவனுக்கு செலுத்தப்படத்தக்கதான ஆதரவாயிருந்தால், அதை டிலிவரி அதாவது ஒப்பித்துவிடுவதனால் கைமாறும்படி செய்யலாம். (2) குறித்த ஒரு நபரினுடைய உத்தரவு பெற்றவனுக்காவது, குறித்த ஒரு நபர் அல்லது அவனுடைய உத்திரவு பெற்றவனுக்காவது செலுத்தப்படத் தக்கதான ஆதரவானால் அதை இண்டார்ஸ் பண்ணி ஒப்பிப்பதனாலே அதை வைத்துக்கொண்டிருப்பவனால் கைமாறிச் செல்லும்படி செய்யப்படத்தக்கதாகும். இண்டார்சு செய்தல் என்பதற்கு யாதொரு ஆதரவை கைமாறிச் செல்லும்படி செய்யும்பொருட்டு அதில் கையெழுத்து செய்தல் என்று அர்த்தம். குறித்த ஒரு நபருக்காகிலும், அவனுடைய உத்திரவு பெற்றவனுக்காகிலும் செலுத்தும்படி கண்டு இண்டார்சு செய்திருந்தால் அந்த நபருக்கு இண்டார்சீ என்று பெயர். கைமாறிச் செல்லத்தக்க யாதொரு ஆதரவை இண்டார்சு பண்ணி அதன் பிறகு அதை ஒப்பித்துவிடுவதினாலே அதிலுள்ள சொத்தும் பின்னும் கைமாறிச் செல்லும்படி செய்கிற சுதந்தரமும் இண்டார்சீக்கு போய்விடுகிறது. இரண்டுவித இண்டார்சுமெண்டு உண்டு. (1) "வெறும்" இண்டார்சுமெண்டு அதாவது தன்னுடைய பெயரை மாத்திரம் கையெழுத்து செய்தல். (2) "பூர்த்தியான"

இண்டார்சுமெண்டு-அதாவது குறித்த ஒரு நபருக்காகிலும், அவனுடைய உத்திரவு பெற்றவனுக்காகிலும் செலுத்தும்படி கட்டளையை அதில் சேர்த்தல். வெறும் இண்டார்சுமெண்ட் செய்திருக்கிற யாதொரு ஆதரவை வைத்துக்கொண்டிருக்கிறவன் தன்னுடைய பெயரை கையெழுத்து செய்யாமல், இண்டார்சீ வேறெவனுக்காவது செலுத்தும்படி உத்திரவை இண்டார்சு செய்தவனுடைய கையெழுத்திற்குமேல் எழுதுவதினாலே அந்த வெறும் இண்டார்ஸ்மெண்டைப் பூர்த்தியான இண்டார்ஸ்மெண்டாக மாற்றிவிடலாம். யாதொரு ஆதரவை இண்டார்ஸ் செய்கிறவன் "பொறுப்புக்குள்ளாகாமல்" என்று அர்த்தம் கொள்ளும் வார்த்தைகள் சேர்த்து கையொப்பம் செய்து தன் உத்தரவாதத்தை நீக்கிக்கொள்ளக் கூடும். ஆதரவில் கண்டிருக்கும் தொகையின் ஒரு பாகத்தை மாற்ற இண்டார்சு செய்யமுடியாது. ஆனால் அப்படிப்பட்ட தொகையில் ஒரு பாகம் செலுத்தப்பட்டிருந்தால் அந்த விதம் செலுத்தப்பட்டதென்கிற குறிப்பை அந்த ஆதரவின்மேல் இண்டார்சு பண்ணலாம். அதற்குமேல் பாக்கி பணத்திற்காக அந்த ஆதரவை கைமாறிச் செல்லும்படி செய்யலாம். யாதொரு நபரும் ஆதரவு கெடுவு முடியுமுன் சரியான பிரதிப் பிரயோஜனம் அதாவது ஐவேஜுக்காக கிரமமான தோரணியில் அதை ஸ்வாதீனம் அடைந்திருக்கவேண்டும். யாதொரு ஆதரவு பாக்கியாகிற தேதியில் தான் அதன் கெடுவு முடிவாகிறது. கேட்டவுடனே யாகிலும், தரிசனமானவுடனே யாகிலும் காட்டுவதன்மேலாகிலும் செலுத்தத்தக்கதாகக் கண்டிராத ஆதரவு ஒவ்வொன்றுக்கும் அது செலுத்தப்படத்தக்கதாகக் கண்டிருக்கும் தினத்திற்கு பின்பு மூன்றும் தினத்திலே கெடுவு முடிவாகிறது. இதற்கு ஒத்துக்கொடுக்கிற நாள் என்று பெயர். எழுதின தேதிக்குப் பின்பாவது தரிசனமான பின்பாவது இத்தனை மாதம் பொறுத்துச் செலுத்தப்படத்தக்கதென்று கண்டெழுதியிருக்கும் பில் அல்லது நோட்டின் கெடுவு முடிவாகிற தேதியை கணக்கிடும்போது கண்டிருக்கும் காலமானது எந்த தினத்தில் ஆதரவுக்கு தேதி போடப்பட்டதோ அந்தக் காலம் முடிவாகிற மாதத்தில் எந்த தினம் சரியாயிருக்கிறதோ அந்த தினத்திலே முடிவாகிறதாக எண்ணவேண்டும். அந்தக் காலம் முடிவாகிற மாதத்தில் அதற்கு சரியான தினம் இராவிட்

டால் அந்த மாதத்திய கடைசி தினத்தில் அந்தக்காலம் முடிவாகிற தாக எண்ணப்படும். உதாரணமாக, 1878-ம்௵ ஜனவரிமீ 29௳ என்று தேதி போட்டிருக்கும் ஆதரவில் அந்த தேதிக்குப் பின்பு ஒரு மாதம் பொறுத்துச் செலுத்தப்படத்தக்கதாகச் செய்யப்பட்டிருந்தால் 1878-ம்௵ பிப்ரவரிமீ 28௳க்குப் பின்பு மூன்றும் தினத்தில் அந்த ஆதரவுக்குக் கெடுவு முடிவாகிறது. 1878-ம்௵ ஆகஸ்ட்மீ 30௳ என்று தேதி போட்டிருக்கும் ஆதரவில் அந்த தேதிக்குப்பின் 3 மாதம் பொறுத்து செலுத்தப்படத்தக்கதாகச் செய்யப்பட்டிருந்தால் 1878-ம்௵ டிசம்பர்மீ 3௳யில் அந்த ஆதரவுக்கு கெடுவு முடிவாகிறது. எழுதின தேதிக்குப் பின் பாவது, தரிசனமான பின்பாவது இத்தனை நாள் பொறுத்துச் செலுத்தப்படத்தக்கதென்று கண்டிருக்கும் ஆதரவின் கெடுவு முடிவாகிற தேதியை கணக்கிடும்போது அந்த தேதியின் தினத்தை யாவது, அங்கிகரிப்பதற்காகிலும், தரிசனத்திற்காகிலும் காட்டப் பட்ட தினத்தையாவது தள்ளிவிடவேண்டும். கெடுவு முடிவாகும் தினம் பப்ளிக் விடுமுறை நாளாயிருந்தால் அதற்கு அடுத்து முந் தின வேலை செய்யும் தினத்தில் அந்த ஆதரவு பாக்கியாவதாக எண்ணப்படும். பப்ளிக் விடுமுறைநாள் என்பதினால் ஞாயிற்றுக் கிழமைகளும், கிருஸ்தவர்கள் வருஷப்பிறப்பு தினமும், கிருஸ்து பிறந்த தினமும் இவ்விரு தினங்களில் எதுவாகிலும் ஞாயிற்றுக் கிழமையாயிருந்தால் அடுத்த திங்கட்கிழமையும், கிருஸ்து இறந்த வெள்ளிக்கிழமையும், பப்ளிக் விடுமுறை நாளென்று ஸர்க்கார் கெஜெட்டில் நோட்டீஸ் மூலமாய் நிர்ணயிக்கப்படும் வேறே யாதொரு தினமும் அடங்கும். கெடுவு முடியும் தேதிகளை இங் கிலீஷ் வருஷம் தேதி பிரகாரம் கணிக்கவேண்டுமேயொழிய தமிழ், பர்மா தேதிகள்படி கணிக்கக்கூடாது. யாதொரு ஆதரவு கை தவரி கெட்டுப்போய்விட்டாலும், அல்லது அதை கிரமமாய் வைத் துக்கொண்டிருப்பவனிடத்திலிருந்து திருட்டு முதலிய குற்றஞ் செய்தோ, மோசம் பண்ணியோ, அல்லது சட்ட சம்மதமில்லாத ஐவேஜுக்காகவோ பெற்றுக்கொள்ளப்பட்டிருந்தால் அந்த ஆதர வை கண்டெடுத்த நபரையாவது, அப்படி அதை பெற்றுக்கொண்ட நபரையாவது முன்னிட்டு தாவா செய்து அந்த ஆதரவின்மேல் பாக்கியாயிருக்கிற தொகையை பெற்றுக்கொள்ள முடியாது.

ஆனால் அப்படி தாவா செய்கிறவன் கிரமமான தோரணியில் அதை வைத்துக்கொண்டு இருப்பவனுகவாவது, அப்படிப்பட்டவன் யாரை முன்னிட்டுக்கொண்டு தாவா செய்கிருனே அந்த நபர் கிரமமான தோரணியில் அதை வைத்துக்கொண்டிருந்தவனுக இருந்தால் தொகை கிடைக்கக்கூடும். சட்ட சம்மதமில்லாத பிரதிப் பிரயோஜனத்திற்காக பிறந்த சில புரோநோட்டுகளைப்பற்றி கூறுவோம். ஒரு ஸ்திரீயுடன் சேர்ந்த விஷயத்திற்காக கொடுக்கும் புரோநோட் செல்லுமென்றும், ஆனால் இனி சேருவதற்காக பிறக்கும் நோட்டு சட்ட விரோதமென்றும் சென்னப்பட்டணத்தில் தீர்மான்மாயிருக்கிறது. 23. ம. 613. அலகபாத்தில் அந்தவிதமான ஸ்திரீ சம்மந்தம், பிற மனைவி அநியாயப்புணர்ச்சியானல் அந்த நோட்டு செல்லாதென்று ஜட்ஜிகள் அபிப்பிராயப்படுகிருர்கள். 27. அ. 267. ஒரு தாஸியுடன் சேரும் பொருட்டு கடன் வாங்குகிருன் என்று தெரிந்து கடன்கொடுத்தால், அதற்காக ஏற்பட்ட புரோநோட் செல்லாதென்று முடிவாகியிருக்கிறது. சட்டப்படி ருஜிசெய்ய முடியாத கிரிமினல் கேஸை அமுக்குவதற்காக கொடுக்கும் புரோநோட் செல்லாது. சிவில் தீர்ப்பில் சாட்சியம் சொல்லும்படி ஒரு சாட்சிக்கு எழுதிக்கொடுக்கும் புரோநோட்டும் செல்லாது. ஒரு வக்கீல் அல்லது லாயருக்கு சட்டப்படி சேரவேண்டிய பீசுக்கு அதிகமான தொகைக்கு எழுதிக்கொடுக்கும் புரோநோட்டில் கண்ட முழுத்தொகையும் கிடைக்காது. ஆனல் லாயர் செய்திருக்கும் வேலைக்கு தகுந்தபடி சட்டப்பிரகாரம் பீசு கிடைக்கும். இந்த விதம் 1899-ம் வருஷத்தில் மாந்தளையில் செட்டிப்பிள்ளைகள் சிலாகித்து கொண்டாடி வந்த லாயர் ஹர்ஜி என்பவர் ஐதர் பேலி பேரில் கொண்டுவந்த கேசில் தீர்மானமாயிற்று. பர்மாவில் சூதாடக் கொடுக்கும் தொகைக்காக ஏற்படும் புரோநோட், சூதாட்டம் சட்ட விரோதமான சூதாட்டமாயிருந்தால் மட்டில், செல்லாதென்று மாந்தளை மீங்கி 1905-ம் வருஷம் தீர்மானம் செய்திருக்கிருர்.

தரிசனமான பின்பு செலுத்தப்படத்தக்க பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ் அல்லது நோட்டை, பில்லில் எழுதப்பட்டவரிடமோ, அல்லது நோட்டை எழுதினவனிடமோ அங்கீகரிப்பதற்கோ அல்லது நோட்டை பார்ப்பதற்கோ கொண்டுவந்து காட்டவேண்

டும். அப்படி கொண்டுவந்து காட்டாவிட்டால் அப்படி காட்டா மற்போகிற நபருக்கு அதில் சம்மந்தப்பட்ட எந்த நபரும் அதன் மேல் உத்திரவாதியல்ல. மேலே சொன்னவிதம் அங்கிகரிக்க ஆதரவு எழுதப்பட்ட பின்பு நியாயமான காலத்திற்குள் வேலை நடக்கும் தினத்திலே வேலை செய்யும் காலங்களில் காட்டவேண்டும். உடன்படிக்கையினாலாவது, வழக்கத்தினாலாவது அதிகாரமிருந்தால் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட கடிதமூலமாய் தபாலாபீஸ் மார்க்கமாக அனுப்பிக்காட்டுவதுபோதும். பில்லை அங்கீகரிக்கலாமோ அல்லது கூடாதோ வென்று யோசிப்பதற்கு விடுமுறை நாள்கள் நீங்கலாக 24-மணி நேரம் கொடுக்கவேண்டும். அதற்கதிகமாய் காலம் கொடுத்தால் அதில் முன்னிட்டுச் சம்மந்தப்பட்டவர்களாய் அப்படி காலம் கொடுத்ததற்கு சம்மதிக்காதிருக்கிறவர்கள் எல்லோரும் அப்படி வைத்துக்கொண்டிருப்பவனுக்கு செய்யவேண்டிய உத்தரவாதத்திலிருந்து அதனால் விடுதலையாகிறார்கள்.

பில்லில் எழுதப்பட்டவன் தன்னுடைய அங்கீகாரத்தை கையெழுத்து செய்து வைத்துக்கொண்டிருப்பவனுக்காகிலும், அவன் பட்சத்தில் யாவனொருவனுக்காகிலும் அதை ஒப்பித்த பின்பாவது அப்படி. கையெழுத்து செய்ததை அறிக்கை பண்ணவேண்டும். வரையறுப்பு இல்லாமல் அங்கீகாரம் செய்யாமல் போனால், பில்லை வைத்துக்கொண்டிருப்பவன் அதை அலட்சியம் செய்ததாக பாவித்து அதில் முன்னிட்டு சம்மந்தப்பட்ட பிரதி நபருடைய சம்மதமிருந்தாலொழிய நோட்டீஸ் கொடுக்கவேண்டும். வரையறுத்து செய்யப்பட்ட அங்கீகாரமென்றால்,

(1) அதில் சொல்லியிருக்கிற காரியம் சம்பவிப்பதன் மேல் தான் பணம் செலுத்தப்படுமென்று ஷரத்துள்ளதாயிருந்தாலும்,

(2) செலுத்துப்படி உத்திரவு செய்யப்பட்ட தொகையில் ஒரு பாகத்தை மாத்திரம் செலுத்துவதாக அதனால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தாலும்,

(3) இன்ன இடத்தில் பணம் செலுத்தவேண்டுமென்று உத்திரவில் குறிக்கப்படாதிருந்து மற்றபடியாவது வேறே எந்த இடத்திலாவதல்லாமல் குறித்த ஓர் இடத்

திலே பணம் செலுத்துவதாக அதனுல் ஏற்றுக்கொள் ளப்பட்டிருந்தாலும் அல்லது இன்ன இடத்தில் பணம் செலுத்தவேண்டுமென்று உத்திரவில் குறிக்கப்பட் டிருந்து மற்றபடியாவது வேறே எந்த இடத்தி லாவதல்லாமல் வேறே யாதொரு இடத்திலே பணம் செலுத்துவதாக அதினுல் எற்றுக்கொள்ளப்பட்டிருந் தாலும்,

(4) உத்திரவின்படி எப்போது சட்டப்பிரகாரம் பணம் செலுத்தப்படத்தக்கதாகுமோ அந்தக் காலத்திலல் லாமல் வேறெந்தக் காலத்திலாவது பணம் செலுத்து வதாக அதனுலே ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தாலும், வரையறுத்துச் செய்யப்பட்ட அங்கீகாரமென்று சொல்லப்படும். பிறகு பணம் பெற்றுக்கொள்ளு வதற்காக கைமாறிச்செல்லும் ஆதரவுகளை அவை களை செய்தவனிடத்திலாவது, அங்கீகரிக்கிறவனிடத் திலாவது எழுதப்பட்டவ னிடத்திலாவது காட்ட வேண்டும். கேட்டவுடனே செலுத்தத்தக்க ஆதரவை வைத்துக்கொண்டிருப்பவனுல் பெற்றுக்கொள்ளப் பட்டபின்பு நியாயமான காலத்திற்குள் கொண்டு வந்து காட்டப்படவேண்டும். ஆதரவை அவ்விதம் கொண்டுவந்து காட்டுகிற விஷயத்திலே எழுதப்பட்ட வனே செய்தவனே அல்லது அங்கீகரித்தவனே இவர் களுடைய ஏஜெண்டுக்காவது ஷெயார்கள் இறந்து போயிருந்தால் அவர்களுடைய சட்ட சம்மதமான பிரதிநிதிக்காவது அவன் இன்ஸால்வெண்டாயிருந் தால் அவனுடைய அஸைனிக்காவது கொண்டுவந்து காட்டலாம். அடியில் கண்ட விஷயங்களில் பணம் செலுத்தப் படுவதற்காக கொண்டுவந்து காட்ட வேண்டிய அவசியமில்லை.

(1) ஆதரவு கொண்டுவந்து காட்டுவதை அநியாயமாய் தடுத்தாலும், அல்லது செய்தவன் எழுதப்பட்டவன் அங்கீகரித்தவன் குறித்த தொழிலிடத்தில் சாதாரண

மாய் வேலைசெய்யும் காலங்களில் இடத்தை மூடிவிட்டாலும் அல்லது குறித்த இடத்தில் வந்திராவிட்டாலும் அல்லது கிரமமாய் தேடிப்பார்த்தும் அவன் அகப்படாவிட்டாலும்,

(2) காட்டத் தவறிப்போன விஷயத்தை ஆக்ஷேபிக்க தனக்கிருக்கும் பாத்தியதை விட்டுவிட்டாலும் அதாவது காட்டவில்லை யென்று தெரிந்திருந்தும் தொகையை செலுத்துவதாய் உறுதிசொன்னாலும்,

(3) அப்படி கொண்டுவந்து காட்டாததினால் எழுதினவனுக்கு யாதொரு நஷ்டமும் வராதிருந்தாலும், காட்டப்பட்டவுடனே பணம் செலுத்திவிட்டால் ஆதரவு தீர்ந்ததாய் எண்ணப்படுவதுடன் அதன்மேலுள்ள சகல வியாஜ்ஜிய சுதந்தரங்களும் அற்றுப்போகின்றன.

பணம் செலுத்த தவறிப்போனால் அலட்சியம் செய்ததாக ஏற்படும். ஆதரவில் சம்மந்தப்பட்டவர்களின் பேரில் அதை வைத்திருப்பவன் தாவாசெய்ய அதிகாரமுண்டு. அந்த ஆதரவின் பேரில் யாரைத் தனித்தனி உட்படுத்தும்படி அதை வைத்துக்கொண் டிருப்பவன் நினைக்கிறானோ அப்படிப்பட்ட மற்றெல்லா நபர்களுக்கும், யாரைக் கூட்டாய் உட்படுத்தும்படி எண்ணுகிறானோ அப்படிப்பட்ட பல நபர்களில் யாவனொருவனுக்கும் அலட்சியம் செய்யப்பட்டதென்று நோட்டீஸ் கொடுக்கவேண்டும். அந்த நோட்டீஸை யாருக்கு அது கொடுக்கப்படவேண்டியதோ அவருடைய கிரமமான ஏஜெண்டுக்காவது, அவன் இறந்துபோய்விட்டால் அவனுடைய பிரதிநிதிக்காவது, அவன் இன்ஸால்வெண்ட் என்று தீர்மானிக்கப்பட்டிருந்தால் அவனுடைய அஸைனிக்காவது கொடுக்கலாம். அது வாய்மொழியாகவாவது, எழுத்து மூலியமாயாவது இருக்கலாம். எழுத்து ரூபமாயிருந்தால் தபாலில் அனுப்பலாம். அது எந்தவிதமுமிருக்கலாம் ஆனால் அதில் அந்த ஆதரவு அலட்சியம் செய்யப்பட்டதென்றும், இன்ன விதமாய் அலட்சியம் செய்யப்பட்டதென்றும் அதன்மேல் அவன் உத்தரவாதியாக எண்ணப்படுவானென்றும் செவ்வையாக எழுதவேண்டும். தவிர அவனுடைய தொழிலிடத்திலாவது, வாசஞ்செய்கிற இடத்திலாவது கொடுக்கவேண்டும். ஆதரவை வைத்

துக்கொண்டிருப்பவனும், நோட்டீஸ் கொடுக்கப்படுகிறவனும், வெவ்வேறு இடங்களில் தொழில் நடத்திவந்தாலும், வசித்துவந்தாலும் பின்னிட்டு அடுத்துப்போகிற தபால் மார்க்கமாயாவது அலட்சியம் செய்த தினத்திற்கு அடுத்துவருகிற தினத்திலாவது அந்த நோட்டீஸை அனுப்பினால் நியாயமாக கொடுக்கப்பட்டதாகும். மேற்படி நபர்கள் ஒரே இடத்தில் தொழில் நடத்தினாலும், வாசம் செய்தாலும் அலட்சியம் செய்த தினத்திற்கு பின்பு அடுத்த தினத்திலே அந்த நோட்டீஸ் போகவேண்டிய இடத்திற்கு போய் சேரும்படி தகுந்த காலத்தில் அனுப்பப்பட்டிருந்தால் அது நியாயமான காலத்திற்குள் கொடுக்கப்பட்டதாகும். மேல்கண்ட நோட்டீஸை பெற்றுக்கொள்ளுகிறவன் தன்னுடைய பாத்தியதையை ஸ்தாபிக்க இஷ்டப்பட்டால் முன்னிட்டுச் சம்மந்தப்பட்டிருக்கும் யாதொரு நபருக்கும் அதேவிதமாய் நோட்டீஸ் கொடுக்கலாம். அடியில் கண்ட விஷயங்களில் அலட்சியம் செய்ததைக்குறித்து நோட்டீஸ் கொடுக்க வேண்டியதில்லை:—

(1) அதை பெற்றுக்கொள்ள பாத்தியதை யுடைத்தாயிருக்கிறவன் வேண்டியதில்லை யென்று தவிர்த்தாலும்,

(2) எழுதினவன் பணம் செலுத்துவதை தடுத்தாலும்,

(3) நோட்டீஸ் கொடுக்கப்படாமையால் எவ்வித நஷ்டமுண்டாகாவிட்டாலும்,

(4) கிரமமாய் தேடிப்பார்த்தும் அவன் அகப்படாவிட்டாலும்,

(5) அங்கீகரிக்கிறவன் எழுதினவனாகவு மிருக்கிற பட்சத்திலும்,

(6) கைமாறிச் செல்லத்தக்கதல்லாத புரோநோட் விஷயத்திலும்,

(7) சங்கதி தெரிந்தே தொகையை தருவதாக உறுதி சொன்னாலும்.

சில விஷயங்களில் அலட்சியம் செய்த நோட்டீசுக்குப் பதிலாக நோட்டரி பப்ளிக் என்னும் உத்தியோகஸ்தரின் புரோடெஸ்ட் நோட்டீஸ் அவசியமாக யிருக்கும். புரோடெஸ்ட் என்றால் யாதொரு ஆதரவு அங்கீகரிக்கப்படாமையினாலாகிலும், பணம் செலு

க்கப்படாமையிலாகிலும், அலட்சியம் செய்யப்பட்டிருக்குமாகில் அதைக்குறித்து நியாயமான காலத்திற்குள் நோட்டரி பப்ளிக் என்னும் உத்தியோகஸ்தர் நோட் செய்து சர்டிபை செய்வது. அதில் பொதுவாக மூல ஆதரவோ அல்லது அதற்குகாப்பியோ, யாருக்காக செய்யப்பட்டதென்றும் யாருக்கு விரோதமாக செய்யப்பட்டதென்றும், தன்னால் பணம் செலுத்தும்படியோ அங்கீகரிக்கும்படியோ கேட்ட சங்கதியும் அதின் பதிலையும், அலட்சியம் செய்யப்பட்ட இடமும் காலமும் கண்டு கையெழுத்து செய்யாதிருக்கவேண்டும்.

கைமாறிச்செல்லத்தக்க யாதொரு ஆதரவில் முன்னிட்டு சம்மந்தப்பட்டிருக்கிற பிரதிநபரும் அதை கிரமமான தோரணியில் வைத்துக்கொண்டிருப்பவனுக்கு உத்திரவாதியாக யிருப்பதால் அதின் பேரில் போடும் கேசுகளில் எல்லாரையும் கட்சிக்காரர்களாய் சேர்க்கவேண்டும். அந்த விதம் கொண்டுவரும் கேசுகளில் பொதுவாக பிரதிவாதி ஆதரவின் ஷரத்துக்கு விரோதமாக எந்தவித வாய்மொழி சாட்சியமும்விட இந்தியன் சாட்சி சட்டம் 92-வது பிரிவுப்படி தடைப்பட்டிருக்கிறான். கைமாறிச் செல்லத்தக்க பிரதி ஆதரவும் கிரமமான பிரதிப்பிரயோஜனத்திற்கு எழுதிக்கொடுக்கப்பட்டதாகவே எண்ணப்படும். ஆனால் ஷை பிரிவு முதலாவது உட்பிரிவின் கீழ் யாதொரு தொகை பெற்றுக்கொள்ளவில்லை யென்றும், ஆதரவில் கண்டிருக்கும் தொகையைவிட குறைவான தொகை பெற்றுக்கொண்டதாயும் கட்சி சொல்லக்கூடும். பார்த்தவுடன் கொடுப்பதாக கண்டிருக்கும் உண்டியண்டின் பேரில் செய்யும்தாவாவில் நோட்டை எழுதியவன் உயிருடனிருக்கும் வரையில் தாவா செய்கிறதில்லை யென்கிற ஏற்பாட்டின்பேரில் பத்திரம் பிறந்ததென்றாவது பத்திரத்தில் கண்டிருக்கும் தொகையைவிட குறைத்து வாங்கிக்கொள்ள எக்ரிமெண்டு ஏற்பட்டிருக்கின்றாவது அல்லது தவணைகளில் தான் கொடுக்கும் ஏற்பாடு இருக்கின்றதென்றாவது கட்சிசொல்ல முடியாது. புரோநோட்டில் கையொப்பம் செய்திருக்கிறவர்களில் ஒருவர் தான் ஜாமீன்தாராகமட்டில் கையொப்பம் செய்ததாக வாய்மொழி ருஜுவிட முடியாது. 2. லோ. ப. ரூ. 268. யாதொரு ஆதரவில் எழுதிமுடிந்த பிறகு மூலையிலோ, பக்கங்களிலோ அல்லது பின் பக்கத்திலோ எழுத்துமூலமான எக்ரீ மெண்டுகளிருக்கக்கூடும். பொதுவாக அந்தவிதமுள்ள மிமோக்கள் பத்திரகாலத்தில் ஏற்பட்ட

தாக நினைக்கப்படும். அவைகளின் கருத்து ஆதரவில் கண்டிருக்கும் தொகைகள் சில கண்டிஷன்கள்பேரில் கொடுக்கவேண்டியதென்று தெளிவாய் புலப்படுமானால் அந்த விதமே கோர்ட்டாரும் அபிப்பிராயப்படுவார்கள். ஒன்றுக்கொன்று விருத்த மேற்படாதபடி அர்த்தம் செய்யவேண்டும். ஒரு புரோநோட்டின் பேரில் செய்த நம்பரில் சிலவருஷங்கள் வரையில் தாவா செய்கிறதில்லையென்று கண்ட எக்ரிமெண்டை பிரதிவாதி தாகல் செய்ததில் அந்த எக்ரிமெண்ட் சட்டப்படி செல்லாதென்று ஜட்ஜ் மணிஐயர் அவர்கள் தேவக்கோட்டை A. R. P. சோமசுந்தரம் செட்டியார் கேஸில் தீர்மானம் செய்திருக்கிறார்கள். 29. ம. 212. மேலே சொல்லிய மிமோக்கள் பத்திரத்துக்கு பிறகு ஏற்பட்டதாயிருக்கும் பட்சத்தில், சம்மதமில்லாமல் ஏற்பட்டிருக்குமானால் ஆதரவை மாற்றிவிட்டதாயும், ஆனதால் செல்லாமல் போய்விட்டதாயும் சொல்ல இடம் இருக்கிறது. முக்கியமான மாறுதல் என்பதினுடைய அர்த்தத்தை செவ்வையாக கவனிக்கவேண்டியது அவசியம். கைமாறிச்செல்லத்தக்க ஆதரவுகளைக்குறித்த ஆக்ட் 87-வது பிரிவுப்படி யாதொரு ஆதரவில் ஏதாவது முக்கியமான மாறுதல் செய்தால் அப்படிப்பட்ட மாறுதல் அதில் சம்மந்தப்பட்ட மூலபுருஷர்களுடைய பொது எண்ணத்தை நிறைவேற்றுவதற்காகச் செய்யப்பட்டாலொழிய அப்படிப்பட்ட மாறுதல் செய்தகாலத்தில் அதில் சம்மந்தப்பட்டவனுப் அந்த மாறுதலுக்கு உடன்படாதிருக்கும் யாதொரு நபர் விஷயமாக அந்த ஆதரவு செல்லாமல் போய்விடும். அனுமதியன்னியில் தேதியை திருத்தினால் நோட்டின் யோக்கியதைபோய் அந்தநோட்செல்லாது. அடிக்கட்டை அதாவது கவுண்டர்பாயிலில் தேதிகுறித்திருந்து மறுபாதியில் புரோநோட் எழுதிய காலத்தில் தேதிபோட மறந்துவிட்டதால் பிறகு தேதிபோடப்பட்டு தாவாகொண்டு வந்ததின்பேரில் பிரதிவாதி செல்லாதென்று கட்சி சொல்ல அது உபயவாதிகளின் பொது எண்ணத்தை நிறைவேற்றுவதற்காக தேதிபோடப்பட்டதால் ஆதரவை ரத்து செய்யக்கூடிய முக்கியமான திருத்தலாகமாட்டாதென்று ரெங்கூன் சீப்கோர்ட்டார் தீர்மானம்செய்திருக்கிறார்கள். 2. லோ. ப. ரூ. 324. ஆதரவில் எழுதியிருக்கும் காலத்தில் திருத்தல் செய்தாலும் முக்கிய திருத்துதலாகும். அதில் கண்டிருக்கும் தொகையையோ வட்டியையோ திருத்தக்கூடாது. ஒரு அண்டிமண்

டில் " கேட்கும்போது மாங்நின் மாகின் ஆகிய நாங்கள் A. L. V. R. R. M. சுப்பிரமணியஞ்செட்டி அல்லது அவர் ஆடருக்கு மீ 1-க்கு 1-4-0 வட்டி சேர்த்து ரூ-1500 கொடுப்போமாகவும் " என்று கண்டிருந்தது. பிறகு மாங்போலா வென்பன் கையெழுத்து செய்தார். தாவாவில் இந்தவிதம் செய்ததால் நோட் செல்லாதென்று கட்சி சொல்ல, கட்சியை ஏற்றுக்கொள்ளவில்லை. அதே விதமாய் அந்த செட்டிக்கடை பழைய ஏஜெண்டு வெங்கிடாசலம் செட்டி கொப்பெடுவே பேரில் கொண்டுவந்த கேசிலும் தீர்ப்பாயிருக்கிறது. கீழ் பர்மாவில் 1897-ஆண்டு இது சம்மந்தமாய் ஏற்பட்டிருக்கும் கேஸை மாந்தலே தீர்ப்புகளில் கவனித்ததாக ரிபோர்ட்டால் தெரியவில்லை. இந்த இடத்தில் 1906ஆண்டு ஜட்ஜ் மூக்கர்ஜீ, ராம்பீனி அவர்களால் செய்திருக்கும் தீர்மானத்தைபற்றி சொல்லவேண்டியது அவசியம். அந்த தீர்மானப்படி அனுமதியன்னியில் யாதொரு ஆதரவை திருத்தினால் அந்த திருத்தல் ஆதரவை எழுதினவனுக்கு அனுகூலமாயிருந்தாலும் சரி, பிரதிகூலமாயிருந்தாலும்சரி அது முக்கிய திருத்துதல் என்று தீர்மானித்து அந்த கேசில் முதல் பிரதிவாதியின் அனுமதியில்லாமல் 2-ம் பிரதிவாதி பெயரை போட்டதால் தாவாவை தள்ளவேண்டுமென்று அபிப்பிராயம் கொடுத்தார்கள். வாதி கடன் தொகையின் பேரில் டிக்ரி கொடுக்கவேணுமென்றும், அந்தக் கடனுக்கு சாட்சியமாக ஆதரவை ஏற்றுக்கொள்ளவேணுமென்றும் சொல்லியகட்சியை அங்கீகரம் செய்யவில்லை. 33.க. 812. ஒரே புரோநோட்டை பல தடவைகளில் பலர்கள் கையெழுத்து செய்தால் அந்த ஆதரவின் பேரில் யாதொரு வியாஜ்ஜியமும் செய்யமுடியாதென்று ரெங்கூனில் பர்கஸ் ஜட்ஜ் 1899-ஆண்டு தீர்மானித்திருக்கிறார்கள். ஒரு புரோநோட்டில் ஆதரவு பிறந்த பிறகு சிலரிடம் சாட்சி கையெழுத்து வாங்குவதால் பத்திரத்தை திருத்தினதாக பாவிக்கக்கூடாதென்று கல்கத்தாவிலும் பம்பாயிலும் சென்னையிலும் தீர்ப்புகள் இருக்கின்றன.

செட்டிப் பிள்ளைகளில் புரோநோட்டில் சாட்சி கையெழுத்து வாங்கக்கூடாதென்று சிலர் நினைக்கிறார்கள். அப்படி நினைக்க யாதொரு ஆதாரமும் சட்டத்தில் கிடையாது. சாட்சிகளிடம் கையெழுத்து வாங்குவார்களேயானால் கேசு காலங்களில் அவர்கள் சாட்சியத்தை சுளுவில் விடலாம்.

பர்மா ஜாதி புருஷன் ஒருவன் மட்டில் வந்திருந்தால் நோட்டில் அவன் பெண்சாதி பெயரையும் புருஷனைவிட்டு எழுதச் சொல்லுவது நிரம்பவும் ஸகஜமாயிருந்து வருகிறது. அது சரியல்ல. ரெங்கூன் சீப்கோர்ட்டில் ஒரு பெண்சாதியின் சம்மதமில்லாமல் அவளுக்காக அவன் புருஷன் கையெழுத்து செய்ய அதிகாரமில்லை யென்று தீர்ப்பாயிருக்கிறது. 2. லோ. ப. ரூ. 324. தனக்காக வேறொருவரைக்கொண்டு புரோநோட்டில் மார்க்காகவோ கையெழுத்து செய்யக் கூடும்.

இவ்விடம் கொண்டு விலைசெய்யும் சில ஏஜண்டுகள் தங்கள் கடையில் உபயோகிக்கும் அச்சு புரோநோட்டுப் பாரங்களிலிருக்கும் காலி இடங்களில் சரியாக பூர்த்திக்கிறர்களா இல்லையாவென்று பார்க்கிறதில்லை. தவிர கையெழுத்து செய்கிறவன் வாஸ்தவத்தில் தன் பெயரை எழுதுகிறுை அல்லது ஜமட்டாவாக பொய்யான வேறு பெயரை எழுதுகிறுை வென்று கவனிக்கிறதில்லை. ஒருவன் தன் பெயரை போடாது வேறு பெயரை எழுதிவிட்டால், பணம் கடன் வாங்கினவன் தான் அந்தவிதம் எழுதினனென்று ருஜூ கொடுக்கவேண்டும். புரோமில் S. A. கடையில் ராமன்செட்டி காலத்தில் ஆங் ஈன் என்ற சீனகாரன் அச்சுபாரத்தில் ஒன்றும் எழுதாமல் அதன் கீழே சீனப்பாஷையில் "தேதிவருஷம் போட்டு ராமன் செட்டியிடமிருந்து மீ 1 - க்கு 1000 - க்கு ரூ. 15 வட்டிவிதம் வாங்கியது ரூ. 5000" என்று மட்டில் எழுதப்பட்டிருந்தது. பிறகு அந்த நோட்டின் பேரில் வியாஜ்ஜியம் வந்ததும் சீனக்காரன் புரோநோட்டல்லவென்று கட்சி சொல்ல புரோநோட்டில் எழுதுகையில் செட்டி சரியான புரோநோட் எழுதுவதாக நினைத்திருக்கவேண்டுமென்றும் கண்டுபிடித்து ஆதரவு புரோநோட்டாகா தென்று சொல்லிய சீனகாரன் கட்சியை யாரும் தன்னுடைய மோசத்தாலே பிரயோஜனமடைய கோர்ட்டார் உதவிசெய்ய மாட்டார்களென்ற காரணத்தைக்கொண்டு ஏற்றுக்கொள்ளவில்லை. இந்த சீனக்காரன் தாசியில் S. R. M. M. A. R. கடையில் ஏஜண்டுவேலை பார்த்து வந்த அளகப்பசெட்டியாரிடம் புரோநோட்டுகள் எழுதிக் கொடுத்த 2-பஞ்சாப்காரர்களைவிட ரொம்பவும் நல்லவனென்றே எண்ணவேண்டும். அவர்களும் அச்சின்கீழே உருடுபாஷையில் அர்த்தமில்லாத வார்த்தைகள் எழுதியிருந்தாலும், எழுதிக்கொடுத்த

வர்கள் இறந்துவிட்டப்படியால் இறந்தவர்கள் தான் ஆதரவுக்களை எழுதிக்கொடுத்ததாகவும் சரியான ருஜூவிடாததால் அந்த நோட்டுகளின் பேரில் கொண்டுவரப்பட்ட வியாஜ்ஜியங்களை தள்ளுபடி செய்யப்பட்டது.

கைமாறிச் செல்லும் யாதொரு ஆதரவில் கண்டிருக்கும் தொகையை அந்த ஆதரவு யாரிடமிருக்கிறதோ அவனிடம் தான் கொடுக்கவேண்டும். ஒரு கேசில் பிரதிவாதி தான் ஆதரவில் இராத மூன்ரும் நபருடைய தொகையை பெற்றுக்கொண்டு கையெழுத்து செய்ததாயும், வாதியின் பேர், பேர் இரவலாக போடப்பட்டதென்றும் ஷெ தொகையை மூன்ரும் மனிதனிடம் திருப்பிக்கொடுத்ததாக கட்சிசொல்ல, ஆதரவின் இன்டார்சீ அல்லது அதை உடைத்தாயிருப்பவன் இவர்கள் அல்லாததும் ஆதரவில் காணுததுமான மூன்ரும் மனிதனிடம் கொடுத்ததாக கட்சிசொல்ல முடியாதென்று தீர்மானிக்கப்பட்டது. 30. ம. 88.

யாதொரு செக்கினுடைய முகப்பிலே "கைமாறிச் செல்லத்தக்கதல்ல" என்கிற வார்த்தைகளை எழுதியோ எழுதாமலோ 2-ரேகைகளை குறுக்கில் இழுத்து அவைகளின் மத்தியில் "அண்ட் கம்பெனி" என்கிற வார்த்தைகளையாவது அதற்கு சுருக்கத்தையாவது சேர்த்து எழுதியிருந்தாலும், 2-ரேகைகளை மட்டில் குறுக்காய் இழுத்திருந்தாலும், அப்படி சேர்த்திருப்பது க்ராஸ் செய்யப்பட்டதென்று சொல்லப்படும். மேலும் செக்கானது சாதாரணமாகக் க்ராஸ் செய்யய்பட்டதென்று எண்ணப்படவேண்டும். செக்கின் முகரால் "கைமாறிச் செல்லத்தக்கதல்ல" என்கிறவார்த்தைகளை சேர்த்தோ சேர்க்காமலோ ஒரு பாங்கரின் பெயரை சேர்த்து எழுதியிருந்தால் செக்கானது ஸ்பெஷல் அல்லது விசேஷமாக க்ராஸ் செய்யப்பட்டதென்றும் அந்த பாங்கருக்குக் க்ராஸ் செய்யப்பட்டதாகவும் எண்ணப்படவேண்டும். சாதாரணமாக க்ராஸ் செய்யப்பட்டிருந்தால் அது யார்பேரில் எழுதப்பட்டதோ அந்தப் பாங்கரானவன் யாதொரு பாங்கருக்கல்லாமல் மற்றபடி அதற்கு பணம் செலுத்தக்கூடாது. ஸ்பெஷல் க்ராஸ் செய்யப்பட்டிருந்தால் அதில் கண்டிருக்கும் பாங்கரானவன் அது யாருக்கு க்ராஸ் செய்யப்படுகிறதோ அந்த பாங்கருக்காவது பண வசூலுக்காக இருக்கும் அவனுடைய ஏஜண்டுக்காவதல்லாமல் மற்றபடி அதற்கு பணம் செலுத்

தக்கூடாது. இந்தபடி கிரமமான தோரணியில் அல்லாமல் மற்றபடி பணம் செலுத்தினல் அதனுல் ஏற்படும் நஷ்டத்துக்கு உள்ளாக வேண்டும். கைமாறிச் செல்லத்தக்க ஆதரவுகள் சம்மந்தமாய் கொண்டுவரும் வியாஜ்ஜிய விவரங்களும் அவைகளின் கெடுவுகாலம் எதுமுதல் ஆரம்பிக்குமென்பதும் காலநிர்ணயச்சட்டம் (அதாவது) லீகந்தா ஊபடேயின் அடியில் குறிக்கப்பட்டிருக்கும் ஷெடியூலால் நன்கு விளங்கும் :—

(1) 5. 1908-ம் ஸிவில் ப்ரோஸீஜர் கோடின் 37-வது அதிகாரப்பிரகாரம் கைமாறத்தக்க ஆதரவுகளின் மேல் சுருக்க வகையான நடவடிக்கை வியாஜ்ஜியத்திற்கு கெடுவுகாலம் 6-மாதம். கடன்செலுத்தும்படியானதாகும் காலத்தில் வியாஜ்ஜியமூலம் உற்பத்தியாகிறது.

(2) 69.-தேதிக்குப்பின்பு நிஷ்கரிஷையான காலத்திலே செலுத்தும்படியான பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ் அல்லது ப்ராமிஸெரி நோட்டின்மேல் போடும் வியாஜ்ஜியத்திற்கு கெடுவுகாலம் 3-வருஷம் அந்தபில் அல்லது நோட் பாக்கியாகிறபோது வியாஜ்ஜியமூலம் உற்பத்தி.

(3) 70-நிஷ்கரிஷையான காலத்தி லல்லாமல், தரிசனமாகும் போதாவது, தரிசனமானபின்பாவது செலுத்தும்படியான பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜின்மேல் வியாஜ்ஜியத்திற்கு கெடுவுகாலம் 3-வருஷம். அந்தபில் கொண்டுவந்து கொடுக்கப்படுகிற காலம் வியாஜ்ஜியமூலம் உற்பத்தி.

(4 71-பலான இடத்திலே செலுத்தும்படியானதாக அங்கீகரிக்கப்படுகிற பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜின்பேரில் வியாஜ்ஜியத்திற்கு கெடுவுகாலம் 3-வருஷம். அவ்விடத்திலே அந்த பில் கொண்டுவந்து கொடுக்கிறபோது உற்பத்தி.

(5) 72-தரிசனமான பின்பாவது, கேட்டபின்பாவது நிஷ்கரிஷையான காலத்தில் செலுத்தும்படியான பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ் அல்லது ப்ராமிஸெரி நோட்டின்மேல்

கெடுவுகாலம் 3-வருஷம். நிஷ்கரிஷையான காலம் முடிகிறபோது வியாஜ்ஜியமூலம் உற்பத்தி.

(6) 73-வியாஜ்ஜியம் தொடரும்படியான சுதந்தரத்தை தடுக்கும் அல்லது நிறுத்திவைக்கும் யாதொரு கண்டிஷனும் இல்லாது கேட்டவுடனே பணம் செலுத்தும்படியான பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ் அல்லது ப்ராமிஸெரி நோட்டின்பேல் வியாஜ்ஜியத்திற்கு கெடுவுகாலம் 3 - வருஷம். அந்த பில் அல்லது நோட்டின் தேதியில் வியாஜ்ஜியமூலம் உற்பத்தி.

(7) 74-வாயிதாக்களாகச் செலுத்தும்படியான ப்ராமிஸெரி நோட்டின் பேரில் வியாஜ்ஜியத்திற்கு கெடுவுகாலம் 3-வருஷம். செலுத்தும்படியான முதல்வாயிதா தொகையைக்குறித்து அந்த முதல் வாயிதா - கழியும்போதும், மற்ற வாயிதாத் தொகைகளைக் குறித்து அந்தந்த வாயிதா கழியும்போதும் வியாஜ்ஜியமூலம் உற்பத்தி.

(8) 75-வாயிதாக்களாகப் பணம் செலுத்துவதாய்க் கண்டு ஒன்று அல்லது பல வாயிதாக்கள் தவறினால் முழுதும் பாக்கியாய்விடுமென்கிற ஷரத்து எழுதியிருக்கும் ப்ராமிஸெரி நோட்டின் பேரில் வியாஜ்ஜியத்திற்கு கெடுவுகாலம் 3-வருஷம். பணம் சேரவேண்டியவர் அந்த விஷயத்தின் பிரயோஜனத்தை விட்டுவிட்டாலன்றி மற்றபடி வாயிதா தவறிப்போகும்போது, இல்லாவிட்டால் எதைக்குறித்து அப்படி விட்டுவிடுவதில்லையோ அந்த புது வாயிதா தவறிப்போகும்போது வியாஜ்ஜியமூலம் உற்பத்தி.

(9) 76-எழுதிக்கொடுக்கிறவர் ஏதோ ஒரு காரியம் நேரிட்டபின்பு பணம் சேரவேண்டியவரிடத்தில் ஒப்பிக்கும்படி மூன்றுவது நபருக்கு கொடுக்கிற ப்ராமிஸெரி நோட்டின்பேரில் வியாஜ்ஜியம் கெடுவுகாலம் 3-வருஷம். பணம் சேரவேண்டியவரிடத்தில் ஒப்பிக்கிறதேதி வியாஜ்ஜியமூலம் உற்பத்தி.

(10) 78-அங்கீகரியாமையினால் அலட்சியம் செய்யப்பட்ட பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜை எழுதிக்கொடுத்தவர் மேல் பணம் சேரவேண்டியவரால் கொண்டுவரும் வியாஜ்ஜியத்திற்கு கெடுவுகாலம் 3-வருஷம். அங்கீகரியாமல் அலட்சியம் செய்யப்பட்ட தேதி வியாஜ்ஜியமூலம் உற்பத்தி.

(11) 80-காலாவதி நிர்ணயச் சட்டத்தில் வெளிப்படையாகச் சொல்லியிராத பில் ஆவ் எக்ஸ்சேஞ் அல்லது ப்ராமிஸரி நோட்டின்பேரில் வியாஜ்ஜியத்திற்கு கெடுவு காலம் 3-வருஷம். அந்தப்பில் அல்லது நோட்டுக்கு பணம் செலுத்த தக்கதாகும்போது வியாஜ்ஜியமூலம் உற்பத்தி.

கைமாறிச் செல்லத்தக்க ஆதரவுகள் சம்மந்தமாயுள்ள ஸிவில் புரோஸீஜர்கோடின் செக்ஷன்களில் முக்கிய கருத்தை அடியில் எடுத்தெழுதப்பட்டிருக்கிறது. மேற்படி கோடு முதலாவது ஆடர் ஆறுவது ரூல்படி பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ்களுக்கும் உண்டிகளுக்கும் ப்ராமிஸரி நோட்டுகளுக்கும் சம்மந்தப்பட்டிருக்கிறவர்கள் உள்பட ஏதாவது ஒரே ஒப்பந்தத்தின்மேல் தனித்தனியாகவாவது, கூட்டாகவும், தனித்தனியாகவுமாவது, பொறுப்புள்ளவர்களாயிருக்கிற சகலமானவர்களேயுமாகிலும், அவர்களில் யாரையாகிலும் வாதி தமக் கிஷ்டமிருந்தால் ஒரே வியாஜ்ஜியத்தில் கட்சிக்காரர்களாகச் சேர்க்கலாம். ஆர்டர் 7-ரூல் 16-பிரகாரம் யாதொரு ஆதரவானது வியாஜ்ஜியத்துக்கு ஹேதுவாயிருந்து அந்த ஆதரவு கைதவறி கெட்டுப் போயிருந்து அந்த ஆதரவு கெட்டுப்போயிற்றென்று ருஜூ செய்தால் வேறே எவராவது அந்த ஆதரவின்பேரில் சுதந்தரம் கொண்டாடினால் அதற்கு தான் உத்திரவாதம் செய்வதாய் வாதி கோர்ட்டாருக்கு திருப்தியாகும்படி ஜாமீன் (இண்டம்னிடீ) கொடுத்தால் கோர்ட்டார் டிக்கிரி கொடுக்கலாம். ஆதரவு எழுதிக் கொடுக்கும்படியாவது கைமாறத்தக்க யாதொரு ஆதரவின்மேல் எண்டார்ஸ் செய்யும்படியாவது டிக்கிரி ஏற்பட்டிருந்து தீர்ப்பான கடனாளி அந்தப்படி செய்ய அசட்டை அல்லது நிராகரித்தாலும், டிக்கிரி பெற்றவர் டிக்கிரி ஷரத்துகளை அனுசரித்து அப்படிப்பட்ட ஆதரவுக்காவது, எண்டார்சுமெண்டுக்காவது ஒரு மசோதா தயார் செய்து

அதை கோர்ட்டாரிடம் கொடுக்கலாம். பிறகு அந்த மசோதா வுக்கு ஆக்ஷேபணையிருந்தால் தெரியப்படுத்தும்படிகண்டு நோட்டீஸ் மசோதாவுடன் கடனாளிக்கு கொடுத்த எழுத்து மூலமாய் கடனாளி தெரிவிக்கும் ஆக்ஷேபணைகளை விசாரித்து ஏற்படுத்தும் மசோதா வை அவசியமிருந்தால் முத்திரைக்கடிதாசியில் எழுதி கோர்ட்டா ரிடம் டிக்கிரி பெற்றவர் கொடுக்கவேண்டும். பிறகு ஜட்ஜாவது அவரால் நியமிக்கப்படும் வேறு உத்தியோகஸ்தராவது மேற்படி ஆதரவை முடித்து தருவார்கள். இந்த விதம் டிரான்ஸ்பர் அல்லது மாற்றியும் தரலாம். கைமாறத்தக்க ஆதரவுகளை கைப்பற்றி ஜப்தி செய்யவும் அவைகளை கோர்ட்டுக்கு கொண்டுவந்து கோர்ட்டாரு டைய மறு உத்தரவுக்குட்பட்டு வைக்கும்படி 21-வது ஆடர் 51 ரூல்படி மனுசெய்து கொள்ளலாம். தவிர அவைகளை பஹிரங்க மான கோர்ட்டு ஏலத்தில் விற்கும்படியும் அல்லது தரகன் மூலமாய் விற்பனை செய்யவும் உத்திரவு செய்யக்கூடும். ஆடர்-21. ரூல்-76. கை மாறத்தக்க ஆதரவுகளின்மேல் சுருக்குவகையான நடவடிக்கைகள் நடத்த இஷ்டமிருந்தால் சி. பு. கோ 37-வது அதிகாரத்தில் கண்டி ருக்கும் விதமாக நடத்தவேண்டும். அந்த விதம் வியாஜ்ஜியங்கள் பர்மாதேசம் சம்மந்தப்பட்டவரையில் ரெங்கூன் சீப்கோர்ட்டிலும் மோல்மீன் ஜட்ஜ் கோர்ட்டிலும், அக்யாப் டிப்டி கமிஷ்ணர் கோர்ட் டிலும் மட்டில் தான் கொண்டுவர முடியும். இந்த கேசுகளில் அதற்கென்று ஏற்பட்டிருக்கும் நமூனைப்படிக்கானப் பிளெயிண்டு களைக்கொடுத்தும் ஸம்மனில் கிடைத்த 10-தினத்திற்குள் தாவா வின் குணதுணங்களின்மேல் பிரதிவாதம் இருப்பதாக காட்டக் கூடியமனு பிரதிவாதி கொடுக்கவேணுமென்று கண்டு இருக்கவேண் டும்.

---

# 5-வது அத்தியாயம்.

## அடகாக ஒப்படைசெய்வதைக் குறித்து.

தற்காலம் விசேஷமாய் நகைகளின்பேரில் மட்டில் செட்டிப் பிள்ளைகள் கடன் கொடுத்து வருகிறார்கள். ஆகையால் அது விஷயத்தைப்பற்றி இந்த அதிகாரத்தில் சில சங்கதிகள் எடுத்துச்

சொல்லும்படி அவசியம் ஏற்படுகிறது. அடகுவைத்துக் கொள்பவனுக்கு அடியில்கண்ட பாத்தியங்கள் உண்டு. யாதொரு கடனை செலுத்துவதற்காகவாவது, யாதொரு வாக்குத்தத்தத்தை நிறைவேற்றும் பொருட்டு ஈடாய் வஸ்துவை ஒப்படை கொடுப்பது அடகு என்று சொல்லப்படுகிறது. ஒப்படை கொடுக்கிறவனுக்கு அடகு வைக்கிறவன் என்றும், வாங்கிக்கொள்கிறவனுக்கு அடகு வைத்து கொள்கிறவனென்றும் சொல்லப்படும்.

(1) தனக்கு சேரவேண்டிய கடனுக்கும் வட்டிக்கும் அடகு வைக்கப்பட்ட வஸ்துவை, தன் ஸ்வாதீனத்தில் வைத்துக்கொள்ளுவதற்கும், காப்பாற்றுவதற்கும், தனக்கு நேரும் அவசியமான சகல செலவுக்கும் நிறுத்தி வைத்துக்கொள்ளலாம். தவிர அதை காப்பாற்ற நேரிடும் விசேஷ (அதாவது ஸ்பெஷல்) செலவையும் அடகு வைக்கிறவனிடத்திலிருந்து பெற்றுக்கொள்ள பாத்தியமுண்டு. ஆனதால் தன் வசமிருக்கும் அடகு வைக்கப்பட்டிருக்கும் சொத்தை வைத்தவன் பேரிலிருக்கும் டிக்ரிக்காக ஜப்தி செய்யமுடியாது.

(2) பொதுவாக எந்த கடனுக்காக அடகு வைக்கப்படுகிறதோ, அதைத்தவிர வேறு கடனுக்காக அதை நிறுத்திவைத்துக்கொள்ளும் பாத்தியமில்லாமல் போனாலும், அடகு வைத்துக்கொள்கிறவன் பின்னிட்டு பணம் கொடுக்கிற விஷயத்திலே விரோதமான யாதொரு ஏற்பாடு மில்லாமலிருந்தால் மட்டில், அந்த அடகின்பேரில் கொடுத்ததாகவே பாவிக்கப்படும்.

(3) கெடுவு காலத்திற்குள் கடனைத் திருப்பி கொடாமலிருந்தால், அடகு வைத்துக்கொள்ளுகிறவன் ஆசாமிக்காரனுக்கு கிரமமான நோட்டீஸ் கொடுத்துவிட்டு சொத்தை விற்று பாக்கியிருக்கும் தொகைக்காக தாவா செய்யலாம். அல்லது விற்காமலே சொத்தை சிக்யூரிட்டியாக பாவித்து தாவா கொண்டுவரலாம். அதில் ஆளைப்பொறுத்தும் சொத்தைப் பொறுத்தும் டிக்கிரி கேட்கலாம். கிரமமான நோடீஸ் கொடுத்து

சொத்தை விற்பதால் கிடைக்கும் தொகையிலிருந்து கடன் தீர்ந்துபோய் பாக்கியிருக்கும் தொகையை அடகு வைத்தவனுக்கு திருப்பிக்கொடுத்துவிட வேண்டும்.

வெகு செட்டிப்பிள்ளைகள் தங்களிடம் அடகு வைத்திருக்கும் நகைகளை தங்களுக்கு விற்பதற்கு அதிகாரமில்லையென்றும், ரெங்கூன் முதலான இடங்களிலிருக்கும் பல்தாசர் கம்பெனியைப் போலுள்ளவர்களுக்கு மட்டில் தான் அவ்வித அதிகாரமுண்டென்று நினைக்கிறார்கள். அந்தவிதம் நினைக்க கொஞ்சமும் இடம் கிடையாது. தானும் விற்கலாம் கோர்ட்டில் தாவா செய்து ஏற்படும் டிக்கிரி மூலமாயும் விற்கலாமென்று ஜட்ஜ் சுப்பிரமணிய ஐயர் அவர்கள் தீர்மானம் செய்திருக்கிறார்கள். 27. ம. 528. ஆனால் தான் விற்கவேண்டுமானால் மேலே சொல்லியபடி கிரமமான நோட்டீஸ் ஆசாமிக்காரனுக்கு கொடுத்திருக்கவேண்டும். ஒரு கேசில் அடகுவைத்தவன் சம்மதமும் அதிகாரமுமில்லாமல் அடகு வாங்கியவன் சொத்தை தானே கிரய பாவனையாக எடுத்துக்கொண்டு கணக்கில் ஆசாமிக்காரன் வரவு வைக்கப்பட்டிருந்தது. இது கிரமமான விஷயமல்லாமல் போனாலும் அடகு வைத்தவன் தான் கொடுக்கவேண்டிய கடனை கொடாது நகையை திரும்பவும் பெற முடியாதென்று சீமை பிரிவிகவுன்ஸில் சபையார் தீர்மானம் செய்திருக்கிறார்கள். 19. க. 322. சொத்தைப் பொறுத்து தாவா செய்ய இந்தியா காலாவதி நிர்ணயச்சட்டம் முதலாவது ஷிடியூல் 120-வது பிரிவுப்படி 6 வருஷம் கெடுவு காலம் உண்டு. ஆளைப்பொறுத்து தாவா செய்ய மேற்படி ஆக்ட்டு மேற்படி ஷிடியூல் 57-வது பிரிவுப்படி 3 வருஷம் கெடுவுகாலம். 22. க. 21; 17. அ. 284; 27. ம. 528. சொத்தை விற்ற பிறகு பாக்கி ஏற்படும் தொகைக்கும் தாவா செய்ய 57-வது பிரிவுப்படி கடன் கொடுத்த தேதி முதல் 3 வருஷம் கெடுவு என்று பம்பாயில் தீர்ப்பு ஏற்பட்டிருக்கிறது. 30. ப. 218.

அடகு வைக்கிறவனுடைய பாத்தியம் என்னவென்று சற்று விசாரிப்போம். ஏற்பட்டிருக்கும் கெடுவில் கடனை செலுத்தாமல் தவறிப்போனால் அவன் சொத்தை கெடுவுக்குப் பின்னிட்டும் அது வாஸ்தவமாய் விற்கப்படுவதற்கு முன்னமே மீட்கும் பாத்தியம் உண்டு. ஆனால் அப்படி செய்தால் தன்னுடைய தவறுதலால்

ஏற்படும் சிலவை ஒத்துக்கொடுத்து செலுத்தவேண்டும். அந்த விதம் சொத்தை மீட்பதற்காக கொண்டுவரும் வியாஜ்ஜியத்திற்கு காலாவதி, லிமிடேஷன் ஆக்ட்டு முதலாவது ஷிடியூல் 145-வது பிரிவில் கண்ட விதம் அடகு வைத்த தேதி முதல் 30 வருஷம். 15 ப. 30.

யாதொரு சரக்கையாவது, அல்லது வஸ்துக்களில் பாத்தியதை யை தெரிவிக்கக்கூடிய பில் ஆவ் லேடிங் கிடங்குக்காரன் சர்ட்டிபிக் கேட்டு முதலான தஸ்தாவேஜுகளையாவது, தன் ஸ்வாதீனத்தில் வைத்துக்கொண்டிருக்கிறவன் அவைகளை அடகு வைக்கலாம். ஆனால் அடகு வைத்துக்கொள்ளுகிறவன் நல்ல எண்ணத்தோடும், அடகு வைக்கிறவன் கிரமமாகவே அடகு வைக்கிறான் என்று நியாயமாய் நிச்சயிக்கக்கூடிய சங்கதிகளிலும் பிரவர்த்திக்கவேண் டும். மேலும் அவைகளின் சொந்தக்காரனிடமிருந்து யாதொரு குற்றம் அல்லது மோசம் மூலமாய் அடையாம லிருந்திருக்க வேண்டும். தவிர அடகு வைப்பவனுக்கு சொத்தில் எவ்வளவு பாத்தியமுண்டோ அவ்வளவுக்கு மட்டில் அந்த அடகு செல்லும். யாதொருவனுக்கும் மற்றவனிடமிருந்து ஒரு நகையை உபயோகத் திற்கு கைமாற்று வாங்கி அதை அடகுவைக்கும் பாத்தியம் அவ னுக்கு இல்லை. 27. ம. 424. பஞ்சாபில் ஒரு கம்பெனியில் மாதா மாதம் கிரயத்தொகையை கொடுப்பதாய் ஏற்பாடு செய்துகொண்டு ஒருவர் ஒரு பைசிகள் வாங்கினார். மாதா மாதம் கிரமமாய் தொகையை செலுத்திவருகையில் அவருக்கு அந்த சைக்கிளை அடகுவைக்கும் பாத்தியமிருக்கிறதென்று தீர்மானித்திருக்கிறார்கள். 34. ப. ரி.1902. யாதொரு யானையை கொஞ்சகாலத்திற்கு வாடகைக்கு வாங்கியவன் அந்த ஆனையை அடகுவைக்கும் பாத்தியமில்லை யென்று ரெங்கூ னில் தீர்மானித்திருக்கிறார்கள். 1872 - 92. லோ. ப. ரூ. 314. அலஹாபாத்தில் ஒரு கேசு நடந்தது. அதில் வாதி மைனராயிருக் கையில் அவர் கார்டியன் வாதிக்கு சொந்தமான சில நகைகளை தான் வைத்திருந்தார். வாதி மேஜரான பிறகும் அந்த நகைகளை வாதி கார்டியன் வசம் வைத்து வைக்க அந்த நகைகளை அவர் அடகு வைத்தார். வாதியின் சில சொத்துக்களை கையாடி விட்ட குற்றத் துக்கு கார்டியனை தண்டிக்க அடகு நகைகள் கோர்ட்டுக்கு வர, அது சம்மந்தமாய் வாதி தாவா செய்தார். ஹைகோர்ட்டார் அந்த

அடகு செல்லுமென்றும், பணத்தை கொடாமல் நகைகளை திரும்பவும் பெற முடியாதென்றும் கண்டு பிடித்தார்கள். 30. அ. 165.

நகைகள் சீட்டின்பேரில் செட்டிப்பிள்ளைகள் கொடுக்கும் கடனை கணக்கில் "ந. வெ" என்றுமட்டில் எழுதுகிறார்கள். தவிர சில கடைகளில் நகைகளை எழுதி ஜாப்தா செய்யும் வழக்கமுமில்லை. இந்த அசட்டையினால் கேசுகளில் ஜாஸ்தியான நகைகள் அடகு வைத்ததாக கட்சி சொல்லுவதற்கு இடமுண்டு. ஆனதால் அண்டிமெண்டு பின்புறத்தில் ஜாப்தாவை ஆசாமிக்காரன் கைபெழுத்திலே எழுதச்செய்து நிறையையும் குறிக்கும்படி செய்வது ரொம்பவும் நலம். தவிர அடகு வைப்பவர்கள் சில திருட்டு நகைகளை அடகு வைக்கிறார்கள். அந்த கேசுகளில் செட்டிப்பிள்ளைகளுக்கு பெருத்த நஷ்டமும் கவலையும் ஏற்படுகிறது. கிரிமினல் கேஸ் என்றால் வெகுவாய் பயப்படும் செட்டிப்பிள்ளைகளை போலீஸ்காரர்கள் பயமுறுத்தி பெருந்தொகைகள் கக்கும்படி செய்கிறது சகஜமாயிருக்கிறது. திருட்டுச் சொத்தென்று தனக்கு தெரியாமலே நல்லெண்ணத்துடன் அடகுவைத்துக் கொண்டதாய் ஏற்பட்டால் இந்தியன் பினல்கோடு 411-வது பிரிவுப்படி குற்றமாகமாட்டாது.

---

# 6-வது அத்தியாயம்.

## மார்ட்கேஜ, சிக்யூரெட்டி, கிரய சாஸனம் முதலிய ஆதரவுகளைக் குறித்து.

ரூபாய் 100 அல்லது அதற்கு மேற்பட்ட தொகையாயிருந்தால் அசையாப்பொருள் சம்மந்தப்பட்ட வரையில் ரிஜிஸ்டர் பத்திர மூலமாய் கிரயம் செய்ய முடியும். ரூபாய் 100-க்கு குறைந்து இருந்தால் ரிஜிஸ்டர் பத்திர மூலமாயாவது, சொத்தை ஒப்புவிப்பதின் மூலமாயாவது கிரயம் செய்யலாம். அசையாப்பொருளை விற்பதற்காக ஏற்படும் எக்ரிமெண்டுக்கு, பிறகு கட்சிக்காரர்களுக்குள் ஏற்பட்டிருக்கும் நிபந்தனைகளின்பேரில் சொத்து கிரயம் செய்யப்படும் என்பது தார்பரியமே ஒழிய அந்த எக்ரிமெண்டைக்

கொண்டே அந்த சொத்தில் பாத்தியம் ஏற்படாது. கிரயம் செய்பவன் சொத்தில் தனக்கிருக்கும் பாத்தியத்தை விட்டுவிட்டாலும், அல்லது விட்டுவிட எண்ணினாலும், கிரயத்தொகையை சொத்தை வாங்குபவன் கொடுக்காததினால் சாஸனம் பூர்த்தியாகவில்லையென்று சொல்லமுடியாது. 17. ம. லா. ஜ. 386. சாஸனம் ரிஜிஸ்டரானவுடன் சொத்திலுள்ள பாத்தியம் வாங்குபவனுக்கு போய்விடுகிறது. தொகை கொடுபடாததைக் கொண்டும் சாஸனத்தை வாங்கினவன் வசம் சொத்தை விடாததைக் கொண்டும், அந்தவிதம் பாத்தியம் செல்லவில்லையென்று சொல்லமுடியாது. தனக்கு கிர்யத்தொகையைக் கொடுக்காததைக்கொண்டு வேறொருவருக்கு அதே சொத்தை சாஸனம் செய்து கொடுக்கமுடியாது. 1. ம. லா. ட. 432. அதே ஹைகோர்ட்டார் சாஸனம் பூர்த்தியான போதிலும் தனக்குக் கொடுபடாத கிரயத்தொகையை பெற்றுக்கொள்ளுவதற்கும், சாஸனத்தை ரத்துசெய்வதற்கும், வியாஜ்ஜியம் கொண்டுவர முடியுமென்று தீர்ப்பு செய்திருக்கிறார்கள். 16. ம. லா. ஜ. 524. ஆனால் கிரயத்தொகையைக் கொடுத்ததின்பேரில் வாங்குபவஞ்க்கு சொத்தில் பாத்தியம் ஏற்படுமென்று எக்ரிமெண்டு செய்துகொண்டிருந்தால், அந்தவிதம் கிரயத்தொகை கொடுத்தாலொழிய வாங்கினவனுக்கு பாத்தியம் ஏற்படாது. 27. க. 7. சாஸனத்தில் கண்ட தொகையில் ஒருபாகத்தை மட்டில் கொடுக்காததால் கிரயம் செல்லாமல்போகாது. 11. ப. லா. ரி. 313. கிரய சாஸனத்தில் தான் தொகை முழூவதும் பெற்றுக்கொண்டதாகக் கண்டு, மூல சாஸனங்களையும் வாங்கினவனுக்குக் கொடுத்தபிறகு, அந்தச் சொத்தை இது விஷயம் தெரியாமல் மார்ட்கேஜ் பெற்றவனுக்கு விரோதமாக கிரயதாரன் தனக்கு கிரயத்தொகை வரவில்லையென்றும், தனக்கு சொத்தில் பாத்தியமிருக்கிறதென்றும் கட்சி சொல்லத் தடைப்பட்டிருக்கிறான். 33. ப. 53. கிரயத்தொகையை சாஸனகாலத்தில் கொடாமலும், கொடுப்பதாக உறுதி சொல்லாமலும் இருந்தால், ரிஜிஸ்டரானபோதிலும், சரியான சாஸனமல்லவென்று பர்மாவில் தீர்ப்பு செய்திருக்கிறார்கள். 4. லோ. ப, ரூ. 369. கிரயத்தொகை முழுவதும் கொடுபட்டும், சொத்து வாங்கினவன் வசம் விடப்பட்டும், ஆனால் சாஸனமட்டில் ரிஜிஸ்டர் செய்யப்படாமலிருந்தால் மேற்படி தேதியிலிருந்து சொத்தில் கிரயதாரனுக்கு எந்தவித பாத்

தியமுமில்லை. 24. ப. 400. கிரயத்தொகைகொடுத்தால்தான் வாங்கு கிறவனுக்கு பாத்தியம் ஏற்படுமென்று நிபந்தனை இல்லாதவரையில் கிரயத்தொகை முழுவதும் தான் கொடாத போனாலும் அந்த சொத்தை மற்றவர்களுக்கு மார்ட்கேஜ் பண்ணவோ, அல்லது அதை தன்வசம் கைப்பற்றவோ, வியாஜ்ஜியம்கொண்டுவர பாத்தியமுண்டு. 11. அ. 244. ஒரு சொத்தைக் கிரயம் செய்கிறதென்று செய்து கொள்ளும் எக்ரிமெண்டை ரிஜிஸ்டர்செய்யவேண்டியதவசியமில்லை. அந்த எக்ரிமெண்டை நிறைவேற்றித் தரும்படி கொண்டுவரும் வியாஜ்ஜியத்திற்கு இ. லி. ஆ. 113-வது பிரிவின்படி மூன்று வருஷம் காலாவதியுண்டு. நிறைவேற்றுவதற்காக நிச்சயிக்கப்பட்ட தேதி, அல்லது அப்படி தேதி நிச்சயிக்கப்படாவிட்டால் நிறைவேற்ற முடியாதென்று நிராகரித்த தேதி வாதிக்குத் தெரியவரும் போது, வியாஜ்ஜியமூல உற்பத்தி. அந்த எக்ரிமெண்டு ரிஜிஸ்டரா கியிருந்தால் அதைத் தவறுதலினால் ஏற்படும் டாமேஜுக்காக கொண்டுவரும் வியாஜ்ஜியத்திற்கு 116-வது, பிரிவின்படி 6-வருஷமும், ரிஜிஸ்டர் ஆகாத கேசுகளில் 115-வது பிரிவின்படி 3-வருஷமும் உண்டு. வாங்கினவனுக்கு சொத்தில் பாத்தியம் போனாலும், தனக்கு வரவேண்டிய கிரயத்தொகைக்கு அந்த சொத்தின் பேரில் ஒரு பொறுப்பு உண்டு. சொத்தை வாங்கினவனுக்குக் கொடாமலிருந்தால் தான் கொடுப்பதற்கு முன் முழுத்தொகையும் கொடுக்கவேண்டுமென்று கட்டாயப்படுத்தலாம். 2. ப. 547. கொடுத்தபிறகு சொத்தை பலாத்காரமாக தான் எடுத்துக்கொள்ள முடியாது. 23. ப. 525. கொடுக்கப்படாத கிரயப்பணத்தைத் தனக்கு செலுத்தவேண்டுமென்று கொண்டுவரும் வியாஜ்ஜியத்துக்கு 111-வது பிரிவின்படி 3-வருஷம் கெடுவு உண்டு. அதற்கு விற்பனை பூர்த்திசெய்வதற்காக நிச்சயிக்கப்பட்ட காலம், அல்லது சொத்தைப் பெற்றுக்கொண்ட காலம் வியாஜ்ஜியமூல உற்பத்தி. ஆனால் அந்த அசையாப்பொருளின்பேரில் பொறுப்பேற்றி பணத்தை வசூல் செய்து தரும்படி கொண்டுவரும் வியாஜ்ஜியம் 132-வது பிரிவின்படி பணம் பாக்கியான தேதியிலிருந்து 12-வருஷத்திற்குள் நடத்தப்படவேண்டும். ஒரு கிரய சாஸனத்தை மார்ட்கேஜாக பாவிக்கவேண்டுமென்ற எண்ணமிருந்ததாக வாய்மொழி சாட்சியம் விடமுடியாது. 1908. அ. ப. ரூ. 15; 3. லோ. ப. ரூ. 100. ஆனால்

மோசம் முதலானது இருக்கும் பட்சத்தில் ருஜுவிட முடியும். 11. ப. லா. ரி. 1130. யாதொரு சொத்தை கிரயம் வாங்குபவன் கிரயத்தொகையை கிரயம் செய்கிறவனுக்கு கொடாமலிருந்தால் அந்தத் தொகைக்காக அந்த சொத்தைப் பொறுத்து டிக்ரி பெறலாம். ஒரு கேசில் 81,000 ரூபாய்க்கு ஒரு கிரய சாஸனம் ஏற்பட்டு அதில் 30,000 ரூ. பத்திரதேதியில் கொடுபட்டு பாக்கித்தொகையை சில தவணைகளில் கொடுப்பதாக கண்டிருந்தது. அந்த விதம் கொடுக்கத் தவறினதால் பாக்கித் தொகைக்கு சொத்தைப் பொறுத்து டிக்ரி செய்யப்பட்டது. 31. க. 57. ஆனால் பத்திரத்தில் கிரயத்தொகையை கிரயம் செய்பவன் கொடுக்கவேண்டியிருக்கும் கடன்காரர்களுக்கு கிரயம் வாங்குகிறவன் கொடுப்பதாக கண்டிருந்தால் அந்தவிதம் கொடுக்கத் தவறினால் சொத்தைப்பொறுத்து டிக்கிரி கொடுக்கப்படமாட்டாது. ஏற்படும் நஷ்டத்திற்காக ஆளைப்பொறுத்துத் தான் டிக்ரி கொடுக்கப்படும். 5. இ. கே. 87 யாதொரு அசையாப்பொருள் மார்ட்கேஜ் பத்திரம் ரூபாய் 100 அல்லது அதற்கு மேற்பட்ட தொகைக்கு மேற்பட்டால் அதை ரிஜிஸ்டர் செய்யவேண்டும். தவிர அந்த பத்திரத்தில் மார்ட்கேஜ் வைத்தவனும் குறைந்தது 2-சாட்சிகளும் கையெழுத்து செய்திருக்கவேண்டும். 100-க்கு குறைந்த தொகையாயிருந்தால் ரிஜிஸ்டர் பத்திரமூலமாயாவது அல்லது சொத்தை ஒப்புவிப்பதின் மூலமாயாவது மார்ட்கேஜ் செய்யலாம். தவிர கிராண்டு சிக்யூரெட்டி மூலமாய் மார்ட்கேஜ் ஏற்படுத்தலாம். அந்த விதமான மார்ட்கேஜ் கல்கத்தா, சென்னப்பட்டணம், பம்பாய், கராச்சி, ரங்கூன், மோல்மின், பசின், அக்கியாப் இந்த இடங்களில் ஏற்படுத்தக்கூடும். அப்படி மார்ட்கேஜ் செய்ய அசையாப்பொருள் சம்மந்தமான சாஸனங்களை சிக்யூரெட்டியாக வைக்கும் எண்ணத்துடன் கடன் வாங்குபவன் கொடுத்திருக்கவேண்டும். மார்ட்கேஜ் வைத்தவன் எழுதப்படிக்கத் தெரியாதவனாயிருந்தால் கற்குறி தானும் போடலாம் அல்லது வேறொருவரைக்கொண்டும் போடலாம். 33. க. 861.

மார்ட்கேஜ் பலதாட்களில் எழுதியிருந்தால் எல்லாப் பக்கங்களிலும் கையெழுத்து செய்யவேண்டும். பத்திரத்தை எழுதியவன் கையெழுத்து, சாட்சி கையெழுத்துக்கு சமானமாகாதென்று பம்பாயிலும், 33. ப. 44; சாட்சி கையெழுத்துக்குச் சமானமாகு

மென்று கல்கத்தாவிலும், அலகாபாத்திலும், 20. அ. 532 ; 7. க. வீ. ரே. 160, தீர்ப்புகள் இருக்கின்றன. ஒரு கேசில் மார்ட்கேஜ் வைத்தவன் பெயரை எழுதிய ஒருவனை சாட்சியாக கோர்ட்டார் பாவித்தார்கள். 7. க. வீ. ரே. 160. சரிவர சாட்சி கையெழுத்து இல்லாத ஒரு மார்ட்கேஜ் பத்திரத்தில் சப் ரிஜிஸ்டிராருடைய கையெழுத்தையும் எழுதிக்கொடுத்தவன் இன்னானென்று காட்டியவனுடைய கையெழுத்தையும் சாட்சி கையெழுத்துகளாக பாவிக்கப்படவில்லை. 26. க. 246. சாட்சி எழுதப்படிக்கத் தெரியாமலிருந்தால் அவருக்காக வேறொருவர் அவர் பெயரை எழுதலாம் அல்லது தற்குறி செய்யலாம். 33. க. 861. பத்திரம் எழுதியபிறகு படித்துக் காட்டப்பட்டு அதின் விஷயங்களை தெரிந்துகொண்டதின் பேரில் மார்ட்கேஜ் வைத்தவன் கையெழுத்து செய்ததைப் பார்த்து, கையெழுத்து செய்த சாட்சிகள் சரியான சாட்சிகளென்று கல்கத்தாவிலும், சென்னைப்பட்டணத்திலும் தீர்மானங்கள் இருக்கின்றன. 33. க. 864; 31. ம. 215. ஆனால் பம்பாய், அலஹாபாத், இந்த ஹைகோர்ட்டார் அபிப்பிராயப்படி எல்லா சாட்சிகளும் ஒரே காலத்தில் பார்த்திருக்கவேண்டியதில்லை. மார்ட்கேஜ் வைத்தவன் தான் எழுதிக்கொடுத்தது உண்டென்று ஒப்புக்கொள்வதின்பேரில் சாட்சிகள் கையெழுத்து போட்டாலும் போதும். 27. ப. 91; 26. அ. 69. பத்திரத்தில் இரண்டு சாட்சிகளில்லாமல் ஒருசாட்சி மட்டிலிருந்தால் அது மார்ட்கேஜ் பத்திரம் ஆகாது. தவிர சொத்தின்பேரில் பொறுப்பேற்றி டிக்ரியும் வாங்கமுடியாது. 32. க. 729; 31. ம. 337. ஆனால் ஆளைப்பொறுத்து டிக்ரி வாங்கலாம். 26. க. 222. கிராண்டு சிக்யூரெட்டி மார்ட்கேஜுக்கு ரிஜிஸ்டர் செய்யவேண்டியது அவசியமில்லை. அவ்வித மார்ட்கேஜுகள் பர்மாவில் எல்லாவிடங்களிலும் செல்லுமாவென்று பலர் கேட்கிறார்கள். அசையாப்பொருள் சம்மந்தமான 1882-ம் வருஷத்திய 4-வது ஆக்டு பிரகாரம் சில பட்டணங்களில்தான் செய்ய முடியுமென்று மேலே சொன்னோம். மேற்படி ஆக்டு பர்மா முழுவதும் இன்னும் அமுலுக்கு வரவில்லை. மோல்மீனில் அந்த விதமான மார்ட்கேஜ் செல்லுமென்று ஒரு தீர்ப்பு ஏற்பட்டிருக்கிறது. 1872-1892. லோ. ப. ரூ. 1. தவிர அதே லா ரிப்போர்ட்டில் 555-வது பக்கத்தில் இந்த விஷயத்தை செவ்வையாய்க் கவனித்து எல்லாத்

தீர்ப்புகளேயும் ஆராய்ச்சி செய்து அந்த விதமான மார்ட்கேஜ் செல்லுமென்று T. P. பெத்தபெருமாள் செட்டிக்கும், பிலிப்ஸ் துரைக்கும் நடந்த கேஸில் தீர்மானமாயிருக்கிறது. O. A. R. வள்ளியப்ப செட்டிக்கும், போலாவுக்கும் நடந்த கேஸில் அந்த மாதிரி ஏற்படும் மார்ட்கேஜை ரிஜிஸ்டர் செய்யவேண்டியதில்லே யென்றும், தனக்கு பாகம் கிடைத்ததென்று தக்கியிடம் எழுதிவைத்த ரிப்போர்ட்டுக்கு காப்பியின்பேரில் சிக்யூரெட்டி மார்ட்கேஜ் ஏற்படுத்த முடியாதென்றும் தீர்மானிக்கப்பட்டது. 14. பர்மா. லா. ரி. 211. L. P. R. பெரியண்ணஞ்செட்டிக்கும், சோமசுந்தர அய்யருக்கும் நடந்த கேஸைக் கவனிக்கவேண்டும். முதலில் ரூபாய் 10,000-க்கு புரோநோட்டெழுதி அதற்காக வீட்டு கிராண்டுகள் வாதியிடம் கொடுக்கப்பட்டது. இது விஷயத்தைக்கண்டு புரோநோட்டின் பின்புறம் ஒரு குறிப்பு எழுதப்பட்டது. பிறகு 9,000-க்கு ஒரு புரோநோட்டு எழுதப்பட்டது. அதை எழுதும் சமயத்தில் வீட்டுக்கிராண்டுகள் வாதி வசத்திலிருந்தபோதிலும், ஆஜர்செய்து பார்க்காமலே அந்த நோட்டின் பின்புறம் வாதிவசம் ஏற்கனவே இருக்கும் கிராண்டுகள் சிக்யூரெட்டியாக வைக்கப்பட்டதென்று ஒரு குறிப்பெழுதப்பட்டது. அது ரிஜிஸ்டர் செய்யப்படாததால் மார்ட்கேஜாக ரூபிக்க முடியாதென்று தீர்மானமாயிருக்கிறது. 14. பர்மா. லா. ரி. 283.

S. A. சுப்பிரமணியஞ்செட்டிக்கும், V. N. A. குமரப்பசெட்டிக்கும், நடந்த கேஸின் விஷயங்களாவன :— முதலில் வாதிக்கு இரண்டு புரோநோட்டுகள் எழுதிக்கொடுத்து சில கிராண்டுகளும், சிக்யூரெட்டியாக வைக்கப்பட்டது. பிறகு அந்த புரோநோட்டுகளே கணக்குப்பார்த்து ஏற்பட்ட அசலுக்கும், வட்டிக்கும் வேறொரு புதுப் புரோநோட்டு எழுதிக்கொடுக்கப்பட்டது. வாதி வசம் கிராண்டுகள் முன்போலிருந்துவர வாதி அதன் பேரில் மார்ட்கேஜ் டிக்ரி பெறவே, அப்பீலில் மார்ட்கேஜ் செல்லாதென்றும், புது புரோநோட்டு எழுதிக்கொடுத்ததும், சிக்யூரெட்டி சம்மந்தமான காண்டிராக்ட் முடிவடைந்து போய்விட்டதென்றும் கட்சி சொல்ல சீப் கோர்ட்டார் சிக்யூரெட்டிபத்திரம் வாதிவசம் இருந்து வந்ததைக்கொண்டே அதின்பேரில் சிக்யூரெட்டி மார்ட்கேஜ் ஏற்படுத்த எண்ணம் இருந்ததென்று ஊகிக்கவேண்டுமென்றும், புதுப்

புரோநோட்டுக்கு ரொக்கம் கொடுத்திருக்கும் பட்சத்தில் அதற்காக ஏற்கனவே வைக்கப்பட்ட சிக்யூரெட்டிகள் கட்டுப்படாமலிருக்கலாமென்றும் தீர்மானிக்கப்பட்டது. 4. லோ. ப. ரூ. 371. சிக்யூரெட்டி சம்மந்தமாய் தாவா செய்ய இ. லி. ஆ. 132-வது பிரிவுப்படி 12-வருஷம் காலாவதியுண்டு. 1872-92 லோ. ப. ரூ. 555. மார்ட்கேஜ் பத்திரம் ரிஜிஸ்டர் செய்யப்படாவிட்டால் பண டிக்ரி தான் பெறக்கூடும். அப்படி பெறுவதற்கு திரும்பி பணத்தைக் கொடுப்பதாய் பிரத்தியேகமான ஷரத்து பத்திரத்தில் இருக்க வேண்டுமென்று மாந்தலை மீங்கி தீர்ப்பு செய்திருக்கிறார். 1897-1901. அ. ப. ரூ. 375. மார்ட்கேஜ் வைத்தவன் ரிஜிஸ்டர் செய்து கொடுக்க ஆட்சேபித்தால் அவனுக்குக் கொடுத்த தொகையை கைப்பற்ற உடனே வியாஜ்ஜியம் கொண்டுவரலாம். 1872 - 1892 லோ. ப. ரூ. 313. முதலில் மார்ட்கேஜ் சொத்தைப் பொறுத்து டிக்ரி பெறாது மணி டிக்ரிமட்டில் பெற்றபிறகு மறுபடியும் மார்ட்கேஜூ சொத்தைப்பொறுத்து டிக்ரி கொடுக்கும்படி இரண்டாம் தடவை தாவாசெய்ய முடியாது. 1893 - 1900 லோ. ப. ரூ. 14. தவிற அசையாப்பொருளை மாற்றும் சம்மந்தமான 82-ம் வருஷத்திய 4-வது ஆக்டு அமுல் இல்லாத இடங்களில் மார்ட்கேஜ் பத்திரத்தின்பேரில் மணி டிக்ரி பெற்று அதை மார்ட்கேஜ் சொத்தின் பேரில் நிறைவேற்றலாமென்றும் மேலே சொன்ன தீர்ப்பில் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அந்தவிதம் மார்ட்கேஜ் சொத்து கொதுவை வைத்தவன் வசம் இருந்தால்மட்டில்தான் அப்படி நிறைவேற்ற முடியும். மார்ட்கேஜ் டிக்ரிபெற்றவர் சொத்தைச் சில்லுபிடிக்க வேண்டியது அவசியமில்லை. ஏல இஸ்தியார் தயாரித்து பிரசுரம் செய்து சொத்தை விற்கவேண்டுமென்று மனுக்கொடுத்தால் போதும். ஆனதால் அனுவசியமாய் சில்லுப்பிடித்தால் ஒருவரும் குவாரா செய்ய மனுப்போட பாத்தியமில்லையென்று S. R. M. A. N. முத்தப்பசெட்டிக்கும், S. A. R. M. பள்ளத்தப்ப செட்டிக்கும் நடந்த கேஸில் தீர்மானமாயிருக்கிறது. 2. லோ. ப. ரூ. 138.

ஆளைப்பொறுத்தவரையில் பத்திரம் ரிஜிஸ்டர் ஆகாதிருந்தால் அதில் கண்ட தேதியிலிருந்து 3-வருஷத்திற்குள்ளும், ரிஜிஸ்டர் ஆயிருந்தால் 6-வருஷத்திற்குள்ளும் வியாஜ்ஜியம் கொண்டுவர வேண்டும். 7. அ. 502. அசையாப்பொருள் மார்ட்கேஜ் சம்மந்த

மான வியாஜ்ஜியங்கள் சி. பு. கோ. 34-வது ஆடரில் சொல்லப்பட்டிருக்கிறது. மார்ட்கேஜைக்குறித்த எந்த வியாஜ்ஜியத்திலும் மார்ட்கேஜ் சொத்திலாவது மீட்கும் பாத்தியத்திலாவது சுதந்தரம் உள்ள எல்லா நபர்களையும் கட்சிக்காரராகச் சேர்க்கவேண்டும். மீட்கும் பாத்தியம் அற்றுப்போகச் செய்வதற்காக கொண்டுவரும் வியாஜ்ஜியத்திற்கு இ. லி. ஆ. 132-வது பிரிவின்படி 12-வருஷம் காலாவதி உண்டு.

மீட்கும் பாத்தியதை அற்றுப்போகும்படி செய்வதற்காகக் கொண்டுவரப்படும் வியாஜ்ஜியத்தில் வாதி ஜயமடைகிற பட்சத்திலே, கோர்ட்டார் டிக்ரி ஜாரிசெய்து அதில்,—

(a) கொதுவையின்மேல் அசலுக்கும் வட்டிக்கு மாகவும், வாதிக்கு வியாஜ்ஜியச் செலவு (ஏதாவது) தீர்ப்புசெய்யப்பட்டிருந்தால் அதற்காகவும் இதில் அடுத்துப் பின்னால் சொல்லியிருக்கிற தினத்திலே அவருக்குச் சேரவேண்டியதைக் குறித்துக் கணக்கெடுக்கும்படி உத்தரவு பண்ண வேண்டும்;

(b) அல்லது அந்த டிக்ரியின் தேதியில் மேலே கண்டபடி சேரவேண்டிய தொகையை நிர்ணயிக்கவேண்டும்;

(c) மேலே கண்டபடி சேரவேண்டிய தொகையைக் கோர்ட்டில் நிர்ணயிக்கிற தேதிமுதல் ஆறுமாதத்துக்குள்ளே எந்தத் தினத்தில் செலுத்தவேண்டுமென்று கோர்ட்டார் நிஷ்கரிஷை பண்ணுகிறார்களோ அந்தத் தினத்தில் ஷை தொகையைப் பிரதிவாதி கோர்ட்டிலே செலுத்துகிறபட்சத்தில் வாதியானவர் கொதுவை சொத்துக்குச் சம்பந்தப்பட்டவைகளாய்த் தம் ஸ்வாதீனத்திலாவது அதிகாரத்திலாவதிருக்கிற சகல தஸ்தவேஜுகளையும் பிரதிவாதியினிடத்திலாகிலும் அவரால் நியமிக்கப்படுகிற நபரிடத்திலாகிலும் ஒப்பித்துவிடவேண்டு மென்றும், ஷை சொத்தைக் கொதுவையிலிருந்தும் வாதியாலாயினும் அவரை முன்னிட்டுப் பாத்தியதை கொண்டாடுகிற யாதொரு நபராலாயினும் வாதியே இன்னொருவரிடமிருந்து பெற்ற சுதந்தரத்தைக் கொண்டு பாத்தியதை

கொண்டாடுகிற விஷயத்திலே அவர் யாரை முன்னிட்டு பாத்தியதை கொண்டாடுகிறாரோ அவர்களாலாயினும், உண்டாக்கப்பட்ட சகல சிக்குச்சிலுகுகளிலிருந்தும் விடுவித்து அந்தச் சொத்தைப் பிரதிவாதிக்கு மறுபடி ட்ரான்ஸ்பர் பண்ணவேண்டியிருந்தால், அந்தப்படி ட்ரான்ஸ்பர் பண்ணவேண்டுமென்றும் அதை அவசியமானால் பிரதிவாதிக்கு ஸ்வாதீனப்படுத்தவும் வேண்டுமென்றும் கட்டளையிடவேண்டும் ; ஆனால்,

(d) கோர்ட்டாரால் நிஷ்கரிஷை செய்யப்படும் தேதியன்றைக்காவது அதற்கு முன்னேயாவது மேலே கண்டபடி தொகை செலுத்தப்படாவிட்டால் ஷை சொத்தை மீட்டுக்கொள்ளும் பாத்தியதை சிறிதும் பிரதிவாதிக்கு இல்லாமற் போகவேண்டுமென்றும் கட்டளையிடவேண்டும்.

ராசி செய்யப்பட்டிருந்தா லொழிய மார்ட்கேஜ் டிக்ரியில் தொகைக்கு தவணைகள் கண்டு எழுதுகிறதில்லை.

நிஷ்கரிஷை பண்ணப்பட்ட தினத்திலாவது, அதற்கு முன்னிட்டாவது மேலே கண்டபடி சேரவேண்டியதாக நிர்ணயிக்கப்பட்ட தொகையையும், பின்னிட்ட செலவுகளையும் பிரதிவாதி கோர்ட்டில் செலுத்துகிற விஷயத்திலே, கோர்ட்டார் டிக்ரி ஜாரி செய்து அதில்—

(a) வாதியானவர் எந்த தஸ்தவேஜுகளைப் பிரதம டிக்ரியிற் கண்ட ஷரத்துகளின் பிரகாரம் ஒப்பித்துவிடக் கட்டுப்பட்டிருக்கிறாரோ அந்த தஸ்தவேஜுகளை ஒப்பித்துவிட வேண்டுமென்று அவருக்கு உத்தரவு பண்ணவேண்டும் ; மேலும்,

(b) கொதுவைச் சொத்தை ஷை டிக்ரியில் கட்டளையாயிருக்கிறபடி மீண்டும் ட்ரான்ஸ்பர் பண்ணவேண்டியிருந்தால், வந்தப்படி ட்ரான்ஸ்பர் பண்ணவேண்டுமென்று ஷை வாதிக்கு உத்தரவு செய்யவும் வேண்டும் ;

அன்றியும், அவசியமாயிருக்கும்பட்சத்திலே,

(c) மேற்கண்ட சொத்தைப் பிரதிவாதிக்கு ஸ்வாதீனப்படுத்தும்படி ஷை வாதிக்கு உத்தரவு பண்ணவும் வேண்டும்.

அந்தப்படி ஷை தொகை செலுத்தப்படாதபட்சத்திலே, அது விஷயமாய் வாதி விண்ணப்பம் செய்துகொள்வதன்மேல், கோர்ட்டார் பிரதிவாதிக்கும் அவர் மூலமாயாவது அவரை முன்னிட்டாவது பாத்தியதை கொண்டாடுகிற சகல நபர்களுக்கும் கொதுவைச் சொத்தை மீட்கும் பாத்தியதை சிறிதும் இல்லாமற் போகவேண்டுமென்று கண்டும், அவசியமாயிருக்கிற விஷயத்திலே, மேற்கண்ட சொத்தை வாதிக்கு ஸ்வாதீனப்படுத்தும்படி பிரதிவாதிக்கு உத்தரவுபண்ண டிக்கிரி பெற்றவர் மனு செய்யவேண்டும். அந்தவிதம் மனுசெய்ய இ. லி. ஆ. 182-வது பிரிவின்படி டிக்ரி தேதியிலிருந்து 3-வருஷத்திற் செய்யவேண்டும். அப்படி மனு செய்யப்பட்டவுடன் எதிரிக்கு நோட்டீஸ் கொடுக்கப்படும்.

இந்தவிதம் முடிவான டிக்ரி செய்யும் வரையில் மார்ட்கேஜ் வைத்தவன் மீட்கலாம். 27. க. 705; 22. ம. 133; 25. அ. 231. முடிவாய்ச் செய்யும் உத்திரவின்பேரில் அப்பீல் உண்டு. 14. அ. 231. கேட்டார் சரியான காரணம் காட்டப்படுவதின்மேல் தங்களுக்கு யுக்தமாகத் தோன்றுகிற எந்த நிபந்தனைகளையும் ஏற்படுத்தி தொகையை செலுத்தும்படி ஆதியில் ஏற்பட்ட காலத்தை அப்போதைக்கப்போது தள்ளியும் வைக்கலாம். ஆனால் டிக்ரியில் சம்மந்தப்படாத மூன்றும் மனிதன் கேட்டுக்கொள்வதின் பேரில் அந்தவிதம் காலத்தைத் தள்ளி வைக்கமாட்டார்கள். 6. க. வீ. நே. 654. காலத்தைத் தள்ளிவைக்கும் உத்திரவின்பேரில் அப்பீல் உண்டு. 14. அ. 520. விற்பனை செய்யவேண்டுமென்று கொண்டுவரப்படும் யாதொரு வியாஜ்ஜியத்திலே வாதி ஜெயமடைகிற விஷயத்தில் மீட்கும் பாத்தியத்தை அற்றுப்போவதற்கு கொண்டுவரும் வியாஜ்ஜியத்திலே செய்யும் பிரதம டிக்ரியைப்போல் ஒரு டிக்ரி கோர்ட்டார் செய்து அதில் பிரதிவாதி தொகை செலுத்தத் தவறினுல் கொதுவை சொத்தையோ, அதில் போதுமான யாதொரு பாகத்தையோ, விற்பனை செய்யவேண்டுமென்றும், அதில் கிடைத்த வரும்படியிலிருந்து விற்பனைச் சிலவை எடுத்துக்கொண்ட பிறகு பாக்கியை கோர்ட்டில் செலுத்தி மேலே கண்டபடி வாதிக்குச்சேர வேண்டியதாய் ஏற்படும் தொகையையும், பின்னிட்டு வட்டியையம், செலவையும், இதுகளுக்காக உபயோகிக்க வேண்டுமென்றும், மிகுதி ஏதாவது இருந்தால் அதை பிரதிவாதிக்கு கொடுக்கவேண்டுமென்

னும், பிரதம டிக்ரி செய்யவேண்டும். மீட்கும் பாத்தியதை அற்றுப் போகும்படி செய்யவேண்டுமென்று கொண்டு வரப்படும் வியாஜ்ஜியத்தில் வாதி ஜெயமடைந்து, வாதி கேட்டுக்கொள்ளுவதின் மேலாவது, கொதுவைப் பணத்திலாகிலும், மீட்கும் பாத்தியத்திலாகிலும், அக்கரையுடைய யாதொரு நபர் கேட்டுக்கொள்ளுவதின் மேலாவது கோர்ட்டார் விற்பனைச் செலவு உட்பட டிக்ரித் தொகையை கோர்ட்டில் டிபாசிட் கட்டும்படிக்காவது, மீட்கும் பாத்தியம் அற்றுப்போகும்படி செய்யும் டிக்ரிக்குப் பதிலாக மேலே கண்ட விதம் டிக்ரி செய்யலாம். ஒரே சொத்தின் பேரில் ஒருவன் இரண்டு மார்ட்கேஜ் ஏற்படுத்தி யிருந்தால் இரண்டாவது மார்ட்கேஜின் பேரில் மட்டில் முதலாவது மார்ட்கேஜை உட்படுத்த வியாஜ்ஜியம் கொண்டுவர முடியாது. 7. ப. லா. ரி. 811. மார்ட்கேஜ் சொத்தின்பேரில் டிக்ரி வேண்டியதில்லையென்றும், ஆளைப் பொறுத்து டிக்ரி வேண்டுமென்றும் கேட்கலாம். 24. அ. 456.

மார்ட்கேஜ் டிக்ரியில் காணப்பட்டிருக்கும் காலத்துக்கு முந்தி நிறைவேற்ற முடியாது. 7. அ. 194. மார்ட்கேஜு டிக்ரியில் கண்ட சொத்தைத்தான் முதலில் நிறைவேற்றவேண்டும். மேலே கண்ட விதியின் கீழ் தொகை கட்டவேண்டியதற்கு நிர்ணயித்திருக்கும் காலத்தை ஜாஸ்திசெய்யமுடியாது. 24. ப. 300. மேலே கண்டபடி சேரவேண்டியதாய் நிர்ணயிக்கப்படும் தொகையையும், பின்னிட்டு சிலவுகளையும், பிரதிவாதி குறித்த தினத்திலாவது அதற்கு முன்னேயாவது கோர்ட்டில் செலுத்தினல் கோர்ட்டார் டிக்ரி செய்து அதில் வாதி எந்த தஸ்தாவேஜுகளை பிரதம டிக்ரியில் கண்ட ஷரத்துகளின் பிரகாரம் ஒப்புவித்துவிட கட்டுப்பட்டிருக்கிருரே அந்த தஸ்தாவேஜுகளை ஒப்புவித்துவிட வேண்டுமென்று அவருக்கு உத்திரவு பண்ணவேண்டும். மேலும் கொதுவைச் சொத்தைமீட்டும், டிரரன்ஸ்பர் செய்யவேண்டியிருந்தால் அப்படிச் செய்ய வாதிக்கு உததிரவு சேய்யவேண்டும. அந்தப்படி தொகை செலுத்தப்படாத விஷயத்தில் வாதி மனு செய்துக்கொள்வதின்பேரில் கொதுவைச் சொத்தை விற்கும்படியும், அதினுல் கிடைக்கும் தொகையை மேலே எழுதியிருக்கும் விதிகளில் சொல்லியிருக்கும் விதமாய் உபயோகிக்கும்படி முடிவான டிக்ரி செய்யலாம். இந்தவிதியின் கீழ் ஏலம் போடும்படி முடிவான டிக்ரி ஏற்பட்டபிறகும் ஏலம் நடக்கு முன்

தொகையைக் கொடுத்துச் சொத்தை மீட்கலாம், 31. க. 863; 18. அ. 28. அப்படிப்பட்ட யாதொரு விற்பனையினால் கிடைக்கும் வரும்படியில் செலவெல்லாம் போக பாக்கியிருக்கும் தொகை வாதிக்குச் சேரவேண்டிய தொகைக்குப் போதாமலிருந்தால், பாக்கியானது விற்கப்பட்ட சொத்திலிருந்தல்லாமல் வேறேவிதமாய் பிரதிவாதியிடமிருந்து சட்டப்படி வசூல் செய்யப்படத் தக்கதாயிருந்தால் கோர்ட்டார் அந்த தொகைக்காக டிக்ரி பண்ணலாம். இந்த விதம் டிக்ரி செய்ய புதிதாய் வியாஜ்ஜியம் செய்யவேண்டியதில்லை. மனுக் கொடுத்தால் போதும். 11. அ. 186. பிரதமத்திலே மார்ட்கேஜ் சொத்தின்பேரில் டிக்ரி ஏற்படாத கேசுகளில் இந்த விதியின் கீழ் உத்திரவு ஏற்படாது. 7. க. வீ. நோ. 744. மார்ட்கேஜ் டிக்ரியின் கீழ் சொத்தை விற்காமல் இந்த விதமான உத்திரவு செய்யும்படி மனு கொடுக்க முடியாது. 29. அ. 260. சொத்து விற்கப்படாவிட்டால் அந்தவிதம் உத்திரவுசெய்யக்கூடாதென்று பிரதிவாதி ஆட்சேபிக்கலாம். 28. அ. 660. மார்ட்கேஜ் பத்திரத்தில் கண்ட சொத்தில் சிலது சம்மந்தப்பட்டவரையில் தனக்கு டிக்ரி வேண்டாமென்று சொல்லி மற்றவைகள் பேரில் வாங்கிய டிக்ரியை நிறைவேற்றிச் சொத்தைவிற்று பாக்கித் தொகைக்கு மேலேகண்டவிதம் உத்திரவு வாங்கலாம். 29. அ. 369. பத்திரத்தில் கண்ட முழுச் சொத்தின் பேரிலும் டிக்ரி வாங்கிய பிறகும் மேலே சொன்னவிதம் சொத்தில் சிலதின்பேரில் பாத்தியம் வேண்டாமென்று சொல்லிவிட்டு பாக்கிச் சொத்தை விற்றபிறகு இன்னும் பாக்கியிருப்பதற்கு மேலே சொன்ன பிரகாரம் உத்திரவு வாங்கலாம். 28. அ. 19.

அந்த விதம் உத்திரவு செய்ய ஆரம்பத்தில் கொண்டுவரும் வியாஜ்ஜிய தேதியன்று ஆளைப்பொறுத்து வியாஜ்ஜியம் காலாவதியாய்ப் போயிருக்கக்கூடாது. 34. க. 672. பத்திரத்தின்பேரில் ஆதியில் வியாஜ்ஜியம் போடப்பட்டதேதியன்று காலாவதி ஆகாமல் இருக்கவேண்டுமே யொழிய, 30. அ. 388 பிந்தி மனு செய்யப்படும் தேதியன்று அந்தவிதம் இருக்கவேண்டியதில்லை. 20. அ. 386. சாதாரணமாய் மார்ட்கேஜ் பத்திரத்தில் ஆளைப்பொறுத்த ஜவாப்தாரி இருப்பதாகவே எண்ணப்படும். 30. அ. 388; 4. க. லா. ஜ. 246. மேலே சொன்ன விதிப்பிரகாரம் மார்ட்கேஜ் வாங்கியவன் வார்சு

சர்ட்டிபிகேட் பெருவிட்டால் ஆளைப்பொறுத்து பாக்கித் தொகைக்காக மனுக்கொடுத்து பண டிக்ரி பெறமுடியாது. 35. க. 767.

மீட்பதற்கான வியாஜ்ஜியத்தில் வாதி ஜயமடைகிற பட்சத்திலே கோர்ட்டார் டிக்ரி ஜாரிசெய்து அதில்,—

(a) கொதுவையின்மேல் அசலுக்கும் வட்டிக்குமாகவும் பிரதிவாதிக்கு வியாஜ்ஜியச் செலவு (ஏதாவது) தீர்ப்பு செய்யப்பட்டிருந்தால் அதற்காகவும் இதில் அடுத்துப் பின்னால் சொல்லியிருக்கிற தினத்திலே அவருக்குச் சேரவேண்டியதைக் குறித்துக் கணக்கெடுக்கும்படி உத்தரவு பண்ணவேண்டும், அல்லது.

(b) அந்த டிக்ரியின் தேதியில் மேலே கண்டபடி சேரவேண்டிய தொகையை நிர்ணயிக்கவேண்டும் ;

(c) மேலேகண்டபடி சேரவேண்டிய தொகையைக் கோர்ட்டில் நிர்ணயிக்கிற தேதிமுதல் ஆறு மாதத்துக்குள்ளே எந்தத் தினத்தில் செலுத்த வேண்டுமென்று கோர்ட்டார் நிஷ்கரிஷை பண்ணுகிறார்களோ அந்தத்தினத்தில் ஷை தொகையை வாதி கோர்ட்டிலே செலுத்துவதன் மேல் பிரதிவாதியானவர் - கொதுவை சொத்துக்குச் சம்பந்தப்பட்டவைகளாய்த் தம் ஸ்வாதீனத்திலாவது அதிகாரத்திலாவதிருக்கிற சகல தஸ்தவேஜுகளையும் வாதியினிடத்திலாகிலும் அவரால் நியமிக்கப்படுகிற நபரிடத்திலாகிலும் ஒப்பித்து விடவேண்டுமென்றும், ஷை சொத்தைக் கொதுவையிலிருந்தும் பிரதிவாதியாலாயினும் அவரை முன்னிட்டுப் பாத்தியதைகொண்டாடுகிற யாதொரு நபராலாயினும் பிரதிவாதியே இன்னொருவரிடமிருந்து பெற்ற சுதந்தரத்தைக்கொண்டு பாத்தியதைகொண்டாடுகிற விஷயத்திலே அவர் யாரை முன்னிட்டுப் பாத்தியதை கொண்டாடுகிறாரோ அவர்களாலாயினும் உண்டாக்கப்பட்ட சகல சிக்குச் சிலுக்குகளிலிருந்தும் விடுவித்து அந்தச் சொத்தை வாதிக்கு மீண்டும் ட்ரான்ஸ்பர் பண்ணவேண்டியிருந்தால் அப்படி பண்ணவேண்டுமென்றும், அதை அவசி

யமானல் வாதிக்கு ஸ்வாதீனப்படுத்த வேண்டுமென்றும் கட்டளையிடவேண்டும் ; ஆனல்,

(d) கோர்ட்டாரால் நிஷ்கரிஷை செய்யப்படும் தேதியன்றைக்காவது, அதற்கு முன்னேயாவது மேலே கண்டபடி தொகை செலுத்தப்படாவிட்டால், மீட்டுக்கொள்ளும் பாத்தியதை சிறிதும் வாதிக்கு இல்லாமற்போக வேண்டுமென்றே, கொதுவை சொத்து விற்பனை பண்ணப்படவேண்டுமென்றே கட்டளையிட வேண்டும்.

இந்த விதம் செய்யும் டிக்ரிபேரில் அப்பீல் உண்டு. 25. ம. 300.

மேலேகண்டபடி சேரவேண்டியதாய் நிர்ணயிக்கப்படும் தொகையையும் பின்னிட்ட செலவுகளையும் வாதியானவர் நிஷ்கரிஷை பண்ணப்பட்ட தினத்திலாவது, அதற்கு முன்னேயாவது கோர்ட்டில் செலுத்துகிறவிஷயத்திலே, கோர்ட்டார் டிக்ரி ஜாரி செய்து அதில்,—

(a) பிரதிவாதியானவர் எந்த தஸ்தவேஜுகளைப் பிரதம டிக்ரியிற் கண்ட ஷரத்துகளின் பிரகாரம் ஒப்பித்துவிட கட்டுப்பட்டிருக்கிறரோ அந்த தஸ்தவேஜுகளை ஒப்பித்துவிட வேண்டுமென்று அவருக்கு உத்தரவு பண்ணவேண்டும் ;

மேலும்,

(b) கொதுவைச்சொத்தை ஷை டிக்ரியில் கட்டளையாயிருக்கிறபடி மீண்டும் ட்ரான்ஸ்பர் பண்ணவேண்டியிருந்தால், அந்தப்படி ட்ரான்ஸ்பர் பண்ணவேண்டுமென்று ஷை பிரதிவாதிக்கு உத்தரவு செய்யவும்வேண்டும்.

அன்றியும், அவசியமா யிருக்கும்பட்சத்திலே,

(c) மேற்கண்ட சொத்தை வாதிக்கு ஸ்வாதீனப்படுத்தும்படி ஷை பிரதிவாதிக்கு உத்தரவு பண்ணவும் வேண்டும்.

அப்படி தொகை செலுத்தப்படாமலிருந்து அது விஷயமாய்ப் பிரதிவாதி மனுசெய்து கொள்வதன்மேல் கோர்ட்டார் வாதிக்கும் அவர் மூலமாகவாவது அவரை முன்னிட்டாவது பாத்தி

யதை கொண்டாடுகிற சகலர்களுக்கும் கொதுவைச் சொத்தை மீட்டுக்கொள்ளும் பாத்தியதை சிறிதுமில்லாமற் போகவேண்டுமென்று கண்டும், அவசியமானால் ஷை சொத்தைப் பிரதிவாதிக்கு ஸ்வாதீனம் செய்யவேண்டுமென்று வாதிக்கு உத்தரவு பண்ணியும் முடிவான டிக்ரி ஜாரி செய்யவேண்டும். டிக்ரி ஜாரி செய்யப்படுவதன் பேரில், கொதுவையின்மேல் கொடுக்கப்பட்ட கடன் தீர்ந்துவிட்டதாக எண்ணப்படும். அப்படி தொகை செலுத்தப்படாமலிருந்து பிரதிவாதி மனுசெய்து கொள்வதன்மேல் கோர்ட்டார் ஷை கொதுவை சொத்தையோ அதில் போதுவான யாதொருபாகத்தையோ விற்பனை செய்யவேண்டுமென்றும், அந்த விற்பனையில் கிடைத்த வரும்படியிலிருந்து (விற்பனைகாகப் பிடிக்கும் செலவை எடுத்துக்கொண்ட பிறகு) நிற்கிற மிகுதியைக் கோர்ட்டில் செலுத்திப் பிரதிவாதிக்குச் சேரவேண்டியதாய்க் காணப்படுகிறதைச் செலுத்துவதற்காக உபயோகிக்க வேண்டுமென்றும், மிகுதி (ஏதாவதிருந்தால்) அதை வாதிக்காகிலும் அதைப்பெற்றுக்கொள்ள பாத்தியதையுடைய வேறே நபர்களுக்காகிலும் செலுத்தவேண்டுமென்றும், டிக்ரி ஜாரிசெய்யவேண்டும். ஆனால் கோர்ட்டார் சரியான காரணம் காட்டப்படுவதன்மேல் தங்களுக்கு யுக்தமாகத் தோற்றுகிற எந்த ஷரத்துகளையாவது (ஏற்படுவதாயிருந்தால்) ஏற்படுத்தி தொகை செலுத்தப்படுவதற்காக நிஷ்கரிஷை பண்ணப்பட்ட தினத்தை அப்போதைக்கப்போது தள்ளிவைக்கலாம், பணத்தைக் கொடுப்பதற்காக குறித்தகாலம் கழிந்தபிறகும், வேறு காலம் கொடுக்கலாம். 28. ப.103. மேலே சொன்னவிதம் கொதுவை வைத்துக் வாதிக்குச் சேரவேண்டியது ஒன்றும் இல்லையாகிலும், அல்லது அதிகமாகச் செலுத்தப்பட்டிருக்கிற தென்றாகிலும், கணக்கு எடுக்கப்படுவதின்பேரில் ஏற்பட்டால், அவசியமானால் சொத்தை மறுபடியும் டிரான்ஸ்பர் செய்யவும் வாதிக்குச் சேரவேண்டியதாய் காணப்படும் தொகையை அவருக்கு செலுத்தும்படியும், கொதுவைச் சொத்தை வாதிக்கு ஸ்வாதீனப்படுத்தும்படியும், உத்திரவு செய்யவேண்டும். கொதுவை வைத்துக்கொண்டவருக்கு செலுத்தபடவேண்டிய தொகையை முடிவாக நிச்சயிக்கையில், டிக்ரி தேதியிலிருந்து வாஸ்தவமாய்த் தொகை செலுத்தப்படுகிற காலம் வரையில், கிரமமாய் மேற்படி கொதுவை வைத்துக்கொண்டவருக்கு

உண்டான வியாஜ்ஜியச் சிலவை கொதுவைப் பணத்தோடுச் சேர்க்க வேண்டும். மார்ட்கேஜ் டிக்ரிமூலமாய் விற்கவேண்டுமென்று உத்திரவுசெய்த சொத்து முன்னிட்ட யாதொரு மார்ட்கேஜுக்கு உள்பட்டிருக்கிற விஷயத்திலே முன்னிட்டு கொதுவை வைத்துக்கொண்டவருடைய சம்மதத்தின் பேரில் கோர்ட்டார் அந்தக் கொதுவையினின்றும், விடுதலை ஆகும்படி அதை விற்கவேண்டுமென்று உத்திரவுசெய்து விற்கப்படும் சொத்தில் மேற்கண்டபடி முன்னிட்டுக் கொதுவை வைத்துக்கொண்டவருக்கு என்ன பாத்தியம் இருந்ததோ அதே பாத்தியம் மேற்படி விற்பனையினால் கிடைத்த தொகையிலும் அவருக்கு இருக்கும்படி செய்யலாம்.

அப்படிப்பட்ட வரும்படியைக் கோர்ட்டில் கொண்டுவந்து அடியிற்கண்ட விதமாய் உபயோகிக்கவேண்டும் :—

முதலாவது, விற்பனையைச் சேர்ந்தவைகளாக வாகிலும், விற்பனைசெய்ய எத்தனப்பட்டிருந்தால் அப்படிப்பட்ட யாதொரு எத்தனத்தில் கிரமமாய் நேரிட்டவைகளாகவாகிலுமுள்ள சகல செலவுகளையும் செலுத்துவதற்காகவும் ;

இரண்டாவது, முன்னிட்ட கொதுவை விஷயமாய் அந்தக் கொதுவை வைத்துக்கொண்டவருக்குச் சேர வேண்டியதையும் அந்தக் கொதுவையின் சம்பந்தமாகக் கிரமமாய் நேரிட்ட செலவுகளையும் செலுத்துவதற்காகவும் ;

மூன்றாவது, எதுகாரணமாக விற்பனை செய்யும்படி கட்டளையிடப்பட்டதோ அந்தக் கொதுவை விஷயமாய்ச் சேரவேண்டிய சகல வட்டியையும் அந்தப்பிரகாரம் விற்பனைசெய்யும்படி எதிலே டிக்ரிபண்ணப்பட்டதோ அந்த வியாஜ்ஜியத்தில் பிடித்த செலவுகளையும் செலுத்துவதற்காகவும் ;

நான்காவது, அந்தக் கொதுவையின் விஷயமாய்ச் சேர வேண்டிய அசல் பணத்தைச் செலுத்துவதற்காகவும்;

கடைசியாய், மிகுதி (ஏதாவதிருந்தால்) அதை - விற்கப்பட்ட சொத்தில் தாம் பாத்தியதையுடையவரென்று

ருஜூப்படுத்துகிற நபருக்காகிலும், அப்படிப்பட்ட நபர்கள் ஒருவருக்கு மேற்பட்டிருந்தால் அதிலே அவரவருக்குள்ள பாத்தியதைக்குத் தக்கபடியோ அந்த நபர்களுடைய கூட்டு ரசீதின்மேலோ அவர்களுக்காகிலும் செலுத்தவேண்டும்.

ஒரேசொத்தின்பேரில் இரண்டு கொதுவைகள் வைத்துக் கொண்டவர் முதலாவது கொதுவையின்பேரில் வியாஜ்ஜியம் கொண்டுவந்து டிக்ரிபெற்றபிறகு இரண்டாவது கொதுவையின் பேரில் வியாஜ்ஜியம் கொண்டுவரத் தடைப்பட்டிருக்கிறார். ஆனாலும் இந்தவிதியின் கீழ் முதலாவது கொதுவைக்கு தொகை பெற்று யேதாவது இருந்தால் அதன்மேல் தொடரலாம். 30.ம. 353.

யாதொரு கொதுவைவைத்துக்கொண்டவர் கொதுவையினின்றும் உண்டாகும் தாவாவுக்குச் சரிச்சொல்லும் பொருட்டுப் பணம் செலுத்தப்படுவதற்காக டிக்ரி பெற்றிருந்தால், அவர் - அந்தக் கொதுவையைச் செலாவணிசெய்யும்பொருட்டு விற்பனை செய்வதற்கான ஒரு வியாஜ்ஜியம் தொடர்வதாலல்லாமல் மற்றபடி அந்தக் கொதுவைச்சொத்தை விற்பனைக்குக் கொண்டுவர பாத்தியதையுள்ளவராகமாட்டார்; இந்த விதிக்கு விரோதமா யெந்த ஏலமும் நடத்தக்கூடாது. 32. க. 296.

ஆனால் கொதுவை வைத்துக்கொண்டவரிடமிருந்து மணிடிக்ரியை மேடோவர் வாங்கியவரை இந்த விதி கட்டுப்படுத்தாது. 27. அ. 452. தவிற மார்ட்கேஜ் பத்திரத்தில் கண்ட வட்டிக்காக பெறும் டிக்கிரியையும் இந்தவிதி கட்டுப்படுத்தாது. 31. க. 922.

மேலே சொன்ன யாவற்று விதிகளும் யாதொரு சார்ஜூ வென்று சொல்லப்படும் பொறுப்புக்கு உட்பட்டிருக்கிற சொத்துக்கும் கூடிய வரையில் பிரயோகப்படவேண்டும்.

# 7-வது அத்தியாயம்.

## வட்டியைக் குறித்து.

இந்த அத்தியாயத்தில் வட்டி விஷயத்தைப்பற்றி சொல்லப்படும். பொதுவாய் ஒவ்வொரு கண்டிராக்டில் கண்டபடி வட்டி கொடுக்கவேண்டும். அந்த கண்டிராக்ட்டில் கண்டவட்டி நியாயமானதாயிருக்கவேண்டும். 10. க. வீ. நோ. 640. கைமாறிச் செல்லத்தக்க புரோநோட் முதலிய யாதொரு ஆதரவில் வட்டி குறிக்கப்பட்டிருந்தால் அந்த ஆதரவினால் பாக்கியாயிருக்கிற அசல் தொகையின் மேல் ஆதரவின்தேதிமுதல் அப்படிப்பட்ட தொகைசெலுத்த டென்டர் (காட்டுதல்) செய்யும் வரையிலாவது வசூலிக்கப்படும் வரையிலாவது, அல்லது வியாஜ்ஜியத்திற்கு பிறகு கோர்ட்டாரால் ஏற்படுத்தப்படும் தேதிவரையிலாவது குறிக்கப்பட்ட வீதப்படி வட்டி கணக்காக்கப்படும். 1892 - 96. அ. ப. ரூ 591. ஆதரவில் வட்டி பிரஸ்தாபமே யில்லாமலும், அது சம்மந்தமாய் யாதொரு எக்ரீமென்டும் ஏற்படாமலிருந்தால் 1881-ம்வருஷத்திய 26-வது ஆக்ட்டு 80-வது பிரிவுப்படி தொகையை செலுத்திவிடவேண்டிய தேதி முதற்கொண்டு மேலே சொல்லியிருக்கும் எந்ததேதிவரையிலாவது வருஷம் 1-க்கு 100-க்கு 6 ரூபா விழுக்காடு வட்டி கணக்காக்க வேண்டுமென்று தீர்மானமாயிருக்கிறது. 29. அ. 33. யாதொரு பாண்டு அல்லது எக்கிரிமெண்டில் கண்டிருக்கும் கெடுவு காலத்திற்கு பிறகு வட்டி காணுதிருந்தால் அதுமுதல் வியாஜ்ஜியத்தேதிவரையில் கோர்ட்டார் நியாயமான வட்டியை தங்கள் யுக்தப்படி கொடுப்பார்கள். அந்த வட்டி பர்மாதேசம் சம்மந்தபட்டவரையில் வருஷம் 1-க்கு 100-க்கு 12 ரூபாய் நியாயமான வட்டியென்று தீர்ப்பாயிருக்கிறது. 1872-1892 லோ. ப. ரூ. 294. சில பத்திரங்களில் கெடுவுகாலம் வரையில் வட்டி கண்டும், அந்தக் காலத்தில் கொடாமல் போனால் அது முதல் ஜாஸ்தி வட்டி கண்டிருந்தால், பொதுவாய் அந்த ஜாஸ்தி வட்டி கோர்ட்டார் கொடுப்பார்கள். 27. க. 421 ; 2. க. வீ. நோ. 234 ; 333. அந்தயாதிரி கேசுகளில் சில சமயம் ஜாஸ்தி வட்டியை பினல்

மை யென்று (அபராதம்) பாவித்து குறைத்தும் கொடுக்க கோர்ட்டா ருக்கு அதிகாரமுண்டென்று சில தீர்ப்புகளிருக்கின்றன. 12. ம. 161; 26. க. 300; 17. ப. 106; 30. க. 15 ஆனால் கெடு தவறினால் பத்திரதேதி முதல் ஜாஸ்தி வட்டி கொடுக்கவேண்டுமென்று கண்டி ருக்கும் ஆதரவுகளின் விஷயத்தில் கோர்ட்டார் தங்களுக்கு யுக்த மாய் தோனும் வட்டியைத்தான் கொடுப்பார்கள். 29. க. 43. இத ற்கு விரோதமான தீர்ப்பு சென்னைப்பட்டணத்தில் ஏற்பட்டிருக் கிறது. 26. ம. 445. ஒரு தவணைப்பத்திரத்தில் எந்த தவணை தவறி னாலும் பத்திரத்தேதிமுதல் 100-க்கு வட்டி 24. ரூபா யென்று காணப்பட்டிருந்தது. அதை பினல்டியாக பாவித்து குறைத்த வட்டி கொடுக்கப்பட்டது. 27. ப. 21. யாதொரு மார்ட்கேஜ் பத் திரத்தில் கெடுவு தவறினால் பத்திர தேதிமுதல் ஜாஸ்தி வட்டி கொடுக்கவேண்டுமென்று கண்டிருந்தால் கோர்ட்டாருக்கு இஷ்ட மாயுள்ளவட்டிதான் கொடுக்கப்படுமென்று சமீபத்தில் சீமையில் பிரிவிகவுன்சில் சபையார் தீர்மானித்தார்கள். 34. க. 150.

1909-ம் வருஷத்தில் அப்பர் பர்மாவில் ஒரு கேசு நடந்தது. அதில் பிரதிவாதி அசல்தொகையை 3-மீக்குள் வருஷம் 1-க்கு 100-க்கு 60 வட்டிகொடுப்பதாயும் தவறினால் பத்திர தேதிமுதல் 120 வட்டியுடன் கொடுப்பதாய் கண்டிருந்தது. இது பினல்டியென் றும், காம்பன் ஸேஷனுப் முதலில் ஏற்பட்ட 60 வட்டிவீதம் கொடு க்கலாம் என்றும் மீங்கி உத்திரவுசெய்தார். கல்கத்தாவில் நடந்த ஒரு கேசில் உபயவாதிகளும் கணக்கு தீர்த்துக்கொண்டார்கள். பிரதிவாதி கொடுக்கவேண்டியதாக ஏற்பட்ட தொகையை குறிப் பிட்ட ஒருகாலத்துக்குள் கொடுத்துவிட்டால் குறைந்தவட்டி வாங்கி கொள்ளவேண்டுமென்றும், அப்படிக் கொடுக்காத போனுல் பத் திரத்தில் கண்ட ஜாஸ்திவட்டி கொடுப்பதாயும் எக்ரிமெண்ட்டு ஏற்பட்டது. குறிப்பிட்ட காலத்துக்குள் தொகை கொடாயலிருக்க வாதி தாவாசெய்ய பிரதிவாதி ஜாஸ்திவட்டி வீதம் டிக்ரி கொடுக்க கூடாதென்று கட்சி சொல்ல யாதொரு மோசமில்லாமல் பிரதமத் திலேயே ஏற்பட்ட வட்டி ரேட்டை கண்டிருக்கும் கண்டிராக்டை பிரதிவாதி தன் கண்ணைத்திறந்தே ஒப்புக்கொண்டதால் ஜாஸ்தி வட்டிகொடுப்பதினுல் பிரதிவாதிக்கு பாதகம் ஒன்றுமில்லையென்று தீர்மானிக்கப்பட்டது. 10. க. வீ. நோ. 640.

ஒரு ஆதரவில் போட்டிருக்கும் வட்டி ஜாஸ்தியாயிருக்கும் விஷயம் ஒன்றைக்கொண்டே கோர்ட்டார் அது பினல்டி யென்று பாவித்து வட்டியைக் குறைக்கமாட்டார்கள். 25. ம. 343. கம்பவுண்டு வட்டி அதாவது வட்டிக்குவட்டி பினல்டியாக கோர்ட்டார் பாவிக்கலாமென்று சீமையில் தீர்மானமாயிருக்கிறது. 34. க. 150. வாய்மொழி காண்டிராக்ட்டில் வட்டி விஷயமாய் யாதொரு எக்ரிமெண்டாவது, வழக்கமாவது இல்லாமலிருந்தும் எழுத்துமூலமான நோட்டீஸ் கொடுக்காமலிருந்தாலும் வட்டி கிடைக்காது. 20. ம. 481. இந்த மாதிரி கேசுகளில் பிறாதுக்கு முந்தியகாலத்துக்கு எந்த விதவட்டியும் கொடுக்கப்படமாட்டாது. 31. ம. 250.

இந்த இடத்தில் சி. பு. கோ 34-வது பிரிவில் வட்டியைப் பற்றி சொல்லியிருப்பதை எடுத்துக்கூறவேண்டியது அவசியம். யாதொரு டிக்ரி பணம் செலுத்துவதற்கான டிக்ரியாயிருந்தால் கோர்ட்டார் தீர்மானம் செய்யப்பட்ட அசல் தொகைக்கு பிராதுக்கு முந்தியுள்ள காலத்திற்கு யாதொரு வட்டியும் கொடுப்பதுடன் அந்த அசல் தொகைக்கு வியாஜ்ஜிய தேதி முதல் டிக்ரி தேதிவரையிலும் கோர்ட்டாருக்கு நியாயமாகத்தோன்றும் வீதப் பிரகாரம் வட்டியும் டிக்ரியில் உத்திரவுசெய்யலாம். தவிர அப்படி தீர்மானம்செய்யும் மொத்த தொகைக்கு டிக்ரி தேதிமுதல் பணம் செலுத்தப்படுகிற தேதிவரையிலாவது, அதற்கு முந்தியுள்ள கோர்ட்டாருக்கு யுக்தமாகத் தோன்றுகிறதுமான ஒரு தேதிவரையிலாவது கோர்ட்டார் தங்களுக்கு நியாயமாகத் தோன்றுகிற வீதப்பிரகாரம் பின்னும் வட்டி செலுத்தும்படி உத்தரவு செய்யலாம். மேற்கண்ட மொத்தத்தொகைக்கு டிக்ரி தேதிமுதல் பணம் செலுத்தப்படுகிற தேதிவரையிலாவது, அதற்கு முன்னிட்ட வேறே தேதிவரையிலாவது பின்னிட்டு வட்டி செலுத்துவதைக்குறித்து அப்படிப்பட்ட டிக்ரியில் யாதொன்றும் சொல்லப்படாமலிருக்கும் விஷயத்தில் கோர்ட்டார் அந்த வட்டியை கொடுக்காது நிராகரித்து விட்டதாக எண்ணப்படும். அதற்காகத் தனியாக வியாஜ்ஜியம் கொண்டுவரக் கூடாது. பொதுவாக தாவாசெய்யும் தேதிவரையில் ஆதரவில் கண்டிருக்கும் வட்டி போடப்படும். அந்த தேதிக்கு பிறகு டிக்ரி தேதிவரையில் கண்டிராக்ட்டு ரேட்டுகொடுக்க வேண்டுமென்று மதிராஸ் ஹைகோர்ட்டு ஜட்ஜிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். 12. ம.

435. கல்கத்தா ஹைகோர்ட்டார் அதற்கு விரோதமாக தங்கள் இஷ்டப்படிதான் வட்டிகொடுக்கப்படுமென்று தீர்மானித்திருக்கிறார்கள். 20. க. 360. ஆனால் மார்ட்டுகேஜ் கேசுகள் சம்மந்தமாய் ஏற்படும் டிக்ரிகள் விஷயத்தை அடியில் கூறுவோம். பொதுவாய் தாவா தேதிவரையிலும் பத்திரத்தில் கண்ட கண்டிராக்ட்டு ரேட்டு கொடுக்கவேண்டுமென்று அலகபாத்தில் தீர்மானம்செய்தார்கள். 15. அ. 339. அந்தவிதமே டிக்ரி தேதிவரையிலும் கொடுக்கவேண்டும் என்கிற தீர்ப்புகள் உண்டு. 26. க. 39. ஒரு பத்திரத்தில் டௌளங் மாதத்திற்குள் அசலை மாதம் 1-க்கு 4 வட்டியுடன் சேர்த்து கொடுப்பதாக கண்டிருந்தது. அதன்மேல் தாவா கொண்டுவர டிக்ரி தேதிவரையிலும் அதே வட்டிகொடுக்கவேணுமென்று ரெங்கூனில் முடிவுசெய்தார்கள். 1893-00 லோ. ப. ரூ. 457. அந்தவிதம் வட்டியை 1839-ம். ௵ 22-வது ஆகட்டு அதாவது வட்டி ஆகட்டு பிரகாரமாவது (24. க. 699) அல்லது டாமேஜ் ரூபமாயாவது (17. அ. 511) கொடுக்கலாம். இது விஷயமாய் சமீபகாலத்தில் சீமை பிரிவி கவுன்ஸில் சபையார் சொல்லுவதாவது. சி. பு. கோ. 34-வது பிரிவுப்படி மார்ட்கேஜ் டிக்கிரிகளில் சேரவேண்டிய தொகையைக் கோர்ட்டில் நிர்ணயிக்கிற தேதிமுதல் 6-மீக்குள்ளே எந்த தினத்தில் செலுத்தவேண்டுமென்று கோர்ட்டார் நிஷ்கிரிஷைபண்ணுகிறார்களோ அந்ததேதிவரையிலும் பத்திரத்தில் கண்ட வட்டியும் அப்படிதொகை வராதபோனால் வசூலிக்கும் தேதிவரையும் கோர்ட்டாருக்கு தோன்றும் நியாயமானவட்டியும் கொடுக்கப்படுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது, 34. க. 150; 35. க. 221.

கெடுவு தேதிக்குப் பிறகும் வட்டியைப்பற்றி கண்டிராக்ட்டு இருந்தால் மட்டில் அந்தவட்டி சார்ஜாகும். அதாவது சொத்தைக் கட்டுப்படுத்தி அதற்கு டிக்ரி ஏற்படும். 24. க. 699. பஞ்சாபிலும் அலகபாத்திலும் கெடுவுகாலத்துக்கு பிந்தி கொடுக்கப்படும் வட்டி சார்ஜ் ஆகமாட்டாதென்றும் மதராஸிலும், கல்கத்தாவிலும் சார்ஜ் ஆகுமென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். சார்ஜ்ஆகாததால் அதற்காகபிரத்தியேகமானதாவாசெய்யவேண்டுமென்று அலகபாத் ஜட்ஜிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். 16. அ. 269. பொதுவாக தாவா தேதி வரையில் கொடுக்கப்படும் வட்டி ஜாஸ்தியாயிருந்தால் கோர்ட்

டார் டிக்ரிதொகைக்கு வட்டிகொடுக்கமாட்டார்கள். 1893-00 லோ. ப. ரூ. 332. டிக்கிரியில் வட்டி காணுமலிருந்தால் டிக்கிரியை நிறைவேற்றும் கோர்ட்டார் வட்டி கொடுக்கமுடியாது. டிக்ரியில் கண்டிருக்கும் வட்டியை நிறைவேற்றும் கோர்ட்டு குறைக்கமுடியாது. டிக்ரியில் வட்டிகாணுதிருந்தால் டாமேஜ் பாவனையாக தனி தாவாவில் வியாஜ்ஜியம் தொடரலாம். 3. க. 602. டிக்கிரியில் வட்டி யென்று மட்டில் கண்டு எவ்வளவென்று கண்டிராமல் போனுல் நிறைவேற்றும் கோர்ட்டார் நியாயமான கோர்ட்டு ரேட்டு கொடுக்கலாம். 6. க. லா. ரி. 2 1 ஆனுல் டிக்ரியில் வட்டிகாணுமலிருந்து கடன்காரன் வட்டி தருவதாக ஒப்புக்கொண்டால் நிறைவேற்று நடவடிக்கையில் அந்த வட்டியை வசூலிக்கலாம் என்று மதராஸில் தீர்மானம் ஏற்பட்டிருக்கிறது. 7. ம. 400. ஆனுல் பஞ்சாபில் அந்த வட்டியை பிரத்தியேகமான வியாஜ்ஜிய மூலமாகத்தான் தொடர வேண்டுமென்று சொல்லுகிருர்கள்.

---

# 8-வது அத்தியாயம்.

## கடன்காரர்கள் திருப்பிக்கொடுக்கும் தொகைகளை வரவு வைத்தல்.

இந்த அத்தியாயத்தில் கடன்வாங்கிய ஒருவன் தான் செலுத்தும் தொகையை எந்தவிதம் உபயோகிக்க வேண்டுமென்பதை எடுத்துச் சொல்லப்படும். வெளிப்படையாக எந்த கடனுக்காக வரவு வைத்துக்கொள்ளவேண்டியதென்று கடன்காரன் தெரிவிக்கிருனே அந்த அந்தவிதமே உபயோகிக்கவேண்டும். வெளிப்படையாய் இல்லாமலே எந்தக்கடனைத் தீர்ப்பதற்கு வரவுவைத்துக் கொள்ளவேண்டியதென்று குறிப்பான சங்கதிகள் இருந்தால், அந்தத் தொகையை அப்பிரகாரமே உபயோகிக்கவேண்டும். இதற்கு

உதாரணம்: ஏ, என்பவன் பி, என்பவனுக்கு மற்றகடன்களோடு கூட 500 ரூபாய் கடன் ஒன்று பாக்கியிருக்கிறது. பி, என்பவன் அந்தத் தொகையைச் செலுத்தும்படி ஏ, என்பவனுக்கு கடிதம் எழுதுகிறான். ஏ, என்பவன் ரூபாய் 500 அனுப்புகிறான். செலுத்தும்படியாய் பி, என்பவன் கேட்ட 500 ரூபாய் கடனுக்குத் தான் உபயோகிக்கவேண்டும். செலுத்தப்படும் பணத்தை இன்ன கடனுக்கு வரவு வைத்துக்கொள்ள வேண்டியதென்று கடன்காரனும் தெரிவிக்காமல் இருந்து, தெரிவிக்கக்கூடிய மற்றச் சங்கதிகளும் இல்லாத பக்ஷத்தில் கடன் கொடுத்தவன் கடன் வாங்கிக் கொண்டவனால் வாஸ்தவமாய் தனக்கு பாக்கியாகி வரவேண்டியிருக்கும் யாதொரு நியாயமான கடனுக்கு தன் இஷ்டப்பிரகாரம் அந்தப் பணத்தை வரவு வைத்துக்கொள்ளலாம்.

அப்படி வரவு வைக்கப்படும் கடனை வசூல் செய்ய காலாவதியாயிருந்தாலும் நிமித்தமில்லை. ஒரு பத்திரத்தில் செலுத்திய தொகை மட்டில் வரவுவைத்தும், வட்டிக்கென்று வெளிப்படையாய் எழுதாமலிருந்தபோது அதை அசலுக்கோ அல்லது வட்டிக்கோ தன் இஷ்டப்படி பாவித்துக்கொள்ள கடன் கொடுத்தவனுக்கு அதிகாரமுண்டென்று அலகபாத்தில் தீர்மானமாயிருக்கிறது. 1. அ. வி. நொ. 119.

இருவர்களில் ஒருவரும் எந்த விதம் உபயோகிப்பது என்பதைக்குறித்து ஒன்றும் குறிக்காதபக்ஷத்தில் செலுத்தப்படுகிற பணத்தைக் காலவரிசைக்கிரமமாய் கடன்களைத் தீர்ப்பதற்கு உபயோகிக்கவேண்டும். அந்தக் கடன்களுக்கு காலாவதி ஆனாலும் நிமித்தமில்லை. அந்தக் கடன்கள் சமமாய் இருக்குமாகில் அந்தப் பணத்தை அவைகளுக்குச் சமமாகவே செல்லுவைக்கவேண்டும்.

# 9-வது அத்தியாயம்.

## ஜாமீன் விஷயத்தைக் குறித்து.

இந்த அதிகாரத்தில் பிணையைக் (காரண்டி) குறித்த காண்டிராக்ட், ஜாமீன்தாரன், கடன் படுகிற மூலபுருஷன், கடன்கொடுக்கிறவன் இது விஷயங்களைப்பற்றி சொல்லப்படும் மூன்றும் மனிதன் ஒருவன் தவறிப்போகிற விஷயத்தில் அவனுடைய கடனை தீர்ப்பதாக ஒருவன் செய்யும் காண்டிராக்ட்டில் பிணைப்படுகிற மனிதன் ஜாமீன்தாரனென்றும் எவன் தவறிப்போகும் விஷயத்தில் பிணைப்படலாகிறதோ அந்த மனிதன் கடன்படும் மூல புருஷனென்றும் எவனுக்கு பிணைப்படலாகிறதோ அந்த மனிதன் கடன்கொடுக்கிறவனென்றும் சொல்லப்படும். அந்தவிதம் ஜாமீன்படுவது வாய்மொழியாகவாவது அல்லது எழுத்துமூலமாகவாவதிருக்கலாம். கடன் பிரயோசனத்திற்காக செய்யப்பட்ட யாதொரு காரியம் பிணைப்படுவதற்காக ஜாமீன்தாரனுக்கு போதுமான பிரதிபலனாகலாம். உதாரணம்: ஏ-என்பவன் பீ-என்பவனுக்கு சரக்கை விற்று அதை அவனுக்கு ஒப்பிக்கிறான் பின்பு சீ-என்பவன் அந்தக் கடனுக்காக ஒருவருஷம் வரையில் பீ-என்பவன்மேல் வியாஜ்ஜியம் தொடராதிருக்கும்படி ஏ—என்பவனை கேட்டுக்கொள்ளுவதல்லாமல் அவனப்படி இருந்தால் பீ-என்பவன் பணம் கொடுக்கத் தவறினால் அந்த சரக்குக்காகத் தான் பணம் செலுத்துவதாகவும் ஒப்புக்கொள்ளுகிறான். கேட்டுக்கொண்டபடி வியாஜ்ஜியம் தொடராதிருக்க ஏ-என்பவன் உடன்படுகிறான். இது சீ - என்பவனுடைய ஜாமீனுக்கு போதுமான பிரதிபலனாயிருக்கிறது. மேலே கண்ட ஜாமீன், ஒரு விஷயத்திற்குமட்டில் ஏற்பட்ட ஜாமீனாகும். தோர்வையாய் நடக்கும் விவகாரங்களுக்கும் ஜாமீன் கொடுக்கலாம். அப்போது அதற்கு தொடர்ச்சியாய் நடக்கிற பிணையென்று சொல்லப்படும். உதாரணம்: பீ-என்னும் தேயிலை வியாபாரி சீ—என்பவனுக்கு சப்ளைசெய்யும் தேயிலைக்காக 1000-ரூபாய் வரையில் பீ-என்பவனுக்கு பணம் செலுத்த ஏ-என்பவன் ஜாமீன் கொடுக்கிறான்.

அந்த தொகைக்கு மேற்பட பீ-என்பவன் சீ-என்பவனுக்கு தேயிலை கொடுக்கிறான். அதற்காக சீ-என்பவன் பீ-என்பவனுக்கு பணம் செலுத்திவிடுகிறான். பிறகு 2000 ரூபாய் கிரயமுள்ள தேயிலையை பீ-என்பவன் சீ-என்பவனுக்கு சப்ளை செய்கிறான். சீ - பணம் கொடுக்க தவறினால் ஏ-என்பவன் 1000 ரூபா வரையில் பீ-க்கு செலுத்த கடமைப்பட்டிருக்கிறான். இந்தவிதம் ஏற்படும் பிணையை 2-விதமாக ரத்து செய்யலாம். (1) கடன் கொடுக்கிறவனுக்கு நோட்டீஸ் கொடுத்தும் (2) ஜாமீன்தாரன் இறந்துபோவதினாலும் ரத்தாய்விடும். அந்தவிதம் பின்னிட்டு நடக்கும் காரியங்கள் சம்மந்தப்பட்டவரையில் தான் அற்றுப்போகிறது. பிரதி ஜாமீன் காண்டிராக்ட்டிலும கடன்படும் மூலபுருஷன் ஜாமீன் தாரனுக்கு ஈடுபண்ண சட்டப்படி கடமைப்பட்டிருக்கிறான். நடக்கிற காரியத்தைச் சேர்ந்த ஒரு முக்கியாம்சத்தை குறித்து கடன் கொடுக்கிறவனாலாவது அல்லது அவனுடைய சம்மதியின் பேரிலாவது மாறுபாடு சொல்லப்பட்டு அதன் மூலமாய் ஏற்படும் எவ்வித ஜாமீனும் செல்லாது. தவிர கடன் கொடுக்கிறவன் முக்கியமான சங்கதியைச் சொல்லாமல் சும்மாயிருந்து பெற்றுக்கொள்ளுகிற ஜாமீனுஞ் செல்லாது.

ஜாமீன்தாரனுடைய உத்தரவாதம் காண்டிராக்ட்டிலே வேறே விதமான ஏற்பாடு செய்திராத பட்சத்தில் கடன்படும் மூல புருஷனுடைய உத்தரவாதத்தோடு கூடவே நடந்து கொண்டிருக்கிறது. பிரதமத்தில் பிணைப்படுகிற 2-பேர்களுடைய உத்திரவாதத்திற்கு ஒருவன் தவறுவானாகில் மற்றொருவன் ஜாமீனாயிருக்கவேண்டுமென்று அவர்களுக்குள்ளே செய்துகொள்ளப்பட்ட ஏற்பாட்டினாலே பாதகமில்லை. உதாரணம்: ஏ, பீ, இவர்கள் கூட்டாகவும் தனியாகவும் முன்னின்று சீ-என்பவனுக்கு ஒரு அண்டிமண்டு எழுதிக்கொடுக்கிறார்கள். பீ-க்காக உள்ளபடி ஏ-ஜாமீனாக எழுதிக் கொடுக்கிறான். இதுசங்கதி சீ-யென்பவனுக்கும் தெரியும். ஆயினும் ஏ-என்பவன்மேல் சீ-என்பவன் கொண்டுவரும் வியாஜ்ஜியத்திற்கு அதை எதிர்வாதம் சொல்ல பிரயோசனப்படமாட்டாது.

ஜாமீன் கடன் கெடுவுசென்று பாக்கியாய்விட்டால் ஜாமீன் தாரன் தான் செலுத்தவேண்டிய பண முழுமையும் செலுத்துவதன்

மேல் கடன்படுகிற மூலபுருஷன்மேல் கடன் கொடுக்கிறவனுக்கிருந்த சகல சுதந்தரங்களும் அந்த ஜாமீன்தாரனுக்கு உண்டாகிறது. தவிர காண்டிராக்ட்டு ஏற்படும் காலத்தில் கடன் கொடுக்கிறவனுக்கு கடன்படுகிற மூலபுருஷன் மேல் என்னென்ன ஆதாரம் கிடைத்திருக்கிறதோ அந்தப்பிரதி ஆதாரத்தையும் தான் அறிந்திருந்தாலும் இராவிட்டாலும் ஜாமீன்தாரன் அடைவதற்கு அர்ஹனாகிறான். மேலும் ஜாமீன்தாரன் கிரமமாய் எவ்வளவு செலுத்தியிருக்கிறானோ அந்தத் தொகையை மட்டில் தான் கடன்படும் மூல புருஷனிடத்திலிருந்து வரப்பற்றிக்கொள்ளும் பாத்தியமுண்டு. ஆனதால் காலாவதியாய் போன கடனை ஜாமீன்தாரன் கொடுத்தால் மூல புருஷனிடமிருந்து தனக்கு கிடைக்காது. 30. ப. 78.

ஜாமீன் எப்போது ரத்தாய்விடும்:—

(1) ஜாமீன்தாரன் அனுமதியில்லாமல் மற்ற இருவருக்குள் ஏற்படுகிற காண்டிராக்ட்டின் ஷரத்துக்களில் எதை மாற்றப்பட்டாலும், அதனாலே அதற்கு பின்னிட்டு நடக்கும் காரியங்களுக்கு ஜாமீன் ரத்தாய்விடும்.

(2) கடன் கொடுக்கிறவனுக்கும் கடன்படும் மூலபுருஷனுக்கும் ஏதாவது காண்டிராக்ட் பிறந்து அதனால் மூல புருஷனுக்கு விடுதலை யுண்டானாலும், கடன் கொடுக்கிறவன் யாதொரு காரியத்தை செய்வதாலோ அல்லது செய்யாம லிருப்பதாலோ சட்டப்படி கடன்படும் மூல புருஷனுக்கு விடுதலை யுண்டானாலும் ஜாமீன் ரத்தாகிவிடும். மூலபுருஷன் பேரிலும் ஜாமீன்தாரன்பேரிலும் தாவாசெய்து பிறகு மூலபுருஷன் பேரில் தான் தொடர இஷ்டமில்லையென்று விட்டுவிட, ஜாமீன் ரத்தாய் விடுமென்று ரெங்கூன் சீப்கோர்ட்டில் தீர்மானித்திருக்கிறார்கள். 1. லோ. ப. ரூ. 150. பஞ்சாபிலும், பம்பாயிலும் காலாவதி கெடுவுக்குள் மூலபுருஷன் பேரில் வியாஜ்ஜியம் தொடராமலிருப்பதைக் கொண்டு ஜாமீன்தாரன் உத்திரவாதம் நீங்காதென்று அப்பிராயப்படுகிறார்கள். 7. ப. 1416; 2. ப. ரி. 1878. ஆனால் அலகாபாத்திலும் அப்பர் பர்மாவிலும் அந்தவிதம் தொட

ராதிருந்தால் ஜாமீன் ரத்தாய் விடுமென்று தீர்மானங்களிருக்கின்றன. 24. அ. 504; 1892-96 அ. ப. ரூ. 308. கடன் கொடுக்கிறவன் மற்ற இருவர் பேரிலும் தாவா கொண்டுவந்து மூலபுருஷன்பேரில் ஸம்மன் சர்வே செய்ய முடியாததைக்கொண்டு ஜாமீன் ரத்தாகாது. 14. ப. 267. காண்டிராக்ட்டில் வேறு விதமான ஏற்பாடு இருந்தாலொழிய மூலபுருஷன்மேல் வியாஜ்ஜியம் தொடராமலாவது அல்லது பொறுத்திருப்பதனால்மாத்திரமே ஜாமீன் ரத்தாகாது.

(3) மூலபுருஷனுக்கு கடன் கொடுக்கிறவன் ஒழுங்கு செய்தோ அவனுக்கு கொடுக்கவாகிலும் அவன்மேல் வியாஜ்ஜியம் தொடராதிருக்கவாகிலும் ஒப்புக்கொண்டோ அதற்காக அவர்களுக்குள் காண்டிராக்ட் ஏற்பட்டால் அதனாலே அப்படிப்பட்ட காண்டிராக்ட்டுக்கு ஜாமீன்தாரன் சம்மதிக்காத பட்சத்தில் அவன் ஜாமீன் ரத்தாய்விடும். கெடுவு காலத்திற்கு பிறகு உண்டியலுக்குப் பணம் கொடுக்க டயம் வாங்கவேண்டி வட்டியை அட்வான்ஸாக கடன்படும் மூலபுருஷனிடமிருந்து வாங்கியதினால் ஜாமீன்தாரன் அதற்கு சம்மதிக்காததால் அவன் ஜாமீன் ரத்தாய்விட்டதென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 6. க. 241. ஆனால் கடன்படுகிற மூல புருஷனுக்கு கெடு கொடுப்பதற்காக மூன்றும் மனிதனோடு காண்டிராக்ட் செய்து கொள்ளப்பட்டால் ஜாமீன்தாரன் உத்திரவாதம் நீங்காது.

(4) கடன் கொடுக்கிறவன் ஜாமீன்தாரன் பாத்தியதைக்கு விரோதமான யாதொரு காரியத்தைச் செய்தாலும், செய்யவேண்டியிருக்கும் காரியத்தை செய்யாதொழிந்தாலும் அதனாலே மூலபுருஷன்பேரில் ஜாமீன்தாரன் பரிகாரம்தேட கெடுதியுண்டானால் ஜாமீன்தாரன் உத்தரவாதம் அற்றுப்போகும். உ-தாரணம்: டிக்ரியை காலாவதி கெடுவுக்குள் நிறைவேற்ற வேண்டும். 8 அ. 259. பணம் கொடுக்கிறவன் மார்ட்கேஜ் பத்திரத்தை ரிஜிஸ்

டர் செய்யாவிடில் அதில் கண்ட ஜாமீன்தாரன் கடமை நீங்கிவிடும். 4. ப. ஹை. கோ. ரி. 79.

(5) கடன் கொடுக்கிறவன் தன் வசம் இருந்த ஆதாரத்தைப் போக்கடித்துவிட்டாலும் ஜாமீன்தாரன் சம்மதியில்லாமல் அதைக் கொடுத்துவிட்டாலும் அந்த ஆதாரத்தின் பொறுமானம் எவ்வளவோ அவ்வளவுக்கு ஜாமீன் தாரனுடைய உத்திரவாதம் அற்றுப்போகிறது.

கூட்டு ஜாமீன்தாரர்களிருக்கிற விஷயத்திலே கடன். கொடுக்கிறவன் அவர்களில் ஒருவனை நிவர்த்தி செய்வதினாலே மற்றவர்கள் நிவர்த்தியாவதில்லை. அப்படி நிவர்த்தியான ஜாமீன்தாரனும் மற்ற ஜாமீன்தாரர்களுக்கு உத்தரவாதத்தினின்றும் நீங்கமுடியாது. கூட்டு ஜாமீன்தாரர்களுக்கு கடன் முழுமையுமாவது கடன்படுகிற முலபுருஷனால் செலுத்தப்படாமல் அதில் பாக்கியிருக்கும் பாகத்தையாவது தங்களுக்குள் ஒவ்வொருவரும், விரோதமான யாதொரு காண்டிராக்ட்டில்லாதபட்சத்தில், சமபாகமாய் செலுத்துவதற்குக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஆனால் காண்டிராக்ட்டில் ஒவ்வொருவரும் எவ்வளவு தொகைக்கு ஜாமீன் கொடுத்திருப்பதாய் கண்டிருக்கும் அவ்வளவு தொகை வரைக்கும் சமமாய்ச் செலுத்தவேண்டும்.

கடன் வாங்கின மூலபுருஷன் மேல் ஜாமீன்தாரன் வியாஜ்ஜியம் தொடர தான் கடன் கொடுத்தவருக்கு பணம் செலுத்திய தேதிமுதல் 3-வருஷம் காலாவதி கெடுவு உண்டு. உடன் சேர்ந்த ஜாமீன்தாரன்மேல் ஒரு ஜாமீன்தாரனால் வியாஜ்ஜியம் கொண்டுவர தன் பங்குக்கு அதிகமாய் ஏதாவது செலுத்தும் தேதிமுதல் 3-வரு காலம் கெடுவு இருக்கிறது.

இந்த சந்தர்ப்பத்தில் சி. பு. கோ. 145-வது பிரிவில் சொல்லியிருப்பதை கவனிக்கவேண்டும். யாதொரு நபர்,

(*A*) யாதொரு டிக்ரியின்படி அல்லது டிக்ரியின் பாகத்தின்படி செய்யப்படுவதற்காகவாவது,

(*B*) டிக்ரியை நிறைவேற்றுவதற்காக எடுத்துக் கொள்ளப்பட்ட யாதொரு சொத்து திரும்பக் கொடுத்துவிடப்படுவதற்காகவாவது,

(C) யாதொரு வியாஜ்ஜியத்திலோ அதனாலுண்டாகும் நடவடிக்கையிலோ கோர்ட்டாரால் செய்யப்பட்ட யாதொரு உத்திரவின்படி யாதொரு பணம் செலுத்தப்படுவதற்காக அல்லது எந்த நபருக்காகிலும் விதிக்கப்பட்டிருக்கிற யாதொருதிட்டம் நிறைவேற்றப்படுவதற்காகவாவது, ஜாமீன்தாரராய் நிற்கும் பட்சத்திலே அவர் நபர் ஜாமீனாகத்தம்மைக் கட்டுப்படுத்திக்கொண்டு இருக்கும் வரையில் ஷெ டிக்ரியையோ உத்தரவையோ அவருக்கு விரோதமாக நிறைவேற்றலாம். அப்படி நிறைவேற்ற மூன்றுவருஷம் காலாவதிஉண்டு. இந்தவிதியின் கீழ் உத்தரவுசெய்யுமுன் ஜாமீன்தாரருக்கு போதுமான நோட்டிஸ் கொடுக்கவேண்டும்; தவிர, இந்த விதியின் கீழ் செய்யப்படும் உத்தரவின் பேரில் அப்பீல் உண்டு. கடனாளிபேரில் நிறைவேற்றுவதினால் ஜாமீன்தார் பேரில் புது காலாவதி ஏற்படாது. 31. ப. 50.

---

# 10-வது அத்தியாயம்.

## பொதுவாக காண்டிராக்டைக் குறித்து.

பொதுவாக ஒவ்வொரு உடன் படிக்கைக்கும் பிரதி பலன் இருக்கவேண்டும். பிரதி பலன் இல்லாத உடன் படிக்கை சட்டப்படி செல்லாது. ஆனால் அடியில் கண்டிருக்கும் மூன்று கேசுகளிலும் பிரதி பலன் இல்லாமற் போனாலும் உடன் படிக்கை சட்டப்படி காண்டிராக்ட் ஆகும்:—

(1) ஒருவருக் கொருவர் நெருங்கின பந்துவா யிருந்து அவர்களுக்குள் இருக்கு மியற்கையான ஆசாபாசத்தின் பொருட்டு வெளிப்படையாய் எழுதி ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருந்தாலும்,

(2) வாக்குத்தத்தம் செய்கிறவனுக்காக ஏதோ ஒரு காரியத்தை யாவது, அல்லது அவன் சட்டப்படி எந்தக் காரியத்தைச் செய்யக் கடமைப்பட்டிருக்கிருனே அந்தக் காரியத்தையாவது தானே வலியச் செய்திருக்கிறவனுக்கு பதில் கொடுப்பதாக வாக்குத்தத்தம் செய்திருந்தாலும். இதற்கு உதாரணம் என்னவென்றால் :— ஏ-என்பவன், பி-என்பவனுடைய பணப்பையைக் கண்டு பிடித்து அதை அவனுக்கு கொடுக்கிருன். பி-என்பவன் ஏ-என்பவனுக்கு 50 ரூபாய் கொடுப்பதாக வாக்குத்தத்தம் செய்கிருன். இது சட்டப்படி கண்டிராக்டு ஆகும். ஒரு ஸ்திரியுடன் முந்தி ஏற்பட்ட சம்சர்க்கத்திற்காக மாதம் ஒன்றுக்கு இவ்வளவு ரூபாய் கொடுப்பதாக வாக்குத்தத்தம் செய்வது இந்த விதிப்படி சரியான கண்டிராக்ட் ஆகுமென்று ஜட்ஜ் பாஷியம் அய்யங்கார் அவர்கள் தீர்மானம் செய்திருக்கிருர்கள். 13. ம. லா. ஜ. 7.

(3) இந்தியன் லிமிடேஷன் ஆக்டினுல் காலாவதி தோஷம் உண்டாயிருக்கிற கடனை செலுத்துவதாய் கடன்காரனுவது, அவனுடைய ஏஜெண்டாவது எழுதி கையெழுத்து செய்து கொடுத்திருந்தாலும். கடன் என்பது டிக்ரி கடன் என்றும் அர்த்தமாகும். 26. அ. 36.

யாதொரு உடன்படிக்கையின் பிரதிபலனுவது நோக்கமாவது,

(1) சட்டத்தினுலே விலக்கப்பட்டாகிலும்,

(2) சட்ட நிபந்தனைகளுக்கு விரோதமான தன்மையுள்ளதாகவாகிலும்,

(3) மோசமுள்ளதாகவாகிலும்,

(4) வேறொருவனுடைய சரீரத்திற்காவது, சொத்துக்காவது தீங்கு உண்டுபண்ணும்படியானதாகவாகிலும்,

(5) அநீதி என்ருவது, ராஜாங்க முறைக்கு விரோதமென்ருவது, கோர்ட்டார் எண்ணுகிறதாக வாகிலும்,

இல்லாவிட்டால் சட்ட சம்மதமானதாகவே பாவிக்கப்படும். அப்படிப்பட்டதாயிருந்தால் ஒவ்வொரு விஷயத்திலும் உடன்படிக்கையின் பிரதி பலனையாவது நோக்கமாவது சட்டத்துக்கு விரோதமென்று சொல்லப்படும். அவ்வித சட்டத்துக்கு விரோதமாயிருக்கிற பிரதி உடன்படிக்கையும் செல்லாது. விவாகத்தை நிறுத்துவதற்கான உடன்படிக்கையும், வியாபாரத்தை நிறுத்துவதற்கான உடன்படிக்கையும், நியாய விவகார நடவடிக்கைகளை நிறுத்திவைக்கும்படியான உடன் படிக்கையும், பந்தயத்திற்காக செய்துக்கொள்ளும் உடன்படிக்கையும், சட்டத்தினால் விலக்கப்பட்ட உடன்படிக்கைகளாகும். ஒரு ஏலத்தில் தொகை கொடுத்தால் போட்டிக்குக்கேட்கிறதில்லை என்று செய்யும் உடன்படிக்கை சட்ட விரோதமென்று மாந்தளையில் தீர்மானமா யிருக்கிறது. 1897-1901, அ. ப. ரூ. 317. ராசிசெய்ய முடியாத கிரிமினல் கேசுகளை ராசிசெய்து கொள்ளுகிறதென்று செய்யும் உடன்படிக்கையும் சட்டத்திற்கு விரோதமாகும். 1897-1901, அ. ப. ரூ. 313. ஒரு ஸ்திரியுடன் இனி சம்சர்க்கம் செய்வதற்காக செய்யும் உடன்படிக்கையும் செல்லாது. 28. ம. 413. ஒரு தேவடியாளுக்கு அவள் தொழில் நடத்துவதற்காகத் தெரிந்து கொடுக்கும் வீட்டுக்கு வாடகை வசூல் செய்யமுடியாது. 22. ப. ரி. 1877. ஒரு கிரிமினல் கேசை வாப்ஸ் வாங்கிக்கொள்ளுகிறதென்று செய்யும் உடன்படிக்கை செல்லாது. 3. லோ. ப. ரூ. 42. சூதாடுவதற்காக கொடுக்கும் தொகையைத் திருப்பி கைப்பற்ற முடியாது. மாந்தளையில் அந்த சூதாட்டம், சட்ட விரோதமான சூதாட்டமாயிருந்தாலொழிய வாங்கலாமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 1905 அ. ப. ரூ. 7. ஆனால் சூதாட்டத்தில் ஏற்பட்ட கடனை தீர்ப்பதற்காக கொடுக்கும் தொகையை திருப்பி வாங்கலாம். 22. அ. 452. இருவர் அல்லது பலர் கூட்டாக வாக்குத்தத்தம் செய்திருந்தால் அப்போது கான்டிராக்டினால் விரோதமான கருத்தொன்றும் தோன்றாவிட்டால் அந்த வாக்குத்தத்தத்தை அவர்களுடைய ஜீவகாலத்தில் கூட்டாய் எல்லாரும் நிறைவேற்ற வேண்டும். அவர்களில் யாராவது இறந்தால் அவர் பிரதிநிதியும் மற்றவர்களோடுசேர்ந்து நிறைவேற்ற வேண்டும்; எல்லாரும் இறந்துபோனால் எல்லாருடைய பிரதிநிதிகளும் சேர்ந்து நிறைவேற்றவேண்டும். அவ்விதம் கூட்டாய் வாக்குத்தத்தம் செய்கிறவர்களில் யாராவது ஒருவனை அதை நிறைவேற்

றும்படி செய்யலாம். வாக்குத்தத்தம் செய்கிறவர்களில் அவரவர் மற்றவரை தன்னோடு சேர்ந்து நிறைவேற்றும்படி செய்யலாம். அந்தவிதம் கலந்து நிறைவேற்றத் தவறிப்போனால் அவர்களில் மற்ற வர்கள் அந்த தவறினதினால் உண்டாகிற நஷ்டத்தை சமபாகமாக ஏற்றுக்கொள்ளவேண்டும். கூட்டாய் வாக்குத்தத்தம் செய்தவர்க ளில் ஒருவரை நிவர்த்தி செய்வதினால் மற்றவர்கள் நிவர்த்தியாக மாட்டார்கள். மேலும் நிவர்த்திசெய்யப்பட்டவர் மற்றவர்களுக்கு உத்தரவாதி ஆகாமல் போகவும் மாட்டார். ஒருவர் பலருக்கு கூட் டாக வாக்குத்தத்தம் செய்திருந்தால் அப்போது கான்டிராக்டினால் விரோதமான கருத்து ஒன்றும் தோன்றாவிட்டால் அவனுக்கும், அவர்களுக்குமுள்ள சம்மந்தத்தில் அதை நிறைவேற்றிச் சொல் லிக் கேட்கும்படியான பாத்தியமானது அவர்கள் ஒன்றாய் ஜீவித்தி ருக்கும் வரையில் அவர்களுக்கு உண்டாகிறது. அவர்களில் எவ ராவது இறந்த பிறகு ஜீவித்திருக்கும் மற்றவர்களோடு கூட்டாய் மேற்படி இறந்தவர் பிரதிநிதிக்கும், எல்லாரும் இறந்த பிறகு, கூட் டாய் எல்லாருடைய பிரதிநிதிகளுக்கும் உண்டாகிறது. கேட்கப் படாமலே நிறைவேற்றவேண்டியதா யிருக்கும் வாக்குத்தத்தத்தை கால நிர்ணயமில்லாவிட்டால் தகுந்த காலத்திற்குள் அந்த உடன் படிக்கையை நிறைவேற்றவேண்டும். ஏதோ ஒரு தினத்திலே நிறைவேற்ற வேண்டியிருந்து வாக்குத்தத்தம் செய்யப்படுகிறவனால் கேட்கப்படாமலே அதை நிறைவேற்ற ஒப்புக்கொண்டிருக்கும் பட் சத்தில், அந்த உடன்படிக்கையை நிறைவேற்றவேண்டிய இடத்தி லே அந்த தினத்தில் வழக்கமாய் வர்த்தகம் நடத்திக்கொண்டிருக் கும் காலத்தில் எப்போதாவது நிறைவேற்றவேண்டும். மேலே சொன்ன பிரகாரம் வாக்குத்தத்தம் செய்யப்படுகிறவனால் கேட்கப் படாமலே அதை நிறைவேற்ற ஒப்புக்கொண்டிராத பட்சத்தில் யுக் தமான இடத்திலும், வர்த்தகம் நடத்தும் வழக்கமான காலத்திற் குள்ளும் நிறைவேற்றும்படி கேட்பது வாக்குத்தத்தம் செய்யப்படு கிறவன் கடமையாகும். நிறைவேற்றுமிடம் நிஷ்கரிஷை யில்லாவிட் டால் உடன்படிக்கையை நிறைவேற்ற தகுந்த காலத்தை நியமிக்கச் சொல்லி வாக்குத்தத்தம் செய்யப்படுகிறவனைக் கேட்பதும், அப்ப டிப்பட்ட இடத்திலே அதை நிறைவேற்றுவதும், வாக்குத் தத்தம் செய்கிறவன் கடமையாகும். கான்டிராக்டான பிறகு யாராவது

ஒருவர் தன் வாக்குத்தத்தத்தைப் பூர்த்தியாய் நிறைவேற்ற நிராகரித்தாலும், நிறைவேற்றாமலிருக்கும்படி தன்னை அசக்தனாக்கிக்கொண்டாலும் வாக்குத்தத்தம் செய்யப்படுகிறவன் அந்த காண்டிராக்ட் நடந்துகொண்டே யிருப்பதற்குத் தன்னுடைய சம்மதியைச் சொற்களாலாகிலும், நடத்தையினாலாகிலும் தெரியப்படுத்தி யிராதபட்சத்தில் அவர் அந்த காண்டிராக்டை ரத்து செய்யலாம். ஒரு காண்டிராக்டை சேர்ந்த நபர்கள் அதற்கு பதிலாக, வேறொரு புதுகாண்டிராக்ட் செய்துகொள்ளவாவது, திருத்தவாவது சம்மதிப்பார்களாகில் பிரதம காண்டிராக்ட் நிறைவேற்றபட வேண்டியதில்லை. இந்த 62-வது பிரிவில் சொல்லியிருப்பதை நன்றாய் கவனியாமல் சில கடைகளில் பல புரோநோட்டுகள் ஒரு ஆசாமிக்காரன் எழுதிக்கொடுத்த பிறகு அவனுடன் எல்லா நோட்டுகளையும் சேர்த்து ஒரு மிக்க பிந்தி ஒரு எக்ரிமெண்டு தீர்த்து எழுதி வாங்கி, அந்த விதம் வாங்கிய எக்ரிமெண்டை அனுசரியாது பழய நோட்டுகளில் ஒன்று மட்டின்பேரில் வியாஜ்ஜியம் தொடருகிறார்கள். வியாஜ்ஜியத்தை ஸகஜமாக தள்ளத்தானேவேண்டும். அந்தவிதம் தான் டிக்ரிகள் பிறந்த பிறகும் நினைத்தபடி தீர்த்து எக்ரிமெண்டு எழுதிவாங்குகிறார்கள். காண்டிராக்ட்படி நடக்காததால் நஷ்டமடைகிறவன் அது காரணத்தால் சாதாரணமான தோரணியில் இயற்கையாய் தனக்கு சம்பவிக்கும் யாதொரு சேதம் அல்லது நஷ்டத்திற்கு உபயத்திராளும், காண்டிராக்ட் செய்துக்கொண்டபோது அது விக்னப்பட்டால் அதனாலுண்டாகும் போல் அவர்களுக்கு தெரிந்திருக்கிற சேதம் அல்லது நஷ்டத்திற்காவது காம்பன்ஸேஷன் காண்டிராக்டை நிறைவேற்ற தவறினவரிடமிருந்து வரப்பற்றிக்கொள்ள பாத்தியமுண்டு. அந்தவிதம் அடையும் சேதம் நேராயல்லாமலிருந்தால் காம்பன்ஸேஷன் கிடைக்காது. யாதொரு காண்டிராக்ட் நிறைவேற்றப்படாமல் விக்கினம் செய்யப்பட்டால் அந்தவிதம் விக்கினம் செய்யப்படுவதற்காக இவ்வளவு தொகை செலுத்துவதாய் அந்த காண்டிராக்டில் ஒரு தொகை கண்டெழுதப்பட்டிருக்கும் பட்சத்திலே, அதனாலே சேதமாவது, நஷ்டமாவது வாஸ்தவமாய் உண்டாயிருப்பதாக ருஜு செய்யப்பட்டாலும், படாவிட்டாலும் காண்டிராக்ட் விக்கினப்பட்டதென்று முறையிடும் நபர் அந்த காண்டிராக்டை விக்கினப்படுத்தின நபரிடத்திலிருந்து அப்படி கண்டி

ருக்கும் தொகைக்கு அதிகப்படாமலே, யுக்தமான தொகை காம்பன்ஸேஷனாகப் பெற பாத்தியமுண்டு. இந்த விதிக்கு முக்கியமான விலக்கு ஒன்றுண்டு, அதாவது, கோர்ட்டு நடவடிக்கைகளில் ஆஜராகாவிட்டால் இவ்வளவு ரூபாய் தெண்டம் கொடுப்பதாக எழுதிக்கொடுக்கும் முச்சலிக்காப்படி நடக்கத்தவறினால் முழுத்தொகையும் செலுத்தவேண்டும்.

---

# 11-வது அத்தியாயம்.

## ஸ்டாம்பு விஷயங்களைக் குறித்து.

சட்டப்படிக்கு சில ஆதரவுகளுக்கு கிரமமான முத்திரை யிருக்கவேண்டும். அந்த விதம் கிரமமாய் முத்திரை போட்டிராத ஆதரவுகளை எந்த கண்டிஷன்களுக்கு உட்பட்டு சாட்சியமாக ஏற்றுக்கொள்ளப்படத் தக்கவைகள் என்பதை அடியில் கண்டிருக்கும் 35-வது செக்ஷனால் தெரிந்து கொள்ளலாம். ஒரு அணு தீர்வைக்கு மாத்திரம் உட்பட்ட ஆதரவும் பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ் அல்லது ப்ராமிஸெரிநோட்டு மல்லாத அப்படிப்பட்ட யாதொரு ஆதரவானது அதற்குண்டானதீர்வை அல்லது குறைவாய் முத்திரைபோட்ட ஆதரவு விஷயத்தில் அப்படிப்பட்ட தீர்வையைச் சரிப்படுத்தவேண்டிய தொகை 5-ரூபா அபராதத்தோடு செலுத்தப்படுவதின் மேலாவது சரியான தீர்வைத் தொகைக்கு பத்தத்தனையாகிலும் அந்த தீர்வையில் குறைந்த பாகத்திற்கு பத்தத்தனையாகிலும் 5-ரூபாய்க்கு அதிகப்படும்போது, அப்படிப்பட்ட தீர்வை அல்லது பாகத்திற்குப் பத்தத்தனைக்கு சமமான தொகை செலுத்தப்படுவதின் மேலாவது சாட்சியமாக ஏற்றுக்கொள்ளப்படும். இதனால் பில் ஆவ் எக்ஸ்

சேஞ்சு அல்லது ப்ராமிஸரி நோட்டு அல்லது செக்கு இவைகளுக்கு கிரமமான ஸ்டாம்பு இல்லாமலிருந்தால் மேலே கண்ட தீர்வையையும் அபராதத்தையும் கொடுத்தாலும் கோர்ட்டார் அவைகள் சாட்சியமாக ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். அவ்விதமான ஆதாரவின்பேரில் யாதொரு வியாஜ்ஜியம் கொண்டுவரலாமாவென்று கேட்கக்கூடும். இது சம்மந்தமாய் கல்கத்தாவில் காரத்தா ஜட்ஜ் அவர்களால் தீர்மானம் செய்திருக்கும் (ஷேக் அக்பர்வாதி—ஷேக் கான் பிரதிவாதி, 7. க. 256) கேஸ் மிகவும் பிரசித்திபெற்றது.

ஒரே தேதியில் கடன்கொடுத்து அந்த கடனுக்காக பிரதிவாதி புரோநோட்டு எழுதிக்கொடுத்திருந்தால், அந்த புரோநோட்டிற்கு கிரமமான ஸ்டாம்பு இல்லாதிருந்தால் அவ்வித புரோநோட்டின்பேரில் வியாஜ்ஜியம் கொண்டுவரமுடியாது. ஆனால் புரோநோட்டு பிறந்த தேதிக்கு முன்பாகவே வாதிக்கு கொடுக்கவேண்டியிருக்கும் கடனுக்காவது அல்லது கணக்கு பாக்கிக்காவது ஒத்துக்கொண்டு பிரதிவாதி புரோநோட்டு எழுதிக் கொடுத்திருக்கும் பட்சத்தில், கிரமமான ஸ்டாம்பு இல்லாமலிருந்தாலும் புரோநோட்டின்பேரில் தாவா செய்யாது தொகை கிடைக்கவேணுமென்று பிருதில் கண்டு ருஜு கொடுத்தால் டிக்கிரி கிடைக்கும். இந்த விதம் பம்பாய், கல்கத்தா, மதராஸ் தீர்ப்புகளை உட்புகுந்து பரிசோதித்து மாந்தளே பீங்கிஷா துரை அவர்கள் 1907-வருஷத்தில் தீர்ப்புசெய்திருக்கிறார்கள். (ஙவேய்க்வாதி ஙசெட்பிரதிவாதி). ஒரே காலத்தில் கடனும் புரோநோட்டும் ஏற்பட்டிருந்தாலும் பிரதிவாதி கடன் கொடுக்கவேண்டியதுண்டு என்று ஒப்புக்கொண்டிருந்தாலும் டிக்கிரி கோர்ட்டார் கொடுக்கலாமென்று 23. க. 851-லும் 24. ப. 360-லும் தீர்மானங்கள் இருக்கின்றன. கிரமமான ஸ்டாம்பு இல்லையென்று ருஜுவிடவேண்டிய கடமை ஆதாரவை ஆஜர் செய்யக்கூடாதென்று ஆக்ஷேபிக்கிறவர்களின் கடமை. கிரமமான ஸ்டாம்பு இல்லாத யாதொரு ஆதாரவு கெட்டுப்போனால் அதைப்பற்றி உப சாட்சியம் தவிர கிரமமான ஸ்டாம்பு இல்லாத ஆதாரவை பிரதிவாதி தான் எழுதிக் கொடுத்ததுண்டு என்று ஒப்புக்கொள்ளுதலினால் கோர்ட்டில் ஆஜர்செய்ய அவசியம் ஒன்றுமில்லாமல் போனாலும் கோர்ட்டார் எந்த டிக்கிரியும் கொடுக்கக் கூடாதென்று மாந்தளே

மீங்கி தீர்ப்பு செய்திருக்கிறார். யாதொரு ஆதரவு சாட்சியமாக ஏற்றுக்கொண்டு விட்டால், அப்படி ஏற்றுக்கொண்டது ஸ்டாம்பு ஆக்ட்டு 61-வது பிரிவில் சொல்லியிருக்கிறபடிக்குத் தவிர, அநேக வியாஜ்ஜியம் அல்லது விவகாரத்தின் அப்பீல் முதலிய எந்த திசையிலாவது அந்த ஆதரவுக்கு கிரமமாய் முத்திரை போட்டிருக்கவில்லையென்று ஆட்சேபணை செய்யக்கூடாது. இது சம்மந்தமாய் ஏற்பட்டிருக்கும் தீர்மானங்களை அடியில் சுருக்கிச் சொல்லுவோம்.

(1) கீழ்கோர்ட்டில் தீர்வையையும் அபராதத்தையும் கொடுக்கப்பட்டு அங்கீகாரம் செய்யாது யாதொரு ஆதரவை அக்கிரமமாக சாட்சியமாய் ஏற்றுக்கொள்ளாம லிருந்தால், அப்பீலில் எடுத்து கட்சி சொல்லலாம். 20. ப. 791.

(2) யாதொரு ஆதரவை கீழ் கோர்ட்டார் கிரமப்பிசகாக சாட்சியமாய் ஏற்றுக்கொண்டால் அப்பீல் கோர்ட்டார் அதை ரத்துசெய்ய முடியாது. ஆனால் 61-வது பிரிவுப்படி அந்த ஆதரவுக்குண்டான தீர்வைத் தொகையை நிச்சயித்து யாருடைய ஸ்வாதீனம் அல்லது அதிகாரத்தில் அந்த ஆதரவு அப்போதிருக்கிறதோ அந்த நபரை அதைக் கொண்டுவரச் சொல்லி உத்திரவு செய்து கொண்டுவரப்பட்ட தன்மேல் அதை மறியல் செய்யலாம்.

(3) அக்கிரமமாய் தீர்வையோ அல்லது அபராதமோ போட்டிருந்தால், அது சம்மந்தமாய் அப்பீல் கோர்ட்டில் எந்தவித பரிகாரமும் கிடைக்காது. ஆனால் ஸ்டாம்பு ஆக்ட்டு 39 அல்லது 45-வது பிரிவுப்படி பரிகாரம் பெற்றுக்கொள்ளலாம்.

(4) மறியல் செய்யப்பட்ட ஆதரவுகள் சம்மந்தமாய் செலுத்தப்பட்ட அபராதத்தை வாப்ஸ் செய்ய கலெக்டருக்கு 39-வது பிரிவுப்படி அதிகாரமுண்டு. சில விஷயங்களில் தண்டத் தொகையையாவது ஜாஸ்தித் தீர்வையையாவது வாப்ஸ்பண்ண ரெவினியூ அதிகாரிக்கு 45-வது பிரிவுப்படி அதிகாரமுண்டு. அதை விதித்த

உத்திரவு பிறந்தது முதல் 3 மாதத்திற்குள் எழுத்து மூலியமாய் மனுசெய்து கொள்ளப் படுவதின்மேல் அந்த அதிகாரி ஜாஸ்தி தீர்வையை வாப்ஸ் செய்யலாம்; மறியல் செய்யப்பட்ட ஆதரவுகளுக்கு முத்திரை போட 40-வது பிரிவுப்படி கலெக்டருக்கு அதிகார முண்டு. அந்த பிரிவுப்படி யார் தன்னுடைய கட்சிக்கு ஆதாரமாக கிரமமான ஸ்டாம்பு இல்லாத ஆதரவை தாக்கல் செய்கிறார்களோ அவர்களிடமிருந்து தான் தீர்வையையும் அபராதத்தையும் வசூலிக்கவேண்டு மென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 20. அ. 271.

ஸ்டாம்புகளை வாங்கி எவ்வளவு காலம் ஆனாலும் உபயோகித்துக் கொள்ளலாம். கெட்டுப்போன அல்லது பிசகாய் உபயோகிக்கப்பட்ட அல்லது உத்தேசித்திருந்த காரியத்திற்கு வேண்டியிராத முத்திரை கடிதாசிகளுக்கு கவர்ன்மெண்டார் ஒத்துக் கொடுக்கிறார்கள். மனு எப்பொழுது செய்துகொள்ள வேண்டுமென்பது 50-வது பிரிவில் காணலாம்.

(1) சம்மந்தப்பட்டவர்களில் எவனும் ஆதரவை எழுதிப் பூர்த்தி செய்யாமலிருக்கும் முத்திரைக் கடிதாசியின் விஷயத்திலே முத்திரை கெட்டுப்போன பின்பு 6-மாதத்திற்குள்ளாக,

(2) சம்மந்தப்பட்டவர்களில் எவனாகிலும் ஆதரவை எழுதி பூர்த்தி செய்திருக்கும் முத்திரைக் கடிதாசியின் விஷயத்திலே ஆதரவின் தேதிக்கு பின்பு 6-மாதத்திற்குள்ளும் அதில் தேதி இல்லாவிட்டால் முதலிலாவது தனித்தாவது எழுதிக்கொடுத்தவன் அதில் கைபெழுத்து போட்டு பூர்த்தி செய்த பின்பு 6-மாதத்திற்குள்ளும் மனுசெய்யவேண்டும். கெட்டுப்போன அல்லது பிசகாய் உபயோகிக்கப்பட்ட முத்திரைகளுக்கு ஒத்துக் கொடுக்கிற யாதொரு விஷயத்தில் அவைகளுக்கு, பதிலாக கலெக்டரானவர்,

(1) அதே வகையும் விலையுமுள்ள வேறு முத்திரைகளையாவது,

(2) வேண்டியபதாயிருந்த தகதியாக அதைருக்கு தோனறி ஞல் அதே விலை தொகைக்கு வேறு யாதொரு வகை முத்திரைகளை யாவது,

(3) ரூபாய் ஒன்றுக்கும் ரூபாய்க்கு குறைந்த சில்லரைக்கும் 1-அணு விழுக்காடு குறைத்துக்கொண்டு அந்த கிரயத்தை பணமாகவாவது கொடுக்கலாம். கெட்டுப்போயாவது உத்தேசமான காரியத்துக்குத் தக்கதாகவாவது உபயோகமற்றதாக வாவதிராத முத்திரைகளை யாவனொருவன் வைத்துக்கொண்டிருந்து அவைகள் அவனுடைய தற்கால உபயோகத்திற்கு வேண்டியிராத பட்சத்தில் அவன் அவைகளை ரத்து பண்ணும்படி கொண்டு வந்து கொடுத்து,

(a) வாஸ்தவமாய் உபயோகிக்கவேண்டிய எண்ணத்தோடு அவைகளை தான் வாங்கினனென்றும்,

(b) அவைகளின் பூர்த்தியான விலையைத் தான் செலுத்தினனென்றும்,

(c) அவைகள் அப்படி கொண்டுவந்து கொடுக்கப்பட்ட தேதிக்கு அடுத்து முந்தின 6-மாத காலத்திற்குள் அவைகள் அப்படி வாங்கப்பட்டன வென்றும் கலெக்டருக்கு திருப்தியாகும்படி ருஜு செய்வதன்மேல், அவர் 1-ரூபாய்க்கு 1-அணு விழுக்காடு கழித்துக் கொண்டு அந்த முத்திரைகளின் கிரயத்தைப் பணமாக அவனுக்கு கொடுப்பார்.

| இன்ன ஆதரவுகள். | சரியான முத்திரை தீர்வை. |
|---|---|
| | 8 - அணு. |
| (1) எக்ரீமெண்டு அல்லது உடன்படிக்கை. | |

"நான் 20-பவுன் உங்களிடமிருந்து பெற்றுக்கொண்டேன். அதற்கு வட்டியுடன் நான் ஜவாப்தாரி" என்று கண்டிருந்த ஆதாரை எக்ரிமெண்டென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. கடன் கொடுத்தவரின் கணக்கு புஸ்தகத்தில் கடன் வாங்கியவர் கடனை

ஒப்புக்கொண்டு "தவணை வட்டியைவிட $1\frac{1}{2}$-அணு ஜாஸ்தி" என்று எழுதியிருந்தார். இது எக்ரிமெண்டு யாதால்தென்றும் அதற்கு தீர்வை 8-அணு வென்றும் ரெங்கூன் சீப்கோர்ட்டார் K. M. K. R. குமரப்பசெட்டிகேசில் 1908-ல் தீர்ப்புசெய்திருக்கிறார்கள். 1909-ல் ரெங்கூனில் யோ எங் ப்வாவுக்கும் R. M. A. R. R. M. கடைக்கும் நடந்த கேசில் தாகல் செய்திருந்த ஆதரவில் 6-புரோநோட்டுகள் மூலமாய் 36,000-ரூபாய் கடன்காரன் கொடுக்கவேண்டி யிருக்கிறதென்றும், அதில் ஒரு பாகத்தை கொடுப்பதாயும் பாக்கிக்கு டபம் கொடுத்து சில தவணைகளில் பெற்றுக்கொள்ளவேண்டுமென்றும், அந்தவிதம் செய்தால் சிலர் ஜாமீன்தார்களாய் கையெழுத்து செய்வார்களென்றும் இந்த ஏற்பாட்டின்படி கடன் கொடுத்தவன் சில தொகையை பெற்றுக்கொண்டதாயும் கண்டிருந்தது. இது பாண்டுமல்ல புரோநோட்டுமல்ல; ஆனால் எக்ரிமெண்டு என்று தீர்மானிக்கப்பட்டது.

(2). பஞ்சாயத்து தீர்மானம்.

(*a*) அந்த தீர்மானம் சம்மந்தப்படுகிற தொகை அல்லது சொத்தின் கிரயம் அந்த தீர்மானத்தில் கண்டிருக்கிறபடி 1000-ரூபாய்க்கு மேற்படாவிட்டால் அவ்வளவு தொகைக்கு பாண்டு பத்திரத்திற் குண்டான தீர்வை.

(*b*) மற்ற விஷயத்தில் 5 ரூபாய்.

(3) பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ் - பாண்ட், பாங்க்நோட் அல்லது கர்ரன்ஸிநோட் அல்லாதது—

(*a*) கேட்டவுடனே செலுத்தத்தக்கதாக இருக்கிற விஷயத்தில் 1 - அணு.

(*b*) கேட்டவுடனே அல்லாமல் மற்றபடி தேதிக்கு பின்பாவது தரிசனமான பின்பாவது ஒரு வருஷத்திற்கு மேற்படாமல் செலுத்த தக்கதாக இருக்கிற விஷயத்தில்,

| | ஒற்றையாக எழுதினால் | | | ஒரு ஜதைக்கு இரண்டு எழுதினால் அவைகளில் ஒவ்வொன்றுக்கு. | | | ஒரு ஜதைக்கு மூன்று எழுதினால் அவைகளில் ஒவ்வொன்றுக்கு. | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ. | ப | ரூ. | அ. | ப. | ரூ. | அ. | ப. |
| அந்தபில் அல்லது நோட்டின் தொகை 200-ரூபாய்க்கு மேற்படாவிட்டால்... | 0 | 2 | 0 | 0 | 1 | 0 | 0 | 1 | 0 |
| ரூ. 200-க்கு மேற்பட்டு ரூ. 400-வரை. | 0 | 4 | 0 | 0 | 2 | 0 | 0 | 2 | 0 |
| 400 ,, 600 ... | 0 | 6 | 0 | 0 | 3 | 0 | 0 | 2 | 0 |
| 600 ,, 1000 ... | 0 | 12 | 0 | 0 | 6 | 0 | 0 | 4 | 0 |
| 1000 ,, 1200 ... | 1 | 2 | 0 | 0 | 9 | 0 | 0 | 6 | 0 |
| 1200 ,, 1600 ... | 1 | 8 | 0 | 0 | 12 | 0 | 0 | 8 | 0 |
| 1600 ,, 2500 ... | 2 | 4 | 0 | 1 | 2 | 0 | 0 | 12 | 0 |
| 2500 ,, 5000 ... | 4 | 8 | 0 | 2 | 4 | 0 | 1 | 8 | 0 |
| 5000 ,, 7500 ... | 6 | 12 | 0 | 3 | 6 | 0 | 2 | 4 | 0 |
| 7500 ,, 10000 ... | 9 | 0 | 0 | 4 | 8 | 0 | 3 | 0 | 0 |
| 10000 ,, 15000 ... | 13 | 8 | 0 | 6 | 12 | 0 | 4 | 8 | 0 |
| 15000 ,, 20000 ... | 13 | 0 | 0 | 9 | 0 | 0 | 6 | 0 | 0 |
| 20000 ,, 25000 ... | 22 | 8 | 0 | 11 | 4 | 0 | 7 | 8 | 0 |
| 25000 ,, 30000 ... | 27 | 0 | 0 | 13 | 8 | 0 | 9 | 0 | 0 |
| 30000 ரூபாய்க்கு மேற்பட்டு பிரதி 10000 ரூபாய்க்காவது அதின் பாகத்துக்காவது ... | 9 | 0 | 0 | 4 | 8 | 0 | 3 | 0 | 0 |

(c) தேதிக்கு பின்பாவது தரிசனமான பின்பாவது ஒரு வருஷத்திற்கு மேற்பட்டுச் செலுத்தத்தக்கதாகயிருக்கிற விஷயத்தில்—அந்த தொகைக்கு பாண்டுக்கான தீர்வை.

(4) பாண்டு :— அடையப்பட்ட தொகை அல்லது கிரயம் ரூ. 10-க்கு மேற்படாத விஷயத்தில் ... 2 அணா.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ரூ. 10-க்கு மேற்பட்டு | ரூ. 50-வரையில் | | ... | 4 | ,, |
| 50 ,, | 100 | ,, | ... | 8 | ,, |
| 100 ,, | 200 | ,, | ... | 1 | ரூபாய் |
| 200 ,, | 300 | ,, | ... | $1\frac{1}{2}$ | ,, |
| 300 ,, | 400 | ,, | ... | 2 | ,, |
| 400 ,, | 500 | ,, | ... | $2\frac{1}{2}$ | ,, |

| | | | | |
|---|---|---|---|---|
| 500-க்கு மேற்பட்டு | ரூ. 600-வரையில் | ... | 3 | ,, |
| 600 ,, | 700 ,, | ... | $3\frac{1}{2}$ | ,, |
| 700 ,, | 800 ,, | ... | 4 | ,, |
| 800 ,, | 900 ,, | ... | $4\frac{1}{2}$ | ,, |
| 900 ,, | 1000 ,, | ... | 5 | ,, |

ரூ. 1000-க்கு மேற்பட்டு பிரதி 500-ரூபாய்க்காவது அதன் பாகத்திற்காவது $2\frac{1}{2}$ அணா.

(5) விற்பனை சர்டிபிக்கெட்டு:—

(a) கிரயத்தொகை 10-ரூபாய்க்கு அதிகப்படாவிட்டால் 2 அணா.

(b) ரூ. 10 - க்கு அதிகப்பட்டு ரூ. 25 - க்கு அதிகப்படாவிட்டால் 4 அணா.

(c) மற்ற யாதொரு விஷயத்தில் கிரயத்தொகைக்குமாத்திரம் சரியான ஐவேஜுக்காக ஒப்படைப் பத்திரத்துக்குண்டான தீர்வை.

(6) காம்போஸிஷன் பத்திரம் அதாவது கடன்காரன் கடன் கொடுத்தவர்களுக்கு ராஜியாக எழுதிக்கொடுத்த பத்திரம் 10 ரூபாய்.

(7) ஒப்படைப்பத்திரம்-இதில் விற்பனையால் ஒப்படை செய்வதும் அசையும் பொருள் அல்லது அசையாப்பொருள் ஒப்படை செய்வதும் அடங்கும்.

அப்படிப்பட்ட ஒப்படைப் பத்திரத்திற்காக அதில் கண்டிருக்கிறபடி ஐவேஜுத் தொகை அல்லது விலை 50-ரூபாய்க்கு மேற்படாவிட்டால் 8 அணா.

| | | | | |
|---|---|---|---|---|
| ரூ. 50-க்கு மேற்பட்டு | ரூ. 100-வரையில் | ... | 1 | ரூபா. |
| 100 ,, | 200 ,, | ... | 2 | ,, |
| 200 ,, | 300 ,, | ... | 3 | ,, |
| 300 ,, | 400 ,, | ... | 4 | ,, |
| 400 ,, | 500 ,, | ... | 5 | ,, |
| 500 ,, | 600 ,, | ... | 6 | ,, |
| 600 ,, | 700 ,, | ... | 7 | ,, |

700-க்கு மேற்பட்டு ரூ. 800 வரையில் ... 8 ரூபா.
800 ,, 900 ,, ... 9 ,,
900 ,, 1000 ,, ... 10 ,,

ரூ. 1000-க்கு மேற்பட்டு பிரதி 500-ரூபாய்க்காவது அதன் பாகத்துக்காவது 5 அணா.

(8) சொத்துப் பிரிவர்த்தனை ஆதரவு—அந்த ஆதரவில் கண்டிருக்கிறபடி மிகவும் அதிகப் பொறுமானமுள்ள சொத்தின் விலைக்கு சரியான ஐவேஜுக்காக ஒப்படைப் பத்திரத்துக்கு உண்டான தீர்வை.

(9) லெட்டர் ஆப் க்ரெடிட் நம்பிக்கை சீட்டு 1 அணா.

(10) மார்ட்கேஜ் அதாவது கொதுவைப் பத்திரம்.

(a) கொதுவை வைக்கிறவன் அந்தப் பத்திரத்தில் கண்டிருக்கிற சொத்தையாவது அதில் யாதொரு பாகத்தையாவது ஸ்வாதீனஞ் செய்தாலும் சுவாதீனம் செய்ய வுடன்பட்டாலும் அந்தப் பத்திரத்தினால் ஏற்பட்டதொகைக்குச் சரியான ஐவேஜுக்காக ஒப்படைப் பத்திரத்துக் குண்டான தீர்வை.

(b) முடித்துக் கொடுக்கும் காலத்தில் மேற்சொல்லியபடி ஸ்வாதீனம் செய்யாவிட்டாலும் செய்ய உடன்படாவிட்டாலும்—அந்தப் பத்திரத்தினால் ஏற்பட்ட தொகைக்காக பாண்டுக்குண்டான தீர்வை.

(11) யாதொரு சாகுபடியை கொதுவைக்காக ஆதரவு கொதுவைக்கும் காலத்தில் சாகுபடி உண்டாயிருந்தாலும் உண்டாயிரா விட்டாலும்,

(a) ஆதரவு சீட்டின் தேதியிலிருந்து மேற்படாமல் கடன் திரும்பக் கொடுக்கப்படுவதாக இருந்தால் 200-க்கு மேற்படாமல் கிடைத்த பிரதி தொகைக்கும் 1 அணா.

200-ரூபாய்க்கு மேற்பட்டு கிடைத்த பிரதி 200-ரூபாய்க்காவது அதின் பாகத்துக்காவது 1 அணா.

(b) ஆதரவுச்சீட்டின் தேதியிலிருந்து மூன்று மாதத்திற்கு மேற்பட்டு ஒரு வருஷத்திற்கு அதிகபப்டாமல் கடன் திரும்பக் கொடுக்கப்படுவதாகயிருந்தால் 100-ரூபாய்க்கு மேற்படாமல் கிடைத்த பிரதி தொகைக்கும 4 அணா.

100-ரூபாய்க்கு மேற்பட்டு கிடைத்த பிரதி 100-ரூபாய்க்காவது அதின் பாகத்திற்காவது 4 அணா.

(12) கூட்டுப்பங்கு ஆதரவு.

(1) (a) கூட்டுப்பங்கின் முதற்பணம் 500-ரூபாய்க்கு மேற்படாவிட்டால் 2½-ரூபாய்.

(b) வேறே யாதொரு விஷயத்தில் 10-ரூபாய்.

(2) கூட்டுப்பங்கு பிரிவினை அல்லது ரத்து ஆதரவு 5-ரூபாய்.

(13) பவர் ஆவ் அட்டர்ணி-அதிகாரப் பத்திரம்.

(a) ஒரே ஒரு காரியத்தைப் பற்றி ஒன்று அல்லது பல தஸ்தாவேஜுகளை ரிஜிஸ்திரேஷன் செய்வதற்காக மாத்திரம் எழுதப்பட்டால் அல்லது இப்படிப்பட்ட தஸ்தாவேஜுகளில் ஒன்றையாவது பலவற்றையாவது எழுத அனுமதி கொடுத்தால் 8 அணா.

(b) 1882-ம் வருஷத்து இராஜதானி ஸ்மால்காஸ் கோர்ட்டுகள் ஆக்டின்படி வியாஜ்ஜியங்களிலாவது, நடவடிக்கைகளிலாவது தேவையாகயிருந்தால் 8 அணா.

(c) (a) குறிப்பு உட்பிரிவில் கண்டிருக்கிற விஷயம் அல்லாத வேறு ஒரே காரியத்தில் விவகரிக்க ஒருவர் அல்லது பலருக்கு அதிகாரம் கொடுத்தால் 1 ரூ.

ஒரு தஸ்தாவேஜை ரிஜிஸ்டர் செய்து ரிஜிஸ்டரான பிறகு வேறொரு மனிதனிடம் கொடுக்கும்படி

கண்டு பவர் கொடுத்தால் பவரில் இரண்டு விஷயங்கள் கண்டிருக்கிறதென்றும் அதற்கு தீர்வை $1\frac{1}{2}$-ரூபா யென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

(*d*) ஒன்றல்லாமல் பல காரியங்களிலாவது பொதுவாகவாவது 5-பேருக்கு அதிகப்படாதவர்கள் கூட்டாகவும் தனித்தனியாகவும் விவகரிக்க அதிகாரம் கொடுத்தால் 5 ரூபாய்.

இதுதான் செட்டிப் பிள்ளைகள் கொடுக்கும் ஜனரல் பவர். ஆறுபேருக்கு தனித்தனியே எழுதிக் கொடுத்திருக்கும் கிரய சாஸனங்களை ரிஜிஸ்டர் செய்ய ஒருவருக்கு பவர் கொடுத்தால், 5-ரூபாய் பவர் போதுமென்று சென்னப்பட்டணத்தில் தீர்மானமாயிருக்கிறது. ஒரே பாத்தியதையை வகிக்கும் பலர்களும் ஒரே 5-ரூபாய் பவரில் ஒருவருக்கு அதிகாரம் கொடுக்கலாம்.

(*e*) ஒன்றல்லாமல் பல காரியங்களிலாவது பொதுவாகவாவது 5-பேருக்கு மேற்பட்டு 10-பேருக்கு அதிகப்படாதவர்கள் கூட்டாகவும் தனித்தனியாகவும் விவகரிக்க அதிகாரம் கொடுத்தால் 10-ரூபாய்.

(*f*) ஐவேஜுக்காகவும் யாதொரு அசையாப் பொருளை விற்பனை செய்ய ஏஜண்டுக்கு அதிகாரம் கொடுத்தால் அந்த தொகைக்கு ஒப்படைப் பத்திரத்துக்குண்டான தீர்வை.

(*g*) மற்ற யாதொரு விஷயத்தில்-அதிகாரம் கொடுக்கப்படுகிற நபர் ஒன்றுக்கு ஒரு ரூபாய்.

(14) பிராமிஸரி நோட் - சந்தற்பத்திற் கேற்றபடி தொகையை கேட்டவுனே செலுத்ததக்கதாகவாவது, கேட்டவுடனே யல்லாமல் மற்றபடி செலுத்தத் தக்கதாகவாவது இருக்கிற பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜிக்குள்ள தீர்வை.

கொஞ்சகாலத்திற்கு முன் 20-ரூபாய்க்கு மேற்படாத அண்டி மெண்டுகளுக்கு தீர்வை யில்லாமலிருந்தது. ஆனல் இப்போது எல்லா அண்டிமெண்டுகளுக்கும் தீர்வையுண்டு.

(15) பில் ஆப் எக்ஸ்சேஞ்ஜ் அல்லது ப்ராமிஸெரி நோட்டை அலட்சியம் செய்ததற்கு அத்தாட்சியாக கையெழுத்து பண்ணி, நோட்டெரி பப்ளிக் என்னும் அதிகாரியாவது சட்டப்படி அப்படிப்பட்டவராக பிரவர்த்திக்கிற வேறொருவராவது எழுதிக்கொடுக்கிற யாதொரு அத்தாட்சிப் பத்திரிகை.—ஒரு ரூபாய்.

(16) ரசீது - 20-ரூபாய்க்கு மேற்பட்ட யாதொரு தொகைக்காவது 20-ரூபாய்க்கு மேற்பட்டதொகை அல்லது மதிப்புள்ள வேறே சொத்துக்காவது ரசீது 1 அணு.

(17) விடுதலைப் பத்திரம்.

(*a*) தாவாத்தொகை அல்லது மதிப்பு 1000-ரூபாய்க்கு மேற்படாவிட்டால், விடுதலைபத்திரத்தில் கண்டிருக்கிற தொகை அல்லது மதிப்புக்காக பாண்டுக்குண்டான தீர்வை.

(*b*) வேறே யாதொரு விஷயத்தில் 5-ரூபாய்.

(18) சிகியூரட்டி அல்லது பொறுப்புப் பத்திரம் - யாதொரு கண்டிராக்ட்டு முதலான அலுவலை கிரமமாய் நிறைவேற்றவாவது பணத்துக்கோ அல்லது இதர சொத்துக்கோ வகை சொல்ல எழுதிக்கொடுக்கும் ஆதரவு.

(*a*) ஏற்பட்ட தொகை ரூபா 500க்கு மேற்படா விட்டால் ஏற்பட்ட தொகைக்கு பாண்டுக்குள்ள தீர்வை.

(*b*) வேறே யாதொரு விடியத்தில் 5-ரூபாய்.

(19) டிரான்ஸ்பர்.—

(*a*) பாண்டிலாவது, மார்ட்கேஜ் பத்திரத்திலாவது உள்ள சுதந்தரத்தை மாற்றினல்

(1) அப்படிப்பட்ட பாண்டு, மார்ட்கேஜ் பத்திரத்தின் தீர்வை 5 - ரூபாய்க்கு மேற்படாவிட்டால் — அப்படிபட்ட பாண்டு மார்ட்கேஜுக் குண்டான தீர்வை.

(2) வேறே யாதொரு விஷயத்தில் 5-ரூபாய்.

பில் ஆவ் எக்ஸ்சேஞ்ஜ், செக் அல்லது ப்ராமிஸெரி நோட்டை எண்டார்ஸ்மெண்டு மூலமாய் டிரான்ஸ்பர் செய்வதற்கு தீர்வையில்லை.

---

# 12-வது அத்தியாயம்.

## ரிஜிஸ்டிரேஷன் நடவடிக்கைகளைக் குறித்து.

1877-வது வருஷத்திய 3-வது ஆக்டுக்கு இந்தியன் ரிஜஸ்டிரேஷன் ஆக்டு என்று பெயர். அது லோயர் பர்மாவில்மட்டில் அமுலுக்கு வந்திருக்கிறது. அப்பர் பர்மாவுக்கு 1897-ம் வருஷத்திய 2-வது ரிகுலேஷன் பிரத்தியேகமாக ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இந்தியன் ரிஜிஸ்டிரேஷன் ஆக்டு 17-வது பிரிவில் இன்ன தஸ்தாவேஜுகள் முக்கியமாய் ரிஜிஸ்டர் செய்யவேண்டுமென்றும, இன்ன தஸ்தாவேஜுகள் இஷ்டமிருந்தால் மட்டில் ரிஜிஸ்டர் செய்துக்கொள்ளலாமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. யாதொரு உயில் அல்லாத தஸ்தாவேஜை சாதரணமாய் அது பிறந்த தேதியிலிருந்து நாலு மாதத்திற்குள் ரிஜிஸ்டர் செய்வதற்கு ஹாஜர் செய்யாததற்கு தகுந்த காரணம் இருந்ததாகத் தெரியவந்தால் அந்தப் பத்திரத்தின் கிரமமான ரிஜிஸ்டிரேஷன் கட்டணத்தைப் போல் பத்து பங்கு அபராதம் போட்டு ரிஜிஸ்டர் செய்வதற்காக ஏற்றுக்கொள்ளலாம். அந்த விதம் செய்ய முடியாதென்று உத்திரவு செய்தால் அது சம்மந்தமாய் எந்த வியாஜ்ஜியமும் ஸிவில் தரப்பில் கொண்டுவர முடியாது. 21. ப. 69. பொதுவாய் சொத்திருக்கும் இடத்திலுள்ள ரிஜிஸ்டர் ஆபீசில் தான் ரிஜிஸ்டர் செய்யவேண்டும். ஒரு கேசில சொத்தில்லாத இடத்திலுள்ள ரிஜிஸ்டர் ஆபீசில் ஒரு

மார்ட்கேஜ் பத்திரம் ரிஜிஸ்டர் செய்யப்பட்டு பத்திரம் பிறந்த 3 வருஷத்திற்குமேல் தாவா செய்ய சட்டப்படி மார்ட்கேஜ் ஆகாது என்றும், 3 வருஷமானுலும் பண டிக்ரி கொடுக்கலாமென்றும் தீர் மானித்தார்கள். 29. க. 654.

தஸ்தாவேஜுகள் எழுதிக்கொடுத்தவர்கள் சப் ரிஜிஸ்டரார் முன் ஆஜராகி எழுதிக்கொடுத்தது வாஸ்தவமென்று ஒத்துக் கொண்டால் உடனே ரிஜிஸ்டர் செய்யப்படும். அவர்கள் எழுதிக் கொடுக்கவில்லை என்று மறுதலித்தாலும் அல்லது அவர்களில் எவராவது மைனர் அல்லது புத்தி சுவாதீனம் இல்லாதவரென்று தெரியவந்தாலும் அல்லது எழுதிக்கொடுத்தவர் இறந்துபோய் அவர் வாரிசுகள் எழுதிக்கொடுக்கவில்லை என்று கட்சி சொன் ஞலும் ரிஜிஸ்டர் செய்யப்படமாட்டாது. ஒரு தகப்பன் தனக்காக வும், தன் மைனர் பிள்ளைக்காகவும் எழுதிக்கொடுத்த பத்திரத்தை ரிஜிஸ்டர் செய்ய தான் மட்டில் வந்து ஒத்துக்கொண்டாலும் போதும். 21. அ. 281. ஒருவர் பத்திரத்தில் இருக்கும் கையொப் பம் தன்னுடையதென்றும், ஆனல் தான் எழுதிக்கொடுக்கவில்லை யென்று சொன்னபோதிலும் ரிஜிஸ்டர் செய்யப்படும். 6. க. வீ. நோ. 329.

ஆபீசுக்கு வரும்படி பத்திரம் எழுதிக் கொடுத்தவனுக்கு ஸம் மன் அனுப்பப்பட்டு அதற்கு கீழ்படிந்து ஆஜராகாமற்போனல் எழுதிக்கொடுத்ததை மறுதலிப்பதற்கு சமமாகும். 25. க. 93. யாதொரு தஸ்தாவேஜை ரிஜிஸ்டர் செய்ய ரிஜிஸ்டரார் நிராகரித்து விட்டால் 30 நாளைக்குள் அப்பீல் செய்து கொள்ளலாம். அப்பீல் அதிகாரி ரிஜிஸ்டர் செய்யும்படி உத்திரவு செய்தால் அந்த தேதியி லிருந்து 30 நாளைக்குள் ரிஜிஸ்டர் செய்வதற்கு மறுபடியும் ஆஜர் செய்யவேண்டும். அப்பர் பர்மா சம்மந்தப்பட்டவரையில் ரிஜிஸ் டர் செய்ய நிராகரித்த உத்திரவை 60 நாளைக்குள் செய்யலாம். தன் னுடைய உத்திரவாயிருந்தாலும் தனக்கு முன் இருந்தவருடைய உத்திரவாயிருந்தாலும் ரிவியூ செய்யலாம். அதின் பேரில் ரிஜிஸ்டர் செய்யவேண்டு மென்று உத்திரவு ஏற்பட்டால் அந்தத் தேதியிலிரு ந்து 30 நாளைக்குள் ரிஜிஸ்டர் செய்வதற்காக பத்திரத்தை ஆஜர் செய்யவேண்டும். ரிஜிஸ்டர் செய்ய நிராகரிக்கும் உத்தியோகஸ்தர் அதின் காரணங்களைக் கண்டு ஒரு காப்பி டிப்டி கமிஷனருக்கு

அனுப்பவேண்டும். அவர் ரிஜிஸ்டர் செய்யவேண்டியது என்று அபிப்பிராயப்பட்டு கீழ்ப்பட்ட ரிஜிஸ்டர் அதிகாரியை ரிஸ்டர் செய்யும்படி உத்திரவு செய்வதின்பேரில் தான் முந்தி செய்த ஆர்டரை ரிவியூ செய்யலாம்.

மேலே சொன்ன அப்பீல் அதிகாரியான ரிஜிஸ்டரார் ரிஜிஸ்டர் செய்ய நிராகரித்தால் அந்த தேதியிலிருந்து 30 நாளைக்குள் ஆரம்பத்தில் எந்த சப் ரிஜிஸ்டரார் ஆபீசில் ரிஜிஸ்டர் செய்ய ஆஜர் செய்யப்பட்டதோ அந்த இடத்திலுள்ள கோர்ட்டில் அந்த தஸ்தாவேஜை ரிஜிஸ்டர் செய்து தரும்படிக்கும், அந்தவிதம் டிக்ரி பிறக்கும் தேதியிலிருந்து 30 நாளைக்குள் செய்யவேண்டுமென்று வியாஜ்ஜியம் தொடரலாம்.

பத்திரம் பிறந்த தேதியிலிருந்து 4. மாதத்திற்குள் இந்தவிதம் ரிஜிஸ்டர் செய்து தரும்படி முதல் எடுப்பிலேயே வியாஜ்ஜியம் கொண்டு வரலாமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 16. அ. 303. ரிஜிஸ்டரார் முன்னிலையில் பத்திரம் எழுதிக் கொடுக்கப்பட்ட விஷயத்தைப்பற்றி ருஜு கொடுக்காமற் போனாலும் இந்த விதம் ஷியில் வியாஜ்ஜியம் கொண்டு வரலாம். 13. க. 264.

அப்பர் பர்மாவிலும் இந்த விதம் வியாஜ்ஜியம் தொடரலாமென்று ஒரே தீர்ப்பு இருக்கிறது. 1902 அ. ப. ரு. 1.

இந்தப்படி வியாஜ்ஜியம் கொண்டு வருவதற்கு காலத்தைக் கணக்கிடுவதில் ரிஜிஸ்டர் செய்ய நிராகரித்த தினத்தை வாதிக்கு அனுகூலமாகக் கழிக்கவேண்டும். 9. ம. லா. ஜ. 107. அப்பீல் ஆர்டரை ரிவ்யூ செய்வதால் பிடித்த காலத்தைக் கழிக்கக்கூடாது. 30. க. 532. அப்படி நிராகரித்த தேதி 4 மாதத்திற்குள் ளிருந்தாலும் நிராகரித்த தேதியிலிருந்து கணக்கிட வேண்டுமே யொழிய 4 மாதம் கழிந்ததுமுதல் கணக்கிடக்கூடாது. 16 க. 189.

100-ரூபாய்க்கு மேற்பட்ட அசையாப் பொருள் மார்ட்கேஜ் பத்திரங்கள் ஒரு வருஷத்திற்கு மேற்பட்ட குத்தகைப் பத்திரங்கள் இவைகளைப்போல உள்ள பத்திரங்களை கட்டாயமாய் ரிஜிஸ்டர் செய்யவேண்டிய தஸ்தாவேஜுகளை ரிஜிஸ்டர் செய்யாமற் போனால் பத்திரத்தில் கண்ட அசையாப்பொருள் சம்பந்தமான எந்தவிஷயத்திற்கும் சாக்ஷியத்தில் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது. ஆனு

லும் வேறு விஷயங்களுக்காக ஏற்றுக்கொள்ளலாம். (உதாரணம்) ரிஜிஸ்டர் செய்யப்படாத மார்ட்கேஜ் கேசுகளில் ஆளைப்பொறுத்து டிக்ரி வாங்க ஏற்றுக்கொள்ளலாம். 29. க. 654. பாத்தியத்தை காலாவதி ஆகாமல் ஒப்புக்கொண்டதை ருஜுப்படுத்தவும் ஏற்றுக் கொள்ளலாம். 26. க. 334.

ஒரே சொத்தைப்பற்றி இரண்டு ரிஜிஸ்டர் பத்திரங்களுக்குள் போட்டிவந்தால் முந்தி எந்தப்பத்திரம் ரிஜிஸ்டர் ஆயிருக்கிறதோ அதற்குத்தான் முன் பாத்தியதை யுண்டு. 8. ப. 182. ஒரே தினத்தில் இரண்டு பத்திரங்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருந்தால் யார் சொத்தை கைவசப்படுத்தி அதில் பாத்தியதையை பூர்த்தி செய்துக் கொள்ளுகிறார்களோ அவருக்குதான் முன்பாத்தியதை யுண்டு 2. ப. 299. அவசியம் ரிஜிஸ்டர் செய்யவேண்டிய கடமை யில்லாததும், ரிஜிஸ்டர் செய்யப்படாததுமான பத்திரத்திற்கும் பிந்தி ரிஜிஸ்டர் ஆன பத்திரத்திற்கும் போட்டிவந்தால் ரிஜிஸ்டர் ஆன பத்திரம் எழுதி வாங்கியவன் முந்திய ரிஜிஸ்டர் ஆகாத பத்திரம் இருக்கிறதென்று தெரிந்தால் அவனுக்கு முன்பாத்தியதை கிடையாது. 25. ம. 1; 25. அ. 366; 27. ப. 408. அந்த விதம் அவருக்குத் தெரிந்ததென்றுகட்சி சொல்லுவார்கள். செவ்வையாய் ருஜு செய்யவேண்டும்.

---

# 13-வது அத்தியாயம்.

## கோர்ட்டு கட்டண வீதத்தைக் குறித்து.

இது விஷயம் 1870-ம் ஸூ்த்து 7 - வது ஆக்டிலிருந்து எடுத்தெழுதப்பட் டிருக்கிறது.

வியாஜ்ஜியந் தொடருகையில் தொகையின்மேல் வாங்கத்தக்க கட்டணவீத ஜாபிதா.

| வியாஜ்ஜியத்தொகை அல்லது வியாஜ்ஜிய விஷயத்தின் மதிப்பு அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்பட்டு. | அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்படாவிட்டால். | சரியான கட்டணம். | | | வியாஜ்ஜியத் தொகை அல்லது வியாஜ்ஜிய விஷயத்தின் மதிப்பு அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்பட்டு. | அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்படா விட்டால். | சரியான கட்டணம். | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரூ. | ரூ. | ரூ. | அ. | ப. | ரூ. | ரூ. | ரூ. | அ. | ப. |
| ... | 5 | 0 | 6 | 0 | 100 | 110 | 8 | 4 | 0 |
| 5 | 10 | 0 | 12 | 0 | 110 | 120 | 9 | 0 | 0 |
| 10 | 15 | 1 | 2 | 0 | 120 | 130 | 9 | 12 | 0 |
| 15 | 20 | 1 | 8 | 0 | 130 | 140 | 10 | 8 | 0 |
| 20 | 25 | 1 | 14 | 0 | 140 | 150 | 11 | 4 | 0 |
| 25 | 30 | 2 | 4 | 0 | 150 | 160 | 12 | 0 | 0 |
| 30 | 35 | 2 | 10 | 0 | 160 | 170 | 12 | 12 | 0 |
| 35 | 40 | 3 | 0 | 0 | 170 | 180 | 13 | 8 | 0 |
| 40 | 45 | 3 | 6 | 0 | 180 | 190 | 14 | 4 | 0 |
| 45 | 50 | 3 | 12 | 0 | 190 | 200 | 15 | 0 | 0 |
| 50 | 55 | 4 | 2 | 0 | 200 | 210 | 15 | 12 | 0 |
| 55 | 60 | 4 | 8 | 0 | 210 | 220 | 16 | 8 | 0 |
| 60 | 65 | 4 | 14 | 0 | 220 | 230 | 17 | 4 | 0 |
| 65 | 70 | 5 | 4 | 0 | 230 | 240 | 13 | 0 | 0 |
| 70 | 75 | 5 | 10 | 0 | 240 | 250 | 18 | 12 | 0 |
| 75 | 80 | 6 | 0 | 0 | 250 | 260 | 19 | 8 | 0 |
| 80 | 85 | 6 | 6 | 0 | 260 | 270 | 20 | 4 | 0 |
| 85 | 90 | 6 | 12 | 0 | 270 | 280 | 21 | 0 | 0 |
| 90 | 95 | 7 | 2 | 0 | 280 | 290 | 21 | 12 | 0 |
| 95 | 100 | 7 | 8 | 0 | 290 | 300 | 22 | 8 | 0 |

வியாஜ்ஜியந் தொடருகையில் தொகையின்மேல் வாங்கத்தக்க கட்டணவீத ஜாபிதா.

| வியாஜ்ஜியத்தொகை அல்லது வியாஜ்ஜிய விஷயத்தின் மதிப்பு அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்பட்டு. | அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்படாவிட்டால். | சரியான கட்டணம். | | | வியாஜ்ஜியத் தொகை அல்லது வியாஜ்ஜிய விஷயத்தின் மதிப்பு அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்பட்டு. | அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்படாவிட்டால். | சரியான கட்டணம். | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரூ. | ரூ. | ரூ. | அ. | ப. | ரூ. | ரூ. | ரூ. | அ. | ப. |
| 300 | 310 | 23 | 4 | 0 | 600 | 610 | 45 | 12 | 0 |
| 310 | 320 | 24 | 0 | 0 | 610 | 620 | 46 | 8 | 0 |
| 320 | 330 | 24 | 12 | 0 | 620 | 630 | 47 | 4 | 0 |
| 330 | 340 | 25 | 8 | 0 | 630 | 640 | 48 | 0 | 0 |
| 340 | 350 | 26 | 4 | 0 | 640 | 650 | 48 | 12 | 0 |
| 350 | 360 | 27 | 0 | 0 | 650 | 660 | 49 | 8 | 0 |
| 360 | 370 | 27 | 12 | 0 | 660 | 670 | 50 | 4 | 0 |
| 370 | 380 | 28 | 8 | 0 | 670 | 680 | 51 | 0 | 0 |
| 380 | 390 | 29 | 4 | 0 | 680 | 690 | 51 | 12 | 0 |
| 390 | 400 | 30 | 0 | 0 | 690 | 700 | 52 | 8 | 0 |
| 400 | 410 | 30 | 12 | 0 | 700 | 710 | 53 | 4 | 0 |
| 410 | 420 | 31 | 8 | 0 | 710 | 720 | 54 | 0 | 0 |
| 420 | 430 | 32 | 4 | 0 | 720 | 730 | 54 | 12 | 0 |
| 430 | 440 | 33 | 0 | 0 | 730 | 740 | 55 | 8 | 0 |
| 440 | 450 | 33 | 12 | 0 | 740 | 750 | 56 | 4 | 0 |
| 450 | 460 | 34 | 8 | 0 | 750 | 760 | 57 | 0 | 0 |
| 460 | 470 | 35 | 4 | 0 | 760 | 770 | 57 | 12 | 0 |
| 470 | 480 | 36 | 0 | 0 | 770 | 780 | 58 | 8 | 0 |
| 480 | 490 | 36 | 12 | 0 | 780 | 790 | 59 | 3 | 0 |
| 490 | 500 | 37 | 8 | 0 | 790 | 800 | 60 | 0 | 0 |
| 500 | 510 | 38 | 4 | 0 | 800 | 810 | 60 | 12 | 0 |
| 510 | 520 | 39 | 0 | 0 | 810 | 820 | 61 | 8 | 0 |
| 520 | 530 | 39 | 12 | 0 | 820 | 830 | 62 | 4 | 6 |
| 530 | 540 | 40 | 8 | 0 | 830 | 840 | 63 | 0 | 0 |
| 540 | 550 | 41 | 4 | 0 | 840 | 850 | 93 | 12 | 0 |
| 550 | 560 | 42 | 0 | 0 | 850 | 860 | 64 | 8 | 0 |
| 560 | 570 | 42 | 12 | 0 | 860 | 870 | 65 | 4 | 0 |
| 570 | 580 | 43 | 8 | 0 | 870 | 880 | 66 | 0 | 0 |
| 580 | 590 | 44 | 4 | 0 | 880 | 890 | 66 | 12 | 0 |
| 590 | 600 | 45 | 0 | 0 | 890 | 900 | 67 | 8 | 0 |

## வியாஜ்ஜியந் தொடருகையில் தொகையின்மேல் வாங்கத்தக்க கட்டணவீத ஜாபிதா.

| வியாஜ்ஜியத்தொகை அல்லது வியாஜ்ஜிய விஷயத்தின் மதிப்பு அடியிற் கண்டிருக்கிற தொகைக்கு மேற்பட்டு. | அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்படாவிட்டால். | சரியான கட்டணம். | | | வியாஜ்ஜியத் தொகை அல்லது வியாஜ்ஜிய விஷயத்தின் மதிப்பு அடியிற் கண்டிருக்கிற தொகைக்கு மேற்பட்டு. | அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்படாவிட்டால். | சரியான கட்டணம். | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரூ. | ரூ. | ரூ. | அ. | ப. | ரூ. | ரூ. | ரூ. | அ. | ப. |
| 900 | 910 | 68 | 4 | 0 | 3,000 | 3,100 | 180 | 0 | 6 |
| 910 | 920 | 69 | 0 | 0 | 3,100 | 3,200 | 185 | 0 | 0 |
| 920 | 930 | 69 | 12 | 0 | 3,200 | 3 300 | 190 | 0 | 0 |
| 930 | 940 | 70 | 8 | 0 | 3,300 | 3,400 | 195 | 0 | 0 |
| 940 | 950 | 71 | 4 | 0 | 3,400 | 3,500 | 200 | 0 | 0 |
| 950 | 960 | 72 | 0 | 0 | 3,500 | 3,600 | 205 | 0 | 0 |
| 960 | 970 | 72 | 12 | 0 | 3,600 | 3,700 | 210 | 0 | 0 |
| 970 | 980 | 73 | 8 | 0 | 3,700 | 3,800 | 215 | 0 | 0 |
| 980 | 990 | 74 | 4 | 0 | 3,800 | 3,900 | 220 | 0 | 0 |
| 990 | 1,000 | 75 | 0 | 0 | 3,900 | 4,000 | 225 | 0 | 0 |
| 1,000 | 1,100 | 80 | 0 | 0 | 4,000 | 4,100 | 230 | 0 | 0 |
| 1,100 | 1,200 | 85 | 0 | 0 | 4,100 | 4,200 | 235 | 0 | 0 |
| 1,200 | 1,300 | 90 | 0 | 0 | 4,200 | 4,300 | 240 | 0 | 0 |
| 1,300 | 1,400 | 95 | 0 | 0 | 4,300 | 4,400 | 245 | 0 | 0 |
| 1,400 | 1,500 | 100 | 0 | 0 | 4,400 | 4,500 | 250 | 0 | 0 |
| 1,500 | 1,600 | 105 | 0 | 0 | 4,500 | 4,600 | 255 | 0 | 0 |
| 1,600 | 1,700 | 110 | 0 | 0 | 4,600 | 4,700 | 260 | 0 | 0 |
| 1,700 | 1,800 | 115 | 0 | 0 | 4,700 | 4,800 | 265 | 0 | 0 |
| 1,800 | 1,900 | 120 | 0 | 0 | 4,800 | 4,900 | 270 | 0 | 0 |
| 1,900 | 2,000 | 125 | 0 | 0 | 4,900 | 5,000 | 275 | 0 | 0 |
| 2,000 | 2,100 | 130 | 0 | 0 | 5,000 | 5,250 | 285 | 0 | 0 |
| 2,100 | 2,200 | 135 | 0 | 0 | 5,250 | 5,500 | 295 | 0 | 0 |
| 2,200 | 2,300 | 140 | 0 | 0 | 5,500 | 5,750 | 305 | 0 | 0 |
| 2,300 | 2,400 | 145 | 0 | 0 | 5,750 | 6,000 | 315 | 0 | 0 |
| 2,400 | 2,500 | 150 | 0 | 0 | 6,000 | 6,250 | 325 | 0 | 0 |
| 2,500 | 2,600 | 155 | 0 | 0 | 6,250 | 6,500 | 335 | 0 | 0 |
| 2,600 | 2,700 | 160 | 0 | 0 | 6,500 | 6,750 | 345 | 0 | 0 |
| 2,700 | 2,800 | 165 | 0 | 0 | 6,750 | 7,000 | 355 | 0 | 0 |
| 2,800 | 2,900 | 170 | 0 | 0 | 7,000 | 7,250 | 365 | 0 | 0 |
| 2,900 | 3,000 | 175 | 0 | 0 | 7,250 | 7,500 | 375 | 0 | 0 |

வியாஜ்ஜியந் தொடருகையில் தொகையின்மேல் வாங்கத்தக்க கட்டணவீத ஜாபிதா.

| வியாஜ்ஜியத்தொகை அல்லது வியாஜ்ஜிய விஷயத்தின் மதிப்பு அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்பட்டு. | அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்படாவிட்டால். | சரியான கட்டணம். | | | வியாஜ்ஜியத் தொகை அல்லது வியாஜ்ஜிய விஷயத்தின் மதிப்பு அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்பட்டு. | அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்படாவிட்டால். | சரியான கட்டணம். | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரூ. | ரூ | ரூ. | அ. | ப. | ரூ. | ரூ. | ரூ. | அ. | ப. |
| 7,500 | 7,750 | 385 | 0 | 0 | 21,000 | 22,000 | 815 | 0 | 0 |
| 7,750 | 8,000 | 395 | 0 | 0 | 22,000 | 23,000 | 835 | 0 | 0 |
| 8,000 | 8,250 | 405 | 0 | 0 | 23,000 | 24,000 | 855 | 0 | 0 |
| 8,250 | 8,500 | 415 | 0 | 0 | 24,000 | 25,000 | 875 | 0 | 0 |
| 8,500 | 8,750 | 425 | 0 | 0 | 25,000 | 26,000 | 895 | 0 | 0 |
| 8,750 | 9,000 | 435 | 0 | 0 | 26,000 | 27,000 | 915 | 0 | 0 |
| 9,000 | 9,250 | 445 | 0 | 0 | 27,000 | 28,000 | 935 | 0 | 0 |
| 9,250 | 9,500 | 455 | 0 | 0 | 28,000 | 29,000 | 955 | 0 | 0 |
| 9,500 | 9,750 | 465 | 0 | 0 | 29,000 | 30,000 | 975 | 0 | 0 |
| 9,750 | 10,000 | 475 | 0 | 0 | 30,000 | 32,000 | 995 | 0 | 0 |
| 10,000 | 10,500 | 490 | 0 | 0 | 32,000 | 34,000 | 1,015 | 0 | 0 |
| 10,500 | 11,000 | 505 | 0 | 0 | 34,000 | 36,000 | 1,035 | 0 | 0 |
| 11,000 | 11,500 | 520 | 0 | 0 | 36,000 | 38,000 | 1,055 | 0 | 0 |
| 11,500 | 12,000 | 535 | 0 | 0 | 38,000 | 40,000 | 1,075 | 0 | 0 |
| 12,000 | 12,500 | 550 | 0 | 0 | 40,000 | 42,000 | 1,095 | 0 | 0 |
| 12,500 | 13,000 | 565 | 0 | 0 | 42,000 | 44,000 | 1,115 | 0 | 0 |
| 13,000 | 13,500 | 580 | 0 | 0 | 44,000 | 46,000 | 1,135 | 0 | 0 |
| 13,500 | 14,000 | 595 | 0 | 0 | 46,000 | 48,000 | 1,155 | 0 | 0 |
| 14,000 | 14,500 | 610 | 0 | 0 | 48,000 | 50,000 | 1,175 | 0 | 0 |
| 14,500 | 15,000 | 625 | 0 | 0 | 50,000 | 55,000 | 1,200 | 0 | 0 |
| 15,000 | 15,500 | 640 | 0 | 0 | 55,000 | 60,000 | 1,225 | 0 | 0 |
| 15,500 | 16,000 | 655 | 0 | 0 | 60,000 | 65,000 | 1,250 | 0 | 0 |
| 16,000 | 16,500 | 670 | 0 | 0 | 65,000 | 70,000 | 1,275 | 0 | 0 |
| 16,500 | 17,000 | 385 | 0 | 0 | 70,000 | 75,000 | ,300 | 0 | 9 |
| 17,000 | 17,500 | 700 | 0 | 0 | 75,000 | 80,000 | 1,325 | 0 | 0 |
| 17,500 | 18,000 | 715 | 0 | 0 | 80,000 | 85,000 | 1,350 | 0 | 0 |
| 18,000 | 18,500 | 730 | 0 | 0 | 85,000 | 90,000 | 1,375 | 0 | 0 |
| 18,500 | 19,000 | 745 | 0 | 0 | 90,000 | 95,000 | 1,400 | 0 | 0 |
| 19,000 | 19,500 | 760 | 0 | 0 | 95,000 | 1,00,000 | 1,425 | 0 | 0 |
| 19,500 | 20,000 | 775 | 0 | 0 | 1,00,00 | 1,05,000 | 1,450 | 0 | 0 |
| 20,000 | 21,000 | 795 | 0 | 0 | 1,05,000 | 1,10,000 | 1,475 | 0 | 0 |

## வியாஜ்ஜியந் தொடருகையில் தொகையின்மேல் வாங்கத்தக்க கட்டணவீத ஜாபிதா.

| வியாஜ்ஜியத்தொகை அல்லது வியாஜ்ஜிய விஷயத்தின் மதிப்பு அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்பட்டு. | அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்படாவிட்டால். | சரியான கட்டணம். | | | வியாஜ்ஜியத் தொகை அல்லது வியாஜ்ஜிய விஷயத்தின் மதிப்பு அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்பட்டு. | அடியில் கண்டிருக்கிற தொகைக்கு மேற்படாவிட்டால் | சரியான கட்டணம். | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரூ. | ரூ. | ரூ. | அ. | ப. | ரூ. | ரூ. | ரூ. | அ. | ப. |
| 1,10,000 | 1,15,000 | 1,500 | 0 | 0 | 2,05,000 | 2,70,000 | 2,275 | 0 | 0 |
| 1,15,000 | 1,20,000 | 1,525 | 0 | 0 | 2,70,000 | 2,75,000 | 2,300 | 0 | 0 |
| 1,20,000 | 1,25,000 | 1,550 | 0 | 0 | 2,75,000 | 2,80,000 | 2,325 | 0 | 0 |
| 1,25,000 | 1,30,000 | 1,575 | 0 | 0 | 2,80,000 | 2,85,000 | 2,350 | 0 | 0 |
| 1,30,000 | 1,35,000 | 1,600 | 0 | 0 | 2,85,000 | 2,90,000 | 2,375 | 0 | 0 |
| 1,35,000 | 1,40,000 | 1,625 | 0 | 0 | 2,90,000 | 2,95,000 | 2,400 | 0 | 0 |
| 1,40,000 | 1,45,000 | 1,650 | 0 | 0 | 2,95,000 | 3,00,000 | 2,425 | 0 | 0 |
| 1,45,000 | 1,50,000 | 1,675 | 0 | 0 | 3,00,000 | 3,05,000 | 2,450 | 0 | 0 |
| 1,50,000 | 1,55,000 | 1,700 | 0 | 0 | 3,05,000 | 3,10,000 | 2,475 | 0 | 0 |
| 1,55,000 | 1,60,000 | 1,725 | 0 | 0 | 3,10,000 | 3,15,000 | 2,500 | 0 | 0 |
| 1,60,000 | 1,65,000 | 1,750 | 0 | 0 | 3,15,000 | 3,20,000 | 2,525 | 0 | 0 |
| 1,65,000 | 1,70,000 | 1,775 | 0 | 0 | 3,20,000 | 3,25,000 | 2,550 | 0 | 0 |
| 1,70,000 | 1,75,000 | 1,800 | 0 | 0 | 3,25,000 | 3,30,000 | 2,575 | 0 | 0 |
| 1,75,000 | 1,80,000 | 1,825 | 0 | 0 | 3,30,000 | 3,35,000 | 2,600 | 0 | 0 |
| 1,80,000 | 1,85,000 | 1,850 | 0 | 0 | 3,35,000 | 3,40,000 | 2,625 | 0 | 0 |
| 1,85,000 | 1,90,000 | 1,875 | 0 | 0 | 3,40,000 | 3,45,000 | 2,650 | 0 | 0 |
| 1,90,000 | 1,95,000 | 1,100 | 0 | 0 | 3,45,000 | 3,50,000 | 2,675 | 0 | 0 |
| 1,95,000 | 2,00,000 | 1,925 | 0 | 0 | 3,50,000 | 3,55,000 | 2,700 | 0 | 0 |
| 2,00,000 | 2,05,000 | 1,950 | 0 | 0 | 3,55,000 | 3,60,000 | 2,725 | 0 | 0 |
| 2,05,000 | 2,10,000 | 1,975 | 0 | 0 | 3,60,000 | 3,65,000 | 2,750 | 0 | 0 |
| 2,10,000 | 2,15,000 | 2,000 | 0 | 0 | 3,65,000 | 3,70,000 | 2,775 | 0 | 0 |
| 2,15,000 | 2,20,000 | 2,025 | 0 | 0 | 3,70,000 | 3,75,000 | 2,800 | 0 | 0 |
| 2,20,000 | 2,25,000 | 2,050 | 0 | 0 | 3,75,000 | 3,80,000 | 2,825 | 0 | 0 |
| 2,25,000 | 2,30,000 | 2,075 | 0 | 0 | 3,80,000 | 3,85,000 | 2,850 | 0 | 0 |
| 2,30,000 | 2,35,000 | 2,100 | 0 | 0 | 3,85,000 | 3,90,000 | 2,875 | 0 | 0 |
| 2,35,000 | 2,40,000 | 2,125 | 0 | 0 | 3,90,000 | 3,95,000 | 2,900 | 0 | 0 |
| 2,40,000 | 2,45,000 | 2,150 | 0 | 0 | 3,95,000 | 4,00,000 | 2,925 | 0 | 0 |
| 2,45,000 | 2,50,000 | 2,175 | 0 | 0 | 4,00,000 | 4,05,000 | 2,950 | 0 | 0 |
| 2,50,000 | 2,55,000 | 2,200 | 0 | 0 | 4,05,000 | 4,10,000 | 2,975 | 0 | 0 |
| 2 55,000 | 2,60,000 | 2,225 | 0 | 0 | 4,10,000 | ... | 3,000 | 0 | 0 |
| 2,60,000 | 2,65,000 | 2,250 | 0 | 0 | ... | ... | ... | | |

# 14-வது அத்தியாயம்.

## இந்தியன் லிமிடேஷன் ஆக்டைக் குறித்து.

இந்த அத்தியாயத்தில் வியாஜ்ஜியங்களையும் அப்பீல்களையும் கோர்ட்டுக்குச் செய்து கொள்ளப்படும் சில மனுக்களையும் குறித்த கால நிர்ணயச்சட்டம் அதாவது லீகந்தா ஊபடேயின் முக்கிய விஷயங்களை எடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த ஆக்ட்டுக்கு 1908-ம் வருஷத்திய 9-வது ஆக்ட்டு என்று பெயர். பிரதி வியாஜ்ஜியமும் அப்பீலும் மனுவும் அதற்காக ஏற்பட்டிருக்கும் கெடுவு காலத்துக்குள் செய்துகொள்ள வேண்டியது. அப்படி செய்து கொள்ளாமற் போனால் பிரதிவாதி தரப்பில் காலாவதி தோஷத்தை எடுத்துகாட்டாமற் போனாலும் அது கோர்ட்டாரால் தள்ளிவிடப் படும். சாதாரணமான விஷயங்களில் தகுந்த உத்தியோகஸ்தரிடத்தில் ப்ளெய்ன்ட் (ஸ்வேசே) கொடுக்கப்படும் போதும், பாபர் விஷயத்தில் பாபராக வியாஜ்ஜியம் தொடர அனுமதி கொடுக்கும்படி அவர் மனுசெய்யும்போதும் வியாஜ்ஜியம் தொடரப்படுகிறதாக எண்ணப்படும். வியாஜ்ஜியத்திற்கு காலாவதி தோஷமில்லை யென்று ருஜு செய்யவேண்டிய கடமை வாதியைச் சேர்ந்தது. குறைவான ஸ்டாம்பு காகிதத்தின் பேரில் பிருது எழுதப்பட்டிருந்தாலும் கெடுவு காலத்திற்குள் கோர்ட்டில் கொடுத்தால் போதுமென்று ரெங்கூன் சீப் கோர்ட்டில் தீர்மானமாகி யிருக்கிறது. லோ. ப. ரூ. 1893-1900-33. பாக்கி ஸ்டாம்பை ஒட்டுவதற்காக கோர்ட்டார் கெடுவு ஏற்படுத்தினால், அந்த கெடுவுக்குள் பாக்கி ஸ்டாம்பை கோர்ட்டில் கொடுத்துவிட்டால் அப்படி கோர்ட்டில் கொடுக்கும் காலமானது வியாஜ்ஜியத்திற்கு சட்டப்படி நிர்ணயம் செய்யப்பட்டிருக்கும் கால கெடுவுக்கு பிந்திப் போயிருந்தாலும் காலாவதிதோஷமில்லை யென்று பம்பாயிலும் சென்னையிலும் கல்கத்தாவிலும், அலகாபாத்திலும், பஞ்சாபிலும் தீர்மானமாயிருக்கிறது. 31. க. 75 ; 27. ப. 330 ; 22. ம. 494. அந்தப்படி பாக்கி ஸ்டாம்பை கோர்ட்டார் கொடுத்த டயத்துக்குள் கொடாவிட்டால் தாவா காலாவதி

தோஷத்திற்காக தள்ளப்படும். 27. க. 376. அப்பீலாயிருக்கும் பட்சத்தில் காலாவதி கெடுவுக்குள் கோர்ட்டார் பாக்கி ஸ்டாம்பை கொடுக்கும்படி உத்திரவு செய்யவேண்டும். 24. அ. 218. காலாவதி தோஷ சம்மந்தமான ஆக்ஷேபணையை இரண்டாவது அப்பீலிலும் எடுக்கலாமென்று கல்கத்தா ஹைகோர்ட்டார் அபிப்பிராயப்படுகிறார்கள். 34. க. 941. காலாவதி தோஷத்தில் தாவா முழுமையும் தள்ளக்கூடிய விஷயங்களிருந்தால் மட்டில் தான் அந்த ஆக்ஷேபணையை கவனிக்கப்படும். 28. ம. 67. அப்பீல் மனுவில் ஆக்ஷேபணை செய்யாமலிருந்தால் கோர்ட்டார் அனுமதி இல்லாமல் அதைப்பற்றி பேசக்கூடாது. 2. லோ. ப. ரூ. 237. முதலெடுப்பிலேயே அந்த ஆக்ஷேபணையை எடுத்துச் சொல்லாமலிருந்தால், பிரதிவாதிக்கு சிலவு தொகை கொடுக்கும்படி டிக்கிரி கிடைக்காது. 6. ம. 176.

பாபராக வியாஜ்ஜியம் தொடர செய்யும் மனுவில் யாதொரு உத்திரவும் பிறக்காமலிருந்து பிரதிவாதி, வாதி பாபரல்லவென்று ஆக்ஷேபணை செய்த பிறகு தன் இஷ்டப்படி பிறுதுக்குச் சரியான ஸ்டாம்பு காலாவதி கெடுவுக்கு பிறகு கொடுத்தாலும் பாதகமில்லை. 28. க. 427. ஆனால் பாபர்மனு தள்ளுபடியான பிறகு முழு ஸ்டாம்பையும் காலாவதி கெடுவுக்குப் பிறகு கொடுத்தாலும் தாவா செல்லாது. 24. க. 889; 20. ப. 508. அந்த விதம்தான் பாபர் அப்பீல்களும். 13. அ. 305; 26. க. 925. யாதொரு வியாஜ்ஜியத்திற்காவது அப்பீலுக்காவது மனுவுக்காவது ஏற்பட்டிருக்கும் கெடுவுகாலம் கோர்ட்டு மூடியிருக்கும் தினத்தில் முடியுமாகில் கோர்ட்டு மறுபடி திறக்கும் தினத்திலே அந்த வியாஜ்ஜியம் தொடரலாம், அப்பீல் செய்யலாம், மனு செய்துகொள்ளலாம். இது கால நிர்ணயச் சட்டத்தின் 4—வது பிரிவு. இந்தப் பிரிவில் சொல்லியிருக்கும் விதி எல்லா வியாஜ்ஜியங்களுக்கும் ஏற்காது. கால நிர்ணயச் சட்டத்தில் சொல்லியிருக்கும் கெடுவுகாலத்திற்கு மட்டில் ஏற்கும். 5. ப. 688.

மேலே கண்ட 4-வது பிரிவு சி. பு. கோ. ஆர்டர் 41-ரூல் 22-ல் கண்ட குறுக்கு ஆக்ஷேபணை யாதாஸ்துக்காக ஏற்பட்ட கெடுவு காலத்தை ஜாஸ்தி செய்ய முடியாது. 9. க. 631. யாதொரு அப்பீலில் அப்பீல் பிரதிவாதி தனக்கு கீழ்கோர்ட்டிலே விரோதமாய் தீர்மானிக்கப்பட்ட ஆதாரங்களிலெதன்மேலாவது (அந்த டிக்ரிக்கு

அனுகூலமாகத்தான் சொல்லிக்கொள்வதைச் சொல்லிக்கொள்வ தோடு) குறுக்கு ஆக்ஷேபணை சொல்லிக் கொள்ளலாம். ஆனால் அப்பீல் தேதியை கண்டு நோட்டீஸ் தனக்கு கிடைத்த தேதியிலி ருந்து 1-மாதத்துக்குள் ஆக்ஷேபணையை தாக்கல் செய்யவேண்டும். இதற்கு கிராஸ் அப்பீல் என்று பெயர். கோர்ட்டு லீவு நாட்களில் பிருது முதலானவைகளை சில தினங்களில் வாங்க கோர்ட்டார் தகுந்த ஏற்பாடு செய்திருந்தால் காலாவதி தோஷத்தை மேலே கண்ட 4-வது பிரிவு தடுக்காது. 5. ம. 189.

இதற்கு விரோதமாக 20. ம. 469-வது பக்கத்தில் சென்னை ஐகோர்ட்டார் தீர்ப்பு செய்திருக்கிறார்கள். கிரஸ்தவர்களுக்காக டிசம்பர் மாதத்தில் ஏற்படும் கிரஸ்மஸ் லீவு நாட்கள் விடுமுறை நாட்களாக பாவிக்கப்படும். 27. ப. 31. சில விஷயங்களில் கெடுவு காலத்திற்கு பிறகும் யாதொரு அப்பீலையோ அல்லது ரிவியூ மனு வையோ ஏற்றுக்கொள்ளலாம். அப்படி ஏற்றுக்கொள்ளுவதற்கு முன் கெடுவுகாலத்திற்குள் அப்பீல் செய்யாமைக்காக வாகிலும் மனு செய்துக்கொள்ளாமைக்காக வாகிலும் தகுந்த காரணம் இருந் ததென்று கோர்ட்டாருக்கு திருப்திகரமாய் தெரிவிக்கவேண்டும். இந்த விதம் அசல் வியாஜ்ஜியங்களை கெடுவு காலத்திற்கு பிறகு ஏற் றுக்கொள்ள அதிகாரமில்லை. 12. அ. 461. தகுந்த காரணமெது என்பது அந்தந்த கேசின் ரீதிக்கு தக்கபடி நிர்ணயிக்கப்படும். காரணம் காட்டுபவர் அசட்டை செய்யாமல் சுறுசுறுப்பா யிருந்ததா யும் நல்ல எண்ணத்துட னிருந்ததாகவும் தெரியவந்தால் நியாயத் தைவேண்டி தகுந்த காரணம் என்னும் பதத்தை கோர்ட்டார்கள் விசாலமாக அர்த்தம் செய்வார்கள். 34. க. 216. யாதொரு அப் பீலை கால கெடுவுக்கு பிறகு கொடுக்கும்போது ஒரு தலை சார்பாக (டபேத்தா) கோர்ட்டார் ஏற்றுக்கொள்வதால் அப்பீல் பிரதிவாதி அப்படி ஏற்றுக்கொண்டது பிசகென்று ஆக்ஷேபிக்கலாம். 34. க. 216. கோர்ட்டார் தகுந்த காரணம் இருப்பதாய் செவ்வையாக விசா ரணை செய்து கண்டுபிடித்து ஏற்றுக்கொள்ளும் பட்சத்தில் ஐகோர் ட்டார் முதல் அப்பீலில் கோர்ட்டார் ஏற்றுக்கொண்டது பிச கென்று சொல்லும் கட்சியை அங்கீகாரம் செய்யமாட்டார்கள். 31. ப. 33. ஏற்றுக்கொண்டது சட்ட விரோதம் என்று ஏற்பட் டால்தான் ஐகோர்ட்டார் அது விஷயத்தில் தலையிடுவார்கள். 26.

அ. 327. நல்ல எண்ணத்தாலே பிசகான கோர்ட்டில் அப்பீல் தாக்கல் செய்தால் 21. ப. 552; 23. க. 526; டிக்கிரியை திருத்தவேண்டியிருந்தாலும் 32. க. 908; நல்ல எண்ணத்துடன் ரிவியூ (புனர் ஆலோசனை செய்ய) மனு கொடுத்திருந்தால் (லோ. ப. ரு. 1893-1900, 515.) இவைகள் எல்லாம் தகுந்த காரணங்களென்றும் லாயரின் அஜாக்கிரதை அல்லது லாயர் கிராணியின் அஜாக்கிரதை அ. ப. ரு. 1892-96-450, அப்பீல் செய்ய போதுமான பணம் அகப்படாதது 13. க. 78; அப்பீல் தாக்கல் செய்ய வேறு அதிர்ஷ்டமான தினமில்லை. 25. ம. 166; சட்டம் தெரியாது என்று சொல்வது 12. ப. 320; இவைகள் எல்லாம் தகுந்த காரணங்கள் அல்லவென்றும் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது.

ஆனால் அப்பீல் கெடுவு காலம் தவறிப்போன பிறகு அப்பீலுக்கு உயிர் உண்டாக்குவதற்காக ரிவியூ மனு கொடுத்தால் தகுந்த காரணமாகாதென்று ரெங்கூனில் தீர்மானித்திருக்கிறார்கள். (1893 1900 லோ. ப. ரு. 515) கெடுவு காலத்தைக் கணக்கிடும் விதம் 12-வது பிரிவில் சொல்லியிருக்கிறது. யாதொரு வியாஜ்ஜியம் அப்பீல் அல்லது மனுவுக்காக ஏற்பட்டிருக்கும் கெடுவு காலத்தை கணக்கிடுகையில் என்று முதல் அந்த கெடுவு காலத்தைக் கணக்கிட வேண்டுமோ அந்த நாளைக் கழித்துக்கொள்ளலாம். அப்பீலுக்கோ மனுவுக்கோ ஆதாரமுள்ள தீர்ப்பு டிக்கிரி அல்லது உத்திரவுக்கு நகல் பெற்றுக்கொள்ளவேண்டியிருந்த காலத்தையும் கழித்துக் கொள்ளலாம். நகலுக்காக ஸ்டாம்பு தாள் கொடுக்கும் தேதியையும் நகலைத் திருப்பிக் கொடுக்கும் தேதியையும் கழித்துக் கொள்ளலாம். டிக்கிரியில் போட்டிருக்கும் தேதியிலிருந்து கணக்கிடவேண்டுமே யொழிய அதில் ஜட்ஜ் கையெழுத்து செய்யும் தேதியிலிருந்து கணக்கிடக்கூடாது. 1. க. வீ. நோ. 93. ஆனால் பம்பாய் கோர்ட்டார் டிக்ரியில் கையொப்பம் செய்யும் தேதியிலிருந்து தான் கணக்கிடவேண்டுமென்று தீர்மானம் செய்திருக்கிறார்கள். 23. ப 442. அந்த விதம் கையெழுத்து செய்யுமுன்னமே காபிக்கு மனுக்கொடுத்தால் தான் கையெழுத்து செய்வதால் ஏற்படும் தாமத காலத்தை கழித்துக் கொடுக்கப்படும். 12. அ. 461. இது விஷயங்களைச் செவ்வையாகத் தெரிந்து கொள்ளும்படி ரெங்கூனில்

3-ஜட்ஜ்களடங்கிய புல் பெஞ்சால் செய்த தீர்மானத்தை உதாரணமாய் எடுத்துச் சொல்ல அவசியம் ஏற்படுகிறது. அந்த கேசில் டிக்கிரியில் 30. 4. 1904 என்று தேதி போடப்பட்டிருந்தது. ஆனால் 1904-ம் ளு மேமீ 18உ தான் ஜட்ஜ் கையொப்பம் செய்தார். காபிக்கு 1904ளு மேமீ 6உ மனு கொடுக்கப்பட்டது. அதே வருஷம் மேமீ 20உ காபியை திரும்பவும் கொடுக்கப்பட்டது. ஆகஸ்ட்டுமீ 18உ யன்று அப்பீல் தாக்கல் செய்யப்பட்டது. இதில் தீர்மானிக்கவேண்டி யிருந்த விஷயம் என்னவென்றால் ஏப்ரல்மீ 30உக்கும் மேமீ 6உ க்கும் மத்தியிலுள்ள காலத்தை கழித்தால் மட்டில் அப்பீல் சரியான காலத்தில் கொடுபட்டதாக ஏற்படுமானதால், அந்தவிதம் கழித்து கொடுக்கும்படி கேட்ட அப்பீல் வாதி சொன்ன கட்சி சரியாவென்னும் விஷயமே. மற்ற ஐகோர்ட்டு தீர்ப்புகளை செவ்வையாக யோசனை செய்து கல்கத்தா தீர்ப்புகளை அங்கீகாரம் செய்யாமல் அலகாபாத்து பம்பாய் தீர்ப்புகளை அனுசரித்து அப்பீலை காலாவதியாய் விட்டதாக தள்ளிவிட்டார்கள். அந்த கேசில் அடியில் கண்டிருக்கும் விதமாய் அபிப்பிராயம் கொடுக்கிறார்கள். யாதொரு டிக்ரி கையெழுத்து செய்யப்பட்டிருந்தாலும் செய்யப்படாம லிருந்தாலும் கட்சிக்காரனுக்கு அதற்கு காபி கொடுக்கும்படி மனு உடனே போட பாத்தியமுண்டு. சட்டப்படி ஜட்ஜ்மெண்டின் தேதியே டிக்கிரிக்கும் போடவேணுமென்று சட்டமிருப்பதால் ஜட்ஜ்மெண்டு சொன்னவுடனே டிக்கிரியும் ஏற்படுமென்று நினைத்து உடனே அதற்கும் காபி கொடுக்க மனு போடவேணும். காபி மனுகொடுக்கும் காலத்தில் டிக்கிரி தயாராயில்லாவிட்டால் அதினால் ஏற்படும் கால தாமசத்திற்கு மனுதாரன் உத்திரவாதியாகமாட்டான். 3. லோ. ப. ரூ. 62. ஜட்ஜ்மெண்டுக்கும் டிக்கிரிக்கும் ஒரே தேதியில் காபிக்காக மனு கொடுத்தால் எதை பிந்தி கொடுக்கிறார்களோ அதற்காக ஏற்பட்ட காலத்தை கெடுவு காலம் நிர்ணயம் செய்வதில் கழித்து கொடுக்கப்படும். 15. அ. வீ. நோ. 101. காபி மனு கொடுக்கப்பட்ட ஒரே தேதியில் ஜட்ஜ்மெண்டு டிக்கிரிகளை திருப்பிக்கொடுத்தால் அவைகளை வாங்க ஏற்பட்ட காலத்தை இரட்டித்து கணக்கு செய்யப்படாது. 14. ப. லா. ரீ. 8. அப்பீலுக்கு நிர்ணயப்பட்டிருக்கும் கெடுவுகாலம் விடுமுறை நாளில் முடிந்துவிட்டால் கோர்ட்டு திறக்கும் நாளையில்

காபி மனுகொடுத்து நகல்பெற்றுக் கொள்ளவேண்டியிருந்த காலத்தை கழித்துக்கொள்ளலா மென்று பம்பாயில் தீர்மானம் செய்திருக்கிறார்கள். 25. ப. 584. கிரஸ்மஸ் விடுமுறை நாட்கள் ஆரம்பிக்கு முதல் நாள் தீர்மானம் சொல்லப்பட்டு, கோர்ட்டு திறந்த தினம் காபி மனு கொடுத்தகேசில் விடுமுறைநாட்களை கழித்துக்கொடுக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. 27. ம. 21. யாதொரு வியாஜ்ஜியத்திற்கோ மனுவுக்கோ நிர்ணயிக்கப்பட்ட கெடுவு காலத்தைக் கணக்கிடுகையில் யாதொரு அசல் கோர்ட்டிலாவனும் அப்பீல் கோர்ட்டிலாவனும் பிரதிவாதியின் பேரில் வேறொரு சிவில் விவகாரத்தைத் தகுந்த ஜாக்கிரதையோடு வாதி நடத்திக்கொண்டிருந்த காலத்தை கழித்துக் கொடுக்கப்படும். அப்படி செய்வதற்கு அந்த விவகாரம் அதே வியாஜ்ஜிய மூலத்தை ஆதாரமாகக் கொண்டும் அதிகார வரம்பு குறைவினாலாகிலும், அத்தன்மையான வேறு காரணத்தினாலாகிலும் ஏற்றுக்கொள்ள கூடாமையாயிருக்கிற கோர்ட்டில் நல்ல எண்ணத்தோடு நடத்தப்பட்டிருக்கவேண்டும். முந்திய வியாஜ்ஜியமாவது,மனுவாவது நடந்துகொண்டிருந்த காலத்தை கழித்துக்கொடுப்பதில் அந்த வியாஜ்ஜியம் தொடரப்பட்ட அல்லது மனு செய்யப்பட்ட நாளும் அதில் நடவடிக்கைகள் முடிந்த நாளுமாகிய 2-நாளையும் கணக்காக்கி கொள்ளவேண்டும். யாதொரு சொத்து அல்லது சுதந்தரத்தைக் குறித்த வியாஜ்ஜியத்திற்காவது, மனுவுக்காவது நிர்ணயிக்கப்பட்ட காலம் கழிவதற்கு முன்னமே அப்படிப்பட்ட சொத்து அல்லது சுதந்தரத்தைக் குறித்து பிரதிவாதியோ அல்லது யார் மூலமாய் அவர் ஹக்கு அல்லது பொறுப்பு அடைகிறாரோ அவராவது ஒப்புக்கொண்டு எழுதிக் கையெழுத்து செய்யப்பட்டிருக்குமாகில் அப்படி ஒப்புக்கொண்டு கையெழுத்து செய்யப்பட்டகால முதற்கொண்டு புதிதாக கெடுவுகாலம் கணக்கிடப்படும். தான் நேராகவாகிலும் அல்லது தன்னுடைய ஏஜெண்டினாலாகிலும் கையெழுத்து செய்யப்பட்டிருந்தால் போதும். ஸாயிமு அதாவது டிக்கிரி நிறைவேற்றும் நடவடிக்கைகளிலும் ஒப்புக்கொள்ளுவதுண்டு. ஏலத்தை நிறுத்தி வைப்பதற்காக கடன்காரன் கொடுக்கும் மனுவில் ஒப்புக்கொள்ளுவதால் புதிதான கெடுவுகாலம் ஏற்படாது. 28. ம. 40. பம்பாயில் இதற்கு விரோதமாய் தீர்மானித்திருக்கிறார்கள். 10. ப. 108. பிரதிவாதி தான் கொடுக்கவேண்டி

யிருந்தது என்று ஒப்புக்கொண்டால் போறுது. 20. ம. 239. தாவா கடன் கொடுக்கவேண்டியிருக்கிறதென்று எழுதியிருக்கவேண்டும். 30. க. 699. கணக்குகள் பார்க்கவேண்டி யிருக்கிறதென்றும் அப்படி பார்ப்பதின்பேரில் ஏற்படும் தொகையை தான் கொடுப்பதாக ஒப்புக்கொண்டாலும் போதும். 10. ம. 259.

மத்திய மாகாணத்திலிருந்து சீமை அப்பீலுக்குபோன ஒரு கேசில் "சென்ற 5-வருஷங்களாக இறந்த மனிதனுடன் தனக்கு பரஸ்பரமான கொடுக்கல் வாங்கல் நடந்து வந்தது." என்று கண்டெழுதிய ஆதரவால் புதுகெடுவுகாலம் ஏற்படும் என்று வாதி கட்சி சொல்ல பிரிவு கவுன்சில் சபையார் அடியில் கண்டவிதம் அபிப்பிராயப்பட்டார்கள். அந்தவிதம் எழுதப்பட்ட தினம் ஒருவருக்கொருவர் கொடுக்கல் வாங்கல் இருந்ததென்ற செவ்வையான ஒப்புக்கொள்ளுதல் ஏற்படுகிறது. சட்டப்படி ஒருவனை ஒருவர் கணக்கு கேட்க பாத்திய முண்டென்றும் வெளியாகிறது. அதின் கருத்தென்னவென்றால் யார் யாருக்கு கொடுக்கவேண்டியதாக ஏற்படுகிறதோ அவர் கொடுக்க வேண்டிய கடமை சட்டப்படி உண்டாவதால் மேலே கண்ட மதருஸ் தீர்ப்பை அனுசரித்து வாதி கட்சியை ஏற்றுக்கொண்டார்கள். 33. க. 1047. இதை அனுசரித்து சென்னபட்டணத்தில் சமீபத்தில் ஒரு தீர்மானம் பிறந்தது. அதில் பூந்திதரவேண்டியதுண்டு என்று மட்டில் கண்டெழுதியும் ஆனால் அந்தக் கடன் தீர்ந்துபோய் விட்டதென்று காணுமலும் எழுதப்பட்டிருந்தது. இந்த கேசில் அசலுக்கும் வட்டிக்கும் ஒரு தேதியில் கொடுக்கப்பட்டு வெகு மாதங்களுக்கு பிறகு அது விஷயத்தை செல்லு எழுதப்பட்டிருந்தது. அந்தவிதம் செல்லெழுதிய தேதியில் பாக்கியுண்டென்று ஏற்படக்கூடிய ஒப்புக்கொள்ளுதல் சட்டப்படி யுண்டென்று தீர்மானிக்கப்பட்டது. 5. இ. கே. 522. மோசம் முதலான வழிகளால் ஒப்புக்கொள்ளும்படிசெய்தால் செல்லாது. வாக்குமூலத்திலும் ஒப்புக்கொள்ளுவதுண்டு. 20. ம. 239. பிரதிவாதி விவரப்பத்திரிகை அதாவது ரூ செல்வாவிலும் ஒப்புக்கொள்ளலாம். ஒரு கேசில் பத்திரம் பிறந்து 3-வருஷத்திற்கு பிறகு ஒப்புக்கொண்டு எழுதப்பட்டது. அப்போது கோர்ட்டு லீவு நாளாயிருந்தது. ஒப்புக்கொள்ளுதலினுலே கோர்ட்டார் புதிதான கெடுவுகாலம் ஏற்

படாதென்று தீர்மானித்தார்கள். 26. ப. 782. ரப்பர் ஸ்டாம்பா லும் அச்சாலும் கையொப்பம் செய்யலாம். 15. ம. 261. பென்சி லாலும் கையெழுத்து போடலாம். எழுதப்படிக்க தெரியாதவர் கள் செச்சே அதாவது தற்குறிப்பும் செய்யலாம். 7. ம. 76 பேனு வைமட்டில் தொடப்பட்டு வேறொருவர் தற்குறி போட்டாலும் போதும். 6. க. 352. கையெழுத்து மூலையிலோ அல்லது ஆரம்பத் திலோ அல்லது அடியிலோ செய்யலாம். ஒப்புக்கொண்டு எழுதப் பட்டிருக்கும் ஆதரவில் தேதி போடாதிருந்தால் அதில் கையெ ழுத்து செய்யப்பட்ட காலத்தை குறித்து வாய்மொழிச் சாட்சியம் விடலாம். 25. ம. 220. பல கடன்களிருந்தால் எந்த கடனுக் காக ஒப்புக்கொள்ளுதல் ஏற்பட்டதென்று வாய்மொழி சாட்சியம் கொடுக்கலாம். 17. அ. 198.

புதிதாக கெடுவுகாலம் ஏற்படக்கூடிய ஒப்புக்கொள்ளுதலை வாதி பேருக்காவது, அல்லது பாத்தியமுடையவரல்லாத வேறே எவர் பெயருக்காவது எழுதியிருந்தாலும் போதுமென்று பிரிவி கவுன்சில் சபையாரால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 33. க. 1047 வாதி கணக்குப் புஸ்தகத்தில் வட்டி மொத்தத்தை கண்டெழுதப் பட்டு அதில் பிரதிவாதி கையெழுத்து செய்தும் அந்த தேதியில் தான் வாதிக்கு எழுதிக்கொடுத்திருக்கும் புரோநோட்டுக்கு வட்டி பாக்கி யிருந்ததென்று ஒப்புக்கொண்டும் வாதி மேல்படி புரோ நோட்டின் பேரில் தாவா செய்தபோது காலாவதியாய்விட்டதென்று பிரதிவாதி கட்சியாட கணக்கில் கையெழுத்து செய்து ஒப்புக் கொள்ளுதலுக்கு சமமானதென்றும், கணக்கில் புரோநோட்டு விஷ யமே காணுதது பாதகமில்லையென்றும் வெ. அ. ரு அருணுசலம் செட்டியாருக்கும் சுப்பிரமணிய அய்யருக்கும் நடந்தகேசில் தீர்மான மாயிற்று. 3. இ. கே. 407. அதே விதமாக அசலுக்காக கெடுவுகாலத் திற்கு முன் பாக்கிதாரராலோ அல்லது அவருடைய ஏஜண்டினுலோ எவ்வளவாகிலும் செலுத்தப்பட்டிருந்தால் அந்த கால முதற்கொ ண்டு புதிதாய் கெடுவுகாலம் கணக்கிடப்படும். ஆனுல் அப்படி பணம் அசலுக்காக செலுத்துகிறவருடைய கையெழுத்தினுலே பணம் செ லுத்திய சங்கதி எழுதியிருக்கவேண்டும். கெடுவு காலத்துக்கு முன்னமேயே தொகை கொடுபட்டிருந்தாலே போதும், கெடுவு

காலத்திற்கு பிறகு அந்த வரவுத் தொகையை பத்திரத்தில் கண்டெழுதுவதால் கெடுதல் ஒன்றுமில்லை. 17. ம. 92. பல பாக்கிதாரர்களில் ஒருவர் மட்டில் கொடுப்பதால் மற்ற பாக்கிதாரர்களின் பேரில் புதிதான கெடுவுகாலம் ஏற்படாது. 27. அ. 575. இந்த தீர்மானத்தை அனுசரித்து தான் புருஷன் பெண்சாதி இவர்களிடம் எழுதி வாங்கும் புரோநோட்டின்பேரில் செட்டிகள் கொண்டுவரும் வியாஜ்ஜியத்தில் யாராவது ஒருவர் தொகை கொடுப்பதைக் கொண்டு மற்றவரை கட்டுப்படுத்தாதென்று பல மியயோக்கள் தீர்ப்பு செய்கிறார்கள். எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் பிறர் எழுதிய செல்லில் தற்குறிபோட்டால் போதும். 28. ப. 262. தவிர செல்லை வேறொருவர் எழுதி பாக்கிதாரர் கைபெழுத்துமட்டில் போட்டாலும் போதுமென்று மேலே சொன்ன கேசில் பம்பாய் ஹைகோர்ட்டார் தீர்மானம் செய்திருக்கிறார்கள். இதற்கு நேர் விரோதமாக 1909-ம் வருஷத்தில் கல்கத்தா ஹைகோர்ட்டார் தீர்மானம் செய்திருக்கிறார்கள். 35. க. 813. பாக்கிதாரன் எழுதி கையொப்பம் செய்ததாய் வாதி ருஜுப்பிக்கவேணும். 2. இ. கே. 524.

பொதுவாக அசலுக்கும் வட்டிக்கும் என்று கொடுக்கப்பட்டு ஆனால் எவ்வளவு அசலுக்கென்றும் எவ்வளவு வட்டிக்கென்றும் தெளிவாக சொல்லாமலிருந்தால் வட்டிக்கு கொடுக்கப்பட்டதாகவே பாவிக்கப்படும். 4. ப. லா. ரி. 231. பொதுவாக கடனுக்கென்று மட்டில் கண்டு எழுதியிருந்தால் வட்டிக்கென்று கொடுத்ததாக நினைக்கப்படமாட்டாது. 5. ப. லா. ரி. 350.

புரோநோட் பாண்டு முதலான ஆதரவுகளின்பேரில் செய்யும் தாவாக்களில் கெடுவுகாலத்தை கிரிகரி என்பவரால் கணிக்கப்பட்ட இங்கிலீஷ் பஞ்சாங்கத்தை அனுசரித்து கணக்கிடவேண்டும். செட்டிப்பிள்ளைகள் இங்கிலீஷ் தேதிகளுக்கும் பர்மா தேதிகளுக்குமிருக்கும் வித்தியாஸத்தால் பர்மா தேதிப்படி சில பிறுதுகளில் வட்டி போடுகிறார்கள். அந்த விதம் கோர்ட்டில் கேட்க யாதொரு பாத்தியமுமில்லை. தவிர தமிழ் தேதிகள்படிக்கும் வட்டி போடக்கூடாது.

ஒவ்வொரு அத்தியாயத்திலும் அதில் சம்மந்தப்பட்ட வியாஜ்ஜியம் அப்பீல், மனு, இவைகளின் கெடுவு காலத்தை அந்தந்த இடத்திலேயே எடுத்தெழுதப்பட்டிருக்கிறது.

# 15-வது அத்தியாயம்.

## சாட்சியத்தைக் குறித்து.

இந்த அத்தியாயத்தில் சாட்சியம் சம்மந்தமான முக்கிய சில விஷயங்கள் சொல்லப்படும்.

எல்லாக் கடைகளிலும் கணக்குகள் வைத்துவரும் வழக்கம் சீர்மையிலுள்ள பிரிவிகவுன்ஸில் சபையாருக்கும் தெரிந்த விஷயமே. தங்களுடைய கேசுக்கு ஆதாரமானதால் கணக்குகளை அவசியம் பிராதுடனே தாக்கல் செய்யவேண்டுமென்பது சி. பு. கோ. 7-வது அதிகாரத்தைப் படிப்பதால் தெரியவரும். தொழிலின் தோரணியில் கிரமமாய் வைக்கப்பட்ட கணக்கு புஸ்தகங்களிலுள்ள பதிவுகள் கோர்ட்டார் விசாரணை செய்யவேண்டிய காரியத்திற்கு அவைகள் சம்மந்தப்படும் போதெல்லாம் ஒற்றுமைச் சாட்சியாக ஏற்றுக்கொள்ளப்படும்; ஆனால் அவைகளைக் கொண்டு மட்டில் வேறு சாட்சியம் இல்லாமல் பொதுவாய் கோர்ட்டில் டிக்ரி கொடுக்கமாட்டார்கள். கடையிலுள்ள கணக்கு புஸ்தகங்களை கோர்ட்டில் கொண்டுவந்து போட்டுவிட்டால் சாட்சியமாகாது. 8. க. 931. கணக்குகளிலுள்ள பதிவுகளைச் சரியாக ருஜுப்பிக்கவேண்டும். யார் எழுதினாரென்றும், எவர் சொல்படி எழுதப்பட்டதென்றும், தொழிலின் தோரணியில் எழுதப்பட்டதென்றும், அப்படி எழுதப்பட்ட பதிவுகள் சரியான பதிவுகளென்றும் ருஜுபிக்கவேண்டும். கணக்கில் பதிவில்லாம லிருந்தாலும், அந்தவித மில்லாததை ஆதாரமான சாட்சியமாக சில சமயங்களில் ஏற்றுக்கொள்ளப்படும். (உதாரணமாக) ஒரு கேசில் ஒருவர் ஒரு தேதியில் கல்கத்தாவுக்குப் போனாரு, இல்லையா வென்று ஒரு விஷயம் ஏற்பட்டது. அவர் தன் கடையிலுள்ளவர்கள் கல்கத்தாவுக்குப் போனால் அந்தச் சிலவுகளைக் கடைக் கணக்கில் எழுதும் வழக்க முண்டென்று சொல்லித் தன் கணக்கை ஆஜர் செய்ய, கணக்கில் கல்கத்தாவுக்குப் போன சிலவு விவாத தேதியில் இல்லாததால் தான் போகவில்லையென்று

ஏற்படுகிறது என்று கட்சி சொல்ல, எதிர் தரப்பில் இந்தக் கணக்கை சாட்சியமாக ஏற்றுக்கொள்ளக் கூடாதென்று வாதாட, கோர்ட்டார் சாட்சி ஆக்டு 9-வது, 11-வது பிரிவுகள்படி சாட்சி ஆகுமென்று தீர்மானித்தார்கள். 4. க. வி. நோ. 207. கணக்குப் புஸ்தகங்களில் ஒவ்வொரு தினமும் மணிக்கு மணி பதிவுகள் செய்யவேண்டிய தவசியமில்லை. விஷயங்கள் நடந்த பல நாட்களுக்குப் பின்பும் பதிவுகள் செய்யலாமென்று, சீர்மை பிரிவிகவுன்ஸில் சபையார் தீர்மானம் செய்திருக்கிறார்கள். 27. க. 118. கணக்குகள் முக்கியமாய்க் குறிப்பென்றும், பேரேடென்றும், இருவகை கணக்குகள் உண்டல்லவா? முதலில் குறிப்பு எழுதப்பட்டு, பிறகு அதிலிருந்து பேரேடு தயார் செய்யப்படுகிறது. விசேஷமாக குறிப்பை ரொம்பவும் முக்கியமானதாக கோர்ட்டார் பாவிப்பதால் தவறாமல் குறிப்புக்கு நகலை பிரதி கேசிலும் கட்டவேண்டும். பல கேசுகளில் செட்டிப் பிள்ளைகள் கணக்கு காட்டத் தவறுதலால், முதல் கோர்ட்டில் டிக்ரி கொடுத்தபோதிலும், அப்பீல் கோர்ட்டார் அந்த தீர்மானத்தை மாற்றிவிடுகிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் ரொம்பவும் கவனிக்கவேண்டிய விஷயமொன்றுண்டு; பல ஆசாமிக்காரர்கள் ஒரே புரோநோட்டு எழுதிக்கொடுத்திருக்கும் கேசுகளில் சரிவரக் கணக்குகள் எழுதப்படுகிறதில்லை. பற்றெழுதும் காலத்தில் மட்டும் பதிவில் எல்லாருடைய பெயர்களையும் கண்டெழுதுகிறார்கள். வட்டிக்கு வரும் தொகையை எழுதுகையில் "கொப்போத்தே" வகையறா இன்ன பசலுக்கு என்று மட்டில் எழுதுகிறார்கள். வட்டி வந்த தேதியிலிருந்து மூன்று வருஷம் புதிதான காலாவதி ஏற்படுமாகையால் புரோநோட்டு பிறந்து மூன்று வருஷத்திற்கு மேற்பட்டு தாவா கொண்டு வருகையில், மற்றவர்கள் தாங்கள் வட்டி கொடுக்கவில்லை யென்று சொல்லும் கட்சிக்கு கணக்கிலுள்ள பதிவே ஆதாரமாகிறது. நான் ஆஜரான சில கேசுகளிலும் இதே மாதிரியான கட்சி சொல்லப்பட்டு "வகையறா" என்னும் பதம் எல்லாரையும் அடங்குமென்று சமாதானம் சொல்லப்பட்டும், அது ஏற்றுக்கொள்ளப்படவில்லை. கணக்கெழுதுவதற்கென்றே ஒவ்வொரு பெட்டி அடியிலிருக்கும் அடுத்தாள் தன் சிரமத்தைப் பாராது வரவு வைப்பதை எல்லாருடைய பெயரையும் கண்டுவைக்கும்படிச் செய்தால் ரொம்பவும் நலமாக விருக்கும். தவிற, ஒரு ஏஜெண்டு கொண்டு

விலை செய்து தன் காலமான பின், புது ஏஜெண்டுக்கு கணக்குகளை எழுதிக் கொடுத்துவிட்டு தன்னால் வைக்கப்பட்ட அசல் கணக்குகளை முதலாளியிடம் கொண்டுபோய் விடுகிறார். அந்த விதம் எழுதிவிடப்பட்ட ஆசாமிகளில் ஒருவர் பேரில் வியாஜ்ஜியம் தொடர்ந்தால் புது ஏஜெண்டு தான் எழுதிக்கொண்ட கணக்கை கோர்ட்டில் ஆஜர் செய்கிறார். சட்டப்படி அது சாட்சியமாகாது. சில கேசுகளில் பிரதிவாதி, தஸ்தாவேஜிலுள்ள கையெழுத்து தன் கையெழுத்தல்லவென்று கட்சி சொல்வது இப்போது சகஜமாயிருக்கிறது. ஒரு பத்திரத்தை எழுதியவர் எழுத்தை அடியில் கண்ட விதங்களில் ருஜுப்பிக்கலாம்:—

(1) எழுதியவரை சாட்சியாக கூப்பிட்டும்,

(2) பத்திரத்தை எழுதியதைப் பார்த்து சாட்சி கையெழுத்து செய்த சாட்சியைக் கூப்பிட்டும்,

(3) 45-வது பிரிவின்படி கையெழுத்து சாஸ்திரத்தில் தேர்ந்த நிபுணர்களுடைய அபிப்பிராயத்தைக் கொண்டும்,

(4) நிபுணரில்லாமற் போனாலும், விவாத கையெழுத்தை அறிந்திருக்கிறவர் அபிப்பிராயத்தாலும், ஒருவர் வேறொருவர் எழுத, தான் பார்த்திருந்தாலும், தானாவது தன் உத்திரவின் படிக்காவது அவர் பேருக்கு எழுதி அனுப்பின தஸ்தாவேஜுகளுக்கு ஜவாப்பாக அவரெழுதிய தஸ்தாவேஜுகளை தான் வரப்பற்றிக்கொண்டிருந்தாலும், சாதாரணமான தொழிலின் தோரணியில் அவரால் எழுதப்பட்ட தஸ்தாவேஜுகள் வழக்கமாய்த் தனக்கு அனுப்பப்பட்டிருந்தாலும், அப்படிப் பட்டவருடைய கையெழுத்தை அறிந்திருக்கிறவரென்று சொல்லப்படுவார்.

(5) பிரதிவாதி தன்னுடையது தானென்று ஒப்புக்கொள்ளும் கையெழுத்துடன், விவாத கையெழுத்தோடு கோர்ட்டார் தாங்களே ஒற்றுப் பார்க்கலாம்.

மேலே சொன்ன பிரகாரம் விரல் அடையாளங்களையும் ருஜு விடலாம். தஸ்தாவேஜுகளின் ஷரத்துகள் தவிற சகல சங்கதி

களையும், வாய்மொழி சாட்சியத்தினாலே ருஜுப்படுத்தலாம். வாய்மொழி சாட்சியம் நேராக இருக்கவேண்டும். அதாவது,

(1) அது பார்த்திருக்கக் கூடுமான சங்கதியைப் பற்றியதாய் இருந்தால், தான் அதைப் பார்த்ததாகச் சொல்லுகிற சாட்சிக்காரருடைய சாட்சியமாக அது இருக்கவேண்டும்.

(2). அது கேட்டிருக்கக் கூடியதான சங்கதியைப் பற்றிய தாய் இருந்தால், அதை தான் கேட்டிருந்ததாகச் சொல்லுகிற சாட்சிக்காரனுடைய சாட்சியமாக அது இருக்கவேண்டும். தஸ்தாவேஜுகளின் ஷரத்துகளை பிரதம சாட்சியத்தினாலாவது, உபசாட்சியத்தினாலாவது ருஜுப்படுத்தலாம். பிரதம சாட்சியமென்பது கோர்ட்டார் பார்வையிடும் பொருட்டுக் கொண்டு வந்து காட்டப்பட்ட தஸ்தாவேஜு என்று அர்த்தமாகும். உபசாட்சிய மென்பது கோர்ட்டாரால் கொடுக்கப்படும் சர்ட்டிபை செய்யப்பட்ட நகல்களும் அசலிலிருந்து ஏற்படுத்தப்பட்டாவது, அசலோடு ஒத்து எழுதப்பட்ட நகல்களும், தஸ்தாவேஜைத் தானே பார்த்த ஒருவர் அந்த தஸ்தாவேஜின் ஷரத்துகளைக்குறித்து சொல்லும், வாய்மொழி விபரங்கள் என்று அர்த்தமாகும். பொதுவாய் தஸ்தாவேஜுகளை பிரதம சாட்சியத்தினால் ருஜுப்படுத்தவேண்டும். 65 - வது பிரிவில் எந்த விஷயங்களில் தஸ்தாவேஜைக் குறித்து உபசாட்சியம் கொடுக்கலாமென்று சொல்லப்படுகிறது :—

(a) எவருக்கு விரோதமாய் ருஜுப்படுத்த அந்த தஸ்தாவேஜு கோரப்படுகிறதோ, அவருடைய ஸ்வாதீனத்திலாகிலும், அதிகாரத்திலாகிலும், கோர்ட்டு கட்டளை கிட்டாமலாவது, அதற்கு உட்படாமலாவதிருக்கிறவருடைய ஸ்வாதீனத்திலாகிலும் அதிகாரத்திலாகிலும்,

அதைக் கொண்டுவந்து காட்ட சட்டப்படி கடமைப்பட்டிருக்கிற யாவனொருவனுடைய ஸ்வாதீனத்திலாகிலும், அதிகாரத்திலாகிலும்,

அந்த அசலிருக்கிறதாக ருஜூவாகிற போதும், அல்லது தோற்றும்போதும், 66-வது பிரிவில் கண்டிருக்கிற நோட்டிசுக்குப் பின்பு அப்படிப்பட்டவர் அதைக்கொண்டு வராதபோதும்,

(*b*) அசல் பிறந்திருப்பதாவது அதன் ஸ்திதி அல்லது ஷரத்தாவது எவருக்கு விரோதமாய் அது ருஜூப்படுத்தப்படுகிறதோ அவராலாகிலும் அவருக்குப் பிரதிநிதியா யிருப்பவராகிலும் எழுத்து மூலமாய் ஒப்புக்கொள்ளப் படுகிறதாக ருஜூ செய்யப்பட்டிருக்கிற போதும் ;

(*c*) அசல் அழிந்து போயாவது காணமல் போயாவதிருக்கும்போதும், அதனுடைய ஷரத்தை சாட்சியமாகக் கொடுக்கிறேனென்கிற சாட்சிக்காரர் அவருடைய தவறினலாவது, அஜாக்கிரதையினலாவது உண்டாகாத வேறே யாதொரு காரணத்தைப்பற்றி தகுந்த காலத்தில் அதைக் கொண்டு வந்து காட்டக் கூடாத போதும் ;

(*d*) அசலானது சுலபமாய்க் கொண்டுவரக் கூடாமையானதா யிருக்கும்போதும் ;

(*e*) அந்த அசல் சர்க்கார் தஸ்தாவேஜாயிருக்கும்போதும் ;

(*f*) அசல்கள் கோர்ட்டில் சுலபமாய்ப் பரிசோதனை செய்யக்கூடாத அநேக கணக்குகளாவது வேறே தஸ்தாவேஜுகளாவது அடங்கினதாயிருந்து, ருஜூப்படுத்தவேண்டிய சங்கதியானது அதுகளை முழுதிலும் சோதித்து பார்க்கவேண்டியதாயிருக்கும் போதும்

மேலே கண்ட (a), (c), (d), குறிப்பு விஷயங்களிலே, தஸ்தாவேஜின், ஷரத்தைக் குறித்து யாதொரு உப சாட்சியம் ஏற்றுக்கொள்ளப்படத் தக்கதாகும்.

(b) குறிப்பு விஷயத்திலே, எழுத்து மூலமாய் ஒத்துக் கொண்டது ஏற்றுக்கொள்ளப்படத்தக்கதாகும்.

(e) விஷயத்திலே தஸ்தாவேஜின் (சர்ட்டிபை செய்யப் பட்ட) அத்தாட்சி பெற்ற நகலல்லாமல் வேறே எவ்வித உபசாட்சியமும் ஏற்றுக்கொள்ளப்படத் தக்கதல்ல.

இந்தவிதம் உபசாட்சியங் கொடுக்கக் கருதுகிற கட்சிக்காரர் எவருடைய ஸ்வாதீனம் அல்லது அதிகாரத்தில் அந்த தஸ் தாவேஜு இருக்கிறதோ அந்தக் கட்சிக்காரருக்கு அல்லது ப்ளீட ருக்கு (வக்கீலுக்கு) அதைக் கொண்டு வரும்படி சட்டத்தில் ஏற்ப டுத்தப்பட்டிருக்கிற நோட்டீஸை முன்னதாய்க் கொடுத்திராவிட்டா லும், சட்டத்தில் நோட்டீஸ் ஏற்படாதிருக்கிற பட்சத்தில், அந்த விஷயத்தின் வயணங்களைப் பற்றிக் கோர்ட்டாருக்கு நியாயமாகத் தோன்றுகிற நோட்டீஸைக் கொடுத்திராவிட்டாலும், அப்படிப் பட்ட உபசாட்சியம் கொடுக்கப்படாது :

ஆனால் அடியில் வருகிற விஷயங்களிலெதிலாவது, நோட்டீஸ் வேண்டாமை யுக்தமாகக் கோர்ட்டாருக்குத் தோன்றுகிற வேறே யாதொரு விஷயத்திலாவது, உபசாட்சியத்தை ஏற்றுக்கொள்ளப் படத்தக்கதாகச் செய்யும் பொருட்டு அப்படிப்பட்ட நோட்டீஸ் வேண்டியதில்லை :—

(1) ருஜுப்படுத்த வேண்டிய தஸ்தாவேஜு நோட்டீஸாக வே யிருக்கும்போதும் ;

(2) வியாஜ்ஜிய ஸ்வரூபத்தினாலே எதிர் கட்சிக்காரர் அதைத் தான் கொண்டுவந்து காட்டவேண்டியவர் தானென்று தெரிந்து கொள்ளவேண்டிய போதும் ;

(3) மோசடியினாலாவது பலாத்காரத்தினாலாவது அசலை எதிர் கட்சிக்காரர் ஸ்வாதீனப்படுத்திக் கொண்டாரென்று தோற்றும்போதும் அல்லது ருஜுவாகும் போதும் ;

(4) எதிர் கட்சிக்காரராவது அவருடைய ஏஜெண்டாவது, அசலை கோர்ட்டில் வைத்துக் கொண்டிருக்கும் போதும் ;

(5) எதிர் கட்சிக்காரராவது அவருடைய ஏஜெண்டாவது தஸ்தாவேஜு காணாமல் போயிற்றென்று ஒப்புக் கொண்டிருக்கும் போதும்;

(6) தஸ்தாவேஜை வைத்துக்கொண்டிருப்பவர் தனக்குக் கோர்ட்டு கட்டளை கிட்டாமலாவது அதற்கு உட்படா மலாவதிருக்கும் போதும்.

சாட்சி கையெழுத்துகளை ருஜுசெய்ய வேண்டிய விஷயத் தைப்பற்றிய விதிகளாவன :—

(1) சட்டப்படி சாட்சி கையெழுத்து போடவேண்டிய தல்லாத தஸ்தாவேஜு சாட்சி கையெழுத்து போடப்பட் டிருந்த போதிலும் அதை சாட்சி கையெழுத்து போட் டிராதது போலவே ருஜுப்படுத்தலாம். புரோநோட் டுக்கு சாட்சி கையெழுத்து வேண்டியதில்லை.

(2) கொண்டுவந்து காட்டும்படி கோர்ட்டார் உத்திரவு செய்து நோட்டீஸ் கொடுத்த பின்பும், கொண்டு வந்து காட்டப்படாதிருக்கிற பிரதி தஸ்தாவேஜும் சட்டத்தில் சொல்லியிருக்கிறவிதம் எழுதிக்கொடுத்து சாட்சி கையெழுத்து போடப்பட்டதென்று 89-வது பிரிவின்படி கோர்ட்டார் நினைப்பார்கள். அந்தவிதம் கொண்டு வந்து காட்ட நிராகரிப்பவர் வியாஜ்ஜியத் தில் கட்சிக்காரராய் இருந்தால் பின்பு அதை எதிர் கட்சிக்காரருடைய சம்மதி இல்லாமல் சாட்சியமாய் உபயோகிக்கக் கூடாதென்று 164-வது பிரிவால் தெரியவரும்.

(3) 30-வருஷமான தஸ்தாவேஜில் சரியான சாட்சி கையெ ழுத்து போட்டிருப்பதாக கோர்ட்டார் 90-வது பிரி வின்படி நினைப்பார்கள்.

(4) சட்டப்படி தஸ்தாவேஜு சாட்சி கையெழுத்து போட்டி ருக்கவேண்டியதானல் சாட்சி கையெழுத்துப்போட்ட சாட்சிக்காரர் உயிரோடிருந்து, கோர்ட்டார் கட்ட ளைக்கு உட்பட்டவராயும், சாட்சியம் சொல்ல சமர்த்த

ராயும், இருக்கிற பட்சத்தில் அது எழுதிக் கொடுக்கப்பட்டதை ருஜூப்படுத்தும் பொருட்டு சாட்சி கையெழுத்துப் போட்ட ஒரு சாட்சியையாவது அழைத்துக் கேட்கிற வரையில், அதை சாட்சியமாக உபயோகிக்கக்கூடாது.

(5) எல்லா சாட்சிக்காரர்களும் கோர்ட்டு எல்லைக்குவெளியே இருந்தாலும், அல்லது இறந்துபோயிருந்தாலும், அல்லது பைத்தியம் பிடித்திருந்தாலும், ஒரு சாட்சிக்காரன் போட்டிருக்கிற கையெழுத்து அவன் எழுத்துதானென்றும், அந்த தஸ்தாவேஜை எழுதிக்கொடுத்தவருடைய கையெழுத்து அவருடைய எழுத்துதானென்றும் ருஜூப்படுத்தவேண்டும். அந்த ஒரு சாட்சியம் எழுதப்படிக்கத் தெரியாத தற்குறிபோட்டவரா யிருந்தாலும், அந்தக் குறியை ருஜூப்பித்தாலும் போதும். 2. க. வி. நோ. 603.

(6) சாட்சி கையெழுத்து போடப்பட்ட தஸ்தாவேஜை எழுதிக்கொடுத்தவர் அது தான் எழுதிக் கொடுத்ததென்று அவரே ஒப்புக்கொண்டால் சட்டப்படி அந்த தஸ்தாவேஜூ சாட்சி கையெழுத்து போட்டிருக்க வேண்டியதாயிருந்தபோதிலும், அவர் ஒப்புக்கொண்டதே போதும். சாட்சி கையெழுத்து போட்ட சாட்சியை விசாரிக்க வேண்டியதில்லை.

(7) கையெழுத்து போட்ட சாட்சி அதை எழுதிக் கொடுத்ததில்லையென்று சொன்னாலும், எழுதிக்கொடுத்தது தனக்கு கியாபகம் இல்லையென்று சொன்னாலும் அதை எழுதிக்கொடுத்ததை வேரே சாட்சியத்தினால் ருஜூப்படுத்தலாம்.

சில கேசுகளில் பத்திரம் பிறந்த விஷயம் கியாபகம் இல்லையென்றும், தன் கையெழுத்திருப்பதால், பிறந்ததைப் பார்த்திருக்க வேண்டுமென்றும், சாட்சிகள் சொல்லுவதைக் கோர்ட்டார் ஏற்றுக்கொள்ளுகிறார்கள். சில கேசுகளில் தந்திகளை சாட்சியமாகக் காட்டுகிறார்கள். 88-வது பிரிவின்படி தந்தி சமாசாரம் யாருக்கு

அனுப்பப்படுகிறதோ அவருக்கு தந்தி ஆபீஸிலிருந்து அனுப்பப் பட்ட அந்த சமாசாரம் எந்த ஊரிலிருந்து அனுப்பப்பட்டதாக பொருள் படுகிறதோ அந்த ஆபீஸிலே அனுப்புவதற்காக ஒப்புவிக் கப்பட்ட சமாசாரம் தானென்று கோர்ட்டார் நிச்சயம் கொள்ள லாம். ஆனல் அதை இன்னார் அனுப்பினரென்று கோர்ட்டார் யாதொரு நிச்சயமும் கொள்ளக்கூடாது.

91–வது பிரிவின்படி உடன்படிக்கை ஷரத்துகளாவது, ஈகை ஷரத்துகளாவது, சொத்தை வேறே எவ்வித ஆதீனம் செய்வதைக் குறித்த ஷரத்துகளாவது ஒரு தஸ்தாவேஜு ரூபமாக ஏற்படுத்தப் பட்டிருக்கையிலும் யாதொரு காரியத்தை தஸ்தாவேஜு ரூபமாக ஏற்படுத்தும்படி சட்டத்தினலே உத்திரவு செய்யப்பட்டிருக்கிற சகல விஷயங்களிலும், அப்படிப்பட்ட உடன்படிக்கை ஈகை சொத்து வேறே ஆதீனஞ் செய்வது அல்லது அப்படிப்பட்ட காரியத்தைப்பற்றிய ஷரத்துகளைக்குறித்து, அதே தஸ்தாவேஜும், இதில் முன்னமே சொல்லியிருக்கிற நிபந்தனைகளின்படி உபசாட்சி யம் ஏற்றுக்கொள்ளப்படத்தக்க விஷயங்களிலே அந்த தஸ்தா வேஜின் ஷரத்தைக்குறித்த உபசாட்சியமும் தவிற, வேரே சாட்சி யத்தை ருஜுவாகக் கொடுக்கக்கூடாது.

விலக்கு 1 :—யாதொரு சர்க்கார் உத்தியோகஸ்தரை எழுத்து மூலமாய் நேமிக்கும்படி சட்டத்தினல் உத்திரவு செய்யப்பட் டிருந்து, அப்படிப்பட்ட உத்தியோகஸ்தர் இன்னர் அலுவல் பார்க்கிருரென்று ரூபிக்கும்போது, அவர் எதனல் நேமிக்கப்பட் டிருக்கிருரோ அந்த சன்னதை ருஜுப்படுத்த வேண்டியதில்லை.

விலக்கு 2 :—[ப்ரிடிஷ் இந்தியா புரோபேட் என்னும் அதிகார பத்திரம் கொடுக்க ஏற்றுக்கொள்ளப்பட்ட] உயில்களை புரோபேட் என்னும் அதிகார பத்திரத்தைக்கொண்டு ருஜுப்படுத்தலாம்.

92 – வது பிரிவின்படி, சட்டப்படி தஸ்தாவேஜு ரூபமாக ஏற் படுத்தவேண்டிய (அப்படிப்பட்ட) யாதொரு உடன்படிக்கை-ஈகை சொத்து வேறே ஆதீனஞ்செய்வது யாதொருகாரியம் இப்படிப் பட்டதிலுள்ள ஷரத்துகள் முந்திய பிரிவின்படி ருஜுப்படுத்தப் பட்டிருக்கும்போது, அப்படிப்பட்ட யாதொரு தஸ்தாவேஜைச் சேர்ந்த கட்சிக்காரர்களுக் குள்ளாவது, அவர்களுக்குப் பிரதிநிதியா

யிருக்கிறவர்களுக் குள்ளாவது, அதனுடைய ஷரத்துகளை ஆட்சேபிக்கும் பொருட்டாகிலும், வேறு படுத்தும்பொருட்டாகிலும், அவைகளோடு பின்னுஞ் சேர்க்கும்பொருட்டாகிலும் அவைகளிலிருந்து கழிக்கும்பொருட்டாகிலும், யாதொரு வாய்மொழி உடன்படிக்கையைக் குறித்தாவது, வாய்ப்பிறப்பைக் குறித்தாவது, சாட்சியம் ஏற்றுக்கொள்ளப்படாது.

தஸ்தாவேஜு முழுவதும் முடியாமல் சில ஷரத்துகள்மட்டில் கடிதங்களிலும், சில ஷரத்துகள் வாய்மொழியாகவும் ஏற்பட்டிருந்தால் அவைகளைப்பற்றி சாட்சியம் கொடுக்கலாம். 13. க. வி. நோ. 325. யாதொரு கிரய சாஸனத்தை மார்ட்கேஜ் பத்திரமென்றும், அந்த விதம் கட்சிக்காரர்கள் பாவித்து நடந்து வருவதையும் ருஜுசெய்யக்கூடாது. 3. லோ. ப. ரூ. 100; 1908 அ. ப. ரூ. 15; 34. ப. 59. யாதொரு தஸ்தாவேஜில்தான் முதலாளியின் ஏஜெண்டாக கையெழுத்து செய்ததாக ருஜுவிடலாம். 36. ம. 45. யாதொரு தஸ்தாவேஜில் கைபொப்பம் செய்தவர் தான் ஜாமீனுகமட்டில் கைபொப்பம் செய்ததாய் ருஜுவிடக்கூடாது. 8. க. வீ. நோ. 101; 2. லோ. ப. ரூ. 268; 1906. அ. ப. ரூ. 13. யாதொரு கிரய சாஸனத்தை, தான் சாஸனமென்று சாட்சியம் விடக்கூடாது. 22. அ. 149; 27. அ. 612.

யாதொரு புரோநோட் எழுதிக்கொடுத்தவர் அதன்பேரில் சில மாதம் பிராது செய்கிறதில்லை என்று ஏற்பட்டிருப்பதாய்ச் சொல்லும் எக்ரிமெண்டை ருஜுப்படுத்தக்கூடாது. 2. க. வீ. நோ. 188.

**விலக்கு**:—(1) மோசம், பயமுறுத்துகை, அக்கிரமம், கிரமமாயெழுதிக்கொடாமை, உடன்படிக்கை செய்கிறவருக்கு ஐவேஜு குறைவு அல்லது ஐவேஜு தவறு, சங்கதிப் பிழை அல்லது சட்டப் பிழை, இப்படிப்பட்டதனுலே யாதொரு தஸ்தாவேஜு செல்லாததாகவாவது, அது சம்மந்தமாய் யாதொரு டிக்ரி அல்லது உத்திரவு பெறுவதற்கு எவருக்காகிலும், சுதந்தர முண்டாவதாகவாவ திருக்கிற அப்படிப்பட்ட சங்கதியை ருஜுப்படுத்தலாம். யாதொரு பத்திரத்தில் தொகை கொடுக்கப்பட்டதாகக் கண்டிருந்தபோதிலும் அந்த விதம் கொடுக்கப்படவில்லை யென்றாவது. 10. க. லா. ஜ. 27;

22. அ. 317 ; 27. அ. 612; தொகை ரொக்கமாக கொடுத்ததாகக் கண்டிருந்தாலும் பழைய கடனுக்காக எழுதிக்கொடுக்கப்பட்டதென்றும் ருஜுவிடலாம். 11. ம. 213.

விலக்கு:—(2) தஸ்தவேஜில் கண்டிராததும் அதிலுள்ள ஷரத்துகளுக்கு ஒவ்வாமலிராததுமாகிய யாதொரு காரியத்தைக்குறித்து பிரத்தியேகமாய் யாதொரு வாய்மொழி உடன்படிக்கையிருப்பதை ருஜுப்படுத்தலாம். இந்த விலக்கு சம்பந்தப்படுகிறதோ படவில்லையோவென்று யோசிக்கையில், தஸ்தவேஜு எழுதியிருக்கிற ஒழுக்க நடையை கோர்ட்டார் கவனிக்கவேண்டும்.

யாதொரு புரோநோட்டில் வட்டி காணுதிருந்தால் பிந்தி அது சம்மந்தமாய் எக்ரிமெண்ட் உண்டாயிருந்தால் அதை ருஜுபிக்கலாம். 12. க. லா. ரி. 163. அதற்கு விரோதமாக சென்னப்பட்டணத்தில் தீர்மானம் இருக்கிறது. 17. ம. லா. ஜ. 296. யாதொரு உண்டியலில் வட்டிக்காணப்படாதிருந்தால் வழக்கப்படி அது சம்மந்தமாய் ஏற்பட்டிருக்கும் யாதொரு எக்ரிமெண்டைப்பற்றி ருஜு கொடுக்கலாமென்று சீர்மை பிரிவு கவுன்ஸில் சபையார் தீர்மானம் செய்திருக்கிறார்கள்; 29. அ. 33. ஒரு மார்ட்கேஜ் பத்திரம் பிறந்த பிறகு கொதுவை பெற்றுக்கொண்டவர் அந்த சொத்தை உபயோகித்து அதிலுண்டாகும் வரும்படியைக்கொண்டு கடன் தொகைக்கு வரவு வைத்துக்கொள்ளுகிறதென்று செய்துக்கொள்ளும் உடன்படிக்கையை ருஜு செய்யலாம். 11. க. லா. ஜ. 39. ஒரு தஸ்தாவேஜி ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருந்த போதிலும் சரியான விதமாய் கெட்டிக்கார லாயரால் எழுதப்படாமலிருந்த காரணத்தால் அந்தப் பத்திரத்தைச் சேர்க்கும் பொருட்டு சாட்சியம் விட அனுமதி கொடுத்ததாக, S. N. நாச்சியப்ப செட்டிக்கும், A. K. A. M. சொக்கலிங்கசெட்டிக்கும், நடந்த கேசால் தெரிகிறது. 4. லோ. ப. ரூ. 240.

விலக்கு:—(3) அப்படிப்பட்ட யாதொரு உடன்படிக்கை-ஈகை அல்லது சொத்து ஆதீனஞ் செய்வதைப்பற்றி யாதொரு கடமையேற்படுத்துவதற்குமுந்தி ஏதோ ஒரு ஷரத்துள்ளதாகப் பிரத்தியேகமான யாதொரு வாய்மொழி உடன்படிக்கை யுண்டாயிருக்குமாகில் அதை ருஜுப்படுத்தலாம்.

விலக்கு:—(4) அப்படிப்பட்ட யாதொரு உடன்படிக்கை-ஈகை அல்லது சொத்து ஆதீனஞ்செய்வது சட்டப்படி எழுத்துமூலமாயிருக்கவேண்டியதாகவாகிலும், தஸ்தவேஜுகளைரெஜிஸ்டர் செய்வதைக்குறித்து அந்தந்தகாலத்தில் வழங்கிவருகிற சட்டப்படி ரெஜிஸ்டர் செய்தாகிலுமிருக்கிற விஷயங்களில் தவிர, அப்படிப்பட்ட உடன்படிக்கை ஈகை-அல்லது சொத்து ஆதீனஞ்செய்வதை ரத்து செய்வதற்காவது திருத்துவதற்காவது பின்னிட்டுப் பிரத்தியேகமான யாதொரு வாய்மொழி உடன்படிக்கை உண்டாயிருந்தால் அதை ருஜுப்படுத்தலாம்.

விலக்கு;—(5) யாதொரு உடன்படிக்கையில் வெளிப்படையாகக் கண்டிராத இடைச்சம்பவங்கள் - எப்படிப்பட்டவழக்கம் அல்லது வாடிக்கையைப்பற்றி அவ்வித உடன்படிக்கைகளுக்கு வழக்கமாய்ச் சேர்க்கப்படுகிறதோ அந்த வழக்கம் அல்லது வாடிக்கையை ருஜுப் படுத்தலாம்.

ஆனால், அப்படிப்பட்ட இடைச்சம்பவத்தைச் சேர்ப்பது அந்த உடன்படிக்கையிலுள்ள வெளிப்படையான ஷரத்துகளுக்கு விரோதமாகவாவது ஒவ்வாமையாகவாவதிருக்கக்கூடாது.

விலக்கு:—(6) தஸ்தவேஜிலுள்ள வசனமானது உண்டாயிருக்கிற சங்கதிகளுக்கு இன்னவிதமாய்ச் சம்பந்தப்படுகிறதென்று தெரிவிக்கிற யாதொரு சங்கதியை ருஜுப்படுத்தலாம். தஸ்தாவேஜில் பிரயோகித்திருக்கும் வசனம் மறைவான அர்த்தமுள்ளதாகவாவது, அர்த்த புஷ்டி இல்லாமலாவதிருந்தால் அதைச் சரிப்படுத்தும்படியான சங்கதிகளைக்குறித்து சாட்சியம் கொடுக்கக்கூடாது; ஆனால் கல்கத்தாவி லிருக்கிற என் வீட்டை என்று கண்டிருக்கிற சாஸன மூலமாய், கல்கத்தாவில் வீடு இல்லாது அதற்குச் சமீபத்திலுள்ள ஹவுருவில் வீடு இருக்குமாகில் அந்த சாஸனம் அந்த வீட்டுச்குச் சம்மந்தப்பட்டதென்று ருஜுப் படுத்தலாம். என்னுடைய வெள்ளைக் குதிரையை என்று செய்திருக்கும் உடன்படிக்கை சம்மந்தமாய் இரண்டு வெள்ளைக் குதிரைகள் இருக்கும் பட்சத்தில் இன்ன குதிரை என்று சாட்சி கொடுக்கலாம். சில பத்திரங்களில் இன்னின்ன எல்லைகளுக்குள்ளிருக்கும் இவ்வளவு ஏகரா விற்கப்பட்டதென்று கண்டு அளக்கையில் சாஸ்தி

எகரா இருந்தால் சாஸனப்படி வாங்குகிறவருக்கு, எல்லைக்குள்ளி ருக்கும் எல்லா எகர்களும் சேரும். அதற்கு விரோதமான சாட்சியம் விடக்கூடாது. 30. ம. 397. ஆனால் ஒரு தஸ்தாவேஜில் சம்மந்தப்பட்டிருக்கிறவர்களல்லாத நபர்களாவது அவர்கள் பிரதிநிதியாவது அந்த தஸ்தாவேஜின் ஷரத்துகளுக்கு விரோதமாய் யாதொரு உடன்படிக்கையை சாட்சியாக கொடுக்கலாம். ருஜுப்படுத்துவதைப் பற்றி கவனிக்கவேண்டிய அம்சங்களாவன :—

(1) பிரதிவாதி பத்திரம் எழுதிக் கொடுத்தது உண்டென்றும், ஆனால் தனக்கு தொகை தரவில்லை யென்றாவது அல்லது பத்திரத்தில் கண்ட தொகையை விட குறைவாகப் பெற்றுக்கொண்டேன் என்றாவது அல்லது பத்திரத்திற்காக தொகை திரும்பவும் கொடுத்து தீர்த்து விட்டேனென்றாவது சொன்னால் ருஜுப்பளுவு பிரதிவாதிகள் பக்கத்தில் இருக்கிறது. தீர்ந்ததாக கட்சி சொல்லப்பட்டால் பத்திரத்தைத் திருப்பி, தான் வாங்கிக்கொள்ளாததற்கு, தகுந்த முகாந்திரம் சொல்ல வேண்டும். அப்படி இல்லாத வரையில் 114-வது பிரிவின்படி கோர்ட்டார் சகஜமாய் அந்தப் பத்திரம் தீரவில்லை யென்று நிச்சயங்கொள்வார்கள்.

(2) பத்திரம் எழுதிக்கொடுக்கவில்லை யென்று பிரதிவாதி சொன்னால் பத்திரம் பிறந்த விஷயத்தை வாதி ருஜுப்படுத்தவேண்டும்.

(3) சப் ரிஜிஸ்டிரார் முன்பாக, பிரதிவாதி தொகை பெற்றுக் கொண்டதாக ஏற்பட்டால், தான் பெற்றுக்கொள்ள வில்லையென்று கட்சி சொன்னாலும் பிரதிவாதி அதை ருஜுப்படுத்தக் கடமைப் பட்டிருக்கிறார். 23. க. 950.

(4) யாதொரு விஷயம் மோசத்தால் ஏற்பட்டதென்று கட்சி சொல்பவர் தான் அதை ருஜுப்படுத்தவேண்டும்.

(5) உபயவாதிகளும், தங்களுடைய கட்சிக்கு ஆதாரமாக தாங்கள் சாட்சி கூட்டுக்குள் போய் சாட்சியம் கொடுக்கவேண்டும். அப்படிப் போகாதவரையில் கேஸுக்கு

விரோதமாக கோர்ட்டார் ஏதாவது ஊகிக்கக்கூடும் 26. ப. 392.

சட்டப்படி எது விஷயத்திலும் யாதொரு சங்கதியை ருஜுப் படுத்துவதற்கு இத்தனை பேர் சாட்சிகள் வேண்டுமென்பது இல்லை.

இங்கே சாட்சிகளின் விசாரணை விஷயத்தைப்பற்றி சில விஷயங்கள் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. சம்மனில் கண்ட எந்த தஸ்தாவேஜையும் ஒரு சாட்சி எடுத்துவர வேண்டும். அது சம்மந்தமாய் சொல்லும் ஆட்சேபனை சரியானதா என்பதைக் குறித்து 162-வது பிரிவின்படி தீர்மானம் செய்வார்கள். ஒரு சாட்சியைக்கோரும் கட்சிக்காரர் அந்த சாட்சியை விசாரிப்பதற்கு தற்சாட்சி விமரிசை அல்லது விசாரணை என்று பெயர். அந்த சாட்சியை எதிர்கட்சிக்காரர் விசாரிப்பதற்கு கிராஸ் விசாரணை அல்லது எதிர் விசாரணை என்று பெயர். எதிர் விசாரணைக்குப் பிறகு அந்த சாட்சியைக் கோரிக்கொண்ட கட்சிக்காரர் விசாரணை செய்வது மறு விசாரணை என்று பெயர். சாட்சிகளை முதலிலே தற்சாட்சி விசாரணை செய்யவேண்டியது. பின்பு எதிர் கட்சிக்காரர் கிராஸ் விசாரணை செய்யவேண்டியது. பிறகு சாட்சியாகக் கோரிக்கொள்ளும் கட்சிக்காரர் மறுவிசாரணை செய்யவேண்டியது. தற்சாட்சி விசாரணையில் கேஸுக்கு ஆதாரமான கேள்விகளை மட்டில்தான் கேட்கவேண்டும். எதிர் விசாரணையில் தற்சாட்சி விசாரணையில் ஏற்படும் சங்கதிகளைப் பற்றி மாத்திரம் எதிர் விசாரணை செய்ய வேண்டுமென்பதில்லை. மறு விசாரணையில் பொதுச் சங்கதியைப் பற்றி கேட்கக்கூடாது. எதிர் விசாரணையில் ஏற்படும் விஷயங்களைப் பற்றி மட்டும் தான் கேட்கவேண்டும். யோக்கியதையைக் குறித்து சாட்சிகளை எதிர் விசாரணையும் மறு விசாரணையும் செய்யலாம். எதிர் விசாரணை மட்டில்தான், வழிகாட்டி கேள்வி கேட்கலாம். யாதொரு சாட்சியை விசாரிக்கையில் அவர் எதைக் குறித்து சாட்சி சொல்லிக்கொண்டிருக்கிறாரோ அந்த விஷயம் ஒரு தஸ்தாவேஜில் கண்டிருக்கவில்லையாவென்று, 144-வது பிரிவின்படி கேட்கலாம். அவர் கண்டிருக்கிறதாகச் சொன்னாலும், யாதொரு தஸ்தாவேஜின் ஷரத்தைக் குறித்து அவர் யாதொரு வாக்குமூலம் சொல்வதாய் இருந்தாலும் அந்த தஸ்தாவேஜை கொண்டுவந்து

காட்டப்படவேண்டிய தென்று கோர்ட்டார் அபிப்பிராயப்பட்டால் அந்த தஸ்தாவேஜைக் கொண்டுவரும் வரையிலாவது அதைக் குறித்து உபசாட்சியம் சொல்லும்படி சாட்சியைக் கோரிக்கொண்ட கட்சிக்காரருக்கு பாத்தியம் உண்டென்று ருஜுப்படுத்தும் வரையிலாவது மேற்படி சாட்சி கொடுக்கக்கூடாதென்று எதிர்கட்சிக்காரர் ஆட்சேபிக்கலாம்.

எழுத்து மூலமாய் இருக்கிற முந்திய வாக்கு மூலங்களைக் குறித்து அந்த சாட்சியை, அவைகளைக் காட்டாமலே எதிர் விசாரணை செய்யலாம். ஆனால் அவர் சொல்லுவதை அவர் பழைய வாக்குமூலத்தைக் கொண்டு விரோதப்படுத்த உத்தேசித்தால் அந்த பழைய வாக்கு மூலத்தை ருஜுப்படுத்துவதற்கு முன்னமே அவர் சொல்லுவதை விரோதப்படுத்த எந்தெந்த பாகத்தை உபயோகிக்க வேண்டி யிருக்கிறதோ அவைகளை சாட்சியைக் கவனிக்கும்படி சொல்லவேண்டும்.

யாதொரு சாட்சியை எதிர்விமரிசை செய்யும்போது

(1) அவருடைய நிதானத்தை அறிவதற்காவது,

(2) அவர் இன்னாரென்றும் அவருடைய அந்தஸ்து யின்னதென்றும் கண்டு கொள்ளுவதற்காவது,

(3) அப்படிப்பட்ட கேள்விகளுக்கு பதில் அவரைக் குற்றவாளி யாக்குவதற்கு நேராகவாவது மற்றப்படிக்காவது அனுகூலமாகும்படியானதா யிருந்த போதிலும் யாதொரு தண்டனைக்காவது தண்டத்துக்காவது அவரை உட்படுத்தும்படியானதாக வாகிலும் உட்படுத்துவதற்கு நேராகவாவது மற்றப்படிக்காவது அனுகூலமாகும் படியானதாகவாகிலு மிருந்தபோதிலும், அவருடைய யோக்கியதையை இழிவுபடுத்துவதனாலே அவரை நம்பக்கூடாதென்று காட்டுவதற்காவது,

ஹேதுகரமாயிருக்கிற கேள்விகளையும் அவரைக் கேட்கலாம்.

அப்படிப்பட்ட யாதொரு கேள்வி சாட்சியினுடைய யோக்கியதையை இழிவுபடுத்துவதனாலே அவரை நம்பக்கூடாதென்று ருஜுப்பிக்கிறமட்டில் தவிர வியாச்சியம் அல்லது விவகாரத்திற்கு

ஒற்றுமையில்லாத விஷயத்தைச் சேர்ந்ததாயிருந்தால், அதற்கு ஜவாபு சொல்ல அந்த சாட்சியை நிர்ப்பந்திக்கக்கூடுமோ கூடாதோ வென்று கோர்ட்டார் நிச்சயிக்கவேண்டியது. மேலும் தங்களுக்கு யுக்தமாகத் தோற்றினல், அதற்கு ஜவாபு சொல்லவேண்டிய கடமையில்லையென்று அந்த சாட்சிக்கு எச்சரிக்கை செய்யலாம்.

அவலக்ஷணமானதும் அல்லது வெட்கக்கேடானதும் என்று கோர்ட்டார் நினைக்கும் எந்தக்கேள்வியையும், விவாதத்திற்கு கொஞ்சம் சம்மந்தம் இருந்தபோதிலும் கோர்ட்டார் தீர்மானம் செய்யவேண்டிய காரியங்களுக்கு அவைகள் சம்மந்தப்பட்டாலொழிய அப்படிப்பட்ட கேள்விகளை கோர்ட்டார் தடுக்கலாம்.

நிந்திக்கவாவது, அலட்சியம் செய்யவாவது, உத்தேசமான கேள்விகளையும் கோர்ட்டார் தடுப்பார்கள்.

சாட்சியினுடைய யோக்கியதையை இழிவு படுத்துவதனலே அவனை நம்பக்கூடாதென்று ருஜு செய்ய உதவுகிற மட்டிலே விசாரணைக்கு மாத்திரம் ஒற்றுமையுள்ளதா யிருக்கிற யாதொரு கேள்வி அந்த சாட்சிக்கு போட்டு, அதற்கு அவன் ஜவாப்பு சொல்லியிருக்கும்போது அவன் சொன்னதைக் கண்டிப்பதற்கு சாட்சியம் கொடுக்கக்கூடாது; ஆனல் அவன் பொய்யாய் ஜவாப்பு சொல்லியிருந்தால் பொய்ச்சாட்சி சொன்னதாக அவன்மேல் பின்பு நடவடிக்கை நடத்தலாம்.

விலக்கு 1.—யாதொரு குற்றத்தைக் குறித்து முன்னே குற்றவாளியாக்கப்பட்டிருக்கிறனு வென்று யாதொரு சாட்சியைக்கேட்டு அதற்கவன் இல்லையென்றல், அவன் குற்றவாளி என்று முன்னே செய்யப்பட்டிருக்கிற தீர்மானத்தைக் குறித்து சாட்சியம் கொடுக்கலாம்.

விலக்கு 2.—யாதொரு சாட்சி பட்சபாத மில்லாதிருக்கவில்லையென்று தோஷம் காட்டுவதற்கு அநுகூலமான யாதொரு கேள்வி அவனைக்கேட்டு, எடுத்துக்காட்டப்பட்ட சங்கதிகளை மறுத்து அதற்கவன் ஜவாப்பு சொன்னல், அவன் சொன்னதைக் கண்டிக்கலாம்.

கோர்ட்டார் தங்களுக்கு யுக்தமாகத் தோற்றினல், எதிர் விசாரணையில் எதிர் கட்சிக்காரனல் போடப்படத்தக்க சவால்களை யாவ

ஞெருவன் தான் கோரிக்கொள்ளுகிற சாட்சிக்குப் போடும்படி அனுமதிக்கலாம்.

ஒரு சாட்சியை எதிர் கட்சிக்காரனுவது அந்த சாட்சியைக் கோரிக்கொண்ட கட்சிக்காரன் கோர்ட்டாருடைய அனுமதியின் மேலாவது அடியில் வருகிற விதத்திஞலே நம்பத்தகாதவனென்று எண்பிக்கலாம் :—

(1) அந்த சாட்சியைக் குறித்து தங்களுக்குத் தெரிந்திருக்கிறமட்டிலே அவனை நம்பத்தகாதவனென்று தாங்கள் நினைத்திருப்பதாக ருஜூக் கொடுக்கிறவர்களுடைய சாட்சியத்திஞல் ;

(2) அந்த சாட்சிக்காரனுக்கு சாட்சி சொல்லுவதாக லஞ்சம் கொடுக்கப்பட்டிருக்கிறது அல்லது லஞ்சம் கொடுக்கிறதாகச் சொல்லப்பட்டதை அவன் அங்கீகரித்திருக்கிருன் அல்லது அவன் பரிதானமாக வேறே ஏதாவது பெற்றுக்கொண்டிருக்கிருனென்கிற ருஜுவிஞல் ;

(3) அவன் முன்னே சொல்லியிருக்கிற வாக்கு மூலங்கள் அவனுடைய சாட்சியத்திலே கண்டிக்கப்படத்தக்க யாதொரு பாகத்திற்கு விரோதமாயிருக்கிறதென்கிற ருஜுவிஞல் ;

(4) துராக்கிரதமான புணர்ச்சிக்காகவாவது கற்பழிக்க எத்தனப்பட்டதாகவாவது ஒருவன்மேல் பிராது செய்யப்படும்போது, பிராதுக்காரி, சாதாரணமாய் அயோக்கியமான நடத்தையுள்ளவளென்று ருஜுப்படுத்தலாம்.

வேருெரு சாட்சியை நம்பத்தகாதவனென்று வற்புறுத்துகிற ஒரு சாட்சிக்காரன் தற்சாட்சி விபரிசையில் தான் அப்படி எண்ணியிருப்பதற்கு ஹேதுக்கள் சொல்லலாகாது, ஆஞல் எதிர் விமரிசையிலே அவனுடைய ஏதுக்களைக் கேட்கலாம், அவன் சொல்லுகிற ஜாவாப்புகள் பொய்யாயிருந்தபோதிலும் அவைகளைக் கண்டிக்கக்கூடாது, அவைகள் பொய்யாயிருந்தால் பொய்ச்சாட்சியஞ் சொன்னதற்காக அவன்மேல் பின்பு குற்றஞ் சாட்டலாம்.

எவன் சொல்லுவதை ஸ்தாபிப்பதற்கு உத்தேசிக்கப்படுகிறதோ அந்த சாட்சிக்காரன் யாதொரு ஒற்றுமையான சங்கதியைக் குறித்து சாட்சியஞ் சொல்லும்போது, அப்படிப்பட்ட ஒற்றுமையான சங்கதி சம்பவித்தகாலத்திலாவது அதற்குக் கிட்டத்தட்டவாவது அது சம்பவித்த இடத்திலாவது அதற்குச் சமீபத்திலாவது அவன் கவனித்திருக்கிற வேறே எந்த வர்த்தமானங்களாகிலும் ருஜுவானால், அந்த சாட்சி ருஜுப்படுத்துகிற அந்த ஒற்றுமையான சங்கதியைக்குறித்து அவன் சொல்லுகிற சாட்சியம் அப்படிப்பட்ட வர்த்தமானங்களால் ஸ்தாபிதமாகுமென்று கோர்ட்டார் அபிப்பிராயப்படுகிற பட்சத்தில், அந்த வர்த்தமானங்களைக் குறித்து அவனை கேள்வி கேட்கலாம்.

யாதொரு சாட்சியினுடைய சாட்சியத்தை ஸ்தாபிக்கும் பொருட்டு, அதே சங்கதி நடந்த காலத்திலாவது அதற்குக் கிட்டத்தட்டவாவது, அந்த சங்கதியை விசாரிக்கச் சட்டப்படி தகுதியான யாதொரு அதிகாரிக்கு முன்பாகவாவது அந்த சங்கதியைக் குறித்து அந்த சாட்சி சொல்லியிருக்கிற யாதொரு முந்திய வாக்குமூலத்தை ருஜுப்படுத்தலாம்.

யாதொரு சாட்சிக்காரன் விசாரணை செய்யப்படுகையில், எதைக்குறித்து அவன் கேள்வி கேட்கப்படுகிறானோ அந்த காரியம் நடந்த காலத்திலாவது பின்பு உடனே அந்தக் காரியம் அவனுடைய ஞாபகத்தில் புதிதா யிருக்கலாமென்று கோர்ட்டாருக்கு தோன்றுகிற எந்த காலத்திலாவது அவனே எழுதிவைத்திருக்கிற யாதொரு லிகிதத்தைப் பார்த்து ஞாபக சுத்தி செய்துகொள்ளலாம். மேலும் வேறொருவனால் எழுதப்பட்டு மேற்கண்ட காலத்திற்குள் அந்த சாட்சி படித்தபோது அது சரியாயிருக்கிறதென்று அவன் தெரிந்துகொண்டிருந்தால் அப்படிப்பட்ட யாதொரு லிகிதத்தை அவன் பார்த்துக்கொள்ளலாம். யாதொரு தஸ்தாவேஜைப் பார்த்து ஞாபக சுத்திசெய்து கொள்ளும்போதெல்லாம் அவன் கோர்ட்டாருடைய அனுமதியின்மேல் அப்படிப்பட்ட தஸ்தவேஜின் நகலைப் பார்த்துக்கொள்ளலாம். ஆனால் அசலைக் கொண்டுவராமைக்காக தகுந்த காரணமிருக்கிறதென்று கோர்ட்டாருக்கு திருப்தியாகவேண்டும். மேலே சொன்ன யாதொரு

தஸ்தவேஜில் கண்டிருக்கிற சங்கதிகளைப் பற்றியே சாட்சிக்கார னுக்கு நிதார்த்த ஞியாபக மில்லாதிருந்தபோதிலும், அந்த சங்கதி கள் அந்த தஸ்தவேஜிலே சரியாய் எழுதப்பட்டிருக்கிற தென்கிற நிச்சயம் அவனுக் கிருக்குமாகில், அந்த சங்கதிகளைக் குறித்தும் அவன் சாட்சி சொல்லலாம்.

ஞியாபக சுத்திசெய்துகொள்ளும் யாதொரு லிகிதத்தைக் கொண்டு வரவேண்டியது மல்லாமல், எதிர்கட்சிக்காரன் கேட்டால் அவனுக்குக் காட்டவும் வேண்டியது; அந்த கட்சிக்காரன் தனக் கிஷ்டமானல் அதைக் குறித்து சாட்சியை எதிர் விமரிசை செய்ய லாம்.

யாதொரு தஸ்தவேஜைக் கொண்டுவரச் சொல்லி ஒரு கட்சிக் காரன் மற்றொரு கட்சிக்காரனுக்கு நோட்டிஸ் கொடுத்திருந்து, அதற்குமேல் அது கொண்டுவரப்பட்டு அதைக் கொண்டுவரச் சொன்ன கட்சிக்காரனல் பார்வையிடப்படுமாகில், அதை சாட்சிய மாக அவன் கொடுக்கவேண்டுமென்று அதைக்கொண்டு வந்த கட்சிக்காரன் சொன்னல் அந்தப்படியே அவன் அதைக் கொடுக்க வேண்டியவனவான்.

தஸ்தவேஜைக் கொண்டுவரும்படி நோட்டிஸ் கொடுக்கப்பட்ட கட்சிக்காரன் அதை அவன் கொண்டுவரமாட்டேனென்று நிராகரித் தால், பின்பு அவன் அதை மற்ற கட்சிக்காரனுடைய சம்மதியில்லா மலாவது கோர்ட்டாருடைய உத்தரவில்லாமலாவது சாட்சியமாக உபயோகிக்கக்கூடாது.

ஒற்றுமையான சங்கதிகளுக்குத் தகுந்த ருஜு கண்டுபிடிக் கும் பொருட்டாவது அடையும் பொருட்டாவது ஜட்ஜானவர் - ஒற் றுமையான அல்லது ஒவ்வாமையான யாதொரு சங்கதியைக் குறித்து யாதொரு சாட்சியையாகிலும் கட்சிக்காரர்களையாகிலும் எந்த ஸ்வரூபமாகவாவது எந்தக்காலத்திலாவது தமக்கிஷ்டமான யாதொரு கேள்வி கேட்கலாம்; மேலும் யாதொரு தஸ்தவேஜை யாவது பொருளையாவது கொண்டுவந்து காட்டும்படிக்கும் உத்த ரவு பண்ணலாம். கட்சிக்காரர்களில் யாராவது அவர்களுடைய ஏஜெண்டுகளாவது அப்படிப்பட்ட கேள்விக்காகிலும் உத்தரவுக்கா கிலும் ஆட்சேபனை பண்ணவாவது, அப்படிப்பட்ட யாதொரு கேள்

விக்கு உத்தரமாகச் சொல்லப்பட்ட யாதொரு ஜவாப்பைக்குறித்து கோர்ட்டாருடைய அனுமதியில்லாமல் எந்த சாட்சியாகிலும் எதிர் விமரிசை செய்யவாவது அர்ஹறாக மாட்டார்கள்.

ஆனல், தீர்ப்பை ஒற்றுமையுள்ளதாக இந்த ஆக்ட்டினுல் சொல்லப்பட்டிருப்பதும் கிரமமாய் ருஜுசெய்யப்பட் டிருப்பதுமாகிய சங்கதிகளின் மேலே செய்யவேண்டும்.

---

# 16-வது அத்தியாயம்.

## சிவில் புரோசீஜர் கோட் என்னும் 1908-ளுத்திய 5-வது ஆக்டைக் குறித்து.

### பர்மா தேசத்திலுள்ள கோர்ட்டுகள்.

இந்த பர்மா தேசமானது அப்பர் அல்லது மேல் பர்மாவென்றும், லோயர் அல்லது கீழ் பர்மாவென்றும் இரண்டு பாகங்களாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு பாகத்திலும் இருக்கும் கோர்ட்டுகளையும் அவைகளின் அதிகார எல்லையையும் அடியில் எடுத்தெழுதப்பட் டிருக்கின்றது.

அப்பர்மாவிலுள்ள கோர்ட்டுகளும் அவைகளின் அதிகார எல்லையும் :—

1887-ம் வருஷத்திய ப்ரொவின்ஷியல் ஸ்மால்காஸ் கோர்ட்டுகள் ஆக்டின்படி ஏற்படுத்தப்பட்ட கோர்ட்டுகள் அல்லது வேறு சட்டப்படி ஏற்படுத்தப்பட்ட கோர்ட்டுகள் இவைகளைத் தவிர,

(1) மாந்தளே பெரிய மீங்கி அதாவது ஜுடிஷியல் கம்மிஷணர் கோர்ட்டு. அப்பர் பர்மாவுக்கு இதுதான் பெரிய கோர்ட்டு. மற்ற இடங்களிலிருக்கும் ஐகோர்ட்டுக்கு ஒப்பானது - இந்த கோர்ட்டுக்கு மற்றகோர்ட்டுகள் எல்லாம் கீழ்ப்பட்டவைகள்.

(2) டிவிஷனல் கோர்ட்டு அதாவது கம்மிஷணர் அல்லது மீங்கி கோர்ட்டு. (1)-ல் கண்டிருக்கும் கோர்ட்டுக்கு அடுத்தபடி யுள்ளது. (3)-ல் கண்டிருக்கும் டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டுக்கு அசல் வியாஜ்ஜியம் விவகாரம் இது சம்மந்தமாய் என்ன அதிகாரமுண்டோ அந்த அதிகாரத்தை வகிப்பதுடன் இந்து தேசத்து விவாக சம்பந்த நிவர்த்தி ஆக்டின் கீழ் அசல் விவகாரங்களை தீர்மானம் செய்யவும் அதிகார முண்டு.

(3) டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டு. இது (2)-ல் கண்டிருக்கும் கோர்ட்டுக்கு அடுத்தபடி யுள்ளது. யாதொரு வியாஜ்ஜியம் அல்லது விவகாரத்தின் திரவிய பொறுமானம் எவ்வளவாக யிருந்தாலும் அதை தீர்மானம் செய்ய அதிகாரமுண்டு. ஆனால் இந்து தேசத்து விவாக சம்மந்த நிவர்த்தி ஆக்டின்படி யாதொரு விவகாரத்தையும் தீர்மானம் செய்ய அதிகாரமில்லை.

(4) ஸப் டிவிஷனல் அல்லது நேடைன் ஊண்டெள கோர்ட்டு. இது (3)-ல் கண்டிருக்கும் கோர்ட்டுக்கு அடுத்தபடி யுள்ளது. ரூ. 3000-த்துக்கு அதிகப்படாத யாதொரு அசல் வியாஜ்ஜியம் அல்லது விவகாரத்தை தீர்மானம் செய்ய அதிகாரமுண்டு.

(5) மேலே கண்ட கோர்ட்டுக்கு அடுத்தபடியிலுள்ள டவுண் ஷிப் அல்லது மிய்யோ கோர்ட்டு. ரூ. 500-க்கு அதிகப்படாத யாதொரு அசல் வியாஜ்ஜியம் அல்லது விவகாரத்தை தீர்மானம் செய்ய அதிகாரமுண்டு.

(4) (5) இவைகளில் கண்டிருக்கும் கோர்ட்டுகளால் செய்யும் டிக்கிரி அல்லது தீர்ப்பின்மேல் டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டுக்கு அப்பீல் அதாவது அயூகான் செய்யவேண்டும். பொதுவாக ரூ. 10,000 அல்லது அதற்கு மேற்பட்ட பொறுமானமுள்ள அசல் வியாஜ்ஜியத்தில் டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டால் செய்யும் டிக்கிரிபேரில் மாந்தளே மீங்கி கோர்ட்டுக்கு அப்பீல் செய்யவேண்டும். ரூ. 10,000-க்கு உட்பட்ட டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டு

அசல் டிக்கிரி பேரில் டிவிஷனல் கோர்ட்டுக்கு அப்பீல் செய்து கொள்ளவேண்டும்.

லோயர் பர்மாவிலுள்ள கோர்ட்டுகளும் அவைகளின் அதிகார எல்லையும் :—

1887-ம் வருஷத்திய ப்ரொவின்ஷியல் ஸ்மால்காஸ் கோர்ட்டுகள் அல்லது வேறு சட்டப்படி ஏற்படுத்தப்பட்ட கோர்ட்டுகள் இவைகளைத் தவிர,

(1) ரெங்கூன் சீப்கோர்ட்டு:—இது லோயர்பர்மாஐகோர்ட்டு. இந்த கோர்ட்டுக்கு மற்ற கோர்ட்டுகள் எல்லாம் கீழ்ப்பட்டவைகள்.

(2) டிவிஷனல் கோர்ட்டு:—இந்த கோர்ட்டுக்கு அப்பர்பர்மா டிவிஷனல் கோர்ட்டுக்கு எந்தெந்த அதிகாரமுண்டோ, அந்த அதிகாரமுண்டு.

(3) டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டு :—இந்த கோர்ட்டுக்கும் அப்பர் பர்மா டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டு அதிகாரம் தான் உண்டு.

(4) அப்பர் பர்மாவிலுள்ள மாதிரியான ஸப் டிவிஷனல் அல்லது நேபயின் ஊண்டெள கோர்ட்டு.

(5) அதே பிறகாரம் டவுண் ஷிப்பு அதாவது மிய்யோ கோர்ட்டு.

(5)-ல் கண்டிருக்கும் மிய்யோ கோர்ட்டு டிக்ரி பேரில் டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டிலும் (4)-ல் கண்ட ஸப் டிவிஷனல் கோர்ட்டு டிக்கிரிபேரில் டிவிஷனல் கோர்ட்டுக்கும் அப்பீல் செய்துகொள்ள வேண்டியது. ரூ. 5000 மும் அதற்கு மேற்பட்ட தொகை பொறுமானமுள்ள வியாஜ்ஜியத்தில் டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டால் செய்யப்படும் டிக்ரி பேரில் ரெங்கூன் சீப் கோர்ட்டுக்கும் மற்ற கேசுகளில் டிவிஷனல் கோர்ட்டுக்கும் அப்பீல் செய்ய வேண்டும். டிவிஷனல் கோர்ட்டால் செய்யப்படும் அசல் டிக்கிரி பேரில் ரெங்கூன் சீப் கோர்ட்டுக்கு அப்பீல் செய்யவேண்டும்,

(6) ரெங்கூன் ஸ்மால்காஸ் கோர்ட்டு - ரூ. 2000-க்கு மேற்படாமல் பொறுமானமுள்ள வியாஜ்ஜியங்களை தீர்மானம் செய்ய அதிகாரம் கவர்ன்மெண்டார் கொடுக்கலாம்.

## வியாஜ்ஜியங்கள்.

பொதுவாய் விசாரணை செய்யக்கூடாதென்று வெளிப்படையாகவோ குறிப்பாகவோ விலக்கப்படுகிற வியாஜ்ஜியங்கள் தவிரமற்றெல்லா ஸிவில் வியாஜ்ஜியங்களையும் கோர்ட்டார் விசாரிக்கலாம். இந்த தேசத்தில் அயாடொ அதாவது கவர்ன்மெண்டு சம்மந்தமான வியாஜ்ஜியங்கள் ஸிவில் கோர்ட்டில் கொண்டுவர முடியாது. பிரதி வியாஜ்ஜியத்தையும் அதை விசாரிக்க அதிகாரமுடைய கோர்ட்டுகளெல்லாவற்றிலும் தாழ்ந்த கோர்ட்டில் தொடரவேண்டும். ஆனாலும் வியாஜ்ஜியம் பெரிதானாலும் சிறிதானாலும், அதை விசாரிக்க டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டுக்கு அதிகார முண்டென்றும் மிய்யோ கோர்ட்டில் போடவேண்டிய வியாஜ்ஜியத்தை முதலெடுப்பிலேயே டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டார் ஏற்றுக்கொண்டு விசாரித்து டிக்கிரி செய்வதால் சட்டவிரோத மில்லையென்று ரெங்கூன் சீப்கோர்ட்டில் தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. 2. லோ. ப. ரூ. 192. யாதொரு வியாஜ்ஜியத்தை ஏற்றுக்கொள்ள ஒரு கோர்ட்டுக்கு அதிகாரமில்லாமலிருந்தால் உபயவாதிகளின் சம்மதமிருந்தபோதிலும் கோர்ட்டார் ஏற்றுக்கொண்டு விசாரிக்க அதிகாரமில்லை. தவிர யாதொரு வியாஜ்ஜியத்தை ஏற்றுக்கொண்டு விசாரிக்க அதிகாரமில்லை யென்று இரண்டாவது அப்பீல் செய்யும் காலத்திலும் ஆக்ஷேபிக்கலாம். அதிகாரம் இல்லையென்று யாதொரு கோர்ட்டு தெறிந்து கொண்டபிறகு பிறுதை சரியான கோர்ட்டுக்கு கொடுக்கும்படி உத்திரவு செய்து வாப்ஸ் கொடுக்கவேணும். பொதுவாக வியாஜ்ஜிய மூலம் பிறக்கும் இடத்திலோ அல்லது பிரதிவாதிகள் வசிக்கும் இடத்திலோ அல்லது கண்டிராக்டில் குறிக்கப்பட்டிருக்கும் இடத்திலோ வியாஜ்ஜியங்கள் தொடரவேண்டும். உதாரணமாக, அசையாப்பொருள் சம்மந்தமான மார்ட்கேஜ், சிகியூரட்டி கேசுகளில் கொதுவை வைத்தவருடைய பாத்தியம் அற்றுப்போகவோ அல்லது விற்பனை செய்யவோ அல்லது மீட்கவோ அல்லது அசையாப்பொருள்

சம்மந்தமான யாதொரு பாத்தியதை யாகிலும் சம்மந்தத்தை யாகிலும் தீர்மானம் செய்ய விவாதப் பொருளிருக்கும் இடத்திலேயே வியாஜ்ஜியம் தொடரவேண்டும். மார்ட்கேஜ் வியாஜ்ஜியத்தில் சொத்தைப் பொறுத்தும் ஆளைப் பொறுத்தும் டிக்கிரி கேட்டாலும் பொருளிருக்கும் இடத்தில் தான் நம்பர் செய்யவேணும். அந்த விதம் சொத்து இல்லாத இடத்திலுள்ள கோர்ட்டில் தாக்கல் செய்தால் அந்த கோர்ட்டார் மணி டிக்கரிமட்டில் தான் கொடுக்க முடியும். 27. ம. 118. மார்ட்கேஜ் சொத்து வெவ்வேறு ஜில்லாக்களிலிருந்தால் அந்த வியாஜ்ஜிய பொருமான முழுமையும் குறித்து விசாரணை செய்ய அதிகாரமுள்ள எந்த கோர்ட்டிலும் அந்தப்படி தாவா செய்யலாம். அப்படி ஏற்படும் டிக்கிரியை கொண்டு அந்த கோர்ட்டின் எல்லைக்கு வெளியே இருக்கும் சொத்தின் பேரிலும் நிறைவேற்றலாம். 14. க. 661; 21. க. 639. கடித மூலமாய் ஒரு கண்டிராக்ட்டு முடிந்திருந்தால் மேற்படி கண்டிராக்டை ஏற்றுக் கொண்டு எந்த இடத்தில் கடிதம் தபாலில் போஸ்ட் செய்யப்படுகிறதோ அந்த இடத்தில்தான் வியாஜ்ஜியமூலம் ஏற்பட்டதாக பாவிக்கப்படும். 27. ம. 335; 32. க. 84. ஒரு ஜில்லாவில் புரோநோட்டு பிறந்து வேறொரு ஜில்லாவில் தொகை திருப்பி கொடுப்பதாக ஏற்பாடிருந்தால் அந்த விதம் ஏற்பாடு நடந்த இடத்திலுள்ள கோர்ட்டில் நம்பர் செய்யலாம். 9. க. 105. பொதுவாக புரோநோட்டில் எந்த ஊரில் எழுதப்படுகிறதோ அந்த ஊரில் தான் காண்டிராக்ட் ஏற்படுவதாக நினைக்கப்படும். 28. ம. 19. கட்சிக்காரர்களில் எவராவது தகுந்த காரணங்களை காட்டி வேறு கோர்ட்டுக்கு மாற்ற இஷ்டப்பட்டால் முதலெடுப்பில் டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டுக்கும் பிறகு ஐகோர்ட்டுக்கும் சி. பு. கோ. 24-வது பிரிவுப்படி மனுக்கொடுக்க வேண்டியது. மேற்படி கோர்ட்டார்கள் தாங்களாகவே ஒரு கேஸை ஒரு கோர்ட்டிலிருந்து வேறு கோர்ட்டுக்கு மாற்ற அதிகாரமுண்டு.

உபயவாதிகளின் கட்சியை காட்டும் வாத பத்திரங்களுக்கு பிளீடிங்ஸ் அதாவது ஸ்வேசேடுசே யென்று பெயர். அந்தப்பத்திரத்திற்கு பிளேய்ன்ட் அல்லது ரிட்டன் (எழுத்து மூலமான ஸ்டேட்டுமெண்டு) என்னும் விவரப்பத்திரிகை என்று அர்த்தமாகும். வாதப்பத்திரத்தில் சாராம்சமான சங்கதிகளைக் காணவேண்

டுமே யொழிய சரித்திரம் எழுதக்கூடாது. இதற்காக ஏற்பட்டிருக்கும் வாதப்பத்திர நமூனுப் பாரங்கள்படி சந்தர்ப்பத்திற் கேற்றபடி எழுதவேண்டும். கண்டிராக்ட் அல்லது ஒப்பந்தம் ஏற்பட்டிருப்பதாக யாதொரு வாதப்பத்திரத்தில் சொல்லப்பட்டால், எதிர் கட்சிக்காரர் இல்லையென்று மறுக்கவேண்டுமானல் குறிப்பிட்டு மறுக்கவேண்டும். யாதொரு தஸ்தாவேஜின் வார்த்தைகள் அப்படியே எடுத்தெழுதுவது அவசியமாயிருந்தால் அப்படியே எடுத்தெழுதவேணும். மற்றபடி அதின் சுருக்கத்தை எழுதவேணும். ஒவ்வொரு வாதப்பத்திரத்திலும் அதற்கு சம்மந்தப்பட்ட கட்சிக்காரரும் லாயரும் கையெழுத்து செய்யவேணும். கட்சிக்காரருக்கு பதிலாக அவரிடம் அதிகாரம் பெற்றவர் கையொப்பம் செய்யலாம். தவிர அந்த பத்திரத்தின் அடியில் கட்சிக்காரராவது அல்லது அவருக்காக அந்த வியாஜ்ஜிய சங்கதிகள் தெரிந்திருப்பதாக கோர்ட்டாருக்கு திருப்திகரமாய் ருஜூசெய்யப்படுகிற வேறெவரும் உறுதிமொழி எழுதவேண்டும். வாத பத்திரத்தின் எந்த பாகம் தனக்கு நேராக சொந்தத்தில் தெரியுமென்றும் எந்த பாகம் தான் கேட்டவரையில் உண்மையென்று நம்புகிறுறென்றும் கண்டு குறிப்பிட்டு உறுதிமொழி எழுதவேண்டும். உறுதிமொழி எழுதுபவர் கையொப்பம் செய்வதுடன் அது எந்த தேதியில் எந்த இடத்திலே கையெழுத்து செய்யப்பட்டதோ அதை அதில் கண்டெழுதவேண்டும். ஒரு நடவடிக்கையின் எந்த நிலையிலும், வாதப்பத்திரங்களை திருத்த கோர்ட்டார் அனுமதி கொடுக்கலாம். வாதப்பத்திரத்தில் ஒன்றுக்கொன்று விரோதமான விஷயங்களை கண்டெழுதக்கூடாது. தாவா பத்திரத்தை தான் எழுதவில்லையென்று கட்சி சொல்லும் பிரதிவாதி அந்த பத்திரம் வாதி மோசத்தால் பிறந்ததென்று சொல்லக்கூடாது.

## சிவில் ப்ளெய்ண்டு.

பிரதி வியாஜ்ஜியத்தையும் பிளெய்ண்டு (ஸ்வேசே) கொடுத்து ஆரம்பிக்கவேண்டும். அதில் அடியில் வரும் விவரங்கள் கண்டெழுதவேண்டும்.

(1) எந்தக் கோர்ட்டில் வியாஜ்ஜியம் கொண்டு வரப்படுகிறதோ அந்தக் கோர்ட்டின் பெயர்.

(2) வாதியின் பெயரும் விவரமும் குடியிருக்கும் இடமும், வாதி ஏஜண்டாயிருந்தால் முதலாளி பெயரையும் கண்டெழுத வேண்டும்.

(3) பிரதிவாதியின் பெயரும் விவரமும் குடியிருக்குமிடமும்.

(4) வாதியாவது பிரதிவாதியாவது மைனரா யிருந்தாலும் புத்தி ஸ்வாதீன மில்லாதவராகவாகிலு மிருந்தால் அதைக் கண்டெழுதவேண்டும்.

(5) வியாஜ்ஜிய மூலம் ஏற்பட்டதற்குண்டான சங்கதிகளும் அது பிறந்தகாலமும் ;

(6) கோர்ட்டாருக்கு அதிகார மிருக்கிற தென்று தெரிவிக்கும் சங்கதிகள்.

(7) வாதி கேட்டுக்கொள்ளும் பரிகாரம் :—பிருதில் கேட்காத பரிகாரம் வாதிக்கு கொடுக்கப்படமாட்டாது. 30. க. 506. பிருதில் பிரார்த்தனையை சரியாக கவனித்து எழுதவேணும். பிருதில் கண்ட தொகைக்கும் சிலவுதொகை பிந்தியவட்டிக்கும் டிக்ரி கொடுக்க வேண்டுமென்றும் பின்னும் கோர்ட்டாருக்கு யுக்தமாய் தோன்றும் இதர பரிகாரங்கள் கொடுக்கவேணுமென்றும் கண்டெழுதினுல் மிகவும் நலம்.

(8) வாதி பிரதிவாதிக்கு சேரவேண்டியதாகக் கழித்துக் கொடுத்தோ அல்லது தன் தாவாவில் ஒரு பாகத்தை விட்டு விட்டோ இருந்தால், அந்த வட்டி கழித்துக் கொடுத்த அல்லது விட்டு விட்டதொகை.

(9) அதிகார வரம்பைக் காட்டுவதற்கும் கோர்ட்டு கட்டணத்தை காட்டுவதற்கும் வியாஜ்ஜியத்தின் பொறுமானத்தை காட்டவேண்டும்.

அசையாப்பொருள் சம்மந்தமான வியாஜ்ஜியமாயிருந்தால் போதுமான விவரமும் அடையாளம் கண்டுபிடிக்கக் கூடிய ஸர்வே நம்பர்கள், எல்லையும் இவைகளையும் கண்டெழுதவேணும். தவிர, விஸ்தீரண முதலானதைக் காட்டக்கூடிய மீபோன் அதாவது பிளானையும் பிருதுடன் தாக்கல் செய்யவேண்டும். வாதி ஏஜண்டாயிருக்

தும் பட்சத்தில் முதலாளிகளின் பேரையும் இருப்பிடத்தையும் கண்டு எழுதி, தான் ஏஜண்டு ஸ்தானத்தில் பிராதுகொண்டு வந்திருப்பதாக எழுதவேண்டும். இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட நபர்கள் கூட்டுப்பங்குக்காரர்களாக வியாபாரம் செய்துவந்த அந்தக் கூட்டின் பேரால் வியாஜ்ஜியம் தொடரலாம். வியாஜ்ஜியத்தின் கட்சிக்காரர் எவராகிலும் கூட்டுப்பங்குக்காரர்களின் பேர்களேயும் மேல் விலாசங்களேயும் கொடுக்கவேண்டுமென்று மனுச்செய்துகொண்டால் அந்தவிதம் செய்யும்படி கோர்ட்டார் 30-வது ஆர்டர்படி உத்தரவு செய்வார்கள். வயதுவருத மைனர் கொண்டுவரும் வியாஜ்ஜியம் மைனரின் அடுத்த சினேகதர் என்று சொல்லும் ஒருவர்பேருல் தொடரவேண்டும், பிரதிவாதி மைனருயிருந்தால் அவருக்கு, கார்டியன் ஒருவரை நியமிக்கவேண்டும். அந்தவிதம் நியமிக்க 32-வது ஆர்டர் 3-வது விதியின் கீழ் மனுசெய்தபிறகு மைனருக்கும், யார் சவரட்சணையில் மைனர் இருக்கிருரோ அவருக்கும் நோட்டிஸ் கொடுத்து மைனரின் க்ஷேமத்திற்கும் பாத்தியதைக்கும் விரோதமில்லாத ஒருவரைத்தான் கார்ட்டியனுய் நியமிக்கப்படும். வியாஜ்ஜியத்தின் எந்தத் திசையிலாவது பிளெய்ண்டை அந்த வியாஜ்ஜியம் வேறு கோர்ட்டில் கொண்டுவந்து இருக்கவேண்டுமென்று அபிப்பிருயப் படுகிறபட்சத்தில் அவ்விதம் கொடுக்கும்படி உத்தரவு கோர்ட்டில் செய்வார்கள். அந்த உத்தரவின் பேரில் அப்பீல் உண்டு.

அடியில்கண்ட கேசுகளில் பிருதைத் தள்ளப்படும் :—

(1) வியாஜ்ஜியமூலம் கண்டெழுதப்படாம லிருந்தாலும். அப்போது பிருதைத் தள்ளவேண்டியதே ஒழிய டிஸ்மிஸ் செய்யக்கூடாது. 15. க. 533.

(2) வியாஜ்ஜியத்தின் பொருமானத்தை குறைவாக மதித்து கோர்ட்டார் நிர்ணயிக்கிறகாலத்திற்குள் அந்தப்பொருமானத்தை கோர்ட்டார் உத்தரவுப்படி திருத்தத்தவறினல்.

(3) குறைந்தவிலேயுள்ள முத்திரைக் கடுதாசியில் பிராது எழுதப்பட்டு கோர்ட்டார் நிர்ணயிக்கிற காலத்திற்குள் சரியான முத்திரைக் கடுதாசி சேர்த்துக் கொடுக்கத்

தவறினாலும். இந்த விதமாய் நிர்ணயிக்கும் காலம் காலாவதிக் கெடுவுக்குள் இருக்கவேண்டும். 20. ம. 319.

(4) யாதொரு சட்ட திட்டத்தினாலே வியாஜ்ஜியத்திற்குத் தடையுண்டா யிருக்கிறதென்று பிராதில் சொல்லி யிருக்கும் சங்கதியினால் தெரியவந்தாலும் மேலே சொன்ன காரணங்களைக் கொண்டு பிராதைத் தள்ளினால் அப்பீல் உண்டு. யாதொரு தஸ்தவேஜின்மேல் வியாஜ்ஜியம் கொண்டுவந்தால் பிராதுடன் தஸ்தாவேஜையாவது, அதற்கு நகலையாவது சேர்த்து கொடுப்பதுடன் தன் தாவாவுக்கு முக்கியமாயிருக்கும் தஸ்தாவேஜுகளுக்கு ஜாப்தாவும் கட்டவேண்டும். அந்த விதம் செய்யாமற் போனால், கோர்ட்டார் அனுமதியில்லாமல் விசாரணையில் வாதிபட்சத்தில் சாட்சியமாய் ஏற்றுக்கொள்ளக்கூடாது. செட்டிப்பிள்ளைகள் விசேஷமாய் தங்கள் கடைக் கணக்கை ஆதாரமாக பாவிப்பதால் பிராது தாக்கல் செய்கிறகாலத்தில் கணக்குப் புஸ்தகத்தை கோர்ட்டுக்குக் கொண்டுவந்து காட்டி அந்தப் பதிவுக்கு ஓர் நகலையும் எழுதி இங்கிலீஷில் தர்ஜமா செய்து கோர்ட்டில் கட்டி புஸ்தகத்தில் கோர்ட்டார் கையெழுத்தும் வாங்கவேண்டும்.

வியாஜ்ஜியத்தை ஏற்றுக்கொண்ட பிறகு பிரதிவாதிக்கு பிராது காபியுடன் சம்மன் அனுப்பப்படும். கோர்ட்டார் அதிகார எல்லைக்குள் இல்லாத கட்சிக்காரரையும் அப்படிப்பட்ட எல்லைக்கு வெளியிலே கோர்ட்டிலிருந்து 50-மைல் தூரத்திற்கு குறைவான தூரத்திலுள்ள யாதொரு இடத்திலாவது அவர் வாசம் செய்கிற இடத்திற்கும் கோர்ட்டு இருக்கிற இடத்திற்கும் உள்ள தூரத்திலே ஆரில் ஐந்து பங்கு தூரமானது ரயில்வே மார்க்கமாகவாவது, புகைக்கப்பல் மார்க்கமாகவாவது பொதுவாய் போக்குவரத்துக்காக ஏற்படுத்தப்பட்ட வேறே யாதொரு சாதனத்தின் மூலமாகவாவது போகக் கூடியதாயிருந்தால் கோர்ட்டிலிருந்து 200-மைல் தூரத்திற்குக் குறைவான தூரத்திலுள்ள இடத்திலாவது

வாசஞ் செய்யாத கட்சிக்காரரையும் நேரில் ஹாஜர் ஆகும்படி உத்தரவு செய்யலாம். பிரதிவாதிக்கு விடும் சம்மனில் கவுச்சையை யேற்படுத்துவதற்கென்ருகிலும், வியாஜ்ஜியத்தை முடிவாய் தீர்மானிக்க வென்ருகிலும் போதுமான சாவகாசம் கொடுத்து ஈரங்கி தேதி ஏற்படுத்தவேண்டும். பொதுவாக நேரில் சம்மனை சார்வ் செய்ய வேண்டும். சம்மனை வாங்கிக்கொள்ள அதிகாரம் பெற்ற ஏஜண்டு இருந்தால் அவரிடத்தில் கொடுத்தாலும் போதும். பிரதிவாதி அகப்படாமலும் அவருக்காக சம்மனை வாங்கிக் கொள்வதற்கு சரியான ஏஜண்டு இல்லாமலுமிருந்தால், அவருடைய குடும்பத்திலே அவரோடுகூட வாசம்செய்கிற யாதொரு வயது வந்த புருஷரிடத்தில் கொடுக்கலாம். ஆனல் வீட்டு வேலைக்காரன் குடும்பத்தைச் சேர்ந்தவனல்ல. சம்மனைப் பெற்றுக்கொள்பவர் அசல் சம்மனில் கையெழுத்து செய்யவேண்டும். அப்படி கையொப்பம் போடமாட்டே னென்ருலும் ஜாக்கிரதையுடன் தேடிப்பார்த்தும் பிரதிவாதியாவது அவர் அதிகாரம் பெற்ற ஏஜண்டாவது அகப்படாமற் போனலும் பிரதிவாதி சாதாரணமாய் வசிக்கும் அல்லது வியாபாரம் செய்யும் இடத்தின் வெளிக் கதவிலாகிலும் எல்லாருக்கும் தெரியும்படியான வேறேயாதொரு பாகத்திலேயாகிலும் சம்மன் காப்பியை ஒட்டி எவருல் வீடுகாட்டப்பட்டதென்றும் மற்ற விஷயங்களும் கண்டு சம்மன் பேதா அத்தாட்சி அனுப்பவேண்டும். பிரதிவாதி வீட்டுக்குப்போய் இல்லையென்று தெரிந்தவுடனே மேலே கண்டபடி சம்மனை சர்வ் செய்யக்கூடாது. பிரதிவாதி வீட்டில் இல்லாமற்போனலும் பிரதிவாதி எங்கேபோயிருக்கிருரென்று பேதாவுக்கு சொல்லப்பட்டு சீக்கிரத்தில் திரும்பிவரக்கூடுமென்று தெரியவந்தால் சம்மனை ஒட்டி சர்வ் செய்யக்கூடாது. 21. ப. 223; 24. அ. 302; 21. ம. 419. ஆனல் பிரதிவாதி திரும்பிவர அநேகநாள் பிடிக்குமென்று தெரியவந்தால் ஒட்டி சர்வ் செய்யலாம். 21. ம. 324. அத்தாக்ஷியுடன் சம்மன் பேதா பிரமாண உறுதிமொழி அனுப்பி இருந்தாலும் கோர்ட்டார் அவரை விசாரித்து சம்மன் கிரமமாய் சர்வ் செய்ததாக நினைக்காதபட்சத்தில் மறு சம்மனுக்காவது அல்லது சம்மன் சேர்ப்பிக்கவே உத்தரவுசெய்யலாம். சம்மன் சர்வ் செய்யாமலிருக்கும் பொருட்டு பிரதிவாதி அகப்படாமல் ஒளிந்து கொண்டிருக்கிருரென்ருவது வேறு காரணத்தைப்பற்றி சாதாரணமாய்

சம்மன் சர்வ் செய்யமுடியாதென்று பிரமாணப்பத்திரிகை மூலமாய் கோர்ட்டாருக்கு திருப்திகரமாய் தெரியவந்தால் கோர்ட்டில் எல்லாருக்கும் தெரியும்படியான இடத்திலும் பிரதிவாதி கடைசியில் குடியிருந்த அல்லது வியாபாரம் செய்துவந்த வீட்டில் யாதொருவிடத்திலும் சம்மன் காப்பியை ஒட்டி சர்வ் செய்யும்படி உத்திரவு செய்யலாம். அந்தவிதம் உத்திரவுசெய்து பிரதிவாதி ஹாஜர் ஆகுவதற்கு தேதி ஏற்படுத்தவேண்டும். ஐகோர்ட் அல்லாத மற்ற கோர்ட்டுகளுக்கு சம்மனை சர்வ்செய்யும்படி அனுப்பலாம். பிரதிவாதி ரொம்பவும் அந்தஸ்த்துள்ள மனுஷனாய் இருந்தால் சம்மனுக்குப் பதிலாக கடிதம் தபால் மூலமாக அனுப்பலாம். சம்மனில் கண்ட தினத்தில் கட்சிக்காரர்கள் வக்கீல்களோடு ஹாஜர் ஆனதும் வேறு தினத்திற்கு விசாரணை மாற்றினாலன்றி அப்போது வியாஜ்ஜியத்தை விசாரிக்கவேண்டும். வாதி படிசெலுத்தாமையினாலே பிரதிவாதிக்குச் சம்மன் போகவில்லையென்று தெரியவந்தால் வியாஜ்ஜியத்தைக் கோர்ட்டார் தள்ளிவிடலாம். ஆனால் ஈரங்கி தினத்தில் பிரதிவாதி நேராய் வந்திருந்தாலும் அவர் ஏஜண்டுவந்திருந்தாலும் அப்படித் தள்ளமுடியாது. வாதி பிரதிவாதிகளில் எவரும் ஹாஜர் ஆகாவிட்டால் வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிடலாம். அப்படித் தள்ளும் உத்தரவின்பேரில் அப்பீல் இல்லை. 10. ம. 270. மேலே சொன்னதுபோல் வாதி படி செலுத்தாத காரணத்தாலும் வாதி பிரதிவாதிகளில் எவரும் வராத காரணத்தாலும் வியாஜ்ஜியத்தைத் தள்ளிவிட்டால் காலாவதி கெடு இருந்தால் வாதி மறுபடியும் வியாஜ்ஜியம் கொண்டுவரலாம். அல்லது வியாஜ்ஜியத்தை தள்ளும்படிசெய்த உத்தரவை ரத்துசெய்ய மனுக்கொடுத்து தான் வராததற்கும், படி செலுத்தாததற்கும் தகுந்த காரணம் இருந்ததென்று கோர்ட்டாருக்குத் திருப்திகரமாய் தெரிவித்தால் கோர்ட்டார் முந்திய உத்தரவை ரத்துசெய்து வியாஜ்ஜியத்தை மேல்நடத்த ஒரு நாள் ஏற்படுத்துவார்கள். அந்தவிதம் செய்யும் உத்தரவின் பேரில் அப்பீல் கிடையாது. 10. ம. 270. சம்மன் பிரதிவாதிக்கு சர்வாகாமலிருந்தால் அத்தாக்ஷியை அனுப்பப்பட்ட தேதிமுதல் ஒருவருஷகாலம் வரையில் வாதி புது சம்மன் பிறப்பிக்கும்படி விண்ணப்பம் செய்யலாம். சம்மன் சர்வாகாத பிரதிவாதி இருப்பிடத்தைத் தெரிந்துகொள்ளக்கூடிய முயற்சி செய்ததாகவாவது

பிரதிவாதி சம்மன் சர்வாகாதபடி தப்பித்துக்கொண்டு இருக்கிறாரென்றாவது கோர்ட்டாருக்கு திருப்திகரமாய் ருஜூசெய்யத்தவறிப் போனால் அந்தப் பிரதிவாதி சம்மந்தப்பட்டவரையில் வியாஜ்ஜியத்தைத் தள்ளலாம். பிறகு காலகெடுவு இருந்தால் வாதி புது வியாஜ்ஜியம் கொண்டுவாலாம். கேசைக் கூப்பிடும்போது வாதி ஹாஜராகி பிரதிவாதி ஹாஜர் ஆகாவிட்டால் அப்போது சம்மன் கிரமமாய்சர்வாகப்பட்டதென்று ருஜூவானால் கோர்ட்டார் எக்ஸ்பார்ட்டியாக (அதாவது ஒருதலை சார்பாய்) விசாரணை செய்யத்தொடங்கலாம். கிரமமாய் சம்மன் சேர்ப்பிக்கப்பட்டதென்று ருஜூ ஆகாவிட்டால் இரண்டாவது சம்மன் பிறப்பித்து அதைப் பிரதிவாதிக்கு சேர்ப்பிக்கும்படி கோர்ட்டார் உத்தரவு செய்யலாம். வாதியின் தவறுதலினால் சம்மன் கிரமமாய் சர்வ் செய்யப்படாத விஷயத்தில் நிறுத்திவைத்ததாலுண்டாகும் சிலவை கொடுக்கும்படி கோர்ட்டார் உத்தரவு செய்யலாம். ஒருதலை விசாரணை வேறு தினத்திற்கு தள்ளிவைக்கப்பட்டு விசாரணை நடக்கும் அந்த தினத்திலாவது அதற்கு முன்னாவது பிரதிவாதி ஆஜராகி தான் முன் வராமல் போனதற்கு தகுந்த காரணம் தெரிவித்தால் அதை ஏற்றுக்கொண்டு சிலவுகளைக்குறித்தும் ரிட்டன் ஸ்டேட்மெண்டு போடுவதைக்குறித்தும் உத்தரவு செய்யலாம். கோர்ட்டார் பிரதிவாதிக்கு அந்தவிதம் அனுகூலமான உத்தரவு செய்யாமற்போனால், அந்த உத்தரவின்பேரில் அப்பீல் கிடையாது. ஆனால் ஒருதலையாய் விசாரணையாகி ஏற்படும் தப்பேத்தா டிக்ரியை 9-வது ஆடர் 13-வது விதிப்படி ரத்துசெய்ய மனுகொடுக்கலாம். அப்படி ரத்து செய்யக்கொடுக்கும் மனுவை தள்ளுபடி செய்யும் உத்தரவின் பேரில் அப்பீல் செய்யலாம். அல்லது தப்பேத்தா டிக்ரி பேரிலும் அப்பீல் செய்யலாம். 8. க. 272. வாதி ஹாஜர் ஆகாமல் பிரதிவாதி மட்டில் ஹாஜர் ஆனால் தாவா முழுமையுமாவது ஒரு பாகத்தையாவது, பிரதிவாதி ஒப்புக்கொண்டாலன்றி மற்றபடி கோர்ட்டார் வியாஜ்ஜியத்தைத் தள்ளவேண்டும். அப்படி ஒப்புக்கொள்ளும் பட்சத்தில் அவருக்கு விரோதமாய்க் கோர்ட்டார் டிக்ரி செய்ய வேண்டும். மேலும் தாவாவில் ஒரு பாகத்தை மட்டில் ஒப்புக்கொண்டால் மற்றபாகம் சம்பந்தப்பட்டவரையில் கோர்ட்டார் வியாஜ்ஜியத்தைத் தள்ளவேண்டும். ஈரங்கி மாற்றப்பட்டிருக்கும்

கேசுகளிலும் இந்த விதிப்பிரகாரம் உத்தரவு செய்யலாம். 34. க. 235. வாதி தாவா தள்ளப்பட்டால் அவருக்கு நாலு பரிகாரங்கள் உண்டு.

(1) உத்தரவை ரிவியூசெய்ய மனு செய்யலாம் 26. க. 598.

(2) 9-வது விதியின் கீழ் வியாஜ்ஜியத்தை தள்ளின உத்தரவை ரத்து செய்ய மனு கொடுக்கலாம்.

(3) அந்தவிதம் மனுச்செய்யாது வியாஜ்ஜியத்தை தள்ளிய டிக்ரிமேல் அப்பீல் செய்யலாம். 8. க. வீ. நோ. 313.

(4) அல்லது 9-வது விதியின் கீழ் செய்யப்படும் மனுவை தள்ளும் உத்தரவின்பேரில் அப்பீல் செய்யலாம். 30. ம. 274.

மேலே சொல்லிய 8-வது விதிப்படி முழுதுமாகிலும் பாகத்தையாகிலும் வியாஜ்ஜியத்தைத் தள்ளினல் அதைக் குறித்து மறுபடியும் வாதி வியாஜ்ஜியம் கொண்டுவரமுடியாது. ஆனல் தள்ளுபடி செய்த உத்தரவை ரத்துசெய்ய மனுக்கொடுத்து தான் வருததற்கு தகுந்த காரணம் இருந்ததென்று கோர்ட்டாருக்கு ருஜுக்கொடுத்தால் செலவைக் குறித்து கண்டிஷன்கள் ஏற்படுத்தி எதிர்க் கட்சிக்கு நோட்டீஸ் கொடுத்து முந்திய உத்தரவை ரத்து செய்து வியாஜ்ஜியத்தை மேல்நடத்த ஒருநாள் நியமிக்கவேண்டும். அந்த விதம் மனு செய்ய இ. லி. ஆ. 163-வது பிரிவுப்படி தள்ளின தேதியிலிருந்து 30-நாள் உண்டு. இந்த விதிப்பிரகாரம் செய்யும் மனுவின்பேரில் வாதிக்கு அனுகூலமாக உத்தரவு செய்தால் அதின் பேரில் அப்பீல் கிடையாது. 5. க. 711. இந்த விதியின்கீழ் வாதிக்கு விரோதமாய் செய்யும் உத்தரவின் பேரில் அப்பீலுண்டென்று முன்னே சொல்லியிருக்கிறது. பிரதிவாதியின்பேரில் ஒரு தலையாக டிக்ரி செய்யப்பட்டால் அவருக்கு இரண்டு பரிகாரங்கள் உண்டு.

(1) அந்த டிக்ரியின்பேரில் 96-வது பிரிவுப்படி அப்பீல் செய்யலாம்.

(2) 13-வது விதிப்படி தனக்கு சம்மன் கிரமமாய் சர்வ்செய்ய வில்லை யென்றாவது கேசைக் கூப்பிட்ட காலத்தில் தகுந்த காரணத்தால் வரமுடியாமல் இருந்ததென்றா வது கோர்ட்டாருக்கு திருப்திகரமாய் ருஜூகொடுத் தால் எதிர்க் கட்சிக்கு நோட்டீஸ் கொடுத்து விசா ரித்து நியாயமென்று தோன்றினால் கோர்ட்டார் செல வைக் குறித்தோ கோர்ட்டில் பணம் செலுத்துவதைக் குறித்தோ கண்டிஷன்கள் ஏற்படுத்தி டிக்ரியை ரத்து செய்து கேசை மேல்நடத்த ஓர் தேதி ஏற்படுத்த வேண்டும். அவசியமிருந்தால் எல்லாப் பிரதிவாதி கள் சம்பந்தப்பட்ட வரையிலும் டிக்ரியை ரத்து செய் யலாம். ஒரு தலை டிக்ரி யேற்பட்ட பிறகு அவர் சட் டப் பிரதிநிதி இந்த விதியின் கீழ் மனு செய்து கொள் ளலாம். 29. க. 33. அந்த விதம் மனு செய்ய இ. வி. ஆ. 164-வது பிரிவுப்படி 30-நாள் காலாவதி உண்டு. கெடுவுகாலம் டிக்ரியின் தேதி அல்லது சம்மன் சரி யாக சேர்ப்பிக்கப்படாவிட்டால் மனுதாரர் டிக்ரியைப் பற்றி தெரிந்து கொண்டபொழுது உற்பத்தியாகும். இரண்டு பிரதிவாதிகளின்பேரில் ஒரு தலை டிக்ரி ஏற் பட்டிருந்தால் முதல் பிரதிவாதிபேரில் நிறைவேற்று வதால் இரண்டாம் பிரதிவாதிக்கு டிக்ரி தெரிந்ததாக பாவிக்கப்படமாட்டாது. 31. ப. 303. தகுந்த காரண மென்பதை விசாலமாக கோர்ட்டார் அர்த்தம் செய்ய வேண்டும். தகுந்த காரணம் இருந்தால் கோர்ட்டார் தபேத்தா டிக்ரியை தள்ள கடமைப்பட்டிருக்கிறார்க ளென்றும் தகுந்த காரணம் இல்லாமலிருந்த போதி லும் வேறு காரணத்தைக்கொண்டு ரத்து செய்ய கோர்ட்டாருக்கு அதிகாரம் உண்டென்றும் கீர்த்தி பெற்ற ஜட்ஜ் பாஷியம் அய்யங்கார் அவர்கள் தீர்மா னம் செய்திருக்கிறார்கள். 26. ம. 599.

இந்த விதியின்கீழ் செய்யப்படும் மனுவை ரத்து செய்யும் உத் தரவின்பேரில் 43-வது ஆர்டர்படி அப்பீலுண்டு. அந்த அப்பீலில் செய்யும் உத்தரவுக்கு அப்பீல் கிடையாது. 8. க. 832. இந்த விதி

யின் கீழ் மனு செய்யாமலே 96-வது பிரிவின் கீழ் தப்பேத்தா டிக்ரியின் பேரில் அப்பீலும் செய்யலாமென்று முன்னே சொல்லியிருக்கிறது. சம்மன் பிரதிவாதிக்குக் கிடைத்ததும் அதில் கண்டிருக்கும் தேதியில் ஹாஜர் ஆகி தன் கட்சியை தெரியப்படுத்தும் விவரப் பத்திரிகை யென்ற சவுல்வாபை தாக்கல் செய்யலாம். தன கட்சியை குறிப்பிட்டு செவ்வையாக எழுதவேண்டும். பணம் வரவேண்டியதென்று கொண்டுவரும் வியாஜ்ஜியத்திலே வாதியினுடைய தாவாவுக்கு எதிருக பிரதிவாதி வாதியினிடத்திலிருந்து சட்டப்படி கோர்ட்டார் அதிகார வரம்புக்கு மேற்படாமலிருக்கும் நிஷ்கரிஷையான தொகை தனக்கு வரவேண்டியதென்று சொல்லிக்கொண்டால் பிரதிவாதி எதிர்க்கடனை தெரிவிக்கக்கோரும் அந்த பாக்கியின் விவரங்கள் எழுதியுள்ள விவரப் பத்திரிகையை வியாஜ்ஜியத்தின் ஈரங்கி தேதியில் கொண்டுவந்து கொடுக்கலாம். அதை எதிர் வியாஜ்ஜியத்தின் ப்ளெண்டைப்போல் பாவிக்கப்படும். அந்தப் பத்திரிகைக்கு கோர்ட்டுபீஸ் ஸ்டாம்பு ஒட்டவேண்டியதில்லை. 2. லோ. ப. ரூ. 186. வியாஜ்ஜியத்தில் சம்பந்தப்பட்டிருக்கும் சங்கதிகள் ஒப்புக்கொள்ளப்படுகின்றனவா அல்லது மறுக்கப்படுகின்றனவா என்று தெரிந்துகொள்ள கட்சிக்காரர்களை கோர்ட்டார் விசாரிக்கலாம். யாதொரு வியாஜ்ஜியம் பெண்டிங்கிலிருக்கும் காலத்தில் யாதொரு கட்சிக்காரருடைய ஸ்வாதீனத்திலாவது அதிகாரத்திலாவது இருக்கிற தஸ்தவேஜுகளில் கோர்ட்டாருக்கு முக்கியமாகத் தோன்றும் தஸ்தவேஜுகளை பிரமாணப் பூர்வமாய் அந்தக் கட்சிக்காரர் கொண்டுவந்து காட்டும்படி உத்தரவு செய்யலாம். பிரதம விசாரணையினுல் தங்களுக்கு ஆதாரமானதும் தங்கள் ஸ்வாதீனத்திலும் கோர்ட்டாருல் உத்தரவு செய்யப்பட்டதுமான யாவத்து தஸ்தவேஜுகளையும் ஹாஜர் செய்யவேண்டும். அந்த விதம் செய்யாவிட்டால் பிந்திய விசாரணையில் ஹாஜர்படுத்தினுல் முன்னே ஹாஜர் செய்யாததற்கு திருப்திகரமான காரணம் தெரிவித்தாலொழிய கோர்ட்டார் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். கோர்ட்டார் தங்களுடைய சொந்த ரிக்காரிடிலிருந்தாவது வேறு கோர்ட்டிலிருந்தாவது கட்சிக்காரர் செய்துகொள்ளும் மனுவின் பேரிலாவது அல்லது தங்கள் இஷ்டப்படிக்காவது வேறே வியாஜ்ஜியம் அல்லது விவகாரத்தின் கட்டை வரவழைத்துப் பார்க்கலாம். அந்த

விதம் செய்யும் மனுவுக்கு ஆதாரமாக எந்தவிதத்தில் அந்தக் கட்டு முக்கியமானதென்றும் அதற்கு நகல் பெற மனுதாரர் ஜாஸ்தி தாமசமும் செலவும் ஏற்படுமென்றும் அசலை வரவழைப்பது அவசியமென்றும் கண்டு பிரமாணப் பத்திரிகை கொடுக்கவேண்டும். இரு கட்சிக்காரர்களுக்குள் இருக்கும் விவாதங்களை ப்ளெய்ண்டையும் விவரப் பத்திரிகையும் படித்து கட்சிக்காரர்களை அவசியமிருந்தால் விசாரணை செய்தபின்பு தெரிந்துகொள்ளவேண்டும். பிறகு இஷியூக்கள் ஏற்படுத்தப்படும். சங்கதிகளைப் பற்றியும் சட்டத்தைப் பற்றியும் இஷியூக்கள் கொடுப்பார்கள். டிக்ரி பிரப்பிக்கு முன் எப்போதாவது கோர்ட்டார் தங்களுக்கு யுக்தமாகத் தோன்றும் ஷரத்துகளின்படி இஷியூக்களை அடிக்கவோ சேர்க்கவோ திருத்தவோ அதிகாரமுண்டு. புதிதாய் இஷியூ ஏற்படுத்தினல் வேறு ஈரங்கித் தேதி குறிக்கவேண்டும். பிரதம விசாரணையில் யாதொரு சங்கதியைப்பற்றி கட்சிக்காரர்களுக்குள் விவாதம் இல்லாத போனல் உடனே தீர்ப்புச் சொல்லலாம். வியாஜ்ஜியத்தை முடிவாய்த் தீர்மானிக்க சம்மன் பிறப்பித்திருந்தால் கட்சிக்காரர்களில் எவராவது ஆதாரமாக தான் நம்பியிருக்கும் சாட்சியத்தை ஹாஜர் படுத்தாமலும் அதற்குத் தகுந்த காரணம் சொல்லாமலிருந்தால் கோர்ட்டார் உடனே தீர்ப்புச் சொல்லிவிடலாம். சாட்சியம் சொல்லுவதற்காவது தஸ்தவேஜுகளை கொண்டுவந்து காட்டுவதற்காவது சம்மன் கொடுக்கவேண்டுமென்று கேட்கும் கட்சிக்காரர்கள் சட்டப்படி செலவுகளை கோர்ட்டில் கட்டவேண்டியது. பர்மா தேசத்தில் அப்படிக் கட்டவேண்டிய சாக்ஷி ஸம்மன்படி விவரங்களை கீழே பார்க்கலாம்.

## சாட்சி படி.

(1) சாதாரணமாய் வேலை செய்து பிழைக்கும் நேட்டிவ்களுக்கு ரயில் அல்லது ஸ்டீம் போட் மூலமாக வரும்படியிருந்தால் போகவர கடைசி வகுப்பு சார்ஜும் அந்த விதம் வர முடியாமல் கரைமார்க்கம் வரும்படியிருந்தால் மயில் 1-க்கு 4-அணு வீதமும் படகுவழியாய் வரும்படியாயிருந்தால் நாள் 1-க்கு ரூபா 2-வரையிலும் கொடுக்கப்படும். வெளியூரிலிருந்து வந்தால்

வீட்டியில்லாமலிருக்கும்படி நேரிடும் நாள் 1-க்கு 6-அணு வீதம் படி கொடுக்கவேண்டும். கோர்ட்டு இருக்கும். ஊரிலேயே சாட்சி யிருந்தால் நாள் 1-க்கு 4-அணு கிடைக்கும்.

(2) சில்லுண்டி கிராம அதிகாரிகள் பிரயாணம் சம்மந்தப் பட்ட வரையில் மேலே கண்ட விதம் தான். ஆனால் நாள் 1-க்கு மேலே கண்ட படியை இரட்டித்து கொடுக்கப்படும்.

(3) கிருணிகள், வியாபாரிகள், புவா தஜ்ஜிகள், டைதஜ்ஜிகள் முதலிய அந்தஸ்திலுள்ளவர்கள் பிராயணத்திற்காக போகவர இரண்டாவது கிளாஸ் சார்ஜும் போட் வழி யாக வரும்படி யிருந்தால் நாள் 1-க்கு 4-ரூபாய்க்கு மேற்படாமலும் கரைவழியாக வரும்படி யிருந்தால் மயில் 1-க்கு 6-அணு வீதமும் சாப்பாட்டு படி வீட்டி யில்லாத நாள் 1-க்கு ஐரோப்பியர் அல்லது இரோஷி யரா யிருந்தால் ரூபா 3-ம் சுதேசத்தார்களுக்கு 1-ரூபாயும் கொடுக்கப்படும்.

(4) 3-வது வகுப்பில் சொல்லியிருப்பவர்களை விட அந்தஸ்து டையவர்களுக்கு கோர்ட்டுக்கு வந்து போக நேரிடும் சிலவுடன் நாள் 1-க்கு ஐரோப்பியராயாவது இரோ ஷியராகவாவது இருந்தால் 5-ரூபாயும் சுதேசத்தவர் களுக்கு நாள் 1-க்கு 2-ரூபாயும் கொடுக்கப்படும்.

(5) லாயர்களுக்கும் டாக்டர்களுக்கும் ஸ்பெஷல்படி கொடுக் கவேண்டும்.

(6) சம்மன் அனுப்புமுன் மேற்கண்டபடி கோர்ட்டில் கட்டி விடவேண்டும்.

| கட்டளையின் விவரம். | மாந்தஜா மீங்கி கோர்ட்டு. | | | டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டு டிவிஷனல் கோர்ட்டு. | | | நேபையின் ஊண்டெள கோர்ட்டு. | | | மிய்யோ சோர்ட்டும் ஸ்மால்காஸ் சோர்ட்டும் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ரூ. | அ | ப. | ரூ. | அ | ப | ரூ. | அ | ப. | ரூ. | அ | ப. |
| (1) 1. பிரதிவாதிக்கு சம்மன்படி. ... ... | 3 | 0 | 0 | 2 | 0 | 0 | 1 | 0 | 0 | 1 | 0 | 0 |
| | | | | | | | | | | தவாபொருமானம் ரூ.100-க்குகுறைவாகயிருந்தால். | | |
| 2. சாக்ஷி சம்மன் ... | 2 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 | 8 | 0 | 0 | 8 | 0 |
| 3. ஜப்தி அல்லது பிடிவாரண்டு. | | | | | | | | | | | | |
| (a) வாரண்டுக்காக. ... | 4 | 0 | 0 | 3 | 0 | 0 | 2 | 0 | 0 | 1 | 0 | 0 |
| (b) ஜப்தி செய்யப்பட்ட சொத்தை பார்த்துக் கொள்ளும் ஒவ்வொரு மனிதனுக்கும் நாள் 1-க்கு. ... | 0 | 8 | 0 | 0 | 8 | 0 | 0 | 8 | 0 | 0 | 8 | 0 |
| 4. சோஞாஸா உள்பட ஏல உத்திரவு... ... | 3 | 0 | 0 | 2 | 0 | 0 | 1 | 0 | 0 | 0 | 8 | 0 |
| 5. மேலே சொல்லியிராத ஆடர் நோட்டீஸ், இன்ஜங்ஷன் அல்லது உத்திரவு. ... ... | 3 | 0 | 0 | 2 | 0 | 0 | 1 | 0 | 0 | | 8 | 0 |
| 3-ல் பிரஸ்தாபித்திருக்கும் ஜப்தி அல்லது பிடிவாரண்டை தவிர மற்ற கட்டளையை ஒரே பட்டணத்திலோ கிருமத்திலோ உள்ள இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மனிதர்களுக்கு சார்வ் பண்ண வேண்டியிருந்தால் முதல் இரண்டு பேர்வழிகளுக்கு மேல் கண்ட பிரகாரம் ஒரேபடி போதும். | | | | | | | | | | | | |
| மற்றவர்களுக்கு தலைக்கு உபரியாக | 0 | 8 | 0 | 0 | 8 | 0 | 0 | 4 | 0 | 0 | 4 | 0 |

(2) யாதொரு கட்டளையை ரொம்பவும் ஜரூராக சர்வ் செய்ய வேண்டுமென்று கோர்ட்டார் அபிப்பிராயப்பட்டால் அதற்காக கட்சிக்காரர்கள் இரட்டிப்பான சார்ஜ் கட்ட வேண்டும்.

(3) மேல்கண்ட படிகள் செலவுதொகையுடன்சேர்க்கப்படும். அவைகளை கோர்ட்டுபீஸ் ஸ்டாம்பு மூலமாய் செலுத்தவேண்டும்.

கோர்ட்டில் வந்திருக்கிற எவரையாவது சாட்சியம் சொல்லும்படிக்காகிலும் அப்போது அவ்விடத்திலேயே வாஸ்தவத்தில் அவருடைய ஸ்வாதீனத்தில் இருக்கிற யாதொரு தஸ்தவேஜை கொண்டுவந்து காட்டும்படிக்காகிலும், உத்தரவு செய்யலாம். சாட்சி சம்மன்படி சட்ட சம்மதமான காரணமில்லாமல் தவறிவிட்டால் அல்லது சம்மன் பெற்றுக்கொள்வதினின்றும் வேண்டுமென்றே தப்பித்துக் கொண்டிருக்கிறாரென்றும் நம்ப கோர்ட்டார் காரணம் கண்டால், அவர்கள் ஒரு இஸ்தியார் பிறப்பித்து அதில் கண்டிருக்கிற காலத்திலும் இடத்திலும் சாட்சியம் சொல்லவோ தஸ்தவேஜை ஹாஜர் படுத்தவோ சாட்சி ஹாஜராக வேண்டுமென்று கட்டளையிடலாம். அந்த இஸ்தியாருக்கு ஒரு காப்பியை அவர் வீட்டில் ஒட்ட வேண்டும். அப்படிப்பட்ட இஸ்தியாருக்கு பதிலாக சாட்சியைப் பிடிப்பதற்காக வாரண்டு பிறப்பிப்பதோடு 12-வது விதிப்படி போடத்தக்க யாதொரு அபராத தொகைக்கும் ஜப்தி செலவு தொகைக்கும் அதிகப்படாமல் யாதொரு தொகைக்கு அவருடைய சொத்தை ஜப்தி செய்யும்படி உத்தரவு செய்யலாம். ஆனால் அசையாப்பொருளை ஜப்தி பண்ணும்படி எந்த ஸ்மால்காஸ் கோர்ட்டாரும் உத்தரவு செய்யக்கூடாது. அந்த விதம் சொத்து ஜப்தி செய்யப்பட்ட பின்பு தகுந்த காரணம் இருந்ததென்று கோர்ட்டாருக்குத் திருப்திகரமாய் தெரிவித்தால் ஜப்தியை விடுதலைசெய்து ஜப்தி செலவைக் குறித்து தங்களுக்கு யுக்தமாய்த் தோன்றும் உத்தரவைச் செய்யலாம். அந்த விதம் ஹாஜராகாமலும் ஹாஜராகி கோர்ட்டாருக்கு திருப்திகரமாய் காரணம் தெரிவிக்காமலும் இருந்தால் எல்லா விஷயங்களையும் யோசித்து 500-ரூபாய்க்கு அதிகப்படாமல் அபராதம் விதிக்கலாம். மேலும் அவருடைய சொத்தை ஜப்தி செய்து விற்

கும்படி யாகிலும் அல்லது ஏற்கனவே ஜப்தி செய்யப்பட்டிருந்தால் விற்கும்படியாகிலும் உத்தரவு செய்யலாம். கோர்ட்டார் தங்களுக்கு இஷ்டப்பட்ட எவரையும் சாட்சியாக சம்மன் செய்யலாம். கோர்ட்டின் விசாரணை அதிகார எல்லைக்குள்ளாகிலும், அல்லது அந்த எல்லைக்கு வெளியே கோர்ட்டிலிருந்து 50-மைல் தூரத்திற்கு உட்பட்ட இடத்தில் அல்லது அவர் வசிக்குமிடத்திற்கும் கோர்ட்டிற்கும் இடையிலே ஆறில் ஐந்து பங்கு தூரத்திற்கு ரெயில்வே மார்க்கமாயாவது புகைக் கப்பலிலாவது போகக்கூடியதா யிருந்தால் கோர்ட்டிலிருந்து 200-மைல் தூரத்திற் குட்பட்ட யிடத்திலாகிலும் வசித்துக்கொண்டிருந்தா லொழிய ஒருவரையும் சாட்சியம் கொடுக்க நேரில் ஹாஜர் ஆகும்படி உத்தரவு செய்யக்கூடாது. வியாஜ்ஜியத்தைச் சேர்ந்த கோர்ட்டில் வந்திருக்கும் யாதொரு கட்சிக்காரர் கோர்ட்டார் உத்தரவுப்படி சாட்சியம் சொல்லமாட்டேனென்றாலும் யாதொரு தஸ்தவேஜை ஹாஜர்படுத்த மாட்டேனென்றாலும் அதற்கு தகுந்த காரணம் இல்லாத பட்சத்தில் அவருக்கு விரோதமாய்த் தீர்ப்புச் சொல்லலாம்.

### ஈரங்கியைத் தள்ளிவைத்தல்.

தகுந்த காரணத்தின்பேரில் வியாஜ்ஜியத்தின் ஈரங்கியை தள்ளிவைக்கப்படும். ஆனல் அதினலுண்டாகும் செலவைக்குறித்து கோர்ட்டார் உத்திரவு செய்வார்கள். கேசு ஒத்தி போடும்படி நேரிட்டால் எதிரிச் செலவுகளுடன் அடியில் கண்ட வக்கீல் பீசும் கொடுக்கப்படும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1-வது | கிரேட் லாயருக்கு | ரூ. | 33-க்கு | மேற்படாத | எந்த தொகையும் |
| 2 | ,, | ,, | 20 | ,, | ,, |
| 3 | ,, | ,, | 10 | ,, | ,, |

தள்ளிவைக்கப்பட்டதின்மேல் கட்சிக்காரர்களாவது அவர்களில் எவராவது ஆஜராக தவறினல் கோர்ட்டார் இது விஷயமாய் 9-வது ஆர்டரில் கட்டளையிட்டிருக்கிற விதங்கள்படி வியாஜ்ஜியத்தை பைசல் பண்ணவேண்டும். எந்தக் கட்சிக்காரருக்கு வாயிதா கொடுக்கப்பட்டிருக்கிறதோ அவர் தமக்குள்ள சாட்சியத்தை ஆஜர்படுத்தவாவது வியாஜ்ஜியம் பின்னும் நடப்பதற்கு அவசியமாயிருக்கிற வேறே எந்தக் காரியத்தைச் செய்யவாவது வாயிதா

கொடுக்கப்பட்டதோ அதை அந்தவிதம் செய்யத் தவறின போதி லும் கோர்ட்டார் பாதகமில்லாமலே உடனே வியாஜ்ஜியத்தை தீர் மானித்து விடலாம். ஒரு கேஸில் கௌச்சைகள் ஏற்படுத்தி ஈரங் கிக்கு வேறு தேதி கொடுத்த பிறகு அந்த தேதியன்று வாதி வராத காரணத்தால் வியாஜ்ஜியத்தை தள்ள, இந்த பிரிவின்படி தள்ளமுடி யாதென்று தீர்மானிக்கப்பட்டது. 1. ம. 287. எதற்காக வாயிதா கொடுக்கப்பட்டதென்று டயிரியில் கோர்ட்டார் எழுதி யிருக்கிறார் களோ அதைச் செய்யாவிட்டால் தான் அந்த விதம் உத்திரவு செய்ய முடியும். 13. ம. 570. வார்சு சர்ட்டிபிக்கெட்டு ஆஜர் செய்யாத காரணத்தால் இந்த விதிப்படியின் கீழ் வியாஜ்ஜியத்தைத் தள்ளக் கூடாது. 18. ம. 496.

ருஜுப்பளு யார் பேரிலிருக்கிறதோ அவர்கள் தான் முதலில் சாட்சி விசாரிக்கவேண்டும். பிறகு மறு கட்சிக்காரர் தன் சாட்சிக்காரர்களை விசாரிக்கவேண்டும். சாட்சிகளை கோர்ட் டில் பைரங்கமாய் விசாரணைசெய்யவேண்டும். சாட்சி ஜாப்தா வில் சாட்சி பேர் இல்லையென்று கோர்ட்டார் விசாரிக்க ஆட்சே பணை சொல்லமுடியாது. லோ. ப. ரு. 1893-1900, 398. சாட்சி களை விசாரிக்க ஆட்சேபித்தால் காரணங்களை டைரியில் காட்ட வேண்டும். அ. ப. ரு. 1897-1901, 373 ஹாஜர் படுத்தும் எல்லா சாட்சிகளையும் கோர்ட்டார் விசாரிக்கவேண்டும். எல்லா சாட்சி களையும் பப்ளிக்காய் விசாரிக்கப்படுமென்று சொன்னோ மல்லவா? 26-வது ஆர்டரின் கீழ் யாதொரு சாட்சியை கமிஷன்பேரில் விசா ரிக்க உத்தரவு செய்யலாம். வியாதியினாலாவது துர்பலத்தினா லாவது அல்லது ஹாஜர் ஆகவேண்டிய தில்லையென்று சட்டம் சொல்லும் யாதொருவர் கோர்ட்டார் எல்லைக்குள்ளிருந்தாலும் அவர்களை கமிஷனில் விசாரிக்க உத்தரவு செய்யலாம். தவிர தங் கள் யெல்லைக்கப்பால் வசிக்கும் யாதொரு நபரையும் கமிஷனில் விசாரிக்க உத்தரவு செய்யலாம்.

(1) பிரமாணப் பத்திரங்கள் மூலமாயும் யாதொரு சங்கதி களை ருஜுப்படுத்தலாமென்றும் கோர்ட்டார் உத்த ரவு செய்யலாம்.

(2) யாதொரு சாட்சி கோர்ட்டு அதிகார வெல்லையை விட்டுப் போகிறதா யிருந்தாலும் அவருடைய சாட்சியத்தை உடனே எடுக்கவேண்டியதற் குண்டான காரணமிருந்தால் எந்தக் கட்சிக்காரராவது அந்த சாட்சியாவது மனு செய்து கொள்வதின்பேரில் உடனே கட்சிக்காரர்களுக்கு எதிரில் விசாரிப்பார்கள். இல்லாவிட்டால் நோட்டீஸ் கொடுத்து வேறு தினத்தில் சாட்சி விசாரணை செய்து அதை யெழுதி சாட்சிக்குப் படித்துக் காட்டி ஜட்ஜி கையெழுத்து செய்யவேண்டும்.

வியாஜ்ஜியத்தை விசாரணை செய்த பிறகு உடனே யாகிலும் அல்லது வேறு தேதியிலாகிலும் தீர்ப்புச் சொல்லலாம். அப்படிச் சொல்லுமுன் கட்சிக்காரர்களுக்காவது அவருடைய வக்கீல்களுக் காவது நோட்டிஸ் கொடுக்கவேண்டும். தவிர தமக்கு முன்னிருந்தவர் எழுதிவைத்து சொல்லாதிருக்கிற தீர்ப்பைத் தான் சொல்லலாம். தீர்ப்பில் ஜட்ஜி கையெழுத்து போட்ட பிறகு அதில் யாதொன்றை சேர்க்கவும் கூடாது, மாற்றவும் கூடாது. ஆனால் அதில் எழுதுகையில் அல்லது கணக்குப் போடுகையில் நேரிட்ட பிசகுகளையாவது தற்செயலாய் ஏற்பட்ட தவறுதலினாலோ யாதொன்று விட்டுவிடப் படுவதினாலோ அதில் நேரிட்ட பிசகுகளையாவது கோர்ட்டார் எப்போதாகிலும் தாங்களே திருத்தலாம் அல்லது கட்சிக்காரர்கள் கேட்டுக் கொள்வதின்மேல் திருத்தலாம். தவிர ரிவியூ மூலமாகவும் ஒரு தீர்ப்பை மாற்றவும் செய்யலாம், சேர்க்கவும் செய்யலாம். தீர்ப்பில் ஒவ்வொரு கவுச்சையின் பேரிலும் தீர்மானம் கண்டெழுதவேண்டும். வியாஜ்ஜியத்தில் பிடித்த செலவு தொகை எவ்வளவு என்பதையும் யாருக்கு யார் கொடுக்கவேண்டு மென்பதையும் டிக்ரியில் கண்டெழுதவேண்டும். டிக்ரியானது தீர்ப்புக்கு ஒத்திருக்கவேண்டும். சகல வியாஜ்ஜியங்களுக்காகவும் அவைகள் சம்மந்தமாகவும் பிடிக்கும்செலவுகளைப் பற்றிய விஷயமானது கோர்ட்டார் யுக்தாயுக்தப்படி தீர்மானிக்கத் தக்க விஷயமாகும்; அந்த செலவுகளை யார் அல்லது எந்தச் சொத்திலிருந்து எவ்வளவுக் குச் செலுத்தவேண்டு மென்பதைத் தீர்மானிக்கவும் மேற்கண்ட காரியங்களுக்காக அவசியமான சகல உத்தரவுகள் செய்யவும் கோர்ட்டாருக்குப் பூர்த்தியான அதிகார மிருக்கிறது. வியாஜ்ஜிய

த்தை விசாரணைசெய்யக் கோர்ட்டாருக்கு அதிகாரமில்லையென்று கட்சி சொல்வதனாலே மேலே சொன்ன அதிகாரங்களைச் செலுத்து வதற்குத் தடையுண்டாகமாட்டாது. வியாஜ்ஜியம் முடிவை யனு சரித்து எந்த செலவுகளும் கொடுக்கத்தக்க தல்லவென்று கோர்ட் டார் கட்டளையிட்டால், அவர்கள் தங்களுக்குள்ள காரணங்களை எழுத்து மூலமாகச் சொல்லவேண்டும். வருஷமொன்றுக்கு நூற்று க்கு ஆறுக் கதிகப்படாத யாதொரு விதத்தின்படி கோர்ட்டார் செலவுகளின்மேல் வட்டி கட்டிக்கொடுக்கச் சொல்லலாம்; மேலும் அப்படிப்பட்ட வட்டி செலவுகளோடு சேர்க்கப்படும்; அது செலவு களாயிருந்தா லெப்படியோ அப்படியே வசூல் செய்யப்படும்.

டிக்ரியில் செலவு தொகை காணுதிருந்தால் ரிவ்யூ மனு கொடுத்துத் தான் திருத்தவேண்டும். 15. வீ. ரி. 414. பிருதில் கேட்கும் முழுத்தொகையில் எவ்வளவு தொகைக்கு டிக்ரி யேற் படுகிறதோ அதற்குமட்டில் தான் செலவு தொகை கொடுப்பார்கள். 17. ம. 293. சரியான கேசில் ஒரு பிரதிவாதியை மற்றொரு பிரதி வாதியின் செலவை கொடுக்கும்படி உத்தரவு செய்யலாம். அப்பீல் கோர்ட்டார் கீழ் கோர்ட்டார் செலவைக் குறித்துச் செய்யும் உத்த ரவை சரியானதா அல்லவா வென்று கவனிக்க அதிகார முண்டு. 16. ப. 241. 4. க. வீ. கோ. 600. என்றைக்கு தீர்ப்பு சொல்லப் பட்டதோ அந்த தேதி டிக்ரியில் போடவேண்டும். டிக்ரியில் போடும் வக்கீல் பீசு இவ்வளவென்று பர்மாவிலுள்ள சீப் கோர்ட் டாரும், மாந்தளை மீங்கியும் செய்திருக்கும் விதிகளின் விவரங்களை அடியில் காணலாம்.

## வக்கீல் பீசு.

(I) வாதிக்கு வக்கீலிருந்து பிரதிவாதி கட்சியாடி யிருந்தால்,

| | |
|---|---|
| (i) டிக்கிரியில் கண்டிருக்கும் தொகை ரூ. 5000-க்கு மேற்படாம லிருந்தால் | 100-க்கு 5-வீதமும், |
| (ii) 5000 - க்கு மேற்பட்டு 20,000-க்குமேற்படா மலிருந்தால் | 500-ரூபா வரையில் 100-க்கு 5-வீதமும் பாக்கி தொகைக்கு100-க்கு 2-வீதமும், |

| | |
|---|---|
| (iii) 2000 - க்கு மேற்பட்டு 50000-க்கு மேற்படா மலிருந்தால் | 20,000 - க்கு மேல்கண்ட படியும் பாக்கி தொகைக்கு 100-க்கு 1-வீதமும், |
| (iv) 50,000-க்கு மேற்பட்டிருந்தால் | 50,000 - க்கு மேல்கண்ட படியும் பாக்கி தொகைக்கு 100-க்கு $\frac{1}{2}$-வீதமும், |

சட்டப்படி பீசு கிடைக்கக் கூடியது. எந்தக் கேசிலும் 3000-க்குமேல் பீசு கிடைக்காது.

II. கட்சியாடாத கேசுகளில் மேல்கண்ட ரேட்டில் பாதி தான் கிடைக்கும்.

III. எப்படி யிருந்தாலும்

முதலாவது கிரேட் லாயருக்கு 17-ரூபாய்க்கு குறைந்தும்
இரண்டாவது ,, 10 ,,
மூன்றாவது ,, 5 ,,
பீசு கோர்ட்டில் போடமாட்டார்கள்.

IV. பிரதிவாதிக்கு வக்கீலிருந்தாலும் 1-ல் சொல்லிய பிரகாரம் தான் பீசு. தாவா தள்ளி யிருந்தால், பிறுதில் கண்டதொகையின்பேரிலும் ஒரு பாகத்திற்கு மட்டில் டிக்கிரி கொடுக்கப்பட்டிருந்தால் பாக்கி தொகையின்பேரிலும் 1-ல் கண்டபடி பீசு கணிக்கப்படும்.

V. பொறுமானம் போடமுடியாத கேசுகளிலும் நிறைவேற்று மனு வாரண்டு குவாரைமு கேசுகளிலும் அடியில்கண்ட வீதம் பீசு போடப்படும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1-வது | கிரேட் வக்கீலுக்கு | 85-ரூபாய்க்கு | மேற்படாமலும் | |
| 2-வது | ,, ,, | 50 | ,, | ,, |
| 3-வது | ,, ,, | 25 | ,, | ,, |

கட்சியில்லாத நிறைவேற்று மனு கேசுகளில்

| | | | | |
|---|---|---|---|---|
| 1-வது | கிரேட் வக்கீலுக்கு | 10-ரூபாய்க்கு | மேற்படாமலும் | |
| 2-வது | ,, ,, | 5 | ,, | ,, |
| 3-வது | ,, ,, | 3 | ,, | ,, |

பீசு கொடுக்கப்படும்.

VI. ரொம்பவும் கஷ்டமான சட்டப் பாயிண்டுகள் இருக்கும் கேசுகளில் மேலேசொல்லிய பிரகாரம் பீசு கொடுத்தால் போறு தென்று கோர்ட்டார் அபிப்பிராயப்பட்டால் அடியில் கண்ட பீசு கொடுக்கப்படும்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1-வது | கிரேட் லாயருக்கு | 17-ரூபா | முதல் | 170-வரையிலுள்ள | தொகையும் |
| 2-வது | ,, | ,, 10 | ,, | 100 | ,, | ,, |
| 3-வது | ,, | ,, 5 | ,, | 5 | ,, | ,, |

## காபி மனு.

டிக்கிரியை நிறைவேற்ற டிக்கிரி முதலானதுகளுக்கு காப்பி வாங்கவேண்டிய திருப்பதால் அது சம்மந்தம் தெரியவேண்டிய விஷயங்களை இவ்விடத்தில் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

காப்பி மனுக்கு 1-அணு கோர்ட்டு பீஸ் ஸ்டாம்பு ஒட்டி தானு வது தன் வக்கிலாவது கையெழுத்து செய்து கொடுக்கலாம். எவ்வளவு காப்பி ஸ்டாம்பு தாட்கள் வேணுமென்று தெரிந்துகொண்டு அவைகளை வாங்கி கொடுத்து மற்ற பீசுகளையும் ஸ்டாம்புகள் ரூபமாக கொடுக்கவேண்டும். மீப்போன்கள், பிளான்கள் இவைகளுக்கு கோர்ட்டார் அதற்கென்று வைத்திருக்கும் காகிதம் கொடுப்பார்கள். பகல் 3-மணிக்குள் கொடுக்கும் மனுக்களை அன்றே கவனிக்கப்படும். மற்ற மனுக்களை மறுதினம்தான் கவனிக்கப்படும். 3-அணு விலையுள்ள காப்பி ஸ்டாம்புகளில் தான் பர்மா பாஷையில் எழுதவேண்டும். மற்ற பாஷையில் 5-அணு ஸ்டாம்பு காகிதத்தில் எழுதவேண்டும். ஒவ்வொரு தாளிலும் 100 வார்த்தைகள் தான் எழுதப்படும். பர்மா பாஷையில் எழுதுவதற்கு 100-வார்த்தைகளுக்கு 3-அணுவும் மற்ற பாஷையில் எழுதுவதற்கு 100-க்கு 5-அணுவும் பீசு கட்டவேண்டும். மொத்தமாக கணக்கிடுகையில் 100-க்கு குறைந்திருந்தாலும் 100-வார்த்தைகளாகத் தான் பாவிக்கப்படும். தர்ஜுமா அதாவது ஸ்காபியான் செய்யவேண்டியிருந்தால் பிரத்தியேகமாய் 100 - வார்த்தைகளுக்கு 6 - அணு கொடுக்கவேண்டும். பொதுவாக டிக்கிரிக்கு ரூ. 1-4-0 பீசு கட்டவேண்டும். பிளான்கள் முதலானவைகளுக்கு சிரமத்துக்கு தகுந்தபடி கோர்ட்டார் சொல்லும் பீசை கட்டவேண்டும்.

## டிக்கிரியை நிறைவேற்றுதல்.

டிக்ரியை பிறப்பித்த கோர்ட்டாராவது நிறைவேற்றலாம் அல்லது நிறைவேற்றுவதற்காக அது எந்தக் கோர்ட்டுக்கு அனுப்பப்படுகிறதோ அந்த கோர்ட்டாரும் அந்த டிக்ரியை நிறைவேற்றலாம். ஒரு கேசில் சிதம்பரம் டிஸ்டிரிக்ட்டு முன்சீப் கோர்ட்டில் சில சொத்தை விற்க ஒரு டிக்ரி செய்யப்பட்டது. பிறகு அந்த சொத்து இருந்த ஜாகா கூடலூர் கோர்ட்டு எல்லைக்கு மாற்றிவிடவே, டிக்கிரியை கூடலூர் கோர்ட்டுக்கு நிறைவேற்றுவதற்கு மாற்றும்படி மனுசெய்து கொள்ளவே அப்படி செய்யப்பட்ட மனு செல்லாதென்று கட்சி சொல்ல, ஹைகோர்ட்டார் அதை அங்கீகாரம் செய்யாமல் சிதம்பரம் கோர்ட்டுக்கு சரியாகத்தான் மனு செய்து கொள்ளப்பட்டதென்று தீர்மானித்தார்கள். 30. ம. 537. கல்கத்தாவில் அதே விதமான கேசில் இரண்டு கோர்ட்டுகளில் எந்த கோர்ட்டும் நிறைவேற்றக் கூடுமென்றும் டிக்ரியை மாற்ற வேண்டிய அவசிய மில்லையென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 28. க. 238 வேறொரு கோர்ட்டுக்கு டிக்ரி பெற்றவர் 39-வது பிரிவுப்படி மனு செய்துதான் டிக்ரி பிறப்பித்த கோர்ட்டார் டிக்ரியை அனுப்புவார்கள். மேலும் தகுந்த அதிகார முடையவர்களாய் தங்களுக்குக் கீழ்ப்பட்டுள்ள யாதொரு கோர்ட்டுக்கும் அந்த டிக்ரியை தாங்களாகவேயும் அனுப்ப அதிகாரமுண்டு. நிறைவேற்றும் பொருட்டு வேறொரு மாகாணத்திற்கு அனுப்பப்பட்டால் அவ்விடத்தில் அமுலில் இருக்கும் விதிகளினால் தான் நிறைவேற்றப்படும். இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட கோர்ட்டுகளின் அதிகார எல்லைக்குள் அசையாப்பொருள் இருக்கும் விஷயத்திலே அப்படிப்பட்ட கோர்ட்டுகளில் எந்த கோர்ட்டாராவது அந்த பூஸ்திதி முழுவதையும் ஜப்திசெய்து விற்கலாம். வேறொரு கோர்ட்டுக்கு டிக்ரியை நிறைவேற்றும்படி அனுப்ப விண்ணப்பம் செய்துகொண்டால் 21-வது ரூல் 6-வது பிரிவுப்படி அனுப்பும் கோர்ட்டார் (1) அந்த டிக்கிரிக்கு ஒரு நகலேயும், (2) அந்த டிக்கிரி எவ்வளவு மட்டில் நிறைவேற்றப்பட்டிருக்கிறதென்றும் எவ்வளவு பாக்கியிருக்கிற தென்றும் செவ்வையாக கண்டெழுதிய ஒரு சர்டிபிக்கெட்டையும் (தெதகான் லெம்மா) (3) டிக்கிரியை நிறைவேற்ற ஏதாவது உத்திரவு பிறந்தி

ருந்தால் அதற்கு நகலையும் அல்லது செய்யப்படாமலிருந்தால் அது விஷயத்தைக்கண்டும் ஒரு சர்டிபிக்கெட்டையும் அனுப்பவேண்டும்

கல்கத்தா, சென்னப்பட்டணம், பம்பாய் அல்லது ரங்கூனில் நிறைவேற்ற இஷ்டமிருக்கும் பட்சத்திலே, மேற்கண்ட நகல்களை யும் சர்டிபிக்கெட்டுகளையும் ஸ்மால்காஸ் கோர்ட்டுக்கு அனுப்பலாம். ஆனால் வியாஜ்ஜியத்தின் பொருமானம் ரூ. 2000-க்கு மேற்படாம லும் அந்த வியாஜ்ஜியத்தை யாதொரு பிரஸிடென்ஸி (ராஜதானி) அல்லது புரோவின்ஷியல் (உள் மாகாணம்) ஸ்மால்காஸ் கோர்ட் டார் விஜாரிக்கக்கூடாதென்று யாதொரு சட்டத்தாலும் ஏற்படாம லிருந்து இருக்கவேண்டும். தவிர நிறைவேற்ற எந்த கோர்ட்டுக்கு அனுப்பவேண்டுமோ அந்த கோர்ட்டும் டிக்கிரியை பிறப்பித்த கோர்ட்டும் ஒரே ஜில்லாவுக்குள் இருக்கும் விஷயத்தில் நேராகவே டிக்கிரியை அனுப்பப்படும். ஆனால் வெவ்வேறு ஜில்லாக்களிலி ருந்தால் டிக்கிரியை பிறப்பித்த கோர்ட்டார் அது நிறைவேற்றப்பட வேண்டிய ஜில்லாவிலுள்ள டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டாருக்கு 5-வது செக்ஷன்படி அனுப்பவேண்டும். அப்படி அனுப்பாமல் நேராக அனுப்பினால் சட்ட விரோதமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 22. க. 764. டிக்கிரி நகல்கள் தெதகான் லெம்மா முதலியவற்றை வரப்பற்றிக் கொள்ளுகிற கோர்ட்டார் அவைகளை ருஜு வேண்டா மலே தாக்கல் செய்துகொள்ளுவார்கள். மேலே சொன்ன 5-வது செக்ஷன்படி டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டுக்கு அனுப்பப்பட்டால் அந்தக் கோர்ட்டார் தாங்களே நிறைவேற்றலாம். அல்லது தகுந்த அதி காரமுள்ள யாதொரு கீழ் கோர்ட்டாருக்கு மேற்படி டிக்கிரியை நிறைவேற்றும்படி அனுப்பலாம். அப்படி அனுப்பும் உத்தரவில் டிஸ்டிரிக்ட்டு ஜட்ஜ் தானே கையெழுத்து செய்ய வேண்டிய அவசிய மில்லை. 23. க. 480. யாதொரு ஹைகோர்ட்டாரும் அந்த விதம் வேறொரு கோர்ட்டாரால் அனுப்பப்பட்ட டிக்ரியையும் நிறைவேற்று வார்கள். இந்த சந்தர்ப்பத்தில் ஒரு முக்கியமான கேள்வி கேட்கக் கூடும். ஒரு ஊண்டௌவ் கோர்ட்டு 1500-ரூபா டிக்ரியை ஒரு மிப்யோ கோர்ட்டு நிறைவேற்றலாமா? இது சம்மந்தமான எந்தவித தீர்ப்பும் நமக்கு தெரிந்தவரையிலும் பர்மாதேசத்து சட்ட ரிப்போர்ட்டுகளில் பிரசுரம் செய்யப்படவில்லை. இந்தியாவில் கல்கத்தா, பம்பாய், ஹைகோர்ட்டார்கள் அபிப்பிராயப்படி

அந்த விதம் நிறைவேற்றமுடியாது. யாதொரு டிக்ரியை நிறைவேற்றுவதற்கு தங்களுக்கு வியாஜ்ஜிய பொறுமான விஷயமாய் சி. பு. கோ. 6-வது பிரிவுப்படி அதிகாரம் செலுத்த ஏற்பட்டிருக்கும் வரம்புக்குள் டிக்கிரி தொகை இருந்தால் மட்டில்தான் நிறைவேற்றமுடியும் என்று தீர்மானித்திருக்கிறார்கள். 16. ப. 731. 16. க. 465. ஆனால் மதிராஸ் ஐகோர்ட்டார் ஒரு டிக்ரியை வேறு கோர்ட்டுக்கு அனுப்பப்பட்டால் அந்த கோர்ட்டார் தங்கள் அதிகார வரம்புக்குள்ளிருந்தாலும் இல்லாவிட்டாலும் நிறைவேற்றலாம் என்று அபிப்பிராயப்படுகிறார்கள். 17. ம. 309. மேலே சொல்லப்பட்ட தெதகான் லெம்மா நிறைவேற்றும் கோர்ட்டுக்கு அனுப்ப தவறிப்போவதால் முடிவில் ஏற்படும் ஏலத்துக்கு பாதக மொன்றுமில்லை யென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 20. ம. 10. வேறொரு கோர்ட்டுக்கு மாற்றுவதாய் செய்யும் மனுவின்பேரில் ஏற்படும் உத்தரவு சி. பு. கோ. 47-வது பிரிவுப்படி பிறந்ததாக பாவிக்கப்படுவதால் அதற்கு அப்பீல் உண்டு. 8. க. வீ. நோ. 575. நிறைவேற்ற எந்த கோர்ட்டுக்கு டிக்ரி அனுப்பப்படுகிறதோ அந்த கோர்ட்டார் அதை நிறைவேற்றினால் அந்த சங்கதியையும், நிறைவேற்றாவிட்டால் அதன் முகாந்தரங்களையும் எழுதி சர்டிபை செய்து டிக்ரி செய்த கோர்ட்டுக்கு அனுப்பவேண்டும். அந்தவிதம் சர்டிபை செய்த பிறகு டிக்கிரி பெற்றவர் மறுபடியும் நிறைவேற்ற இஷ்டமிருந்தால் டிக்ரி பிறப்பித்த கோர்ட்டுக்கு மறுபடியும் மனு செய்துகொண்டு அதன்மேல் மேற்படி டிக்ரியை வேறு கோர்ட்டுக்கு மாற்றும்படி செய்யவேண்டும். ஒரு கேசில் அடியில்கண்ட விதமாய் நடந்தது. பாட்ணா ஸப் கோர்ட்டில் பிறந்த டிக்ரியை கேயா கோர்ட்டுக்கு மாற்ற மனு கொடுத்து கேட்ட பிரகாரம் அனுப்பப்பட்டது. கேயா கோர்ட்டு எல்லைக்குள் கடன் காரனுக்கு இருக்கும் அசையாப் பொருளை ஜப்திசெய்ய மனுக்கொடுக்க அவ்விதமே ஜப்தி செய்யப்பட்டு சோளாஸாவும் ஏற்பட்டு பிரதிவாதி டிக்ரி தொகையின் ஒரு பாகத்தை கொடுத்த தன்பேரில் ஏலம் நிறுத்தப்பட்டிருந்தது. ஈரங்கி தேதியன்று பிரதிவாதி இறந்ததாக கேள்விப்பட்டு கோர்ட்டார் டிக்கிரிதாரருடைய வக்கீலுக்கு சொல்ல அவர் தனக்கு தன் கட்சிக்காரர் ஒரு தகவலும் சொல்லி அனுப்பாமையால் எந்த விதமான மேல்

நடவடிக்கையும் செய்ய முடியாத ஸ்திதியி லிருப்பதாய் சொல்லிக் கொள்ள கோர்ட்டார் நிறைவேற்று மனுவை தள்ளிவிட்டார்கள். பிறகு இது சங்கதியை கண்டு கேயா கோர்ட்டார் பாட்ணு கோர்ட்டுக்கு மேலே பிரஸ்தாபித்தபடி சர்டிபை செய்தார்கள். பிறகு டிக்ரி பெற்றவன் பாக்கி தொகை விஷயமாய் மறுபடியும் பாட்ணு கோர்ட்டுக்கு மனு கொடுத்து கேயா கோர்ட்டுக்கு மாற்றும்படி கேட்க அது போலவே மறுபடியும் அனுப்பப்பட்டது. பிறகு முதல் தட்வை அனுப்பப்பட்ட காலத்தில் ஏற்பட்ட ஜப்தி பிரகாரம் சொத்தை விற்கப்பட்டது. கடன்காரன் வார்சுதார், கேயா கோர்ட்டார் ஆரம்பத்தில் நிறைவேற்று மனுவை தள்ளி டிக்கிரி பிறப்பித்த கோர்ட்டுக்கு சர்டிபை செய்துவிட்டதால் கேயா கோர்ட்டில் டிக்ரி சம்பந்தமாயுள்ள ஜப்தியுள்பட யாவற்று நடவடிக்கைகளும் முடிவடைந்து விட்டதால் அந்தக் கோர்ட்டுக்கு சொத்தை ஏலம்போட அதிகாரம் இல்லையென்று வாதாட அதை அங்கீகாரம் செய்யாமல் கேயா கோர்ட்டார் நிறைவேற்று மனுவை தள்ளினாலும் ஆரம்பத்தில் ஏற்பட்ட ஜப்தி உயிருடனிருந்த தென்றும் ஏலம் செல்லு மென்றும் தீர்மானித்தார்கள். 9. க. லா. ஜ. 239. டிக்ரியை நிறைவேற்ற அனுப்பப்பட்ட கோர்ட்டார் டிக்ரிதாரர் ஆஜராகாததால் தள்ளப்பட்ட தென்று சர்டிபை செய்துவிட்டால் மறுபடியும் நேராக தாங்கள் டிக்கிரிதாரரிடமிருந்து எந்த நிறைவேற்று மனுவையும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். டிக்ரி பிறப்பித்த கோர்ட்டாருக்குத் தான் மனு கொடுக்கவேண்டும். 3. க. வீ. நோ. 211. ஒரு டிக்கிரியை நிறைவேற்றும் பொருட்டு வேறொரு கோர்ட்க்கு மாற்றுவதாலேயே அதை பிறப்பித்த கோர்ட்டுக்கு நிறைவேற்றும் அதிகாரம் இல்லாமல் போகாது. 1. க. லா. ஜ. 315. நிறைவேற்றும் கோர்ட்டார் தங்கள் ஜில்லாவிலுள்ள விதிகள்படி தான் நிறைவேற்றுவார்கள். 31. ப. 5.

வேறொரு கோர்ட்டாரால் அனுப்பப்படும் டிக்ரியை நிறைவேற்றுகையில் அப்படி நிறைவேற்றும் கோர்ட்டாருக்கு என்ன அதிகாரங்கள் உண்டென்று சற்று விசாரிப்போம். அதை தாங்களே செய்திருந்தால் தங்களுக்கு என்ன அதிகாரமுண்டோ அதே அதிகாரம் நிறைவேற்றுகையில் உடையவர்களாவார்கள். நிறைவேற்றுவதை தடுப்பவர்களையும் அந்த டிக்ரியை தாங்கள் பிறப்

பித்திருந்தால் எப்படியோ அப்படியே தண்டிக்க அதிகாரம் உண்டு. புதிய சிவில் புரோசீஜர் கோடுபடி டிக்கிரி பிறப்பித்த கோர்ட்டில் [illegible] சம்பந்தமான எந்த விஷயத்தையும் டிக்ரியை நிறைவேற்றும் கோர்ட்டார் தீர்மானிக்க அதிகாரமில்லை. டிக்ரியை [illegible] நிறைவேற்றவேண்டியே ஒழிய 25. ம. 537. அது சட்ட விரோதமானதா அல்லவா என்றுவது 22. ப. 475. செல்லுமா செல்லாதா வென்றுவது 6. க. வி. நோ. 796. நிறைவேற்றும்படி செய்யப்படும் உத்திரவு சரியா பிசகா வென்றுவது 21. ப. 456. விசாரிக்க அதிகாரமில்லை. தவிர வாதி வியாஜ்ஜியம் கொண்டுவர நியாயமில்லை யென்றும் ஆனதால் நிறைவேற்றப்படமாட்டாதென்றுவது 4. ம. 324, 15. ப. 216. அல்லது டிக்ரி மோசடியாய் பிறந்ததென்றுவது 15. ப. 307. தீர்மானிக்கவும் அதிகாரமில்லை. மேலே கண்ட பிரகாரம் டிக்ரியை உள்ளது போலவே நிறைவேற்ற வேண்டுமே தவிர அதை குறுக்கவு முடியாது நீட்டவுமுடியாது. 15. ப. 644, 10. ம. 283. டிக்கிரியில் இருக்கும் பிசகுகளையும் தாங்களே திருத்தமுடியாது. அதை பிறப்பித்த கோர்ட்டார் தான் திருத்த முடியும். 13. வீ. ரி. 330.

டிக்ரியில் கண்டிருக்கும் காலத்திற்கு முந்தி நிறைவேற்றவும் 7. அ. 194. டிக்ரியில் இல்லாதிருக்க தவணைகளில் தொகை செலுத்தும்படிக்கும் 2. அ. ஹை. கோ. ரி. 59. உத்திரவு செய்ய அதிகாரமில்லை. நிறைவேற்றும் கோர்ட்டாருக்கு தங்களுக்கு அனுப்பியிருக்கும் டிக்ரி காலாவதியாய்விட்டதா இல்லையாவென்று தீர்மானிக்க அதிகாரமுண்டென்று கல்கத்தா கோர்ட்டார் அபிப்பிராயப்படுகிறார்கள். 23. க. 39. இதற்கு விரோதமாய் அலகாபாத்திலும் பம்பாயிலும் தீர்மானித்திருக்கிறார்கள். 15. ப. 28. 16. அ. 390.

எந்த வியாஜ்ஜியத்தில் டிக்ரி ஏற்படுகிறதோ அந்த வியாஜ்ஜியத்தைச் சேர்ந்த கட்சிகாரர்களுக் குள்ளாவது அவர்களுடைய பிரதிநிதிகளுக் குள்ளாவது டிக்ரியை நிறைவேற்றுவது தீர்த்துவிடுவது அல்லது அதற்கு சரி சொல்லுவது சம்பந்தமாய் உண்டாகிற சகல அம்சங்களையும் ஷை டிக்கிரியை நிறைவேற்றுகிற கோர்ட்டார் மனு மூலமாய் தீர்மானிக்கவேண்டுமே யல்லாமல் பிரத்தியேக

வியாஜ்ஜிய மூலமாகத் நிர்மானிக்கக்கூடாது. இந்த 47-வது பிரிவை விசாலமாய் அருந்தம் செய்யப்படும். 33. க. 857. இந்த விதிப்படி டிக்ரி சரியானதென்று ஒப்புக்கொண்டாலொழிய யாதொரு நடவடிக்கையும் செய்யமுடியாது. 32. க. 262, 27. க. 197. டிக்ரி செல்லாதென்று கட்சி சொன்னால் இந்த விதிப்படி மனு செய்ய முடியாது. 30. ம. 26, 31. க. 179. தவிர இந்த விதிப்படி விசாரிக்கும் அம்சங்கள் டிக்ரி பிறந்ததற்கு பின்னிட்ட விஷயங்கள் சம்மந்தமாயிருக்கவேண்டும். 6. க. லீ. நோ. 796.

பொதுவாய் இந்த விதியின்கீழ் 3-விஷயங்கள் யோசிக்க வேண்டியது ரொம்பவும் அவசியம். (1) எந்த விஷயங்களை கோர்ட்டார் விசாரிக்கலாம்? (2) கோர்ட்டாரால் செய்யப்படும் உத்திரவின் பேரில் அப்பீல் செய்யமுடியுமா? (3) பிரத்தியேகமான வியாஜ்ஜியம் கொண்டுவரலாமா?

முதலாவது விஷயத்தை கவனித்துப்பார்ப்போம். அடியில் கண்ட விஷயங்கள் இந்த விதிப்படி விசாரிக்கவேண்டிய அம்சங்களென்று தீர்மானிக்கப்பட்டிருக்கின்றன:—

(1) சொத்தை ஜப்தி செய்து ஏலம்போடும் விஷயங்கள். 8. க. 28.

(2) ஏலத்தை கறார்செய்ய முடியாதென்று சொல்லும் விஷயம். 25. க. 175.

(3) மார்ட்கேஜ் டிக்ரியில் காணாத இதர சொத்தின்பேரில் நிறைவேற்றுதல். 24. க. 473.

(4) 21-வது ஆர்டர் 71-வது விதிப்படி கோர்ட்டார் உத்திரவன்னியில் டிக்ரிதாரரே சொத்தை ஏலத்தில் வாங்கினார் என்ற காரணத்தால் ரத்து செய்யும்படி கொடுக்கும் மனு. 11. ப. 588.

(5) ஏலத்தை ரத்து செய்ய முயற்சித்தல். 19. க. 683.

(6) நிறைவேற்றுதலை நிறுத்த செய்யும் உத்திரவால் ஜாமீன் கேட்பது. 12. ப. 30.

(7) நிறைவேற்றுதலை நிறுத்தும் சம்மந்தமான விஷயங்கள். 10. அ. 389.

(8) டிக்ரியை மாற்றும் சம்பந்தமான விஷயங்கள். 26. க. 250.

(9) ஏலத்தொகையால் பாக்கியிருக்கும் தொகையை வாபஸ் கொடுக்கும் விஷயம். 2. க. வீ. நோ. 429.

கவனிப்பு:—சில கேசுகளில் மேலேகண்ட விதிப்படியும் சி. ப். கோ. வேறு பிரிவுகள்படிக்கும் சேர்ந்து விசாரிக்கும்படியான அம்சங்களாகவு மிருக்கும்.

(10) ஏல இஸ்தியாரில் சொத்தின் பொறுமானத்தைக் குறைத்து போட்டிருப்பதால் செய்யும் ஆக்ஷேபணையை நிர்ணயம்செய்தல். 130. க. 617.

ஏலத்தை மோசகாரணத்திற்காக ரத்துசெய்ய முயற்சிப்பதை நாம் பார்க்கிறோம். இது சம்மந்தமாய் கவனிக்கவேண்டிய தென்ன வென்றால் நிறைவேற்றும் நடவடிக்கையில் மோசமிருக்கென்று சொல்லலாம் அல்லது டிக்ரியே மோசடியாக ஏற்பட்டதென்று சொல்லலாம். நிறைவேற்றும் நடவடிக்கையில் சொன்னால் மனு மூலமாகத்தான் ஆக்ஷேபிக்கவேண்டும். டிக்ரியையே மோசகாரணத்தினால் ஆக்ஷேபித்தால் கிரம வியாஜ்ஜியத்தால் தான் ஆக்ஷேபிக்கக் கூடும். 5. க. லா. ஜ. 328. டிக்ரியையும் அதை நிறைவேற்றுதலினால் ஏற்பட்ட ஏலத்தையும் மோசடியென்று கிரம வியாஜ்ஜியத்தில் சொல்லலாம். 21. க. 605. ஏலம் ஊர்ஜ்ஜிதமானபிறகும் இந்த விதிப்படி மோச காரணத்தைக்கொண்டு ஏலத்தை ரத்து செய்ய மனு செய்யலாம். 30. க. 142; 27. க. 702. மூன்றும் மனிதன் ஏலத்தில் வாங்கியிருந்தாலும் பரவாயில்லை. 26. க. 324; 28. அ. 681; 18. ம. 439.

டிக்ரிபெற்றவர் அல்லது ஏலத்தில் வாங்கியவர் செய்த மோசத்திற்காக ஏலத்தை ரத்து செய்யும்படி மனு செய்யலாம். 5. க. வீ. நோ. 124. டிக்ரி பெற்றவர்பேரில் மோசத்தை சுமற்றாமல் ஏலத்தில் வாங்கியவர்பேரில் சுமற்றினாலும் இந்த விதிப்படி மனு செய்யலாம். 6. க. வீ. நோ. 279. அதேவிதமாய் ஏலத்தில் வாங்கியவர் பேரில் மோசத்தை சுமற்றாது டிக்ரி பெற்றவர்பேரில் மட்டில் சுமற்றினாலும் மனு செய்யலாம். 6. க. வீ. நோ. 283. நிறைவேற்றும் நடவடிக்கைகள் மோசடியாயிருந்தால் ஏலத்தில் வாங்கியவன்

அதில் சம்மந்தப்படாவிட்டாலும் ஏலத்தை ரத்து செய்யப்படும். 8. க. வி. கோ. 230. ஆனால் மோசம் இல்லாத பட்சத்தில் ஏலத்தில் வாங்கியவன் சம்மந்தப்பட்டவரையில் ஏலத்தை போடும்படி செய்த கோர்ட்டின் உத்தரவு சட்டப்படி யிருந்தாலும் சட்ட விரோதமா யிருந்தாலும் ஏலத்தை ரத்துசெய்யமாட்டார்கள். 1. லோ. ப. ரூ. 22. தவிர இந்த பர்மாகேசில் தீர்ப்பானதாவது ஏலம் எந்த டிக்ரியை நிறைவேற்றி ஏற்பட்டதோ அந்த டிக்ரி மோசடியா யிருந்தாலும் ஏலத்தில் வாங்கியவன் அதில் சம்மந்தப்படாம லிருந் தால் அவனுக்கு ஒரு பாதகமும் வராது. அதேவிதம் ஏலத்தில் வாங்கினவரிடமிருந்து நல்ல எண்ணத்துடனும் சரியான பிரதிப் பிரயோஜனத்திற்கும் வாங்குபர்களுடைய பாத்தியதை டிக்ரி மோசகாரணத்தால் போகாது. 30. ம. 295. அப்பர் பர்மாவில் ஒரு கேசில் டிக்ரி காலாவதி ஆனபிறகும் இந்த விதியின்கீழ் மனு செய்துகொள்ள முடியாமற் போனபிறகும் மோசகாரணத்திற்காக ஒரு ஏல சர்டிபிகேட்டை நிறைவேற்றும் நடவடிக்கையில் கட்சிக்கார ருனவர் வியாஜ்ஜியம் தொடரலாம். அ. ப. ரூ. 1905. சி. பு. கோ. 36. இரண்டாவது இந்த விதியின் கீழ் கவனிக்கவேண்டிய விஷ யம், அப்பீல் உண்டா இல்லையாவென்பது. டிக்ரியை நிறைவேற்றும் கோர்ட்டாருல் உத்தரவு செய்திருக்கவேண்டும். 6. ப. லா. ரி. 780. அப்படியிருந்தால் நிறைவேற்றும விஷயத்தைப்பற்றி யாதொரு அம்சம தீர்மானித்திருக்கவேண்டும். இந்தவிதம் இருந்தால் மட் டில்தான அப்பீல் உண்டு. அப்படி இல்லாதவரையில் அப்பீல் கிடையாது. 9. க. 214. அடியில கண்ட உத்தரவுகளின்பேரில் அப் பீல் உண்டென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

(1) டிரான்ஸ்பர் பெற்ற டிக்ரிதாரர் நிறைவேற்ற கொடுக்கும் மனுவின்பேரில ஏற்படும் உத்தரவு. 27. க. 670.

(2) ஒரே தடவையில ஆள்பேரிலும சொத்தின்பேரிலும் நிறைவேற்ற முடியாதென்று செய்யும உத்தரவு. 7. ப. 301.

(3) கடனாளியை ஜெயிலுக்கு அனுப்பும் உத்தரவு. 65. ப. ரி. 1895.

(4) பிடிபட்ட கடனாளியை விடுதலை செய்யும் உத்தரவு. 21. ம. 29.

(5) மோசகாரணத்திற்காக ஏலத்தை ரத்துசெய்யும் உத்தரவு. 10. க. 410.

(6) மார்ட்கேஜ்டு வைத்தவனுக்கு டிக்ரி தொகையை கொடுப்பதற்கு முதலில் கொடுத்த காலத்தை ஜாஸ்தி செய்யும் உத்தரவு. 14. அ. 520.

(7) அந்த விதம் ஜாஸ்திபடுத்த முடியாதென்று செய்யும் உத்தரவு. 26. ப. 121.

(8) டிக்ரிதாரரின் பிரதிநிதி என்று கொடுக்கும் நிறைவேற்றும் மனுவில் பிரதிநிதிதான், அல்லது அல்லவென்று செய்யும் உத்தரவு. 25. ம. 545.

(9) கடனாளியின் பிரதிநிதியென்று நிறைவேற்றும் நடவடிக்கையில் கட்சிக்காரரை சேர்ப்பது. 17. அ. 244.

(10) அந்தவிதம் பிரதிநிதியாக்கப்பட்டவரால் செய்யும் ஆட்சேபனையை ஏற்காமல் செய்யும் உத்தரவு. 17. அ. 245.

(11) வார்சு சர்ட்டிபிக்கெட் டில்லாமல் டிக்ரி பெற்றவரின் பிரதிநிதியை நிறைவேற்ற அனுமதி கொடாத உத்தரவு. 5. அ. 212.

(12) ஏலத்தை நிறுத்தாது நடத்தவேண்டுமென்று செய்யும் உத்தரவு 23. ம. 568.

(13) ஏல இஸ்தியாரில் சொத்தின் பொருமானம் குறைத்து போட்டிருக்கிறதென்று கடனாளி சொல்லும் ஆட்சேபனை ஏற்காமல் செய்யும் உத்தரவு. 30. க. 617. ஆனால் இதற்கு விரோதமாய் சென்னபட்டணம் தீர்ப்பு ஒன்று இருக்கிறது. 27. ம. 259.

(14) ஏலத்தை நிறுத்தியோ நிறுத்தாமலோ செய்யும் உத்தரவு. 31. க. 373 ; 7. அ. 73.

(15) எல இஸ்தியாரில் சொத்தின் பெருமானம் குறைவாக கண்டிருக்கிற காரணத்தால் எலத்தை நிறுத்தும்படி கொடுக்கும் மனுவை தள்ளும்படி செய்யும் உத்தரவு. 23. ம. 563.

இன்ஜங்க்ஷன் உத்தரவு கொடுக்கப்பட்டுள்ள டிக்ரியாயல்லாமல் மற்றபடி இருக்கும் யாதொரு டிக்ரியை அதின் தேதியிலிருந்தும், அதில் குறிக்க ஒரு தேதியில் யாதொரு தொகையை செலுத்தவேண்டு மென்றாவது சொத்தை ஒப்பிக்கவேண்டுமென்றாவது காணப்பட்டிருந்தால் அந்தவிதம் செலுத்தவோ ஒப்பிக்கவோ தவறின தேதியிலிருந்தும் 2 வருஷ காலவரையில் நிறைவேற்றலாம். ஆனால் அந்தவிதம் நிறைவேற்ற சாதாரண டிக்ரியாயிருந்தால் 3-வருஷமும் ரிஜிஸ்டராயிருந்தால் 6-வருஷமும் கெடுவு காலமுண்டு. அந்த டயத்துக்குள் நிறைவேற்ற மனு போடவேண்டும். பொதுவாக கெடுவுகாலம் டிக்ரி தேதிமுதல் தொடங்கும். அப்பீல் ஏற்பட்டிருந்தால் அந்த டிக்ரி தேதிமுதல் ஆரம்பித்தும் டிக்ரி திருத்தப்பட்டால் அந்த தேதிமுதல் கணக்கிடவேண்டும். டிக்ரியை நிறைவேற்றும்படிக்காவது நிறைவேற்றுவதற்கு சகாயமாக யாதொரு வகைசெய்யும்படிக்காவது தகுந்த கோர்ட்டுக்கு சட்டத்தை அனுசரித்து மனு செய்துகொண்டிருந்தால், அந்த தேதிமுதல் கெடுவு தொடங்கும். பிரதிவாதிகளில் சிலர் மட்டில் செய்திருந்தாலும், அப்பீல் செய்யாத பிரதிவாதிகள்பேரில் கூட அப்பீல் டிக்ரி தேதியிலிருந்து தான் கெடுவுகாலம் கணக்கிடவேண்டும். 16. க. 598; 23. ம. 60 ; 22. ப. 500. 3-வருஷ கெடுவு மனுகொடுத்த தேதியிலிருந்து கணக்கு செய்யவேண்டுமே ஒழிய அதை முடிவுசெய்து உத்தரவு பிறப்பித்த தேதிமுதலல்ல. 30. க. 761.

சட்டத்தை அனுசரித்து மனுசெய்து கொள்ளுதல் என்பதன் அருத்தத்தை அடியில்வரும் கேசுகளால் தெரிந்து கொள்ளலாம் :—

(1) வார்சு சர்ட்டிபிக்கேட்டு இல்லாமல் நிறைவேற்று மனு போட்டாலும் ; 20. ப. 76.

(2) டிக்ரி காப்பி போடவேணுமென்றானல் இருந்தும் அது இல்லாமல் நிறைவேற்று மனு செய்தல் ; 28. ம. 557.

(3) போதுமான ஸ்டாம்பு இல்லாது மனு செய்தாலும்; 6. ம. 181.

(4) நிறைவேற்று மனுவில் முந்திய நிறைவேற்று மனு தேதி கண்டு எழுதாமல் கோர்ட்டார் உத்திரவுப்படி டயத்துக்குள் எழுதிக்கொடுக்கும் மனு; 25. க. 594; 23. அ. 162.

(5) நிறைவேற்று மனுவை தாக்கல் செய்த வக்கீல் பவரில் தேதிபோடத் தவறினாலும்; 26. ம. 197.

(6) டிக்கிரியை மேடோர் வாங்கியவர் மனுசெய்தாலும்; 2. ம. லா. ட. 339.

(7) சரியான பவர்மூலமாய் அதிகாரம் பெறுத ஏஜெண்டு போட்ட மனுவை ஆக்ஷேபனை செய்யப்படாமலிருந்தால்; 105. ப. ரி. 1882.

(8) டிக்ரி பெற்றவன் தன் டிக்ரியை வேறொருவன் ஜப்தி செய்திருந்த காலத்தில் மனு செய்தாலும்; 13. ம. லா. ஜ. 265.

(10) கட்டணப்பீசு கட்டாததற்காக நிறைவேற்று மனு தள்ளப்பட்டாலும்; 24. வீ. ரி. 459. இந்த கேசுகளில் மேலேகண்ட மனுக்கள் தேதியிலிருந்து டிக்ரிக்கு 3-வருஷம் உயிருண்டு.

அடியில்கண்ட கேசுகளில் சட்டத்தை அனுசரித்து மனு செய்து கொண்டதாக தீர்மானிக்கப்படவில்லை.

(1) கடனாளி இறந்தபிறகு அவன் வார்சுகளை கட்சிக்காரர்களாக சேர்க்காது நிறைவேறு மனு செய்தால். 19. அ. 337.

(2) அசையும்பொருளை ஜப்திசெய்ய கொடுத்த மனுவில் 21. ஆடர் 12-வது விதிப்படி சொத்து ஜாப்தா கொடாதது. 2. அ. வீ. நோ. 70.

மேலே சொல்லப்பட்ட தகுந்த கோர்ட்டு என்பதின் கருத்து அடியில் கண்டிருக்கும் தீர்ப்புகளால் விளங்கும் :—

(1) டிக்ரி பிறப்பித்த கோர்ட்டார். வேறொரு கோர்ட்டுக்கு ஒரு டிக்ரி மாற்றி, மறுபடியும் பிறப்பித்த கோர்ட்டு

க்கு திருப்பி அனுப்பிய பிறகு மாற்றப்பட்ட கோர்ட்டாரிடம் தெகெக்கான் லெம்மா இல்லாது நிறைவேற்று மனுசெய்தல். 168. ப. ரி. 1888.

(2) மாற்றப்பட்ட கோர்ட்டாருக்கு பிறப்பித்த கோர்ட்டாருக்கு திருப்பி அனுப்பும்படி செய்யும் மனு. 2. க. வீ. நோ. 271.

இந்த கேசுகளிலும் 3-வருஷம் டிக்கிரிக்கு உயிர் கொடுக்கும். டிக்கிரியை நிறைவேற்றுவதற்கு சகாயமான யாதொரு நடவடிக்கை செய்யப்பட்டிருந்தாலும் 3-வருஷம் டிக்கிரிக்கு உயிர் இருக்குமென்று மேலே சொன்னோமல்லவா? சகாயமான நடவடிக்கைகள் எதுவென்பது அடியில் கண்டிருக்கும் தீர்மானங்களைக் கொண்டு தெரிந்துகொள்ளலாம்:—

(1) ஏல விற்பனையை ரத்து செய்யும்படி கடனாளி ஆக்ஷேபனையை தள்ளி ஏலத்தை ஊர்ஜிதம் செய்யும்படி டிக்கிரிதாரர் கொடுக்கும் மனு; 21. ச. 23.

(2) முந்தி நடக்கவேண்டிய ஏலத்தை ஒத்தி போட்டதும் மறுசோ ஞாவா வேண்டுமென்று டிக்கிரிதாரர் வாய்மொழியாக கேட்டுக் கொள்ளுதல்; 10. க. 851.

(3) ஏற்கனவே ஜப்தி செய்யப்பட்ட சொத்தை ஏலம் போடும்படி வாய்மொழியாக விண்ணப்பம் செய்தல்; 17. க. 53.

(4) ஜப்தி செய்யப்பட்ட சொத்தில் தனக்கு பாத்தியமிருக்கிறதென்று வருபவனுடைய மார்ட்கேஜுக்கு உட்படுத்தி ஏலம் போடும்படி மனுக்கொடுத்தால்; 15. க. 363.

(5) ஏலத்தில் சொத்தை டிக்கிரிதாரர் வாங்கி அதை தன் வசப்படுத்திக் கொடுக்கும்படி போடும் மனு; 27. க. 709.

(6) பாத்திய மனுவில் சாட்சிகளுக்கு சம்மன் கொடுக்க வேணுமென்று கொடுக்கும் மனு; 5. அ. 344,

(7) புரோசஸ் அல்லது கட்டளைப் பீசுகொடுத்தல் கல்கத்தா கோர்ட்டார் படி இது நிறைவேற்றுவதற்கு சகாயமான நடவடிக்கை. 23. க. 374. பம்பாய் கோர்ட்டாரும் அலகபாத் ஐகோர்ட்டாரும் விரோதமான அபிப்பிராயப்படுகிறார்கள். 22. ப. 722 ; 30. அ. 179.

(8) ஒரு டிக்கிரியை பிறப்பித்த கோர்ட்டார் வேறுகோர்ட்டுக்கு மாற்றவேண்டி டிக்கிரிதாரர் போஸ்ட்டு ஸ்டாம்புகள் கொடுத்தல் ; 7. ம. 307.

(9) ஏலத்தில் வாங்க டிக்கிரிதாரர் மனுசெய்து கொள்ளுதல் ; 22. அ. 399 ; 21. ப. 331. ஆனால், கல்கத்தா கோர்ட்டார் இது நிறைவேற்றுவதற்கு சகாயமான நடவடிக்கை அல்லவென்று சொல்லுகிறார்கள். 10. க. வீ. நோ. 209.

(10) மாற்றப்பட்ட கோர்ட்டிலிருந்து பிறப்பித்தகோர்ட்டுக்கு மறுபடியும் மாற்றும்படி மனுசெய்தல் ; 6. ம. 81.

(11) டிக்கிரி மேடோவர் வாங்கியபவர் கடனாளி வார்சுகளை சேர்க்க கொடுக்கும் மனு ; 17. ம. லா. ஜ. 485.

(12) டிக்கிரி மேடோர் வாங்கியவர் டிக்கிரியில் தன் பேரை பதிந்து கொள்ளும்படி செய்யும் மனுவும், கடனாளிகளில் ஒருவருக்கு நோட்டீஸ் கொடுக்க டயம் வேணுமென்று கொடுக்கும் மனுவும் ; 29. அ. 301.

(13) டிக்கிரிதாரர் இறந்ததும் சட்டவார்சு தன் பெயரை அதில் போடும்படி கொடுக்கும் மனு ; 17. ம. லா. ஜ. 475 ; 19. ப. 261.

(14) டிக்கிரி பிறந்து 1-வருஷத்துக்கு மேலாயிருந்தால் கடனாளிக்கு நோட்டீஸ் கொடுக்கவேணுமென்று செய்து கொள்ளும் விண்ணப்பம் ; 28. ம. 557.

(15) கோர்ட்டு டிபாசிட்டிலிருக்கும் ஏலத்தொகையை தரும்படி கொடுக்கும் மனு ; 17. ம. 165.

(16) அந்தவிதம் வாய்மொழியாக விண்ணப்பம் செய்தாலும்; 22. ப. 340.

(17) கோர்ட்டுக்கு வெளியே கடனாளி தரும் தொகையை ஸர்டிபை செய்ய டிக்கிரிதாரர் கொடுக்கும் மனு; 12. க. 608.

(18) டிக்கிரிதாரர் கையெழுத்துடன் கடனாளி சில தொகை கொடுத்தாய்விட்டதாகவும் பாக்கி தொகையை கொடுக்க டயம் வேணுமென்று கண்டு கொடுக்கும் மனு; 20. க. 696.

(19) அதேவிதமாய் இருவரும் மனுக்கொடுத்து ஏலத்தை ஒத்திவைக்கும்படி கொடுக்கும் மனு; 4. அ. 60.

(20) டிக்கிரியிலுள்ள செலவு தொகையை நிறைவேற்றும்படி செய்யும் மனு; 15. ப. 245.

(21) இறந்த கடனாளி வார்சுகளை கட்சிக்காரராக சேர்ப்பதற்கு டிக்கிரிதாரர் கொடுக்கும் மனு; 24. க. 778.

(22) டிக்கிரிதாரர் தன் டிக்கிரியை வேறொருவர் ஜப்தி செய்தாலும் தன் டிக்கிரியை நிறைவேற்றக்கொடுக்கும்மனு; 24. க. 778.

(23) நிறைவேற்று மனுவை மனுதாரர் கேட்டுக்கொண்ட பிரகாரம் தள்ளுப்படி செய்தாலும்; 22. ப. ரி. 1905.

(24) அந்தவிதம் கேட்டுக் கொள்ளாமலே தள்ளுபடி செய்திருந்தாலும; 17. அ. 106.

(25) பெண்டிங்கிலிருக்கும் நிறைவேற்று மனுவை தள்ளும்படிக்கும் பிறகு தான் நிறைவேற்றுவதாயும் கண்டு செய்யும் மனு; அலகபாத் கோர்ட்டுபடி டிக்கிரிக்கு உயிர் கொடுக்கும். 16. அ. 75. கல்கத்தா ஹைகோர்ட்டார் வேறு அபிப்பிராயப்படுகிறார்கள். 23. க. 817.

(26) புரோசஸ் பீசு கொடுக்காததற்காக நிறைவேற்று மனுவை தள்ளுபடி செய்தாலும்; 16. ம. 457.

(27) நிறைவேற்று மனுவை தள்ளிய உத்திரவை ரிவியூசெய்ய கொடுக்கும் மனு ; 27. க. 285.

(28) ஏலத்தை நிறுத்தவும் ஆனால் ஜப்தியை அதே ஸ்திதியில் வைக்கும்படியும் கண்டுகொடுக்கும் மனு ; 2. ம. 218.

(29) பிசகாய் ஆனால் நல்ல எண்ணத்தால் இறந்த கடனாளி பேரில் நிறைவேற்றும்படி மனு செய்து கொண்டாலும். 35. க. 1047.

அடியில்கண்ட கேசுகளில் நிறைவேற்றுவதற்கு சகாயமாயெடுத்துக்கொண்ட நடவடிக்கைகளாகாதென்று தீர்மானிக்கப்பட்டன.

(1) ஜப்தியிலிருந்து விடுதலையான சொத்து ஜப்தி செய்ய பாத்தியமுண்டென்று டிக்ளேர் செய்யும்படி டிக்கிரிதாரர் கொண்டுவரும் வியாஜ்ஜியம் ; 17. க. 268.

(2) ஜப்தி செய்யப்பட்ட சொத்தின் ஒரு பாகத்தை விடுதலை செய்து நிறைவேற்றும் நடவடிக்கைகளை ரத்து செய்யும்படி டிக்கிரி பெற்றவர் செய்யும் மனு ; 20. க. 255.

(3) கடனாளி தொகையை கோர்ட்டுக்கு வெளியே கொடுத்தாய் விட்டதென்று கண்டு கொடுக்கும் மனுவை ஆக்ஷேபித்து டிக்கிரி பெற்றவர் செய்யும் மனுவோ நடவடிக்கையோ ; 4. க. வீ. நோ. 152.

(4) ஏலத்தை ரத்துசெய்ய கடனாளி செய்திருக்கும் மனுவை ஆக்ஷேபிக்க டிக்கிரி பெற்றவர் வக்கீல் கோர்ட்டில் ஆஜராகுதல் ; 16. க. 747.

(5) விற்றால் குறைந்த விலைக்கு போகும் என்ற காரணத்தை காட்டி ஏலத்தை நிறுத்தவேண்டுமென்றும் சொல்லாது மற்றகாரணங்களைக் கண்டு அந்தவிதம் நிறுத்தும்படி செய்யும் மனு ; 30. க. 761.

(6) சொத்துக்களை இன்னவரிசையாக ஏலம் போடவேணுமென்று கடனாளி செய்யும் மனுவை ஆக்ஷேபித்து டிக்கிரி பெற்றவர் கொடுக்கும் மனு ; 30. க. 761.

(7) வலத்தை தள்ளிவைக்கும்படி டிக்கிரி பெற்றவர் கொடுக்கும் மனு; 3. அ. 757.

(8) டிக்கிரி தொகையை கொடுக்க டயம் வேணுமென்று கேட்கும் மனு; 27. க. 385.

(9) நிறைவேற்றுதலை நிறுத்த செய்யும் மனு; 1. அ. 580.

(10) நிறைவேற்றும் எண்ணத்துடன் டிக்கிரி காபிக்கு மனு செய்தல்; 11. ம. 336.

(11) முந்தி நிறைவேற்று மனுவுடன் தாக்கல் செய்த டிக்கிரி காப்பியை வாப்ஸ் கொடுக்கும்படி செய்யும் மனு; 23. ப. 311.

(12) ஜப்தி செய்யப்பட்டிருக்கும் ஜாபிதாக்களுக்கு மனுசெய்தல்; 21. ம. 400.

(13) நிறைவேற்ற டிக்கிரியை அனுப்பப்பட்ட வேறு கோர்ட்டுக்கு ஷை கோர்ட்டார் அந்த டிக்கிரியின் ஒரு பாகத்தை நிறைவேற்றிய பிறகு ஷை டிக்கிரியை பிறப்பித்த கோர்ட்டுக்கு அனுப்புமபடி செய்யும மனு; 22. க. 827.

(14) ஜட்ஜ்மெண்டு பிரகாரம் டிக்கிரியை திருத்தக் கொடுக்கும் மனு; 20. அ. 300.

(15) வலத்தில் வாங்கிய டிக்கிரி பெற்ற கிரயதாரர் வலத்தை ஊர்ஜ்ஜிதம்செய்ய கொடுக்கும் மனு; 9. க. வீ. நோ. 193.

(16) கொடுத்த புரோசஸ் பீஸ் போறுதென்று கோர்ட்டார் செய்த உத்திரவின்பேரில் டிக்கிரிதாரர் பீசை செலுத் 20. ப. 179.

(17) வலத்தில் வாங்கிய டிக்கிரி பெற்ற கிரயதாரர் தான் கொடுக்கவேண்டிய கிரயத்தொகையை தனக்கு வரவேண்டிய டிக்கிரித் தொகைக்காக பதிவு செய்து

கொள்ளும்படி டிக்கிரி பெற்றவர் செய்யும் மனு; 23. க. 196.

(18) நிறைவேற்றி அதில் கிடைத்த தொகைக்காக கொடுக்கும் ரசீது; 88. ப. ரி. 1884.

(19) கடனாளியால் கோர்ட்டில் கட்டியிருக்கும் தொகையை கொடும்படி செய்யும் மனு. கல்கத்தா கோர்ட்டுபடி நிறைவேற்றுவதற்கு சகாயமான நடவடிக்கையாகாது. 10. க. 549. மதருஸ் கோர்ட்டார் வேறு அபிப்பிராயப் பட்டிருக்கிறார்கள். 2. ம. 174.

(20) எவ்வரசு கிடைத்த டிக்கிரி பெற்றவர் கோர்ட்டிலிருக்கும் தொகை கொடுக்கும்படி செய்த மனு. 10. க. வீ. நோ. 28.

தவணைகண்ட சில டிக்கிரிகளில் (இன்ஸ்டால்மெண்ட்டு டிக்கிரி) ஒரு தவணை தவறினால் முழுத்தொகையும் கொடுக்க வேண்டுமென்று கண்டிருந்தால் முதலில் தவறின தேதிமுதல் 3-வருஷத்திற்குள் நிறைவேற்றாமல் போனால் காலாவதியாகிவிடும். 2. அ. 443. தவறினால் முழுத்தொகையையும் டிக்கிரி பெற்றவரின் இஷ்டப்படி நிறைவேற்றும்படியாயிருந்தாலும் முதலில் தவறியதேதி முதல் காலாவதி கணக்கிடவேண்டும். 24. க. 281. ஆனால் தவறுதலுக்கு பிறகு சில தொகையை பெற்றுக்கொண்டு பரவாயில்லையென்று டிக்கிரி பெற்றவரிருந்தால் அடுத்த தவறுதல் தேதிமுதல்தான் காலாவதி ஆரம்பிக்கும். 19. ம. 162. பலர்பேரில் டிக்கிரி ஏற்பட்டிருந்தால் சிலர்பேரில் நிறைவேற்றினாலும், எல்லோர் பேரிலும் நிறைவேற்றினதாகவே தான் பாவிக்கப்படும். 8. வீ. ரி. 80. அதேவிதமாக பலபேருக்கு அனுகூலமாய் டிக்கிரி ஏற்பட்டிருந்தால் அவர்களில் சில டிக்கிரிதாரர்கள் நிறைவேற்றினாலும் எல்லாரும் நிறைவேற்றினதாகவே எண்ணப்படும். 3. ம. 79.

யாதொரு டிக்கிரியை நிறைவேற்ற 48-வது பிரிவுப்படி காலவரையறை 12-வருஷம் என்று ஆரம்பத்தில் சொன்னோம். அந்தக் காலத்துக்குள் மனுத்தேதிக்கு அடுத்து முந்திய 12-வருஷத்திற்குள் எப்போதாகிலும் நிறைவேற்ற வொட்டாமல் கடனாளி

மோசடியாகவாவது பலாத்காரமாகவாவது தடைசெய்திருந்தால் மேலே சொன்ன 12-வருஷகாலம் கழிந்தபிறகும் நிறைவேற்றும் படி உத்திரவு செய்யப்படும். ஒரு கேசில் டிக்கிரி நிறைவேற்று மனு போட்ட 3-வருஷத்திற்குள் வேறு மனு போடப்பட்டது. ஆனால் அது டிக்கிரி பிறந்த 12-வருஷத்திற்கு மேலாகிவிட்டது. கடனாளி மனு காலாவதி யாகிவிட்டதென்று கட்சி சொல்ல, பல தடவைகளில் கடனாளி தன்னை பிடிக்கும்படி கிளம்பிய வாரண்டு களிலும் தப்பித்துக்கொள்ள மோசடியான நடவடிக்கைகள் செய்த தாய் ருஜூ ஏற்பட்டதால், மனு காலாவதியாகவில்லை யென்று தீர் மானிக்கப்பட்டது. 6. க. லா. ஜ. 401.

## டிரான்ஸ்பர் செய்யப்பட்டவர்களும் சட்ட சம்மந்தமான பிரதி நிதிகளும்.

யாதொரு டிக்ரியை டிரான்ஸ்பர் செய்யப்பெருகிற ஒருவர் கட னாளி முதல் முதல் டிக்கிரி பெற்றவர்மேல் செலுத்தும்படியான நியாயங்கள் எதாவதிருந்தால் அவைகளுக்குட்பட்டு தான் அந்த டிக்ரியை கைக்கொள்ளவேண்டும். ஒருவரில்லாமல்பலர் பட்சத்திலே கூட்டாக டிக்கிரி பிறப்பிக்கப்பட்டிருந்தால், அப்படிப்பட்டவர் களில் யாராகிலும் ஒருவராவது ஒருவருக்கு மேற்பட்டவர் களா வது, அடியிற் கண்டதற்கு விரோதமாக எந்ததிட்டமாயினும் டிக் கிரியில் விதிக்கப்பட்டிருந்தாலன்றி மற்றபடி, அவர்களெல்லோ ருடைய பிரயோசனத்திற்காகிலும் அவர்களில் யாராவது இறந்து போயிருந்தால் இறந்தவர் போக ஜீவித்திருக்கிறவர்களுடைய பிர யோசனத்திற்கும் இறந்துபோனவருடைய சட்ட சம்மதமான பிரதிநிதிகளுடைய பிரயோசனத்திற்காகிலும் டிக்கிரி முழுமையை யும் நிறைவேற்றும்படி விண்ணப்பம் செய்துகொள்ளலாம். இந்த விதியின்படி செய்துகொள்ளப்பட்ட விண்ணப்பத்தின்மேல் டிக் கிரியை நிறைவேற்றும்படி உத்தரவு கொடுப்பதற்காகத் தகுந்த காரணமிருப்பதாய்க் கோர்ட்டாருக்குத் தோன்றினால், அவர்கள் ஷை விண்ணப்பத்தில் சேராதவர்களுடைய சுதந்தரங்களைக் காப் பாற்றுவதற்காகத் தங்களுக்கு அவசியமாய்த் தோன்றும் உத் தரவு செய்யவேண்டும்.

யாகொரு டிக்கிரியாவது. இரண்டு அல்லது பல நபர்கள் பட்சத்திலே கூட்டாக டிக்கிரி பிறப்பிக்கப்பட்டிருந்தால் டிக்கிரி பெற்றவர் எவருக்கேனும் அந்த டிக்கிரியிலுள்ள சுதந்தரமாவது எழுத்து மூலமான ஒப்படையினாலாகிலும் சட்டப்படியாகிலும் ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டால், அந்தப்படி ட்ரான்ஸ்பர் செய்யப்பெற்றவர் அந்த டிக்கிரியை நிறைவேற்றுவதற்காக அதை பிறப்பித்த கோர்ட்டாருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளலாம்; மேலும், இந்த விண்ணப்பமானது ஷை டிக்கிரி பெற்றவரால் செய்யப்பட்டிருந்தாலெப்படியோ அதேப்பிரகாரமும் அதே திட்டங்களுக்குட்பட்டும் டிக்கிரியை நிறைவேற்றலாம். ஆனால் ஷை டிக்கிரியாவது மேலே சொன்னபடியுள்ள சுதந்தரமாவது ஒப்படையினால் ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டிருந்தால், அப்படிப்பட்ட விண்ணப்பத்தைக் குறித்து ட்ரான்ஸ்பர் செய்தவருக்கும் தீர்ப்பான கடனாளிக்கும் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அந்த டிக்கிரியை நிறைவேற்றுவதைக் குறித்து அவர்களுக்கு (ஏதாவது) ஆட்சேபணை யிருந்தால் அதைக் கோர்ட்டார் விசாரிக்கிறவரையிலே டிக்கிரியை நிறைவேற்றக் கூடாது. மேலும், பணம் செலுத்துவதற்காக இரண்டு அல்லது பல நபர்கள்மேல் பிறப்பிக்கப்பட்ட டிக்கிரியானது அவர்களில் ஒருவருக்கு ட்ரான்ஸ்பர் செய்யப்பட்டிருந்தால், அதை மற்றவர்கள் மேல் நிறைவேற்றக் கூடாது. தீர்ப்பான கடனாளியானவர் டிக்கிரி பூர்த்தியாய் நிறைவேற்றப்படுவதற்கு முன்னே இறந்துபோனால், டிக்கிரி வைத்திருப்பவர் இறந்து போனவருடைய சட்டசம்மதமான பிரதிநிதியின்மேல் நிறைவேற்றும்படி அதைப் பிறப்பித்த கோர்ட்டாருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டும். அப்படிப்பட்ட சட்டசம்மதமான பிரதிநிதியின்மேல் டிக்கிரி நிறைவேற்றப்பட்டால் அவர்—இறந்துபோனவருடைய சொத்து வெவ்வளவு தம்முடைய ஸ்வாதீனத்திற்கு வந்து கிரமமாய் ஒரு வகை செய்யப் படாதிருக்கிறதோ அவ்வளவுக்கு மாத்திரம் உத்தரவாதத்தை நிச்சயிக்கும் காரியத்திற்காக, டிக்கிரியை நிறைவேற்றுகிற கோர்ட்டார்—தாங்களாகவேயாவது டிக்கிரிபெற்றவர் விண்ணப்பம் செய்து கொள்வதின்மேலாவது தங்களுக்கு யுக்தமாகத் தோற்றுகிற கணக்குகளைக் கொண்டுவந்து காட்டும்படி ஷை சட்டசம்மதமான பிரதிநிதியை நிர்ப்பந்திக்கலாம். கடனாளி இறந்த பிறகு

அவன் பிரதிநிதியை சேர்க்கும்படி மனுக்கொடுத்தால் போது மென்றும் புதிதாய் நிறைவேற்று மனு கொடுக்கவேண்டிய தவசியமில்லை யென்றும் தீர்மானமாயிருக்கிறது. 4. இ. கே. 839.

ஒரு கேசில் ஒருவருடைய பிரதிநிதியென்று நினைத்து வாதி டிக்கிரி வாங்கி அது விஷயம் தெரிந்து காலாகாலத்தில் அந்த டிக்கிரியை ரத்து செய்யாத வாஸ்தவமான பிரதிநிதி அந்த டிக்கிரி தன்னைக் கட்டுப்படுத்தாதென்று கட்சிசொல்ல முடியாது. 4. இ. கே. 1013. . இறந்துபோன யாதொரு நபருடைய சட்ட சம்மதமான பிரதிநிதியாக யாதொரு கட்சிக்காரர்மேல் டிக்கிரி பிறப்பிக்கப்பட்டு, அந்த டிக்கிரியானது இறந்து போனவருடைய சொத்திலிருந்து பணம் செலுத்துவதற்கான டிக்கிரியாயிருக்கிற பட்சத்திலே அதை அப்படிப்பட்ட யாதொரு சொத்தை ஜப்தி செய்து விற்று நிறைவேற்றலாம். அப்படிப்பட்ட சொத்து தீர்ப்பான கடனாளியினுடைய ஸ்வாதீனத்தி லிராமலும், இறந்து போனவருடைய சொத்தில் எவ்வளவு பாகம் தம்முடைய ஸ்வாதீனத்தில் வைத்திருப்பதாக ருஜுவாகிறதோ அவ்வளவு பாகத்தைத் தாம் கிரமமாய் உபயோகப்படுத்தி யிருக்கிறதாகக் கோர்ட்டாருக்குத் திருப்திகரமாய் தெரிவிக்கத் தவறியுமிருந்தால், சொத்தின் எவ்வளவு பாகத்தின் விஷயத்தில் மேலே கண்டபடி கோர்ட்டாருக்குத் திருப்திகரமாய்த் தெரிவிக்கத் தீர்ப்பான கடனாளி யானவர் தவறியிருக்கிறரோ அவ்வளவு பாகத்திற்கு அந்த டிக்ரியானது நேராய் அவர்மேல் செய்யப்பட்டிருந்தா லெப்படியோ அப்படியே அந்த டிக்கிரியை அவர்மேல் நிறைவேற்றலாம். பிரதிநிதிபேரில் பிறக்கும் டிக்கிரியை இறந்தவர் சொத்தின்பேரில் நிறைவேற்ற வேண்டியிருந்தாலும் பிரதிநிதிபேரில் ஏற்பட்ட டிக்கிரியாகத்தான் பாவிக்கப்படும். இதின் கருத்து அடியில் சொல்லியிருக்கும் கேசால் தெரியவரும். இந்த கேசில் இறந்தவர் எழுதிக்கொடுத்த புரோநோட்டின்பேரில் வாதி வியாஜ்ஜியம் கொண்டுவந்து இறந்தவர் பெண்சாதிபேரில் டிக்கிரி வாங்கினபிறகு மூலபுருஷனால் விடப்பட்ட உயில் மூலமாய் இறந்தவர் பேரப்பிள்ளை வார்சாக யேற்பட டிக்கிரி பெற்றவர் அந்தப் பேரப்பிள்ளைபேரில் டிக்கிரி நிறைவேற்ற அந்தவிதம் நிறைவேற்ற முடியாதென்று தீர்மானிக்கப்பட்டது. 3. இ. கே. 737.

## நிறைவேற்று மனு.

டிக்கிரிபெற்றவர் அதை நிறைவேற்ற இஷ்டப்பட்டால் கோர்ட்டாருக்கு மனு செய்யவேண்டும். ஒரு கேசில் மட்டும் தான் வாய்மொழியாக மனு செய்துகொள்ளலாம், பண டிக்கிரியாயிருந்தால் டிக்கிரி சொல்லும் காலத்திலேயே வாய்மொழியாக விண்ணப்பம் செய்துகொள்ளலாம். ஆனால் கடனாளி கோர்ட்டு கட்டிடத்துக்குள் இருந்தால்தான் அந்த விதம் கோர்ட்டார் நிறைவேற்றுவார்கள். மற்றெல்லா கேசுகளிலும் எழுத்து மூலமான நிறைவேற்று மனு கொடுக்கவேண்டும். 10. க. 817. அதற்காக 11-வது விதிப்படி அச்சிடப்பட்டிருக்கும் பாரங்களில் எழுதிக்கொடுக்கவேண்டும். கடனாளி ஸ்வாதீனத்தில் இராத அசையும் பொருளை ஜப்தி பண்ணும்படி மனு செய்துகொண்டால் சரியான விவரம்கண்டு சொத்து ஜாப்தா ஒன்று தயாரித்து மனுவுடன் சேர்க்கவேண்டும். அசையாப்பொருளை ஜப்தி பண்ணும்படி மனு செய்துகொண்டால் அந்த பொருளை அடையாளம் கண்டுபிடிப்பதற்கு போதுமான விவரத்தையும் எல்லைகள் சர்வே நம்பர்களையும் கண்டிருக்கும் மீபோன் பிளான்களுடன் சேர்ந்து கடனாளிக்கு சொத்திலிருக்கும் பாகம் அல்லது சுதந்தரத்தை இன்னதென்கிற விவரத்தையும் மனுவில் அடியில் எழுதவேண்டும். நிறைவேற்ற மனுவை ஏற்றுக்கொண்டதும் ரிஜிஸ்டரில் பதிவு செய்து சட்டப்படிக்கும் மனுவின் ரீதிக்கு தக்கபடி நிறைவேற்ற உத்தரவு செய்யப்படும். நிறைவேற்று மனு சட்டத்துக்கு ஒத்து எழுதப்படாமலிருந்தால் கோர்ட்டார் தள்ளிவிடலாம். தள்ளாமல் திருத்திக் கொடுக்கும்படி கொடுத்த டயத்துக்குள் அந்தப்படி திருத்திக்கொடுக்காவிட்டால் தள்ளிவிடப்படும். பண டிக்கிரி கேசுகளில் தொகைக்கு வேண்டிய மட்டில் தான் சொத்தை ஜப்தி செய்யவேண்டும். அப்பார்பர்மா தீர்மானப்படி கடனாளி ஆளின்பேரிலும் சொத்தின்பேரிலும் ஏக காலத்தில் நிறைவேற்றக்கூடாதென்று ஸ்பெஷல் காரணமிருந்தால் ஒழிய நிறைவேற்றும்படி உத்திரவு கொடுக்கவேண்டும். அ. ப. ரூ. 1904 1-(வாதி மாங்தாரீன்-பிரதிவாதி மாங்தின்) பொதுவாக தற்காலத்தில் எல்லா கோர்ட்டுகளிலும் நிறைவேற்று மனுவை ஏற்றுக்கொண்டதும் நோட்டீஸ் மட்டில் கொடுக்கிறார்கள். சி. பு. கோ. 21-வது ஆர்டர் 22-வது விதியில் சொல்லப்பட்டிருப்பதென்னவென்

ருல், அடியில் கண்ட இரண்டு கேசுகளில் தான் ஏன் டிக்கிரியை நிறைவேற்றக் கூடாதென்பதற்கு காரணம் தெரிவிக்கும்படி நோட்டீஸ் கொடுக்கவேண்டும்.

(1) டிக்கிரி பிறந்து ஒரு வருஷத்துக்குமேல் நிறைவேற்ற மனு கொடுத்தாலும்,

(2) கடனாளி இறந்ததன்மேல் ஷெயான் சட்டப் பிரதிநிதியின்மேல் நிறைவேற்ற மனுகொடுத்தாலும்,

ஆனல் அந்தவிதம் நோட்டீஸ் கொடுப்பதால் விசேஷ கால தாமதம் ஏற்படுமென்ருவது நியாயவிரோதம் உண்டாகுமென்ருவது கோர்ட்டார் அபிப்பிராயப்பட்டால் அந்தக் காரணங்களைக் கண்டு நோட்டீசுக்கு பதிலாக வாரண்டுவிடலாம். டிக்கிரி எக்ஸ்பார்ட்டியாக பிறந்ததென்னும் காரணத்தாலே நோட்டீஸ் தான் கொடுக்கப்படும் என்று அருத்தமாகாது. இந்த விதம் கொடுக்கும் நோட்டீஸ் பிறப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து சாதாரண டிக்கிரிகள் சம்மந்தப்பட்டவரையில் 3-வருஷ காலமும் அவைகளின் ஸெர்டிபை செய்யப்பட்ட நகல் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருந்தால் 6- வருஷகாலமும் இ. லி. ஆ. 182-வது ஆர்டிகல்படி உயிருண்டு. பிறப்பிக்கப்பட்ட தேதி யென்ருல் உத்திரவு செய்யப்பட்ட தேதி அல்ல. தயாரித்து எழுதப்பட்டதேதி. 30. ம. 80 ; 10. க. வீ. நோ. 303. பிரதிவாதிபேரில் சர்வ் செய்ய அவசியமில்லை. 27. ப. 622. அந்தவிதம் நோட்டீஸ் பிறப்பித்து சில பிசகுகளடங்கிய நிறைவேற்று மனுவின்பேரில் ஏற்பட்டிருந்தாலும் போதும். 25. க. 594. நோட்டீஸ் மட்டிலும் கொடுத்து சொத்தை ஜப்தி செய்யவோ அல்லது நிறைவேற்றும்படி எவ்வித உத்திரவும் ஏற்படாமலிருக்கும் பட்சத்தில் நிறைவேற்று மனு காலாவதி ஆகிவிட்டதா இல்லையாவென்னும் விஷயத்தை தீர்மானம் செய்யப்பட்டதாக நினைக்க இடம் கிடையாது 3. இ. கே. 47. நோட்டீஸ்படி ஆஜராகி ஆக்ஷேபனை சொன்ஞல் அதை விசாரித்து உத்திரவு செய்யப்படும். ஆஜராகாமலும் ஆஜராகி சரியான காரணம் தெரிவிக்காமலுமிருந்தால் நிறைவேற்றும்படி கோர்ட்டார் உத்திரவு செய்வார்கள், அந்த விதம் பிறப்பிக்கும் புரோஸெஸ் என்னும் கட்டளையில் இன்ன தேதிக்குள் நிறைவேற்ற வேண்டுமென்று கண்டெழுதியிருக்கும் அந்த வாரண்டு கை

வச மில்லாமல் பேதா கட்டுளியை பிடிக்க முடியாது. 5. அ. 318. எந்தவிதம் நிறைவேற்றப்பட்ட தென்றும், நிறைவேற்றப்படா விட்டால் அதற்கு காரணத்தையும் கண்டு புரோஸஸை கோர்ட்டாருக்கு திருப்பி அனுப்பப்படும்.

### டிக்கிரியை நிறைவேற்றுமல் நிறுத்தி வைப்பது.

டிக்கிரி பிறப்பித்த கோர்ட்டார் அந்த டிக்ரியின்மேல் அப்பீல் செய்ய சட்டப்படி உள்ளகாலம் கழிவதற்கு முன்போதுமானகாரணமுண்டென்று விண்ணப்பம் செய்தால் டிக்கிரியை நிறைவேற்றுமல் நிறுத்திவைக்கலாம். அப்பீல் செய்த பிறகு டிக்கிரி பிறப்பித்த கோர்ட்டாருக்கு அந்த விதம் உத்திரவு செய்யும் அதிகாரம் கிடையாது. அப்பீல் கோர்ட்டார் தான் செய்யவேண்டும். அப்பீல் செய்யப்பட்டிருக்கிற காரணத்தைக் கொண்டுமட்டில் நிறைவேற்றுமல் நிறுத்திவைக்கப்படமாட்டாது. பிறப்பித்த கோர்ட்டுக்கோ அல்லது அப்பீல் கோர்ட்டுக்கு நிறுத்திவைக்க விண்ணப்பம் செய்பவருக்கு,

(1) அந்த விதம் நிறுத்தாமல் போனுல் உண்மையான நஷ்டம் நேரிடுமென்றும்,

(2) கால தாமசமன்னியில் சுருசுருப்பாய் அந்தப்படி விண்ணப்பம் செய்யப்பட்டிருக்கிறதென்றும்,

(3) முடிவில் ஏற்படும் டிக்கிரிப்படி நடக்க ஜாமீன் கொடுத்திருப்பதாயும் கோர்ட்டாருக்கு திருப்தியாக தெரிந்தாலொழிய நிறுத்திவைக்கும் உத்திரவு செய்யக்கூடாது. நிறுத்திவைக்க கொடுக்கும் மனுவை முடிவு செய்யுமுன் ஒருதலையான (எக்ஸ்பார்டி) உத்திரவுசெய்யகோர்ட்டாருக்கு அதிகாரமுண்டு. பொதுவாகக் காரணங்களைக்காட்டி பிரமாணப் பத்திரிகை ஒன்று மனுவுடன் சேர்த்து கொடுக்கவேண்டும். சட்டப்படி இந்த மனுவைப் பற்றி நோட்டீஸ் கொடுக்கவேண்டிய அவசிய மில்லாமற் போனுலும் வழக்கத்தை அனுசரித்து கோர்ட்டார் கொடுக்கலாம்.

இந்த விதம் 41-வது ஆர்டர் 5-வது விதிப்படி அப்பீல் செய்யாத கேசில் யாதொரு டிக்கிரியை நிறைவேற்றுமல் நிறுத்திவைக்க

சீப் கோர்ட்டாருக்கு அதிகாரமில்லையென்று சவபத்தி செட்டிக்கும் மாங்ஸேயினுக்கும் நடந்த கேசில் தீர்மானமாயிருக்கிறது. 5. லோ, ப. ரூ. 124. அப்பீல் கோர்ட்டார் நிறுத்திவைக்கும்படி செய்யும் உத்திரவை தெரியாது டிக்கிரியை நிறைவேற்றினால் அது செல்லாது. 33. க. 927. நிறுத்த முடியாது என்று அப்பீல் கோர்ட்டார் செய்யும் உத்திரவுக்கு அப்பீல் இல்லை. 29. ப. 71. அப்பீல் கோர்ட்டார் 5-வது விதிப்படி மனுவைத் தள்ளிவிட்டா லும் 6-வது விதிப்பிரகாரமும் மனு செய்யலாம். 25. ப. 243. அதாவது டிக்ரியை அப்பீல் செய்து அது முடிவடையாம லிருக்கையில் அப்பீல் செய்தவர் தகுந்த காரணம் காட்டினால் டிக்கிரி பிறப்பித்த கோர்ட்டார் முடிவில் ஏற்படும் டிக்கிரிக்கு சரிசொல்ல டிக்கிரி பெற்றவரிடமிருந்து ஜாமீன் வாங்கலாம். தவிர அப்பீல் கோர்ட்டாரும் அந்தவிதம் செய்யும்படி பிறப்பித்த கோர்ட்டாருக்கு உத்திரவு செய்யலாம். மேலும் யாதொரு டிக்கிரியை நிறைவேற்றும் பொருட்டு அசையாப்பொருளை விற்கும்படி உத்தரவு செய்யப்பட்டிருந்து அந்த டிக்கிரிபேரில் செய்த அப்பீல் பைசலாகாம லிருக்கையில் கடனாளி டிக்கிரி பிறப்பித்த கோர்ட்டாரிடம் மனுசெய்து கொள்ளுவதன்மேல் ஏலத்தை ஜாமீன் முதலான கண்டிஷன்பேரில் நிறுத்திவைக்கலாம். அந்தவிதம் அப்பீல் கோர்ட்டாருக்கும் அதிகாரமுண்டு. 34. க. 1037. நிறைவேற்றுவதற்காக வேறு கோர்ட்டுக்கு அனுப்பப்பட்டிருந்தால் அந்த கோர்ட்டாரும் டிக்கிரியை பிறப்பித்த கோர்ட்டுக்கோ அல்லது டிக்கிரி அல்லது நிறைவேற்றுவது சம்மந்தமாய் அப்பீல் அதிகாரமுடைய யாதொரு கோர்ட்டுக்காவது டிக்கிரியை நிவறவேற்றாமல் நிறுத்தி வைக்கும்படி மனுசெய்து உத்திரவு வாங்கும்படி கடனாளிக்கு 21-வது ஆர்டர் 26-வது விதிப்பிரகாரமும் டயம் கொடுத்து தன் கோர்ட்டில் நிறைவேற்றுதலை நிறுத்தலாம்.

## டிக்கிரியை நிறைவேற்றும் விதம்.

பணம் செலுத்துவதற்கான டிக்கிரியை (1) கடனாளியை சிவில் ஜெயிலில் அனுப்பியும் (2) ஷை யானுடைய சொத்தை ஜப்தி செய்து விற்பனை பண்ணுவதாலும் நிறைவேற்றலாம். ஆளைப்பிடித்து ஜெயிலுக்கு அனுப்ப வேண்டுமென்று கண்டு நிறைவேற்று மனுவில் காணப்பட்டிருந்தால், கடனாளியை பிடிப்பதற்கு பதி

லாக ஒரு நோட்டீஸ் கொடுத்து அதில் கண்ட தேதியில் கோர்ட்டுக்கு ஆஜராகி ஜெயிலுக்கு அனுப்பக்கூடாது என்பதற்கு காரணமிருந்தால் சொல்லும்படி உத்திரவு கோர்ட்டார் செய்யலாம். நோட்டீஸ்படி ஆஜராகாவிட்டால் கடனாளியை பிடிக்கும்படி வாரண்டுக்கு உத்திரவு செய்யப்படும். ஆள் வாரண்டை நிறைவேற்றும் விஷயத்தில் தெரிந்துக்கொள்ளவேண்டியவைகளாவன :—

(1) சூரியாஸ்தமனத்திற்கு பின்பும் சூரியோதயத்துக்கு முன்னும் யாதொரு குடியிருப்பு வீட்டில் நுழையக்கூடாது.

(2) யாதொரு குடியிருப்பு வீடானது கடனாளி அனுபோகத்திலிருந்து அந்த வீட்டிற்குள் பிரவேசிக்க அனுமதி கொடுக்காமலும் எந்தவிதமும் பிரவேசிக்க வொட்டாமல் தடுத்தால் வீட்டின் வெளிக்கதவை உடைத்து திரக்கலாம். ஆனால் உத்தியோகஸ்தர் வீட்டுக்குள் பிரவேசித்த பிறகு கடனாளி இருப்பதாக நம்புவதற்கு தமக்கு நியாயமாயிருக்கும் யாதொரு அறையின் கதவை உடைத்து திறக்கலாம்.

(3) அந்த அரை தேசாசாரப்படி பப்ளிக்காக வராத ஸ்திரீயின் அனுபோகத்திலிருந்தால் அந்த ஸ்திரீ அதை விட்டு போகவேண்டிய சாவகாசம் கொடுத்த பிறகு பிரவேசிக்கவேண்டும்.

(4) டிக்கிரி தொகையை கொடுத்தால் உடனே கடனாளியை விட்டுவிடவேண்டும்.

டிக்கிரியை நிரைவேற்றும் பொருட்டு எந்த ஸ்திரீயை பிடிக்கவும் ஜெயிலுக்கு அனுப்பவும் உத்தரவு செய்யமுடியாது.

மேலே கண்ட நோட்டீஸ்படி கடனாளி ஆஜரானாலும் அல்லது ஆஜராகாமல் பிடித்துக்கொண்டு வரப்பட்டதின்மேல் வருமையினாலோ அல்லது வேறே போதுமான காரணத்தினாலாவது தொகையை செலுத்த சக்தி இல்லை யென்று கோர்ட்டாருக்கு தெரியவந்தால் கடனாளியை விட்டுவிடலாம். அப்படி 40-வது விதிப்படி உத்திரவு செய்யுமுன் கோர்ட்டார் கவனிக்கவேண்டிய விஷயங்கள்.

(1) வியாஜ்ஜிய தேதிக்குப்பிந்தி அதில் ஏற்படும் டிக்கிரியை நிறைவேற்ற வொட்டாது தடுக்கவேணுமென்ற எண்ணத்துடன் ஏதாவது சொத்துகளை மாற்றியோ மறைத்தோ வைத்திருக்கிறாரு என்னும் விஷயம்.

(2) வேறு டிக்கிரிதாரருக்கு கடனாளி அக்கிரமமாய் யாதொரு தொகை செலுத்தியிருக்கிற விஷயம்.

(3) டிக்கிரி தேதிக்கு பிறகு கடனாளி தன் கையில் தொகையிருந்தும் கொடாது அசட்டை பண்ணுவது.

(4) டிக்கிரியை நிறைவேற்ற தடுக்க எண்ணம் கொண்டு கோர்ட்டு அதிகார எல்லையைவிட்டு போய்விடுவார் என்னும் விஷயம்.

இவைகளை விசாரித்து கடனாளியை விடுதலை செய்யக்கூடும். அப்படி விடுதலை செய்யும் உத்தரவின்பேரில் அப்பீலுண்டு. 21. ம. 29. அப்படி விடுதலை செய்யப்பட்ட கடனாளியை மறுபடியும்பிடிக்கலாம். கடனாளியை விடுதலைசெய்யாவிட்டால் ஜெயிலுக்கு அனுப்பிவிடவேண்டும். தவிர கடனாளிக்கு இன்சால்வென்சி ஆக்ட்டு பிரகாரம்தீவாளி மனுசெய்து கொள்ளலாமென்றும் அதில்கண்ட நிபந்தனைகளின்படி அவர் நடக்கும் பட்சத்திலே அவர் விட்டுவிடப்படுவாரென்னும் கோர்ட்டார் தெரிவிக்கவேண்டும். தவிர கடனாளி அந்த விதம் தான் விண்ணப்பம் செய்துகொள்ள உத்தேசித்திருப்பதை தெரிவித்து 1-மாதம் கெடுவுக்குள் தாம் விண்ணப்பம் செய்வதாயும் வேண்டியபோது கோர்ட்டில் அஜராவதாக கோர்ட்டுக்கு திருப்திகரமான ஜாமீன் கொடுத்தால் கோர்ட்டார் கடனாளியை விடுதலை செய்யவேண்டும். அந்தப்படி விண்ணப்பம் செய்யாமலாவது வேண்டியபோது அஜராகாமலாவதிருந்தால் ஜாமீன் தொகையை வசூலிப்பதுடன் கடனாளியை ஜெயிலுக்கும் அனுப்பலாம். கடனாளியை பிடித்த காலத்திலிருந்து கோர்ட்டுக்கு முன்பாக கொண்டு வரக்கூடியவரையிலே போஜனவர்த்தனை கோர்ட்டில் செலுத்தவேண்டும். தவிர முதல்தடவை செலுத்தவேண்டிய போஜன வர்த்தனை தொகையை கடனாளியை ஜெயிலுக்கு அனுப்புமுன் அந்த மாசத்தில் பாக்கியிருக்கும் நாட்களுக்கு கோர்ட்டில் செலுத்தவேண்டும். பிந்திய மாசங்களுக்கு அந்தந்த மாதம் முதல் தேதிக்கு முன்னிட்டு

மாதம்தோறும் முன் பணமாய் ஜெயில் உத்தியோகஸ்தரிடத்தில் செலுத்தவேண்டும். மேல்பர்மாவிலும் கீழ் பர்மாவிலும்கட்டவேண்டிய மாத ஜெயில் படி அல்லது போஜனவர்த்தனை :—

(1) ஐரோப்பியர்களுக்கும் அமெரிக்கா தேசத்தவர்களுக்கும் ரூபா 31-க்கு மேல்படாத தொகை.

(2) யுரேஷியர்கள், ஆப்பிரிக்காகாரர்கள்மேல் இந்தியர்கள். 25 ரூபாய்

(3) ஆர்மீனியர்கள், ஜுக்காரர்கள் மொகலாயர்கள், பார்சிக்காரர்கள் 12 ,,

(4) மற்ற ஜாதியார் 10 ,,

50-ரூபாய்க்கு மேற்பட்ட தொகையைச் செலுத்துவதற்காக டிக்கிரி பிறந்திருந்தால் 6-மாத காலத்திலும் மற்ற கேசுகளில் 6—வாரத்துக்கும் ஜெயிலில் வைக்கப்படுவார்கள். ஆனால் அடியில் கண்ட கேசுகளில் மேல்கண்ட டயத்துக்குள் விடுதலை செய்யப்படுவார்கள் :—

(1) வாரண்டில் கண்ட தொகையை ஜெயில் உத்தியோகஸ்தரிடம் கொடுத்தாலும்,

(2) டிக்கிரிக்கு வேறுவிதமாய் பூர்த்தியாக ஒழுங்கு செய்யப்பட்டாலும்; இந்த கேசில் கோர்ட்டார் உத்திரவன்னியில் விடுதலை செய்யப்படமாட்டாது.

(3) டிக்கிரி பெற்றவர் கேட்டுக்கொண்டாலும் இந்தகேசிலும் கோர்ட்டார் உத்திரவு வேண்டும்.

(4) போஜனவர்த்தனை கொடுக்காதிருந்தாலும்.

இந்த விதம் விடுதலை பெற்ற கடனாளியை அதே டிக்கிரிக்காக மறுபடியும் வாரண்டில் பிடிக்கமுடியாது. தவிர கடனாளி அபாய வியாதியாக யிருக்கிறதாக கோர்ட்டாருக்கு தெரிந்தால் வாரண்டை நிறைவேற்றுமுன் ரத்து செய்யலாம். பிடிப்பட்டதற்கும் ஜெயிலில் வைக்கப்படுவதற்கேற்ற தேகஸ்திதி யுடையவரா யில்லையென்று அபிப்பிராயப்படுகிற பட்சத்திலே கடனாளியை விடுதலைசெய்யலாம். மேலும் ஜெயிலுக்கு அனுப்பப்பட்ட பிறகும் ஒட்டு வியாதி இருக்கிற தென்னும் காரணத்தால் கவர்ன்மெண்டாரும் கடனாளிக்கு

அபாயமான வியாதி கண்டிருக்கிறதென்னும் காரணத்தால் கோர்ட்டாரும் விடுதலை செய்யலாம். இந்தவிதம் விடுதலையாகும் கடனாளியை மறுபடியும் பிடிக்கலாம் ஆனால் பிடித்து மேலே சொன்ன காலவரையறைக்கு அதிகப்படாமல் ஜெயிலில் வைக்கவேண்டும்.

இந்த சந்தர்ப்பத்திலே ஞியாபகத்தில் வைக்கவேண்டிய விஷயம் ஒன்றுண்டு. அதை 135-வது பிரிவில் பிரஸ்தாபம் செய்யப்பட்டிருக்கிறது. அதாவது யாதொரு கோர்ட்டு முன்பாக ஒரு விஷயம் பைசலாகாமல் பெண்டிங்கி லிருக்கும் காலத்தில் அதற்கு சம்மந்தப்பட கட்சிக்காரர்களும், அவர்களுடைய லாயர்களும், அவர்களுடைய பவர் பெற்ற ஏஜண்டுகளும் யாதொரு ஸம்மன்படி நடந்து கொள்ளும் அவர்களுடைய சாட்சிகளும் அந்த விஷயத்தின் காரியத்துக்காக அப்படிப்பட்ட கோர்ட்டுக்கு போய்க்கொண் டிருக்கையிலும் அங்கே அஜராயிருக்கையிலும் அங்கிருந்து திரும்பி வந்துகொண்டிருக்கையிலும் அவர்களை பிடிக்க முடியாது. ஆனால் கடனாளிபேரில் ஏற்பட்டிருக்கும் டிக்ரியை ஏன் நிறைவேற்றி ஜெயிலுக்கு அனுப்பக்கூடாதென்று பிறப்பிக்கும் நோட்டீஸ்படி கோர்ட்டுக்கு வரும் கடனாளியை பிடிக்கலாம். பங்காளத்தார் ஒருவர் சென்னப்பட்டணத்திற்கு ஒரு கேஸ்சம்பந்தமாய் அக்டோபர்மாதம் 24-தேதி போனார். அந்த கேசை 27-தேதி கூப்பிட்டு ஏழுவாரம் தேதி மாற்றிப்போட்டார்கள். அந்தக் கேசை பார்த்து விட்டு திரும்பி வறலாமென்று அவ்விடம் தங்கியிருந்தவரை வாரண்டில் பிடிக்க அவரை இந்தப் பிரிவின் கீழ் விடுதலை செய்துவிட்டார்கள். 4. ம. 317. இந்த கேசை அலகாபாத் ஐகோர்ட்டார்கள் அங்கீகாரம் செய்யவில்லை. அந்த கேசின் விஷயங்களாவன. பம்பாயில் வசித்த சிலர் பேரில் காசியில் ஒருவர் தப்பேத்தா டிக்ரி பெற்றார். பிரதிவாதிகள் பம்பாயிலிருந்து காசிக்கு வந்து 1909ஆு மார்ச்சுமீ 27உ கோர்ட்டுக்கு வந்து மனுசெய்ய அவர்கள் மனு தள்ளுபடி செய்யப்பட்டது. பிறகு அவர்கள் தாங்கள் பங்களாவுக்கு வந்து ரெயில்வே ஸ்டேஷனுக்குப்போய் டிக்கெட் வாங்கி ரெயிலுக்குள் போனவுடன் வாரண்டில் பிடித்தார்கள். இந்த பிரிவின் கீழ் கோர்ட்டிலிருந்து தாங்கள் திரும்பி வருவதாய் பாவிக்கவேண்டுமென்றும் தங்களை பிடிக்கக்கூடாதென்றும் கட்சி சொல்ல அந்த கட்சியை அங்கீகாரம் செய்யவில்லை. 6. அ. லா. ஜ. 912. இந்தப் பிரிவின்

கீழ் ஏற்படும் உத்தரவின்பேரில் அப்பீல் உண்டு. 20. ம. லா. 136 ; 6. அ. லா. ஜ. 912.

### எதிர் டிக்ரிகளை நிறைவேற்றுவது.

எதிர் டிக்கிரிகளை நிறைவேற்றும் விஷயங்களில் முக்கியமாய் கவனிக்கவேண்டியவைகளாவன.- இரண்டு பணத்தொகைகளை செலுத்துவதற்காக உபய கட்சிகாரர்களுக்குள் தனித்தனியான வியாஜ்ஜியங்களிலே பிறப்பிக்கப்பட்டவைகளாகவும் ஏககாலத்தில் ஒரே கோர்ட்டாரால் நிறைவேற்றப்படத் தக்கவைகளாயுமுள்ள எதிர் டிக்கிரிகளை நிறைவேற்ற ஷை கோர்ட்டாருக்கு மனு செய்து கொண்டால்,

(1) இரு தொகைகளும் சமமாய் இருந்தால் இரண்டு டிக்கிரிகளுந் தீர்ந்ததாக எழுதவேண்டும்.

(2) சமமாய் இருாத பட்சத்தில் பெரிய டிக்கிரித் தொகையில் சிறிய டிக்கிரித் தொகையை கழித்து பாக்கியிருக்கும் தொகைக்கு மட்டில் டிக்கிரியை நிறைவேற்றிக் கொள்ளலாம்.

இந்தவிதம் எதிர்கட்டுவதற்கு இரண்டு டிக்கிரிகளும் ஒரே கோர்ட்டில் இருக்கவேண்டும். 24. அ. 484 ; (2. இ. கே. 247.) இரண்டு டிக்கிரிகளில் எந்த டிக்கிரியை மேடோவர் செய்திருந்த போதிலும் மேலே சொல்லிய விதம் எதிர் கட்டமுடியும். இந்த விதியை பிரயோகப்படுத்துவதற்கு இரண்டு கண்டிஷன்கள் உண்டு. (1) இரண்டு கேசுகளிலும் வாதி பிரதிவாதிகள் ஒரே லட்சண முடையவருயும் (2) இரண்டு டிக்கிரிகளின்படி பாக்கியாய் இருக்கிற தொகைகள் இவ்வளவு என்று நிஷ்கரிஷையாயிருக்கவேண்டும். தவிர ஏ-யும் பி-யும் ஒரு டிக்கிரி மூலமாய் கூட்டாகவும் தனித் தனியாகவும் சி-என்பவருக்கு நூறு ரூபாய் கொடுக்கவேண்டியிருக்கிறது. சி-என்பவர் பேரில் ஏ-மட்டில் 50 ரூபாய்க்கு டிக்கிரி பெற்று சி-தன் டிக்கிரியை நிறைவேற்றும் கோர்ட்டிலேயே தன் டிக்கிரியையும் தாக்கல் செய்து எதிர் டிக்கிரியாக பாவிக்கலாம். மேலே சொன்ன விதிப்படி தான் ஒரே டிக்கிரியின் கீழ் வாதி பிரதி வாதி இருவர்களுக்கும் ஒருவரிடத்திலிருந்து ஒருவர் தொகைகள் பெற்றுக்கொள்ளுகிறது என்று கண்டிருக்கும் டிக்கிரிகளை நிறை

வேற்றவேண்டும். இந்த விதிகளிலுள்ள நிபந்தனைகள் மார்ட்டு கேஜ் அல்லது பொறுப்பு சம்பந்தமாய் ஏற்படும் டிக்கிரிகளுக்கு பிரயோகப்படுத்தவேண்டும்.

## ஜப்திசெய்வது.

யாதொரு டிக்கிரியாவது பணம் செலுத்துவதைக் குறித்த டிக்கிரியாயிருந்தால் தீர்ப்பான கடனாளிக்கு ஏதாவது கடன் தொகை வரவேண்டியிருக்கிறதா அல்லது என்னென்ன கடன் தொகைகள் வரவேண்டியிருக்கின்றன என்பதைப் பற்றியும் அந்த டிக்கிரிக்குச் சரிசொல்லும்பொருட்டு தீர்ப்பான கடனாளிக்கு வேறே யாதொரு சொத்து அல்லது மார்க்கம் இருக்கிறதா வென்பதைப் பற்றியும் (அந்தப்படி இருக்கிறதாயிருந்தால்) வேறே என்ன சொத்து அல்லது மார்க்கம் இருக்கிறதென்பதைப் பற்றியும்,

(1) அந்தத் தீர்ப்பான கடனாளியாவது,

(2) வேறே யாதொரு நபரையாவது,

வாய்மொழியாக விசாரணை பண்ணுவதற்கு உத்தரவாகும்படி டிக்கிரிப் பெற்றவர் கோர்ட்டாருக்கு விண்ணப்பம் செய்துகொள்ளலாம்; அதன்மேல் கோர்ட்டார் ஷை தீர்ப்பான கடனாளியாவது உத்தியோகஸ்தராவது வேறே யாதொரு நபராவது ஹாஜராவதற்கும் அவரை விசாரணை செய்வதற்கும், யாதொரு புஸ்தகம் அல்லது தஸ்தவேஜை ஹாஜர்ப்படுத்துவதற்கும் உத்தரவு செய்யலாம். எந்த சொத்தை ஜப்தி செய்யலாமென்பது 60-வது பிரிவால் விளங்கும். அந்தப் பிரிவின்படி நிலங்கள், வீடுகள், அல்லது வேறே கட்டடங்கள், சறக்குகள், பணம் பாங்கி நோட்டுகள் செக்குகள் உண்டிகள் பிராமிசரி நோட்டுகள் கவர்ன்மெண்டு பத்திரங்கள்பாண்டுகள் அல்லது பணம் சம்பந்தமான வேறே பத்திரங்கள் கடன்கள் கம்பெனி பங்குகள் ஆகிய இவைகளும் கடனாளியினுடைய பெயரால் வைத்துக்கொள்ளப்பட்டிருந்தாலும் அவர் பட்சத்தில் அல்லது அவருக்காக நம்பிக்கை சொத்தாய் வேறே யாதொருவர் வைத்துக்கொண்டிருந்தாலும் கடனாளியைச் சேர்ந்ததாகவாவது அந்த சொத்து அல்லது அதின் வரும்படியை அவருடைய சொந்த பிரயோசனத்திற்காக அவர்கள் இஷ்டப்படி உபயோகித்துக் கொள்ளும்படியான அதிகாரத்திற்கு உள்பட்டதாகவாவது

இருக்கிற விற்கத்தக்க மற்ற சகல அசையும் பொருள் அல்லது அசையாப்பொருளையும் ஜப்தி செய்யலாம்.

அடியில் கண்ட சொத்துக்களை ஜப்தி செய்ய முடியாது.

(1) கடனாளியும் அவர் பெண்சாதியும் மக்களும் உடுத்துக் கொள்ளும் அவசியமான உடுப்புகளும் சமையல் செய்வதற்கான பாத்திரங்களும் படுக்கைகளும் படுக்கை சாமான்களும் மதவழக்கப்படி யாதொரு ஸ்திரீ தேகத்தினின்றும் அப்புறப் படுத்தக்கூடாத நகைகளும்.

(2) கைத்தொழிலாளிகளின் ஆயுதங்களும் கடனாளி விவசாய காரராயிருந்தால் அவருடைய விவசாய சாமான்களும் அவர் ஜீவனத்திற்கு சம்பாத்தியம் செய்ய அவசியமாய் வேண்டியிருக்கும் மாடுகளும் விதைத் தான்னியமும் 61-வது பிரிவின் கீழ் கவர்ன்மெண்டாரால் விவசாய மாசூலில் யெவ்வளவு பாகம் அடுத்த அருவடையில் நிலத்தை கிரமமாய் சாகுபடி செய்வதற்காகவும் கடனாளியினுடைய சவரட்சணைக்காகவும் அவர் குடும்பத்தாருடைய சவரட்சணைக்காகவும் ஜப்தி செய்யக் கூடாதென்று உத்தரவு செய்யும் பாகத்தையும்.

(3) விவசாயக்காரரைச் சேர்ந்ததும் அவருடைய அனுபோகத்திலும் இருக்கிற வீடுகளும் இதர கட்டடங்களும் அவைகளின் சாமான்கள் அவைகளுக்கு அடுத்தாற் போல அவைகளைச் சேர்ந்து அனுபோகத்திற்கு அவசியமாய் இருக்கும் நிலத்தையும். ஆனால் விவசாயக் காரரின் பட்டணத்து வீட்டை ஜப்தி செய்யலாம். 7. ப. லா. ரி. 685.

(4) கணக்குப் புஸ்தகங்கள்.

(5) நஷ்டத்தைக்குறித்து வியாஜ்ஜியம் தொடர்வதற்கு உண்டான வெரும் பாத்தியதை.

(6) தாமே ஊழியம் செய்யும்படியான யாதொரு பாத்தியதை.

(7) கவர்ன்மெண்டு பென்ஷன்களும் சகாய வர்த்தனைகளும் கராட்டியூட்டி என்னும் நன்குடைகளும்.

(8) சர்க்கார் உத்தியோகஸ்தராவது யாதொரு றயில்வே கம்பெனி உத்தியோகஸ்தராவது வேலைக்கு வராமல் லீவிலிருக்கும்பொழுது சம்பளத்தைவிட குறைவாக அவருக்கு கொடுக்கப்படும் வர்த்தனைகள்.

(9) மேலேகண்ட உத்தியோகஸ்தரின் (1) மாதம் ஒன்றுக்கு சம்பளமானது 20-ரூபாய்க்கு அதிகப்படாதிருந்தால் அந்த சம்பள முழுவதும், (2) மாதம் ஒன்றுக்கு 20-ரூபாய்க்கு மேற்பட்டு 40-ரூபாய்க்கு அதிகப்படாத பட்சத்தில் மாதம் 20 ரூபாயும், (3) மற்ற விஷயத்தில் சம்பளத்தில் ஒரு பாதியும்.

(10) இந்தியாவில் ராணுவத்தில் இருப்பவர்கள் சம்பளமும் வர்த்தனைகளும்.

(11) ப்ராவிடெண்டு என்றும் நிதியிலிருக்கிற அல்லது அந்த நிதியிலிருந்து கிடைக்கிற சகல, பலவந்தமான டிபாஸிட்டுகளும் சட்டப்படி ஜப்தி செய்யக்கூடாதென்று அந்த ஆக்ட்டில் சொல்லியிருக்கும் வேறே தொகைகளும்.

(12) வேலை ஆட்களுக்கும் வீட்டு வேலைக்காரர்களுக்கும் ரொக்கமாகவோ தானிய ரூபமாகவோ செலுத்தத்தக்க கூலிகள்.

(13) பிந்தி அடைவதாக எதிர்பார்க்கப்படும் சுதந்தரம்.

(14) பிந்தி ஜீவனும்சத்திற்கு உள்ள பாத்தியதை.

மேலே 7, 8, 9, 10, 12, குறிப்பிட்ட பகுதிகளில் சொல்லியிருக்கிற வகைகள் வாஸ்தவமாய் செலுத்தப்படுவதற்கு முன்னிட்டாகிலும், பின்னிட்டாகிலும் ஜப்திசெய்ய முடியாது. போஸ்டாபீசிலுள்ள கடிதத்தையும் ஜப்தி செய்யலாம். நோட்டுகளை கூட்டுக்குள் போட்டு தபாலாபீசில் போஸ்டு செய்தவுடனே யாருடைய பேருக்கு அனுப்பப்பட்டிருக்கிறதோ அந்த மனுஷனுடைய சொத்தாய் விட்டதாக சட்டம் பாவிப்பதால் ஜப்தி செய்யமுடியும். 13. ம. 242.

ஜப்திசெய்யப்படும் சொத்தானது தீர்ப்பான கடனாளியி னுடைய ஸ்வாதீனத்திலிருக்கும் விவசாய மாசூலல்லாத வேறே யாதொரு அசையும் பொருளாயிருந்தால், (அந்தப் பொருளை) வாஸ் தவமாகக் கைப்பற்றி ஜப்தி பண்ணவேண்டும்; மேலும், ஜப்தி செய்கிற உத்தியோகஸ்தர் அந்தப் பொருளைத் தம்முடைய வசத் திலேயாவது தமக்குக் கீழ்ப்பட்ட உத்தியோகஸ்தர்களில் ஒரு வருடைய வசத்திலேயாவது வைத்திருக்கவேண்டும்; அல்லா மலும், ஷை உத்தியோகஸ்தர் அந்தப்பொருளைச்சரியானபடி பந்தோ பஸ்தில் வைத்திருப்பதற்கு உத்தரவாதியுமாவார். ஆனால், கைப் பற்றப்பட்ட பொருளானது தானகவே சீக்கிரத்தில் அழிந்து போகத்தக்கதா யிருந்தாலும் அதைப் பந்தோபஸ்தில் வைத்திருப் பதற்குண்டான செலவானது வெகுவாய் அதின் மதிப்பிற்கு மேற் படும் போலிருந்தாலும் ஜப்தி செய்கிற உத்தியோகஸ்தர் அதை உடனே விற்றுவிடலாம். ஜப்தி செய்யப்படும் சொத்தானது விவ சாய மாசூலாயிருந்தால், ஜப்தி வாரண்டுக்கு ஒரு பிரதியை

(1) ஷை மாசூலானது வளர்ந்து கொண்டிருக்கிற பயிரா யிருக்கிற பட்சத்திலே, அது எந்த நிலத்தில் பயிராயிருக்கிறதோ அந்த நிலத்தின்மேலாவது, (2) ஷை மாசூலானது அறுக்கப் பட்டு அல்லது சேர்க்கப்பட்டிருக்கிற பட்சத்திலே, அது சேர்த்து வைக்கப்பட்டிருக்கிற களத்தின் மேலாவது தானியம் முதலிய வைகளை யாகிலும் தாட்போரை யாகிலும் அடிப்பதற்கான வேறே யாதொரு விடத்திலாவது ஒட்டியும் ஷை வாரண்டுக்கு இன்னொரு காப்பியை கடனாளி வீட்டின் வெளிக்கதவிலாகிலும் யாவருக்கும் தெரியும்படியான வேறே யாதொரு விடத்திலாகிலும் ஒட்டியும் அல்லது கடனாளி கடைசியாக தொழில் நடத்திவந்த வீட்டின் வெளிக்கதவிலாகிலும் கோர்ட்டாருடைய அனுமதியின்பேரில் ஷை காப்பியை ஒட்டியும் ஜப்தி செய்யவேண்டும். அதன்மேல் அந்த மாசூலானது கோர்ட்டாருடைய ஸ்வாதீனத்திற்கு வந்து விட்டிருப்பதாக எண்ணப்படும். ஜப்தி செய்யப்பட்ட விவசாய மாசூலை பந்தோபஸ்தில் வைக்க தங்களுக்கு தகுதியாக தோன் றும் ஏற்பாடுகளை கோர்ட்டார் செய்யவேண்டும். ஜப்தி செய்வதற் கான ஒவ்வொரு மனுவிலும் அந்த பயிர் எப்போது அறுக்கப்படு வதற்கு அல்லது சேர்க்கப்படுவதற்கு லாயக்காயிருக்குமோ அந்

தக்காலத்தைக் குறிப்பிடவேண்டும். கோர்ட்டார் செய்யும் உத்தரவுக்கு உட்பட்டு கடனாளி அந்த மாசூலை போஷிக்கவும் அறுக்கவும் சேர்த்தும் வைக்கலாம். கடனாளி அந்தவிதம் செய்யத்தவறினால் டிக்கிரி பெற்றவர் தானாகவேயாகிலும் வேறொருவர் மூலமாகிலும் மேலே சொன்ன காரியங்களைச் செய்யலாம். இதற்கு ஏற்படும் செலவுகளை கடனாளியிடமிருந்து வாங்கலாம். வளர்ந்து கொண்டிருக்கும் ஜப்தி செய்யப்பட்ட மாசூல் நிலத்தினின்று அறுக்கப்பட்டநிலை ஜப்தியி னின்றும் விடுதலை ஆனதாக பாவிக்கப்படமாட்டாது. வளர்ந்துகொண்டிருக்கும் பயிரானது அறுக்கபடவோ அல்லது சேர்க்கப்படவோ லாயக்காயிருப்பதற்கு ரொம்பகாலத்திற்கு முன்னமே அதை ஜப்தி செய்யும்படி உத்தரவு செய்திருந்தால் கோர்ட்டார் தங்களுக்கு தகுதியாக தோற்றுகிற காலம்வரையில் அந்த உத்தரவை நிறைவேற்றாமல் நிறுத்திவைத்து ஜப்தி உத்தரவை நிறைவேற்றுகிற வரையில் மாசூலை அப்புறப்படுத்தக் கூடாதென்று உத்தரவு செய்யலாம். இந்த விதிப்படி வளர்ந்து கொண்டிருக்கும் பயிரானது சேர்த்து வைக்கக்கூடாத தன்மையுடையதாயிருந்தால் அது அறுக்கப்படவோ அல்லது சேர்க்கப்படவோ லாயக்காயிருக்கும் காலத்திற்கு முன்னமே இருபது நாளைக்கு குறைவான எந்தக் காலத்திலாகிலும் அதை ஜப்தி செய்யக்கூடாது. அசையும்பொருளை கைப்பற்ற ஏற்படும் கோர்ட்டு கட்டளையை சூரிய அஸ்தமனத்திற்கு பிறகும் சூரிய உதயத்திற்கு முன்னும் யாதொரு குடியிருப்பு வீட்டில் பிரவேசிக்கக்கூடாது. அந்த வீடு கடனாளி அனுபோகத்திலிருந்து அதில் பிரவேசிக்க அனுமதி கொடுக்காமலும் பிரவேசிக்க வொட்டாமல் தடுத்தாலும் அன்றி மற்றபடி அந்த வீட்டின் வெளிக்கதவை உடைத்து திறக்கக்கூடாது. வீட்டிற்குள் கிரமமாய்ப் பிரவேசித்து யாதொரு சொத்து எந்த அரையிலாவது இருப்பதாய் நியாயமாய் தோன்றும் பட்சத்தில் அந்த அரையின் கதவை உடைக்கலாம். தவிர அந்த வீட்டிலுள்ள ஒரு அரையானது தேசவழக்கப்படி வெளியில் வராத ஒரு ஸ்திரீ அனுபோகத்திலிருந்தால் அவருக்கு நோட்டிஸ் கொடுத்து போக சாவகாசமும் கொடுத்துபிறகு அந்த அறைக்குள் பிரவேசிக்கலாம்.

(1). கடனாளி ஸ்வாதீனத்திலிராத கடன் விஷயத்தில் கோர்ட்டார் மறு உத்தரவு வரையில் கடன் கொடுத்திருக்கிற

வர் அதை பற்றிக்கொள்ளக் கூடாதென்றும் கடன் வாங்கி யிருக்கிறவர் அதை செலுத்தக்கூடா தென்றும்,

(2) பங்கு விஷயத்திலே அது யார்பேரி லிருக்கிறதோ அவர் வேறொருவருக்கு மாற்றக்கூடாதென்றும் அல்லது அதில் வருகிற யாதொரு வரவுத் தொகையை அவர் பெற்றுக்கொள்ளக் கூடாதென்றும்,

(3) வேறு அசையும் பொருள் விஷயத்திலே அதை ஸ்வாதீனத்திலே வைத்திருப்பவர் கடனாளிக்கு கொடுக்கக் கூடாதென்றும் கண்டெழுதியுள்ள உத்திரவு மூலமாக ஜப்தி செய்யவேண்டும்.

தடுக்கப்பட்ட யாதொரு கடனாளி தன் கடன் தொகையை கோர்ட்டில் செலுத்தலாம். செலுத்தினதால் அதைப் பெற்றுக் கொள்ள அருகரா யிருக்கும் நபருக்கு அவர் செலுத்தினது போல வே அவருக்கு விடுதலை ஏற்படும். ஜப்தி செய்யப்படும் சொத்து கடனாளிக்கும் மற்றவர்களுக்கும் கூட்டாய் சொந்தமாக இருக்கும் அசையும் பொருளிலே கடனாளிக்குள்ளபங்கு அல்லது யாத்தியதை யாக இருந்தால் அதை வேறு யாருக்காகிலும் மாற்றக்கூடாதென் றும் பொறுப்பு ஏற்றக்கூடாதென்றும் நோட்டீஸ் கொடுத்து ஜப்தி செய்யவேண்டும். சர்க்கார் உத்தியோகஸ்தருடைய அல்லது ரெயில் வே கம்பெனியில் உள்ள உத்தியோகஸ்தர் சம்பளத்தை யாகிலும் வர்த்தனை யாகிலும் ஜப்திசெய்ய வேண்டுமானால் 21-வது ஆடர் 48-வது பிரிவுப்படி செய்யவேண்டும். ஜப்திசெய்யப்படும் சொத்து மேலே சொன்ன சம்பளமாயிருந்தால் கடனாளியாகிலும் சம்பளம் பட்வாடா செய்யும் உத்தியோகஸ்தராகிலும் கோர்ட்டு அதிகார எல் லைக்குள் இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி மேலே 60-வது பிரிவில் கண்ட நிபந்தனைக்குட்பட்டு ஷை தொகையை ஒரேதரமாக வே மாதாந்தரத் தவணைகளாகவோ சம்பளத்திலிருந்து பிடித்து விடவேணுமென்று உத்திரவு செய்யலாம். பட்வாடா செய்யும் உத்தியோகஸ்தார் அதன்படி பிடித்து கோர்ட்டாருக்கு அனுப்ப வேண்டும். கூட்டுப்பங்குக்காரருடைய சொத்தை ஜப்தி செய்யும் விதம் 49-வது விதியிலும் வியாபாரக் கூட்டத்தார்மேல் பிறப்பிக்கப் படும் டிக்கிரியை நிறைவேற்றும் விதம் 50-வது விதியிலும் சொல்

லப்பட்டிருக்கிறது. சொத்தானது கைமாறத்தக்க ஆதரவுகளாயிருந்தால் கைப்பற்றி ஜப்தி செய்யவேண்டியது மல்லாமல் கோர்ட்டுக்கு கொண்டுவந்து கோர்ட்டாருடைய மறு உத்தரவுக்குட்பட்டு வைத்து வைக்கவும் வேண்டும். கோர்ட்டாருடைய அல்லது சர்க்கார் உத்தியோகஸ்தருடைய வசத்திலிருக்கிற சொத்தை அவர்களுக்கு நோட்டீஸ் கொடுத்து ஜப்திசெய்யவேண்டும். மேல்படி சொத்தையும் வட்டி ஈவு முதலியதையும் கோர்ட்டார் மறு உத்திரவு வரையில் வைத்துக்கொடுக்க வேண்டுமென்று ஷை நோட்டீஸ் மூலமாய் கேட்டுக் கொள்ளவேண்டும். அது சம்மந்தமாய் யாருக்காவது சுதந்தர மிருப்பதாய் சொல்லும் பட்சத்தில் அந்த விவாதத்தை கோர்ட்டார் தீர்மானிக்கவேண்டும். ஜப்தி செய்யப்படும் சொத்து டிக்கிரியாயிருந்தால் எந்தவிதம் செய்யவேண்டு மென்பது 53-வது விதியால் தெரிந்துகொள்ளலாம். பண டிக்கிரியானாலும் மார்ட்கேஜ் டிக்கிரியானாலும் ஒரே கோர்ட்டார் அந்த டிக்கிரியையும் நிறைவேற்ற மனு கொடுக்கும் டிக்கிரிதாரரின் டிக்கிரியையும் பிறப்பித்திருக்கிற பட்சத்திலே, அந்த கோர்ட்டார் உத்தரவுப்படியும் வேறு கோர்ட்டார் செய்திருக்கும் பட்சத்திலே அந்தக் கோர்ட்டாருக்கு டிக்கிரியை பிறப்பித்த கோர்ட்டார் நோட்டீஸ் கொடுத்து அந்த நோட்டீஸை ரத்து செய்கிற வரையிலுமாவது நிறைவேற்றும் டிக்கிரிதாரராவது கடனாளியாவது நோட்டீஸ் அனுப்பப்பட்ட கோர்ட்டுக்கு விண்ணப்பம் செய்துகொள்ளும் வரையிலுமாவது அந்தக் கோர்ட்டார் அந்த டிக்கிரியை நிறைவேற்றாமல் நிறுத்தி வைக்கவேண்டுமென்று மேலேகண்ட நோட்டீஸ் மூலமாகவும் ஜப்தி செய்யவேண்டும். இந்த விதம் ஜப்தி செய்யும் கோர்ட்டார் ஜப்தி செய்யப்பட்ட டிக்கிரியினால் கட்டுப்படுத்தப்பட் டிருக்கிற கடனாளிக்கு உத்தரவை மாற்றி நோட்டீஸ் கொடுக்கவேண்டும். அதைப்பெற்றுக்கொண்ட பிறகு அவர் ஜப்தி செய்யப்பட்டிருக்கும் கோர்ட்டார் மூலமாகவாகிலும் மற்றபடியாகிலும் தொகை செலுத்தினாலும் வேறு ஏற்பாடு செய்தாலும் அதை எந்தக் கோர்ட்டாலும் அங்கீகரிக்கப்படமாட்டாது.

சொத்து அசையாப்பொருளா யிருந்தால் கடனாளி எவ்விதத்திலாவது அதை இன்னொருவர் பெயருக்கு மாற்றக்கூடாதென்றும் வேறு பொறுப்பேற்றக்கூடாதென்றும் அதற்கு விரோதமாய்

செய்தால் எவரும் எவ்விதமான பிரயோஜனமும் அடையக்கூடாதென்றும் உத்திரவு பிறப்பித்து ஜப்தி செய்யவேண்டும். சொத்து இருக்குமிடத்திலோ, அதற்கு சமீபத்திலோ தண்டோரா மூலமாய் பிரசித்தம் செய்து உத்திரவுக்கு ஒரு காபியை சொத்தில் யாவர்க்கும் தெரியும்படி ஒரு பாகத்திலும் அதன் பிறகு கோர்ட்டு ஸ்தானத்திலே ஒரு பாகத்திலும் ஒட்டவேண்டும். அது கவர்ன்மெண்டாருக்கு தீர்வை செலுத்தும் நிலமாயிருந்தால் அது யிருக்கும் ஜில்லா கலெக்டர் ஆபீசிலும் உத்தரவுக்கு ஒரு காபியை ஒட்டவேண்டும். டிக்கிரி தொகையை சகல செலவுகளுடன் கோர்ட்டில் செலுத்தப்பட்டாலும் கோர்ட்டு மூலமாக டிக்கிரிக்கு வேறு விதமாய் சரி சொல்லப்பட்டாலும் சரி சொல்லப்பட்டதாக கோர்ட்டாருக்கு சர்டிபை செய்யப்பட்டாலும் டிக்கிரியை அப்பீலில் தள்ளப்பட்டாலும் ஜப்தி ரத்து செய்யப்பட்டதாக பாவிக்கப்படும். அசையாப் பொருளின் விஷயத்திலே கடனாளி இஷ்டப்பட்டால் ஜப்தி ரத்தான சங்கதியை அவருடைய செலவிலே விளம்பரம் செய்து அதற்கு ஒரு காபியை மேலே சொல்லிய பிரகாரம் ஒட்டவேண்டும். ஜப்தி செய்யப்பட்ட சொத்து வழங்கிவரும் நாணயமாகவாவது நோட்டாகவாவது இருந்தால் டிக்கிரிக்கு போதுமான யாதொரு பாகத்தை அதை பெற்றுக்கொள்ள பாத்தியமுள்ளவர்களுக்கு செலுத்தும்படி உத்திரவு செய்யலாம். ஜப்தி செய்த பிறகு டிக்கிரி பெற்றவர் தவறுதலால் கோர்ட்டார்மேல் நடவடிக்கைகள் செய்ய சக்தியுள்ளவர்களாயிருந்தால் அவர்கள் நிறைவேற்று மனுவை தள்ளலாம் அல்லது வேறு தேதிக்கு ஒற்றி வைத்துகொள்ளலாம். தள்ளிவிட்டால் ஜப்தி விடுதலையாய்விடும். ஜப்தி செய்யப்பட்டிருந்தால், ஜப்திசெய்யப்பட்ட சொத்தையாவது அதிலுள்ள யாதொரு பாத்தியதையாவது உள்ளுக்குள்ளாக எவ்விதமாகிலும் ட்ரான்ஸ்பர் பண்ணுவது அல்லது ஒப்பிப்பிப்பதும், அப்படிப்பட்ட ஜப்திக்கு விரோதமாக யாதொரு கட்டளையாகிலும் ஈவுத்தொகையையாகிலும் வேறே பணத்தையாகிலும் தீர்ப்பான கடனாளிக்குச் செலுத்துவதும், ஜப்திக்கு விரோதமாக செல்லாது. யாதொரு கோர்ட்டின் வசத்திலிராத சொத்தானது ஒன்றுக்கு மேற்பட்ட கோர்ட்டுகளின் டிக்ரிகளை நிறைவேற்றும்பொருட்டு ஜப்திக்குட்பட்டிருந்தால், அப்படிப்பட்ட சொத்தை வரப்பற்றுவதற்கும்

அல்லது பணமாக்குவதற்கும் அதற்குள்ள யாதொரு தாவாவையும் அதை ஜப்தி செய்வதற்குள்ள யாதொரு ஆட்சேபத்தையும் தீர்மானிப்பதற்கும் அதிகாரமுடைய கோர்ட்டார் அந்தக் கோர்ட்டுகள் எல்லாவற்றிலும் உயர்ந்த அந்தஸ்துள்ள கோர்ட்டாராய் இருக்க வேண்டும். அப்படிப்பட்ட கோர்ட்டுகளுக்குள் அந்தஸ்து பேதமில்லாவிட்டால் ஷை அதிகாரமுடைய கோர்ட்டார்—எந்தக் கோர்ட் டிக்ரியின்படி அந்த சொத்து முதலில் ஜப்தி செய்யப்பட்டதோ அந்தக்கோர்ட்டாராயிருக்கவேண்டும். அப்படிப்பட்ட டிக்ரிகளிலொன்றை நிறைவேற்றுகிற யாதொரு கோர்ட்டாரால் நடத்தப்படும் யாதொரு நடவடிக்கையானது இந்தப் பிரிவிலுள்ள தெதனாலும் சட்ட சம்மந்தமில்லாமல் போய் விடுவதாக எண்ணுவது கூடாது.

யாதொரு சொத்தை ஜப்தி செய்த பிறகு ஜப்தி செய்யப்படத்தக்க சொத்து அல்லவென்று ஆக்ஷேபணை செய்தால் கூடியசீக்கிரம் ஆக்ஷேபிக்கவேண்டும். அவ்விதம் செய்யும் ஆக்ஷேபணையை விசாரித்து முடிவு செய்யுமுன்னமே சொத்தை விற்க ஏதாவது சோ ஞாஸா பிரசுரம் செய்திருந்தால் விசாரணை முடிவு வரையில் ஏலத்தை நிறுத்தி வைப்பார்கள். ஆக்ஷேபணை செய்கிறவன் தனக்கு இருக்கும் பாத்தியதைப் பற்றியோ அல்லது தன் ஸ்வாதீனத்திலிருப்பதைப் பற்றியோ ருஜூ கொடுக்கவேண்டும். இந்த விசாரணையில் ஜப்தி செய்யப்பட்டபோது கடனாளி ஸ்வாதீனத்தில் இல்லையென்றாவது அல்லது கடனாளி ஸ்வாதீனத்திலிருந்த போதிலும் வேறொருவர் நிமித்தமாக யிருந்ததே ஒழிய தன் சொந்த நிமித்தமாய் இல்லை யென்றாவது கோர்ட்டாருக்கு தெரியவந்தால் ஜப்தி வாரண்டை ரத்து செய்யப்படும். கடனாளி ஸ்வாதீனத்திலிருந்ததாக ஏற்பட்டால் ஆக்ஷேபணை மனு தள்ளப்படும். ஜப்தி செய்யப்பட்ட சொத்தின்பேரில் மார்ட்கேஜ் அல்லது பொறுப்பு முதலானது இருப்பதாக கோர்ட்டாருக்கு தெரியவந்தால் அதற்கு உட்படுத்தி ஜப்தி ஸரியாக செய்யப்பட்டதென்று உத்திரவு செய்யலாம். ஆக்ஷேபணை மனுவை விசாரித்து யாருக்கு விரோதமாய் உத்திரவு செய்யப்படுகிறதோ, அவர் அந்த சொத்தில் தாம் கொண்டாடும் பாத்தியத்தையை ஸ்தாபிப்பதற்கு இ. லி. ஆ. 11-வது. ஆர்டிகிளின்படி 1வருஷத்திற்குள் வியாஜ்ஜியம் தொடரலாம். அந்த விதம் தொடராவிட்டால் ஆக்ஷேபணை மனுவின்பேரில் ஏற்பட்ட

உத்திரவு முடிவானதாகும். மேல் கண்டிருப்பது சி. பு. கோ 21-வது ஆடர் 58-63 விதிகளின் சுருக்கம். இது சம்மந்தமாய் கவனிக்கவேண்டிய முக்கிய விஷயங்களாவன :--ருஜுவிடுவதற் காக கோர்ட்டார் வேறு தேதி கொடுக்கமாட்டார்கள். ஆக்ஷே பணை மனு சரங்கி தேதியன்றே ஜப்தி செய்த டிக்கிரிதாரரும் தன் சாட்சிகளை கொண்டுவரவேண்டும். ஜப்தி செய்த தேதியில் சொத்து யார் வசத்திலிருந்தது என்னும் விஷயத்தை மட்டில் விசாரிக்கப் படுமே ஒழிய பாத்தியா பாத்தியதைகளை விசாரிக்கப்படமாட்டாது. 29. க. 543. ஆக்ஷேபணை மனுதாரருடைய ஸ்வாதீனத்திலிருந்த தாய் ஏற்படும் பட்சத்தில் கடனாளி நிமித்தம் அவன் ஸ்வாதினத்தி லிருந்ததாவென்றும் நிர்ணயிக்கப்படும். 2. லோ. ப. ரூ. 152; 4. லோ. ரூ. 209. மற்றெந்த விஷயங்களையும் இந்த விசாரணையில் விசாரிக்கப்படமாட்டாது. மார்ட்கேஜ் டிக்கிரி பெற்றவர் சொத் தை ஜப்தி செய்யவேண்டிய அவசியமில்லை. அனாவசியமாய் ஜப்தி செய்தாலும் மேலே கண்ட விதிகள்படி எவரும் ஆக்ஷேபிக்க இடம்கிடையாது 2. லோ. ப. ரூ. 138. ஆக்ஷேபிப்பவன் தன் ஸ்வாதீனத்திலிருந்தால் முதலில் ருஜு கொடுக்கவேண்டும். பிறகு அந்த ஸ்வாதீனம் கடனாளி நிமித்த மென்று டிக்கிரி பெற்ற வன் ருஜு செய்யவேண்டும். அந்த விதம் ருஜுப்பிக்காத போனால் வாரண்டை குவாரை செய்வார்கள். 2. லோ. ப. ரூ. 152. கடனாளிக்கு குத்தகை கொடுக்கும் குடியானவன் வசத்திலிருந் தாலும் கடனாளி ஸ்வாதீனத்தில் இருந்ததாகத்தான் பாவிக்கப் படும். 27. ம. 67; 4. லோ. ப. ரூ. 289. ஜப்தி செய்யப்பட்ட முழு சொத்தையோ அல்லது ஒரு பாகத்தையோ சந்தர்ப்பத்துக்கு தகுந்தபடி கோர்ட்டார் வாரண்டிலிருந்து விடுதலை செய்யக்கூடும். 12. ப. 231. ஆக்ஷேபணை மனுவை வாப்ஸ் பெற்றுக்கொள்ளுவ தால் கிரம வியாஜ்ஜியம் கொண்டுவர தடை ஒன்று மில்லை. 4. லோ. ப. ரூ. 75. சொத்திலிருக்கும் பாத்தியத்தை பற்றி மனு செய்யாமலே கிரம வியாஜ்ஜியம் கொண்டுவரலாம். 28. அ. 644; 23. ப. 266. வாரண்டை குவாரை செய்தபிறகு டிக்கிரி பெற்றவன் கொண்டுவரும் கிரம வியாஜ்ஜியத்தில் கடனாளியை கட்சிகாரனாக சேர்க்கவேண்டியதில்லை. 28. அ. 41. ஆனால் கல்கத்தா ஹைகோர்ட்டார் அபிப்பிராயப்படி அவனையும் பிரதிவாதியாகச் செய்ய

வேண்டும். 1. இ. கே. 428. அந்த விதம் வியாஜ்ஜியத்தை எவ்வளவு ரூபாய் ஸ்டாம்பு தாளில் எழுதவேண்டும்? எந்த கோர்ட்டில் கொண்டுவரவேண்டும்? இது விஷயங்களைப்பற்றி பல கோர்ட்டுகள் பலவிதமாக தீர்ப்புச் செய்திருக்கிறார்கள். எல்லா தீர்ப்புகளையும் ஆராய்ச்சி செய்து நன்கு விளக்குமாறு வெகு தெளிவாக எடுத்தெழுதியிருப்பதை கவனமாய் வாசிக்கவேண்டும். 3 வகையான வியாஜ்ஜியங்கள் கொண்டுவரமுடியும்.

(1) வாரண்டு கேசில் ஜயமடையாத டிக்கிரி பெற்றவன் மேற்படி சொத்தை தன் டிக்கிரிக்காக கடனாளி சொத்தென்று ஜப்தி செய்ய தனக்கு பாத்தியமுண்டென்றும்,

(2) வாரண்டு கேசில் ஜயமடையாத ஆக்ஷேபணை மனுதாரர் மேற்படி சொத்தை ஜப்தி செய்வதற்கு டிக்கிரி பெற்றவனுக்கு பாத்தியமில்லை என்றும். இந்த கேசில் கடனாளி வாதிக்கு அனுகூலமாக யிருக்கக்கூடும்.

(3) 2-வது பாராவில் சொன்னவிதமான வியாஜ்ஜியத்தில் கடனாளி வாதிக்கு விரோதமாகவு மிருக்கக்கூடும். கடனாளி சொத்து தன்னுடையதென்று சொல்லுவதாய் சில பிராதுகளில் கண்டிருப்பதுண்டு.

மேலே கண்ட 3 வகை வியாஜ்ஜியங்களில் எந்த வியாஜ்ஜியத்தையும் 10 ரூ. ஸ்டாம்புதாளில் கொண்டுவரலாமென்று சீமைபிரிவி கவுன்சில் சபையாரால் 2 தீர்மானங்கள் சமீபகாலத்தில் ஏற்பட்டிருக்கின்றன. 35. க. 202; 7. க. லா. ஜ. 36. இந்த தீர்மானங்கள் பிரிட்டிஷ் கொடி பரக்கும் தேசங்களிலுள்ள எல்லா கோர்ட்டுகளையும் கட்டுப்படுத்தும். எந்தக்கோர்ட்டில் கொண்டுவரவேண்டுமென்பதைப்பற்றி 1. லோ. ப. ரூ. 1; 5. லோ. ப. ரூ. 23. இந்த தீர்ப்புகள் சொல்லுவதாவது, டிக்கிரி தொகை சொத்தின் பொறுமானத்தைவிட ஜாஸ்தியாயிருந்தால் சொத்தின் பொறுமானமும், குறைவாயிருந்தால் டிக்கிரி தொகையும் அதாவது டிக்கிரிக்காக வரவேண்டியபாக்கி தொகையும் எந்த கோர்ட்டில் கொண்டுவரவேண்டுமென்னும் விஷயத்தை நிர்ணயம் செய்யும். இந்த கேசில் வாரண்டுகேஸ் உத்திரவை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். 17. க. 36. தவிர அப்பர் பர்மா தீர்மானப்படி வாரண்டுகேசில் ஏற்பட்ட

செலவுகளை கிரம வியாஜ்ஜியத்தில் வாதி ஜயித்தால் ஷெ யாருக்கு கொடுக்கும்படி டிக்கிரியில் கண்டெழுதப்படும். இந்த விதம் மாங் பியிபேரில் குமரப்பசெட்டி செய்த வியாஜ்ஜியத்தில் தீர்மானமா யிற்று. அ. ப. ரூ. 1904-06. சி. பு. கோ. 18. இந்தவிதம் வாரண்டு கேசுசெலவை கொடுக்க சட்டத்தில் இடம் கிடையாதென்று சமீப காலத்தில் ஏற்பட்டிருக்கும் கல்கத்தா தீர்ப்பு சொல்லுகிறது. 2. இ. கே. 428. வியாஜ்ஜியத்தில் பியாடான் செ (டிக்ளரேஷன்) டிக்கிரி கொடுக்கவேணுமென்று கேட்டால் போதும். வசப்படுத்தி கொடு க்கவேணுமென்று கேட்க எந்த அவசியமுமில்லை. 29. ம. 151; 1893-1900. லோ. ப. ரூ. 410; 481; 4. லோ. ப. ரூ. 263.

## கோர்ட்டு ஏல விற்பனை.

ஜப்தி செய்யப்பட்ட எந்த சொத்தையாவது அல்லது அதில் டிக்கிரி தொகைக்கு போதுமான பாகத்தையாவது விற்கவேண்டு மென்றும் அப்படி விற்றுவந்த பணத்தையோ அல்லது போது மான பாகத்தையோ டிக்கிரிப்படி பெற்றுக்கொள்ள பாத்தியுதை யுள்ளவருக்கு செலுத்தவேண்டுமென்றும் உத்திரவு செய்யலாம். பாபராய் இருந்துகொண்டுவரும் கேசுகளில் வாதி ஜெயித்து பிரதி வாதி சொத்தை ஏலம்போட்டு கோர்ட்டுக்கு வரும் தொகையில் முதலில் கவர்ன்மெண்டாருக்கு சேரவேண்டி கோர்ட்டு பீஸ் முத லானதை கொடுத்துவிட்டுத் தான் பாக்கியிருக்கும் தொகையை பாபர் டிக்கிரிதாரனுக்கு கொடுக்கப்படும். 33. க. 1040. ஒரே சொத்தை பெரிய கோர்ட்டாலும் சிறிய கோர்ட்டாலும் ஜப்தி செய்திருந்தாலும் சின்ன கோர்ட்டார் ஏலம் போடுவதால் சட்ட விரோத மாகமாட்டாது. 34. க. 836. ஏலம் போடக்கூடிய சொத்து என்னும் பதத்தில் மணி டிக்கிரி அடங்காது. ஆனதால் அதை விற்க முடியாது. 12. க. 317. ஒரு சொத்து விற்பனையானதும் அதுமே லிருக்கும் யாவற்று சில்லுகளும் ரத்தாய் விட்டதாக பாவிக்கப் படும். 12. க. 317. ஒவ்வொரு விற்பனையையும் கோர்ட்டு உத்தி யோகஸ்தர் நடத்துவார்கள். தவிர நிர்ணயிக்கப்பட்ட மாதிரியாக பஹிரங்கமான ஏலத்தில் விற்பனையை நடத்தவேண்டும். ஏலத்தை கோர்ட்டார் நிறுத்திய விஷயம் நாதர் அல்லது பொபிலிப்புக்கு தெரியாது சொத்தை விற்கவே ஏலம் செல்லாதென்று தீர்மா னிக்கப்பட்டது. 12. அ. 96. அப்படி ஏலம் போடுமுன் ஏல விற்

பனை இஸ்தியார் அல்லது சேனுஸா போடுவிக்கவேண்டும். இது 66-வது பிரிவில் காணப்பட்டிருக்கிறது. அது கோர்ட்டார் தங்கள் கோர்ட்டில் வழங்குகிற பாஷையிலே யிருக்கவேண்டும். டிக்கிரி பெற்றவருக்கும் தீர்ப்பான கடனுளிக்கும் நோட்டீஸ் கொடுத்தபிறகு தான் மேற்படி இஸ்தியார் எழுதவேண்டும். மேலும் அதிலே,

(1) விற்பனை காலத்தையும் இடத்தையும்

(2) விற்கப்படும் சொத்தையும்

(3) சொத்தின்பேரில் விதிக்கப்பட்டிருக்கும் தீர்வையையும்

(4) அந்த சொத்தின்பேரில் இருக்கும் கொதுவை மார்ட்கேஜ் முதலான வில்லங்கங்களையும்

(5) எவ்வளவு தொகைக்காக விற்பனைக்கு உத்தரவு செய்யப்பட்ட தென்பதையும்

(6) சொத்தின் நிலைமை பொறுமானம் இதுகளை தெரிவிக்கக்கூடிய யாவற்று முக்கிய விஷயங்களையும் சரியாக கண்டெழுதி அத்துடன் மேற்கண்ட விஷயங்கள் உண்மையென்று கண்ட உறுதி மொழியுடன் இஸ்தியாரை தயார் செய்யவேண்டும்.

ஏல இஸ்தியார் சம்மந்தமாய் செய்யும் உத்திரவுகளின்பேரில் அப்பீல்கிடையாது. 27. ம. 259. ஒவ்வொரு இஸ்தியாரையும் 54-வது விதி (2) வது உபவிதியில் கண்டிருக்கும் மாதிரியாகக் பிரசித்தம் செய்யவேண்டும். தவிர சர்க்கார் கெஜட்டிலாவது பத்திரிகைகளிலாவது பிரசித்தம் செய்யவும்வேண்டும். அதற்கு ஏற்படும் செலவுகள் விற்பனைகள் செலவுகளாக பாவிக்கப்படும். சொத்தானது தனித்தனியாய் விற்பதற்காக லாட்டுகளாக பிரிக்கப்பட்டிருந்தால் ஒவ்வொரு லாட்டுக்கும் பிரத்தியேகமான இஸ்தியார் அவசியமில்லை. ஆனால் கோர்ட்டார் இஷ்டப்பட்டால் பிரசித்தம் செய்யவேண்டும். பொதுவாக விற்பனைக்கு உத்திரவு செய்யும் ஜட்ஜினுடைய கோர்ட்டில் இஸ்தியாருக்கு நகல் ஒட்டப்பட்டிருக்கும் தேதியிலிருந்து அசையாப் பொருளாயிருந்தால் குறைந்தது 30-தினம் கழிகிற வரைஉம் அசையும் பொருளாயிருந்தால் குறைந்தது 15-

தினம் கழிகிற வரையிலும் கடன்காரன் சம்மதத்தை எழுத்து மூலமாக பெற்றுக்கொள்ளாமல் யாதொரு விற்பனையும் செய்யக் கூடாது. கடனாளியின் ஸ்வாதீனத்திலிருக்கும் விவசாய மாரு லல்லாத வேறே யாதொரு அசையும்பொருளை ஜப்தி செய்திருந்தால் அது தானாகவே சீக்கிரத்தில் அழிந்துபோகத்தக்கதாயிருந்தாலும் அதை பந்தோபஸ்த்தில் வைக்க ஏற்படும் செலவு சொத்தின் கிரயத் துக்கு மேற்படும் போலிருந்தாலும் மட்டில் மேலேகண்ட காலத் திற்கு முந்தி உடனே விற்றுவிடலாம். ஏல தேதியன்று சொத்தின் ஒரு பாகத்தை மட்டில் ஏலம் போடும்படி கடனாளி கொடுக்கும் மனுவைக்கொண்டு மேலே கண்ட சம்மதம் அவன் கொடுத்தாக நினைக்கக்கூடாது. 5. க. 878. எந்தக் கேசுகளில் ஏலத்தை நிறுத் தியோ தள்ளியோ வைக்கலாமென்பது 69-வது விதியில் சொல்லப் பட்டிருக்கிறது. டிக்ரியை நிறைவேற்றும் கோர்ட்டார் எந்த ஏலத் தையும் தங்கள் யுக்தப்படி தள்ளிவைக்கலாம். மார்ட்கேஜ் டிக்கிரி சம்மந்தமாய் ஏற்படும் ஏலத்தையும் தள்ளி வைக்கலாம் 31. க 863. அப்படி தள்ளிவைக்கும் போது இன்னதினத்தில் இத்தனை மணிக்கு நடத்தவேண்டுமென்று கண்டெழுதவேண்டும் 31. க. 815. அவ்வி தமே விற்பனையை நடக்கும் யாதொரு கோர்ட்டு உத்தியோகஸ்த ரும் தள்ளி வைக்கும் காரணங்களை கண்டு எழுதி தள்ளிவைக்க லாம். ஆனால் ஏலம் கோர்ட்டு கட்டிடத்திலாவது அல்லது அதன் சமீப எல்லைக்குள்ளாவது நடந்தால் கோர்ட்டாருடைய உத்தரவன் னியில் தள்ளிவைக்கக்கூடாது. ஜாப்தாவில் கண்ட வரிசைப்பிர காரம் லாட்டுகளை ஒவ்வொன்றாய் விற்பதினாலே ஒரே தினத்திலே ஏலமுடியாமல் மறுதினமும் ஏலம்நடத்துதல் ஏலத்தைதள்ளிவைப்பத தற்கு சமானமாகாது. 17. க. 152. யாதொரு ஏலத்தை 7-நாளைக்கு அதிகமாய் தள்ளிவைத்தால் கடனாளிவேண்டாமென்று சம்மதித்து சொன்னாலொழிய 67-வது விதிப்படி மறுபடியும் இஸ்தியார் பிரசித் தம் செய்யவேண்டும். ஏலத்தில் சொத்து விற்றுப் போவதற்கு முன் னமே கடனை விற்பனை செலவுகள் உள்பட கோர்ட்டு உத்தியோகஸ் தரிடத்தில் கொடுக்க வந்தாலும் ஏலத்தை உத்திரவுசெய்த கோர்ட் டில் செலுத்தி யிருக்கிறதென்று அவருக்கு திருப்தீகரமானருஜு கொடுத்தாலும் உடனே ஏலத்தை நிறுத்திவிடவேண்டும். மேலே சொன்ன விதிகள் எதுவும் யாதொரு டிக்கிரியை நிறைவேற்ற

கலெக்டருக்கு அனுப்பப்பட்டிருந்தால் அது விஷயத்தில் சம்மந்த மில்லை. கிரயத்துக்கு வாங்குகிறவர் டேவணி கட்டத்தவறுதலாலோ அல்லது கிரயத்தொகையை பூர்த்தியாய் செலுத்தாததாலோ, அசை யும்பொருளை வாங்குகிறவர் குறித்த காலத்துக்குள் கிரயத் தொகை யை செலுத்தாததாலோ ஏற்படும் மறு ஏலத்தில் விலை ஏதாவது குறைவு நேரிடாமல் அதையும் மறு ஏலத்தில் செலவுகளையும் முதல் ஏலத்தில் சொத்தை வாங்கியவரிடமிருந்து வசூலிக்கப்படும். டிக்கிரி பெற்றவருடைய தவறுதலாலே மறு ஏல விற்பனையில் நேரிட்ட நஷ்டத்தை வசூல்செய்ய கொடுத்த மனுவை ரத்துசெய்த ஆர்டரின் பேரில் அப்பீல் உண்டென்று சென்னையில் தீர்மானமாயிருக்கிறது. 18. ம. 439.

மறு ஏலம் ஏற்பட்டது மூன்றும் மனிதன் தவறுதலா லிருந்த போதிலும் அப்பீல் உண்டென்று கல்கத்தாவிலும் தீர்ப்பு இருக்கி றது. 16. க. 535. ஆனால் அவ்விதம் அப்பீல் இல்லை யென்று அலஹாபாத் ஹைகோர்ட்டார் அபிப்பிராயப்படுகிறார்கள். 14. அ. 201. மறு விற்பனையால் ஏற்படும் நஷ்டத்தை உத்தரவாதம் செய் யும்படி பிறக்கும் உத்திரவின்பேரில் முதலாவது அப்பீலும் இரண் டாவது அப்பீலும் உண்டென்று தீர்மானமாயிருக்கிறது. 25. க. 99.

ஏலத்தில் சொத்தை டிக்கிரி பெற்றவர் 72-வது விதிப்படி உத் தரவு வாங்காமல் விலை கேட்கவும் கூடாது விலைக்கு வாங்கவும் கூடாது. அனுமதி இல்லையென்று ஏற்படும் உத்திரவின் பேரில் அப்பீல் கிடையாது. 13. க. 174. அவ்வித உத்திரவின்பேரில் டிக்ரி பெற்றவர் கிரயத்துக்கு வாங்கினால் கிரயத்தொகையை கோர் ட்டில் கட்டாமல் தன் டிக்கிரித் தொகை முழுவதுமாவது அதில் யாதொரு பாகமாவது சேர்ந்துவிட்டதாகப் பதிவுசெய்துகொள் ளும்படி கோர்ட்டாருக்கு மனு கொடுக்கலாம். கோர்ட்டார் உத் தரவன்னியில் தானேயாவது வேறொருவர் பேரிலாவது டிக்கிரி பெற்றவர் ஏலத்தில் வாங்கினால் கடனாளி அல்லது மேற்படி விற் பனையால் யாருடைய பாத்தியத்திற்கு பாதகம் ஏற்படுகிறதோ அவ ருடைய மனுவின்பேரில் விசாரித்து ஏலத்தை ரத்து செய்யப்படும். இது சம்மந்தமாய் ஏற்படும் செலவுகளையும் மறு ஏலத்தில் நேரிடும் குறைவுத் தொகையையும் டிக்கிரி பெற்றவர் செலுத்தவேண்டும்.

கோர்ட்டார் அனுமதி யன்னியில் ஏலத்தில் வாங்கினால் கோர்ட்டாரால் அது ரத்து செய்யும் வரையில் ஏலம் செல்லும். 1. இ. சே. 645; 11. ப. 588. அனுமதி பெறவில்லையென்ற ஒரு விஷயத்தைக் கொண்டு மட்டில் ஏலத்தை ரத்து செய்யப்படமாட்டாது. அதனால் வாஸ்தவமான கெடுதி நேரிட்டிருப்பதாய் தெரிந்தாலொழிய கோர்ட்டார் ரத்து செய்யமாட்டார்கள். 11. க. 731. மனு செய்யவேண்டுமேயொழிய வியாஜ்ஜியம் கொண்டுவர முடியாது. 26. க. 326; 22. ப. 271; 17. க. 769. தவிர வியாஜ்ஜியம் கொண்டுவந்தாலும் பிறுதை மனுவாகப் பாவிக்கவேண்டுமென்று ஜட்ஜ் சங்கர நாயர் அவர்கள் தீர்மானித்திருக்கிறார்கள். 1. இ. கே. 221. மேலும் அனுமதி யன்னியில் டிக்கிரி பெற்றவர் வாங்கினால் மோசத்தால் வாங்கப்பட்டதென்றாவது சரியான கிரயத்துக்கு வாங்கப்படவில்லை யென்றாவது கடனாளி சொல்லவேண்டிய அவசியமில்லையென்றும் ஏலத்தை கஉறர்செய்ய வேண்டிய ருஜு பளுவு டிக்கிரி பெற்றவரின் ருஜு பளுவென்றும் கண்டு பிடித்தார். மேலும் ஏலம் கராராகிவிட்டபோதிலும் அதை ரத்து செய்ய மனு செய்யலாம் என்றும் தீர்மானித்திருக்கிறார். 1. இ. கே. 221.

72-வது விதிப்படி யாதொரு ஏலத்தை ரத்து செய்தோ அல்லது ரத்துசெய்யாமலோ செய்யும் உத்திரவின்பேரில் 43-வது ஆர்டர் 1. (J) விதிப்படி அப்பீல் உண்டு. இந்த விதியின்கீழ் அப்பீல் செய்து அதில் ஏற்படும் உத்திரவின்பேரில் 2-வது அப்பீல் கிடையாது. 21. க. 789. ஏல விற்பனை சம்மந்தமாய் யாதொரு அலுவலை நடத்தவேண்டிய எந்த உத்தியோகஸ்தரும் சொத்தை நேராகவாகிலும் மற்றபடியாகிலும் வாங்கக்கூடாது. இதுவரையில் நாம் ஏல விற்பனை சம்மந்தமாயுள்ள பொது விஷயங்களைப்பற்றி விசாரணை செய்து வந்தோம். இனி அசையும் பொருளை விற்பனை செய்வதைப்பற்றிக் கூறுவோம். இது 74 முதல் 81-வரையிலுள்ள விதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது.

### அசையும் பொருளை விற்பனை செய்வது.

விற்கப்படும் சொத்தானது விவசாய மாசூலாயிருந்தால்,

(*a*) அந்த மாசூல் வளர்ந்துகொண்டிருக்கிற பயிராயிருக்கிற பட்சத்திலே, அப்படி பயிராயிருக்கும் நிலத்தின் மேலாவது அதற்கு சமீபமாயாவது,

(b) அந்த மாசூல் அறுக்கப்பட்டு அல்லது சேர்க்கப்பட்டிருக்கிற பட்சத்திலே, அது சேர்த்துவைக்கப் பட்டிருக்கிற களத்திலாவது அதற்குச் சமீபமாக வாவது, தானிய முதலியவற்றையாகிலும் தாட்போரை யாகிலும் அடிப்பதற்கான வேறே இடத்திலாவது அதற்கு சமீபமாகவாவது விற்பனையை நடத்த வேண்டும்.

ஆனால், பொதுஜனங்கள் நடமாடும் அதி சமீபமான இடத்தில் விற்பனையை நடத்துவதனால் அந்த மாசூல் வெகு சாய்முகனையைவிட நல்ல விலைக்கு விற்குமென்று கோர்ட்டார் அபிப்பிராயப் பட்டால், அந்த இடத்திலே விற்பனை நடத்தும்படி அவர்கள் உத்தரவு செய்யலாம்.

(2) ஷை மாசூலை விற்பனைக்கு கொண்டுவருவதன்மேல்,

(a) விற்பனை நடத்தும் நபருடைய மதிப்பின்படி அதற்கு நியாயமான விலை கேட்கப்படாமலும்,

(b) மறுதினம் வரையிலாவது விற்பனை நடத்தும் இடத்தில் சந்தை கூடுகிற பட்சத்திலே அடுத்த சந்தை தினம் வரையிலாவது விற்பனையை நிறுத்திவைக்கும்படி அந்த மாசூலின் சொந்தக்காரராகிலும் அவருக்காகப் பிரவர்த்திக்க அதிகாரம் பெற்றுள்ள யாதொரு நபராகிலும் விண்ணப்பம் செய்துகொண்டும் இருந்தால், அந்தப்படியே விற்பனையை தள்ளிவைக்கவேண்டியதோடுகூட பிறகு அந்த மாசூலுக்கு என்ன விலை கேட்கப்பட்டபோதிலும் அந்த விற்பனையை முடித்துவிடவேண்டும்.

விற்கப்படும் சொத்தானது வளர்ந்துகொண்டிருக்கும் பயிராயிருந்து, அது சேர்த்துவைக்கக்கூடிய தன்மையுடையதாயிருந்தபோதிலும் இன்னும் சேர்த்துவைக்கப்படாமலிருந்தால், விற்பனை தினத்தை நிஷ்கரிஷை செய்யும்போது, அந்த விற்பனை தினத்துக்கு முன்னமே மாசூல் சேர்த்துவைக்கச் சித்தமாக்கப்படுவதற்கு சாவகாசமிருக்கும்படியாக நிஷ்கரிஷை செய்யவேண்டும்; அல்லாமலும் ஷை மாசூலானது அறுக்கப்பட்டு அல்லது சேர்க்கப்பட்டும்

சேர்த்துவைப்பதற்கு தயாராகவும் இருக்கிற வரையிலே விற்பனை நடத்தக்கூடாது. அந்த மாசூல் சேர்த்துவைக்கக்கூடாத தன்மை யுடையதாயிருந்தால், அது அறுத்துச் சேர்க்கப்படுவதற்கு முன்ன மே அதை விற்றுவிடலாம்; மேலும், கிரயதாரர் நிலத்தில் பிரவே சிக்கவும், அந்தப் பயிரைப்போஷிக்குங் காரியத்துக்காகவும் அறுக் கும் அல்லது சேர்க்கும் காரியத்துக்காகவும் அவசியமான சகல வேலைகளையும் செய்யவும் சுதந்தரமுடையவராவார்.

விற்கப்படும் சொத்தானது கைமாறத்தக்க யாதொரு ஆதர வாகவாகிலும் சட்டப்படி சேர்ந்த யாதொரு கூட்டத்தில் பங்காக வாகிலு மிருந்தால், கோர்ட்டார் அந்த ஆதரவு அல்லது பங்கைப் பஹிரங்கமான ஏலத்தில் விற்கும்படி உத்தரவு செய்யாமல், தரகரி மூலமாய் விற்பனை செய்விக்கலாம்,

அசையும் பொருள் பஹிரங்கமாய் ஏலம்போட்டு விற்பனை செய்யப்பட்டால் அந்தந்தத் தொகுதியின் கிரயத்தை விற்பனை காலத்திலாவது அதற்குப்பின்பு எவ்வளவு சீக்கிரத்தில் செலுத்த வேண்டுமென்று விற்பனை நடத்துகிற உத்தியோகிஸ்தராகிலும் வேறே நபராகிலும் உத்திரவு செய்கிறாரோ அவ்வளவு சீக்கிரத்தி லாவது செலுத்தவேண்டும்; செலுத்தாவிட்டால், உடனே அந்தச் சொத்தை மறுபடி விற்கவேண்டும்.

கிரயத்தொகை செலுத்தப்படுவதன்மேல், விற்பனை நடத்து கிற உத்தியோகஸ்தராவது வேறே நபராவது அதற்கு ரசீது கொடுக்கவேண்டும்; அதின்மேல் அந்த விக்கிரயம் அறுதியான தாகும். விற்கப்படும் அசையும் பொருளானது தீர்ப்பான கடனா ளிக்கும் இன்னொரு கூட்டுச் சொந்தக்காரருக்கும் சொந்தமான சறக்குகளில் ஒரு பங்காயிருந்து, அந்தக்கூட்டுச் சொந்தக்காரர் உட்பட இரண்டு அல்லது பல நபர்கள் அந்த சொத்தையாவது யாதொரு தொகுதியையாவது தனித்தனியே ஒரே தொகைக்கு விலைக்குக் கேட்டால், அந்தப்படி விலை கேட்டதை ஷை கூட்டுச் சொந்தக்காரர் விலை கேட்டதாகக் கொள்ளவேண்டும்.

அசையும் பொருளின் விற்பனையைப்பற்றி பிரசித்தஞ் செய் வதிலாவது அந்த விற்பனையை நடத்துவதிலாவது யாதொரு கிர மப் பிசகு நடந்தால், அதனாலே அந்த விக்கிரயம் பழுதாகமாட்

டாது; ஆனல், அந்தக் கிரமப்பிசகு காரணமாக வேறே யாதொரு நபரால் எவ்விதமாகவாகிலும் துன்பமடைகிறவர் அவர்மேல் பிரதி பலனுக்காக வியாஜ்ஜியம் தொடரலாம், அல்லது (அந்த வேறு நபர் கிரயதாரராயிருந்தால்) அந்தக் குறித்த பொருளேயே வரப்பற்று வதற்காகிலும் வரப்பற்றக் கூடாவிட்டால் பிரதி பலனுக்காகவும் வியாஜ்ஜியம் தொடரலாம். அந்தவிதம் வியாஜ்ஜியம் தொடர இந்து தேசத்து கால நிர்ணயச்சட்டம் 1-வது ஷிடியூல் 29-வது உள்பிரிவுப்படி ஒரு வருஷம் காலகெடுவு உண்டு. அது சொத்தைக் கைப்பற்றுகிற தேதிமுதல் வியாஜ்ஜியமூலம் உற்பத்தி. இந்த யிடத்தில் சமீப காலத்தில் இரங்கோன் சீப் கோர்ட்டார் செய்திருக்கும் தீர்மானத்தை கவனிக்கவேண்டும். இதில் மாஙான் என்பவன் மாசீயின் என்பவளுடைய போட்டை (படகு) ஜப்தி செய்து கோர்ட்டு ஏலத்திற்கு கொண்டுவர, அதை மாங்ஙேன் என்பவன் வாங்கினன். பிறகு முருகப்பசெட்டி அந்த போட்டின்பேரில் பந்தக டிக்கிரி பெற்று அந்த போட்டு விற்கப்பட்டது. மாங்ஙேன் என்பவன் மாஙான்பேரில் தான் கொடுத்த கிரயத்தொகைக்காக பிறாது செய்ய, சீப் கோர்ட்டார், மாஙான் எந்தவித மோச நடவடிக்கையிலும் சம்பந்தப்பட்டதாக தெரியாத காரணத்தைக்கொண்டு அந்தவிதம் தாவாசெய்ய முடியாதென்று தீர்மானித்தார்கள். 5. லோ. ப. ரூ. 58.

விற்கப்பட்ட சொத்தானது அசையும் பொருளாகயிருந்து, அதை வாஸ்தவமாய்க் கைப்பற்றியுமிருந்தால், அந்த சொத்தை கிரயதாரருக்கு ஒப்பித்துவிடவேண்டும்.

விற்கப்பட்ட சொத்தானது தீர்ப்பான கடனளியல்லாமல் வேறே யாதொரு நபருடைய ஸ்வாதீனத்திலிருக்கும் அசையும் பொருளாயிருந்தால், கிரயதாரர் தவிர வேறே எவருக்காவது அதன் ஸ்வாதீனத்தை ஒப்பிக்கக்கூடாதென்று அதை வைத்துக் கொண்டிருப்பவருக்கு நோட்டீஸ் கொடுத்து கிரயதாரருக்கு அதை ஒப்பிக்கவேண்டும். விற்கப்பட்ட சொத்தானது—கைமாறத்தக்க ஆதரவின்மேல் கொடுக்கப்படாத கடனயிருந்தாலும், கார்பொரேஷன் என்னும் சட்டப்படி சேர்ந்த யாதொரு கூட்டத்தில் பங்காயிருந்தாலும், கடன் கொடுத்திருக்கிறவர் அந்த கடனையாவது அதற்கு யாதொரு வட்டியையாவது பெற்றுக்கொள்ளக்கூடாதென்

றும், கடன் வாங்கியிருப்பவர் அந்தக் கிரயதாரர் தவிர வேறொருவருக்குஞ் செலுத்தக்கூடாதென்றுமாகிலும், மேற்படி பங்கு யார் பேரிலிருக்கிறதோ அவர் அதைக் கிரயதாரர் தவிர வேறொருவர் பேருக்கும் எவ்விதமாகவேனும் மாற்றக்கூடாதென்றும், அதற்கு வருகிற யாதொரு ஈவுத்தொகையையாவது வட்டியையாவது பெற்றுக்கொள்ளக்கூடாதென்றும், சட்டப்படி சேர்ந்த அந்தக் கூட்டத்தின் மானேஜர் செக்ரடெரி (காரியதரிசி) அல்லது வேறேதகுந்த உத்தியோகஸ்தரானவர் (அந்தப் பங்கைக்) கிரயதாரர் தவிர வேறொருவர் பேருக்கு அந்தப்படி மாற்றவொட்டக்கூடாதென்றும் யாதொரு ஈவு தொகை அல்லது வட்டியை வேறொருவருக்குச் செலுத்தக்கூடாதென்றாகிலும் கோர்ட்டார் எழுத்து மூலமாய் உத்திரவு பிறப்பித்து அந்த சொத்தை ஒப்பிக்கவேண்டும்.

கைமாறத்தக்க ஆதாரவையாவது கார்பொரேஷன் என்னும் சட்டப்படி சேர்ந்த யாதொரு கூட்டத்திலுள்ள பங்கையாவது டிரான்ஸ்பர் செய்வதற்கு அந்த ஆதாரவு அல்லது பங்கு யார்பேராயிருக்கிறதோ அந்த நபர் எண்டார்ஸ்மென்ட் எழுதிக்கொடுப்பதோ ஒரு தஸ்தாவேஜு எழுதிக்கொடுப்பதோ அவசியமாயிருந்தால், ஜட்ஜாவது இது விஷயமாய் அவரால் நியமிக்கப்படும் உத்தியோகஸ்தராவது அவசியமாயிருக்கிறபடி தஸ்தாவேஜு எழுதி கொடுக்கலாம் அல்லது எண்டார்ஸ்பண்ணலாம். அந்தப்படி எழுதிக்கொடுப்பது அல்லது எண்டார்ஸ் பண்ணுவது ஷெ நபரே எழுதிக்கொடுத்தால் அல்லது எண்டார்ஸ் பண்ணினால் என்ன பிரயோசனமுண்டாகுமோ அதே பிரயோசனமுடையதாக பாவிக்கப்படும். மேலே கண்டபடி எழுதிக்கொடுப்பதாவது எண்டார்ஸ் பண்ணுவதாவது அடியிற்கண்ட நமூனாப்படி இருக்கலாம். அதாவது:— இ. எப். என்பவர் ஏ. பி. என்பவர்மேல் தொடரப்பட்ட வியாஜ்ஜியத்திலே ஏ. பி. என்பவருக்குப் பர்த்தியாக (இன்ன)கோர்ட் ஜட்ஜாகிய (அல்லது சந்தர்ப்பத்துக்கேற்றபடி இன்னாராகிய)ஜி.டி.. என்பவர் அப்படிப்பட்ட கைமாறத்தக்க ஆதாரவையாவது பங்கையாவது ட்ரான்ஸ்பர் செய்கிற வரையிலே, அதன்மேல் வரவேண்டிய யாதொரு வட்டியையாகிலும் ஈவுத்தொகையையாகிலும் வரப்பற்றுவதற்கும் அதற்காக ரசிதில் கையெழுத்து போடுவதற்கும் கோர்ட்டார் உத்தரவு மூலமாக யாதொரு நபரை நியமிக்கலாம்; அந்தப்படி கையெழுத்து

செய்யப்பட்ட யாதொரு ரசீதானது கட்சிக்காரராலேயே கையெழுத்து செய்யப்பட்டிருந்தாலெப்படியோ அப்படியே சகல காரியங்களுக்காகவும் செலாவணியாக வேண்டியதோடுங்கூட பிரயோசனமுடையதாயிருக்கவேண்டும்.

இதில் முன்னமே நிபந்தனை கண்டிராத யாதொரு அசையும் பொருள் விஷயத்திலே, கோர்ட்டார் அப்படிப்பட்ட சொத்து கிரயதாரருக்காவது அவர் உத்திரவு செய்கிறபடி வேறே யாருக்காவது சேரும்படி உத்தரவு பிறப்பிக்கலாம். அதன்மேல், அந்த சொத்து அப்பிரகாரமே சேரவேண்டும்.

அசையாப்பொருளை விற்பனை செய்யும்படி ஸ்மால்காஸ் கோர்ட்டார் தவிர வேறே யாதொரு கோர்ட்டார் உத்திரவு பண்ணலாம். அசையாப்பொருளை விற்கும்படி உத்திரவு செய்திருந்தால் கடனாளி அதை கொதுவை மார்ட்கேஜ் வைத்தோ குத்தகைக்கு விட்டோ அல்லது பிரைவேட்டாய் விற்பனைசெய்தோ டிக்கிரி தொகையை செலுத்த முடியுமென்று கோர்ட்டாருக்கு திருப்திகரமான ருஜு கொடுத்தால் மட்டில் தங்களுக்கு யுக்தமாய் தோன்றும் கண்டிஷன்கள்படியும் காலம் வரையிலும் ஏலத்தை தள்ளி வைக்கலாம். இந்த 83-விதி மார்ட்கேஜ் அல்லது சார்ஜ் பொறுப்பு நிமித்தம் பிறப்பிக்கப்பட்ட டிக்கிரிகளில் ஏற்படும் ஏலத்தை நிறுத்த அதிகாரம் கொடுக்காது. தவிர முழு டிக்கிரி தொகையும் செலுத்த முடியுமென்று தோன்றினால் தான் கோர்ட்டார் அந்தவிதம் உத்தரவு செய்வார்கள். 14. ம. 277. மேலும் ஒரு காலத்தைக் கண்டு அதற்குள் கொதுவை முதலானது செய்ய கடனாளிக்கு ஒரு சர்டிபிக்கேட்டு கொடுக்கப்படும். பொதுவாய் 6 மாதம் டயம் கொடுக்கப்படும். அந்தவிதம் கிளம்பும் தொகையை கோர்ட்டில் செலுத்தவேண்டும். டிக்கிரி பெற்றவர்வசமும் கொடுக்கலாம். மேலும் இந்தவிதிப்படி எந்த கொதுவை முலானதும் கோர்ட்டாரால் ஊர்ஜிதம் செய்யப்படுகிறவரையில் அமுலுக்கு வராது. இந்தவிதம் ஏற்பாடுசெய்ய 2-கோர்ட்டுகளால் ஒரு சர்ட்டிபிக்கேட்டு கொடுபட்டதின்பேரில் பெரிய கோர்ட்டார் மட்டில் ஊர்ஜிதம் செய்தால் போதுமென்று பம்பாயில் தீர்மானமாயிருக்கிறது. 19. ப. 539. இந்த விதிப்படி பிறக்கும் ஆர்டர்களுக்கு அப்பீல் உண்டு. அசையாப் பொருளை வாங்குபவர் ஏலம் முடிந்தவுடனே கிரயத்

தொகையில் 100-க்கு 25-விழுக்காடு விற்பனை நடக்கும் உத்தியோகஸ்தரிடம் டேவணி கட்டவேண்டும். இல்லாவிட்டால் உடனே அந்த சொத்தை விற்கப்படும். ஆனால் டிக்கிரி பெற்றவரே கிரயத்துக்கு வாங்கினவராயிருந்தால் இந்த விதம் டேவணி கட்டவேண்டியதில்லையென்று கோர்ட்டார் உத்திரவுசெய்யலாம். சொத்து விற்கப்பட்டதிலிருந்து 15-நாள் கோர்ட்டு கலைவதற்குமுன் கிரயதாரர் முழுத்தொகையையும் கோர்ட்டிலேயே செலுத்தவேண்டும். மேல்கண்ட 72-வது விதிப்படி டிக்கிரி பெற்றவரே கிரயதாரராயிருந்தால் டிக்கிரி தொகை எவ்வளவோ அதைக் கழித்து மீதியைத்தான் கோர்ட்டில் கட்டவேண்டும். போஸ்டாபீசில் செலுத்தினால் செல்லாது. 22. ப. 415. கவர்ன்மெண்டு கஜானாவில் செலுத்தினால் போதுமென்று சென்னப்பட்டணத்தில் அபிப்பிராயப்படுகிறார்கள். 7. ம. 211. கோர்ட்டு விடுமுறை நாட்களில் ஆபீசு திறந்திருந்தால் கோர்ட்டு லீவு நாளாக பாவிக்கப்படமாட்டாது. 20. ப. 745. 100-க்கு 25-விழுக்காடு கட்டிவிட்டு பாக்கித்தொகையை கோர்ட்டு விடுமுறை டயத்தில் 15-நாள் கெடுவு முடிந்தாலும் கோர்ட்டு திறக்கும் தினத்தில் கட்டலாம். 13. ம. லா. ஜ. 271. அந்தவிதம் 15-தினத்துக்குள் பணம் செலுத்தாவிட்டால் டேவணி பணத்தில் விற்பனை செலவு கழித்து மீதியை கோர்ட்டார் இஷ்டப்படி கவர்ன்மெண்டாருக்கு பறிமுதல் செய்துவிடலாம். அந்த சொத்தை மறுபடியும் விற்கப்படும் தொகை செலுத்தத்தவறின கிரயதாரர் அந்த சொத்தில் உள்ள எல்லா பாத்தியதையும் இழந்துவிடவேண்டும். டிக்கிரி பெற்றவனும் கடனாளியும் மறு ஏலம் வேண்டாமென்று கேட்டுக்கொள்வதால் கவர்ன்மெண்டாருக்கு பறிமுதல் செய்யாமலிருக்கமாட்டார்கள். 25. ம. 535. இந்த 86-வது விதியின்கீழ் பிறக்கும் உத்திரவின்பேரில் அப்பீல் உண்டு. காலத்துக்குள் கிரயத்தொகை செலுத்தாமையினால் அசையாப் பொருளை வேறு இஸ்தியார் பிறந்த பின்புதான் மறு ஏலத்தில் விற்பனை செய்யப்படும். ஒவ்வொரு மறு ஏலத்திற்கும் புது இஸ்தியார் வேண்டுமென்பது அர்த்தமல்ல. 84-வது விதிப்படி நடக்கும் மறு ஏலத்துக்கு இஸ்தியார் அவசியமில்லை. 2. க. வீ. நே. 411. அசையாப்பொருள் விற்பனையை 89-வது விதிப்படி ரத்து செய்யலாம். அப்படிரத்து செய்ய அந்தப் பொருளுக்கு சொந்தக்காரனாவது

அல்லது விற்பனைக்கு முன்னே அந்தப் பொருளில் பாத்தியம் ஏற்பட்ட நபராவது மனுசெய்யவேண்டும்.

(1) ஜப்திக்கு பிறகு அந்த சொத்து யாருக்காவது தானமாக கிடைத்திருந்தால் அவரும், 26. ம. 365.

(2) ஜப்திக்கு பிறகும் ஏலத்துக்கு முந்தியும் சொத்தை கிரயத்துக்கு வாங்கியவரும், 30. ப. 575, 26. ம. 365.

(3) யாரிடத்தில் சொத்து கொதுவை வைக்கப்பட்டிருக்கிறதோ அந்த நபரும் (21. ம. 416.) மனு செய்யலாம்.

(4) ஏலத்திற்கு பிறகு கடனாளியிடமிருந்து வாங்கிய கிரயதாரர்; 1. க. வீ. நோ. 279.

(5) ஜப்திக்கு முன் வாங்கிய கிரயதாரர்; 7. க. வீ. நோ. 243. இவர்கள் மனு செய்யமுடியாது.

அவ்விதம் மனு செய்பவர் கிரயத்தொகையில் 100-க்கு 5-விழுக்காடு ஆகும் தொகையை கிரயதாரருக்கு கொடுக்கும் பொருட்டும் ஏல இஸ்தியாரில் கண்டிருக்கும் தொகையிலிருந்து அதற்கு பிறகு டிக்கிரி பெற்றவர் ஏதாவது வாங்கிக்கொண்டிருந்தால் அதை கழித்து பாக்கி தொகையை டிக்கிரி பெற்றவருக்கு கொடுக்கும் பொருட்டும் கோர்ட்டில் டேவணி கட்டி விடுவதின் மேல் அந்த விற்பனையை ரத்துசெய்ய விண்ணப்பம் செய்துகொள்ளலாம். இந்தப்படி கட்டவேண்டியதொகை விற்பனைதேதிமுதல் 30 தினங்களுக்குள் கட்டவேண்டும். விற்பனை தேதியன்று கிரயதாரன் கேள்வியை ஏற்றுக்கொண்டு சொத்தை கிரயதாரனுடையதென்று பிரசுரிக்கும் தினமே அல்லாமல் ஊர்ஜிதம் செய்யும் தேதி அல்ல. 29. க. 626. கோர்ட்டார் பிசகாலே சரியாய் தொகை செலுத்தப்படாவிட்டால் அதற்காக ஏலத்தை ரத்து செய்யாமலிருக்கமுடியாது. 25. க. 609. இந்த விதியின்கீழ் உத்திரவு செய்யுமுன்னே ஏலத்தில் சொத்தை வாங்கியவருக்கு நோட்டீஸ் கொடுக்கவேண்டும். 5. க. வீ. நோ. 63. இந்த விதிப்படி கடனாளி தொகையை கோர்ட்டில் கட்டினால் அதில் 73-வது பிரிவுப்படி மற்ற டிக்கிரிதாரர்கள் ஸவ்வரசு கொடுக்கும்படி மனு செய்ய முடியாது. 1, க. வீ. நோ. 695, 30. க. 262. அந்த விதம் கோர்ட்டில் கட்டும் தொகைக்கு டிக்கிரி பெற்றவர் தான் பாத்தியஸ்தர்.

30. க. 262. ஏல விற்பனையை ரத்து செய்யும்படி 90-வது விதிப் பிரகாரம் மனு செய்துகொண்டால், அதை வாப்ஸ் வாங்கிக்கொண் டாலொழிய இந்த 89-வது விதிப்படி மனு செய்துகொள்ள பாத்தி யம் கிடையாது. இந்த விதியின்கீழ் ஏற்படும் உத்திரவு 47-வது பிரி வின்கீழ் செய்யப்பட்டதாயிருந்தால் அப்பீல் உண்டு. 31. ப. 207. டிக்கிரி பெற்றவரே கிரயதாரராயிருந்தால் 47-வது பிரிவுப் படி அப்பீல் உண்டு. 6. க. வீ. நோ. 57. ஆனால் கிரயதாரர் மூன் ரும் மனிதனுயிருந்தால் அப்பீல் இல்லையென்று கல்கத்தாவிலும் (6. க. வீ. நோ. 57, 26. க. 449.) உண்டென்று அலஹபாத்திலும் (27. அ. 263.) தீர்மானமாயிருக்கிறது. கோர்ட்டு ஏலத்துக்கு பிந்தி பாத்தியம் ஏற்பட்ட கடனாளியின் பாத்தியதையை மேடோ வர் வாங்கியவர் மனு செய்திருந்தால் அதன்பேரில் ஏற்படும் உத்திர வுக்கு அப்பீலுண்டு. 21. ம. 416. ஏலத்தை ரத்து செய்யமுடி யாதென்று பிறக்கும் உத்திரவின்மேல் அப்பீல் உண்டு. 30. ம. 507. கடனாளி மனுவை ஏற்றுக்கொண்டு பிறந்த உத்திரவின்மேல் கிரயதாரர் அப்பீல் செய்யமுடியாதென்று அலஹபாத் ஹைகோர்ட் டார் அபிப்பிராயப்படுகிறார்கள். 30. அ. 379. இந்த விதியின் கீழ் கொடுபட்ட மனுவை அஜரில்லாததற்காக தள்ளப்பட்டு மறு படியும் தறக்கும்படி கொடுத்த மனுவின்பேரில் திறக்கமுடியா தென்று செய்த உத்திரவின்பேரில் அப்பீல் இல்லை. 20. அ. 596.

மேலே சொல்லிய விதியின்கீழ், நடந்தகேசின் நடவடிக்கை களை கவனிக்கத்தக்கது. வாதி 2-ம் பிரதிவாதிபேரில் பெற்ற டிக் கிரியை நிறைவேற்றி சொத்தை ஏலத்துக்கு கொண்டுவர முதல் பிரதிவாதி தன்பேரில் 2-ம் பிரதிவாதிக்காக டிக்கிரி தொகையை கட்டி ஏலம் ரத்தானால் இரண்டாம் பிரதிவாதி முதல் பிரதிவாதிக்கு சொத்தை சாஸனம்செய்து கொடுப்பதாய் ஏற்பாடு செய்து கொண்டு 1050-ரூபா முதல் பிரதிவாதி கட்ட ஏலம் ரத்தாகவே பிறகு டிக்கிரிபெற்றவன் அப்பீல் செய்ததின்பேரில் மறுபடியும் ஏலத்தை சரியென்று ஊர்ஜ்ஜிதம் செய்ததின்பேரில் டிக்கிரி பெற்ற வன் தன்னுடைய டிக்கிரிக்கு வரவேண்டிய பாக்கித் தொகைக்கு தொகையை ஜப்தி செய்யவே மேற்படி தொகைமுதல் பிரதிவாதி தொகையானதாலே டிக்கிரி பெற்றவனுக்கு ஜப்திசெய்ய் பாத்திய மில்லையென்று தீர்மானிக்கப்பட்டது. 13. க. வீ. நோ. 100.

89-வது விதிப்பிரகாரம் டேவணி கட்டுவதன்மேல் ஏல விற்பனையை ரத்து பண்ணும்படி விண்ணப்பம் செய்துகொள்ளலாம் என்று தெரிந்துகொண்டோம். தவிர, 90-வது விதிப்படியும் ஏலத்தை ரத்துசெய்யும்படி மனு கொடுக்கலாம். டிக்கிரி பெற்றவராவது அல்லது ஏல விற்பனையானல் யாருக்கு பாதகமுண்டாகிறதோ அவராவது அல்லது ஆஸ்தியை பங்குவீதம் பெற்றுக் கொள்ள பாத்தியமுடையவராவது அந்த ஏல விற்பனையைப்பற்றி பிரசித்தம் செய்ததிலாகிலும் அந்த விற்பனையை நடத்தினதிலாகிலும் யாதொரு முக்கியமான கிரமப்பிசகு அல்லது மோசம் நடந்திருக்கிறதென்னும் காரணத்தினல் அந்த விற்பனையை ரத்துசெய்ய மனு கொடுக்கலாம். அந்த விதம் ரத்து செய்யுமுன் கோர்ட்டாருக்கு திருப்தீகரமாய் கிரமப்பிசகு அல்லது மோசம் காரணமாக மனுதாருக்கு வாஸ்தவமான கெடுதி நேரிட்டிருப்பதாய் ருஜு கொடுக்கவேண்டும். மனுவில்லாமல் கோர்ட்டாரே ஏலத்தை ரத்து செய்யமுடியாது. 2. அ. வீ. நோ. 1. அந்தப்படி செய்யும் மனுவில் டிக்கிரி பெற்றவனையும் (15. அ. 407.) ஏலத்தில் வாங்கிய கிரயதாரனையும் (2. அ. 257; 6. ம. 237.) கட்சிகாரர்களாக செய்ய வேண்டும். முக்கியமானகெடுதி இன்னதென்று அடியில் கண்டிருக்கும் கேசுகளால் தெறிந்துகொள்ளலாம்:—

(1) தகுந்த காரணமில்லால் பல தடவைகளில் ஏலத்தை தள்ளிவைத்தல்; 14. ம. 227.

(2) ஏல இஸ்தியார் பிரசித்தம் செய்தல் அல்லது சரிவர செய்யாதல்; 9. க. 656.

(3) சொத்துக்கு ஏற்பட்டிருக்கும் தீர்வையை இஸ்தியாரில் காணுதிருத்தல்; 9. க. 656; 23. ம. 628.

(4) கடனளிக்கு பயித்தியம்பிடித்த பிறகு ஏலம் நடத்துதல்; 19. ம. 219.

(5) ஏலத்தில் கேட்பவர்களை ஏமாற்றவேண்டி இஸ்தியாரில் சொத்தின் கிரமமான பொறுமானத்தை சரியாக காணுதிருத்தல்; 20. அ. 412.

(6) ஏல இஸ்தியார் பிறந்து 30-நாள் கழியுமுன் ஏலம் நடத்துதல்; 21. க. 66; 14. ம. 227.

(7) பல அசையாப் பொருள்களை ஏல இஸ்தியாரில் காணப் பட்டு ஒவ்வொரு சொத்திலும் இஸ்தியாரை ஒட்டாமல் விடுவது ; 11. க. 74.

(8) சொத்து இருக்குமிடத்திலோ அதற்கு சமீபத்திலோ தண்டோரா மூலமாய் பிரசித்தம் செய்யாதது ; 10. ப. 504.

(9) யாவர்க்கும் தெரியும்படி சொத்தின் ஒரு முக்கிய பாகத்தில் இஸ்தியாரை ஒட்டாமலிருத்தல் 7. க. 466.

(10) கோர்ட்டு கட்டிடத்திலேயே நடத்தும் ஏலத்தை கோர்ட்டார் அனுமதி யன்னியில் தள்ளிவைத்து மறுபடியும் ஏலத்தை நடத்துதல் ; 12. ம. லா. ஜ. 97.

(11) ஏல இஸ்தியாரில் கண்டிருக்கும் நேரத்துக்கு முந்தி ஏலத்தை நடத்துதல்; 4. லோ. ப. ரூ. 123; 16. க. 794 அ. ப. ரூ. 1907. 9.

(12) சோளுஸாவில் இடத்தை குறிக்காதது ; 31. க. 1 ; 23. ம. 227.

(13) ஜப்திசெய்த சொத்துக்கு அரைமயில் தூரத்தில் பிரசித்தம் செய்தல் ; 6. க. வி. நோ. 44.

(14) ஏலத்தை தள்ளி வைத்த பிறகு புது சோளுஸா அன்னியில் விற்பனை செய்தல் ; 7. க. 34.

(15) ஏ. பீ. என்பவர்கள் சொத்தை விற்கப்படுமென்று இஸ்தியாரில் கண்டு பிறகு புது இஸ்தியார் அன்னியில் ஏயின் பாகத்தை மட்டில் விற்றல் ; 6. க. லா. ரி. 237.

(16) இஸ்தியாரில் நேரத்தை காணுது விற்றல் ; 24. க. 291.

(17) ஒத்திவைத்த ஏலத்திற்கு நேரம் காணுது ஏலம் நடத்துதல் ; 6. க. வீ. நோ. 48.

(18) சொத்திலுள்ள கொதுவை மார்ட்கேஜ் முதலான வில்லங்கங்களை காணுதது ; 6. க. வீ. நோ. 836.

(19) இஸ்தியாரில் விற்பனை நேர்ந்ததை காணுதது ; 31. க 815.

(20) ஏலத்தை தள்ளிவைத்த உத்திரவில்கண்ட தினத்திற்கு முந்தின தினத்தில் ஏலத்தை நடத்துதல்; 25. வீ. ரி 328.

(21) சொத்துகளை எந்த வரிசையாக விற்பதாய் கண்டிருக்கிறதோ அதற்கு விரோதமாக நோட்டீஸ் கொடாது வேறு வரிசையாய் விற்றல்; 12. வீ. ரி. 281.

(22) லாட்டுகளாக விற்கப்படும் என்று காணப்பட்டு பிறகு மொத்தமாய் விற்பனை செய்தல்; 18. வீ. ரி. 342.

(23) கோர்ட்டார் ஏலத்தை தள்ளிவைத்தபிறகு அந்த உத்தரவு தெரியாமல் உத்தியோகஸ்தர் ஏலத்தை நடத்துதல்; 12. அ. 96. சென்னப்பட்டணத்தில் செல்லுமென்று தீர்மானமாயிருக்கிறது. 3. இ. கே. 82.

(24) ஏலத்தை நிறுத்தியபிறகு புது இஸ்தியார் வேண்டாமென்று கடனாளி சொன்னபோதிலும் மறுபடியும் இஸ்தியார் பிறப்பிக்கவேண்டுமென்று டிக்கிரி பெற்றவர் கேட்டு அதை பிறப்பிக்காமல் ஏலம் நடத்துதல்; 24. ம. 311.

(25) கடனாளியின் வார்சுதாரருக்கு சரியான நோட்டீஸ் கொடாமல் ஏலத்தை நடத்துதல்; 25. ப. 337.

(26) இஸ்தியாரில் கண்ட நேரத்துக்கு பிந்தி நடத்துதல்; 11. அ. வி. நோ. 156.

(27) ஜப்தியில்லாமல் ஏலத்தில் விற்பது; 21. அ. 311.

(28) இஸ்தியாரில் கண்ட இடத்திலும் நேரத்திலும் இல்லாமல் வேறு இடத்திலும் நேரத்திலும் விற்றல், 2. இ. கே. 459.

இந்த கேசுகளிலெல்லாம் முக்கியமான அம்சங்களில் கிரமப்பிசகு நேரிட்டதாக கண்டுபிடிக்கப்பட்டது.

அடியில்கண்டிருக்கும் கேசுகளில் அந்த விதமான கிரமப்பிசகுகளில்லை என்று தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது:—

(1) ஜப்தி நோட்டீஸையும் இஸ்தியாரையும் சேர்த்து பிறப்பித்து பிரசுரம் செய்தல்; 4. வீ. ரி. 12.

(2) விற்பனை தேதியன்று கிரயத்தொகையில் 100-க்கு 25-விழுக்காடு டேவணி கட்டாதது ; 28. அ. 238 ; 3. லோ. ப. ரூ. 225.

(3) குறைந்த விலைக்கு விற்பனை செய்தல் ; 8. ப. 424.

(4) ஒரு லாட்டை பல லாட்டுகளாக பிரித்து ஏலம் போடுதல் ; 21. ம. 417

(5) கீழ் கோர்ட்டாரால் பிறப்பித்த இஞ்சங்ஷன் (தடை நோட்டீஸ்) படி டிஸ்டிரிக்டு கோர்ட்டார் ஏலத்தை தள்ளி வைத்தல் ; 23. க. 351.

(6) அசையாப்பொருளை விடுமுறைநாளில் விற்றல் ; 3 அ. 333.

(7) புது இஸ்தியார் இல்லாமல் விற்றல் ; 29. அ. 196.

(8) வேறு ஜில்லாவில் சொத்தின் பெரும்பாகமிருந்து ஏலம் போடுமிடத்தில் சிறுபாகமட்டில் யிருத்தல் ; 23. வீ. ரி. 154.

மோசத்தால் கெடுதி ஏற்பட்டிருந்தாலும் போதுமென்று மேலே சொன்னோமல்லவா. ஏலத்தில் விலைக்கு கேட்டவரும் மற்ற சிலரும் சேர்ந்துகொண்டு பிறர் வாங்கவொட்டாமல் நடந்துவந்தார்களென்று ருஜுப்பிப்பதால் மோசம் இருந்ததென்று ஏற்படாது. 23. க. 228 ; 4. க. வீ. நோ. 227. தவிர இந்த கேசுகளில், டிக்கிரிதாரரும் ஏலத்தில் வாங்கிய கிரயதாரரும் ஒருவருக்கொருவர் ஜாஸ்தி தொகைக்கு கேட்கிறதில்லையென்று முடிவு செய்துகொண்டாலும் மோசமாகாதென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. நம்பிக்கைக்கு மோசம் வரும்படியாகவாவது அல்லது ஏலத்தில் கேட்பவர்களை பொய்சொல்லியோ பயமுறுத்தியோ கேட்பவர்களை கேட்கவொட்டாது செய்தார்களென்று ருஜு ஏற்பட்டால் மட்டில் மோசமிருந்ததாக ஏற்படும். நிறைவேற்று நடவடிக்கையில் மட்டும் டிக்கிரியில் சம்மந்தப்பட்டவர்கள் மோசம் ஏற்பட்டதாக கட்சி சொல்லும் பட்சத்தில் 47-வது பிரிவுப்படி மனு மூலமாக மட்டில் ஆக்ஷேபிக்கலாமே ஒழிய பிரத்தியேகமான வியாஜ்ஜிய மூலமாய் தொடர முடியாது. 31. க. 385. ஏலம் கரூர் ஆனபிற்கும் மனு செய்யலாம். 27. க. 702 ; 30. க. 142.

முக்கியமான விஷயத்தில் கிரயப் பிசகு அல்லது மோசமிருந்தால் மட்டில் போராது. அது காரணத்தால் வாஸ்தவமான கெடுதி நேரிட்டிருக்கவேண்டும். 21. க. 66; 20. ம. 159. கிரமப் பிசகும் கெடுதியும் ஏற்பட்டதைக் கொண்டு கோர்ட்டார் ஏலத்தை ரத்துசெய்யமாட்டார்கள். 11. க. 74. கிரமப் பிசகால் வாஸ்தவமான கெடுதி நேரிட்டதென்று நேரான ருஜு கொடுக்கவேண்டும். 21. க. 66. அவ்வித ருஜு இல்லாமல் கோர்ட்டார் தாங்களே கெடுதி ஏற்பட்டிருக்குமென்று ஜோஷியபாவனையாக ஊகிக்கக் கூடாது. 32. க. 502. ஆனால் ஏலத்தில் ஏற்பட்ட குறைந்த விலை கிரமப்பிசகால் விளைவித்திருக்கக்கூடிய விஷயங்களை ருஜு கொடுத்ததைக்கொண்டு அது காரணத்தால் கெடுதி நேரிட்டதென்று கோர்ட்டார் நினைக்கக்கூடும். 31. க. 815. இந்த 90-வது விதியின்கீழ் ஏலத்தை ரத்துசெய்ய கொடுத்த மனுவை ஆஜரில்லாமைக்காக தள்ளின உத்திரவின்பேரில் அப்பீல் உண்டு. 5. இ. கே. 493. ஆனால் அந்தவிதம் தள்ளினதின்பேரில் 9-வது ஆர்டர் 9-வது விதியின்கீழ் திறக்கும்படி கொடுக்கும் மனுவை தள்ளும் உத்திரவின்பேரில் அப்பீல்கிடையாது. 10. ப. 433, 22. ம. 221, 31. க. 207, 5. இ. கே. 493.

ஏல விற்பனையை ரத்து செய்யும்படி கடனாளிக்கு விற்கத்தக்க சுதந்தரமில்லையென்ற காரணத்தாலே கிரயதாரர் மனு 91-வது விதிப்படி செய்துகொள்ளலாம். கடனாளிக்கு சொத்தின் ஒரு பாகத்தில் மட்டில் சுதந்தர மில்லாமலிருந்தால் மேற்படி விதியின் கீழ் ரத்துசெய்ய மனு போடமுடியாது. 27. அ. 537.

மேலே சொல்லப்பட்டவைகளால் தெரிந்துகொள்ளவேண்டியது என்னவென்றால், அசையாப்பொருள் சம்மந்தப்பட்டவரையில் 89-வது, 90-வது விதிகளின் கீழ் டிக்கிரி பெற்றவரோ அல்லது கடனாளியோ, 91-வது விதியின் கீழ் கிரயதாரரோ யாதொரு ஏலத்தை ரத்துசெய்யும்படி இந்தியன் லிமிட்டேஷன் ஆக்ட்டு முதலாவது ஷெடியூல் 166-வது பிரிவுப்படி ஏலத்தேதியிலிருந்து 30 நாளைக்குள் மனு செய்துகொள்ளவேண்டும். அதே டயத்துக்குள் தான் அசையும் பொருளாயிருந்தாலும் அசையாப் பொருளாயிருந்தாலும் கடனாளியோ அல்லது ஏலத்தில் சம்மந்தப்பட்ட எந்த நபரோ 92-வது விதிப்படி ரத்து செய்யும்படி மனு

செய்துகொள்ளவேண்டும். இந்த விதம் மனு செய்பாமலிருந்தாலும் அல்லது செய்யப்பட்டு தள்ளிவிடப்பட்டாலும் கோர்ட்டார் விற்பனையை ஊர்ஜ்ஜிதம் செய்யும் உத்திரவின்பேரில் தான் உறுதியாகும். கோர்ட்டார் உத்திரவு செய்யுமுன் எல்லா கட்சிக்காரர்களுக்கும் நோட்டீஸ் கொடுக்கவேண்டியது. இந்த 92-ம் விதிபின் கீழ் செய்யும் உத்திரவை ரத்துசெய்ய அந்த உத்திரவு யாருக்கு விரோதமாகச் செய்யப்படுகிறதோ அவர் வியாஜ்ஜியம் கொண்டுவரப்படாது. இந்த விதியின் கீழ் ஏலத்தை ரத்துசெய்யும் உத்திரவின் பேரிலும் ரத்துசெய்ய முடியாதென்று பிறப்பிக்கும் உத்திரவின் பேரிலும் 43-வது ஆர்டர் (1) (2) பிரிவின் கீழ் அப்பீலுண்டு. இந்த பிரிவின் கீழ் கொடுத்த மனுவை ஆஜரில்லாமைக்காக தள்ளுபடி செய்தால் அதை திறக்கும்படி கொடுக்கும் மனுவையும் டிஸ்மிஸ் செய்யும் உத்திரவின்மேல் அப்பீல் இல்லை. 27. க. 414. இரண்டாவது அப்பீலுமில்லை. 23. ப. 531; 22. க. 802. கிரயதாரரை கட்சிக்காரராக சேர்க்கப்பட்டிருந்து ஏலம் ரத்தாயிருந்தால் அவர் அப்பீல் செய்யலாம். 2. அ. 352.

சட்ட விரோதமாக ஏலத்தை தள்ளியோ தள்ளாமலோ செய்யும் உத்தரவை 115-வது பிரிவுப்படி ரிவிஷன் செய்யலாம். 24. ம. 311; 21. ப. 681; 20. க. 8.

மேல் கண்ட 92-வது விதிப்படி யாதொரு அசையாப் பொருளின் ஏலத்தை ரத்து செய்தால் கிரயதாரர் கோர்ட்டார் உத்தரவு செய்யும் வட்டி போட்டாவது வட்டி இல்லாமலாவது தம்முடைய கிரயத் தொகையை திரும்பவும் கொடுத்துவிடும்படி அந்தத் தொகை யாருக்குக் கொடுக்கப்பட்டதோ அவரை திருப்பிக் கொடுக்கும்படி உத்திரவு செய்யலாம். இந்த 93-வது விதியின் கீழ் கிரயதாரருக்கு 2-பரிகாரங்கள் உண்டு. முதலாவது இந்த விதியில் சொல்லியிருப்பதுபோல் மனு செய்து கொள்ளலாம். அதற்கு லிமிடேஷன் ஆக்ட்டு 181 - வது பிரிவுப்படி ஏலத்தை ரத்து செய்யும் தேதியிலிருந்து 3-வருஷத்துக்குள் காலாவதி உண்டு. அல்லது கிரம வியாஜ்ஜியம் தொகையை திருப்பித் தரும்படியும் கொண்டுவரலாம். அந்தப்படி செய்யும் வியாஜ்ஜியத்திற்கு கல்கத்தா ஐகோர்ட்டார் அபிப்பிராயப்படி லிமிடேஷன் ஆக்ட் 62-வது பிரிவின் கீழ் 3-வருஷமும் (19. க. 123; 2. இ. கே. 559.)

சென்னபட்டணம் ஐகோர்ட்டார் அபிப்பிராயப்படி மேற்படி ஆக்ட் 120-வது பிரிவின் கீழ் 6-வருஷமும் (16. ம. 361.) உண்டு. மேலே சொன்ன பரிகாரங்கள் இரண்டில் எதை வேண்டுமானாலும் கேட்கலாம். ஒன்றைத்தான் கேட்கவேண்டு மென்ற கடமைகிடையாது. 32. க. 332. தவிர ஏலம் ரத்தானால் தான் கிரயதாரருக்கு பரிகாரம் கிடைக்குமென்று அருத்தமில்லை. மூன்றும் மனிதனால் விற்கப்பட்ட சொத்து தனக்கு சொந்த மென்றும் கடனாளிக்கு சொந்தமில்லையென்று ஏற்பட்டவுடனே ஏலத்தில் வாங்கிய கிரயதாரர் வியாஜ்ஜியம் கொண்டுவரலாமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 7. க. வீ. நோ. 105 ; 2. இ. கே. 539. ஏலம் ரத்தானவுடனே கிரயத் தொகையை பெற்றுக்கொண்ட டிக்கிரிதாரர் கிரயதாருக்கு தானே தொகையை உடனே கொடுக்கும் கடமை கிடையாது. ஆனதால் தான் திருப்பி கொடுக்கும்படி கோர்ட்டார் உத்திரவு செய்யுமுன் தன் டிக்கிரி கடனை தரும்படி கடனாளியைக் கேட்கும் பாத்தியம் டிக்கிரிதாரருக்கு இல்லை. 30. ம. 209.

தொகையை திருப்பி கொடுக்க இசையாதென்று ஏற்படும் உத்தரவின்பேரில் அப்பீல் கிடையாது. 12. அ. 397.

ஏலம் ஊர்ஜ்ஜிதமான பிறகு விற்கப்பட்ட சொத்தையும் கிரயதாரருடைய பெயரையும் குறிப்பிட்டு ஏலம் ஊர்ஜ்ஜிதமான தேதியையும் கண்டு சர்டிபிக்கெட்டு ஒன்று கொடுக்கப்படும். மனு செய்துகொள்ள லிமிடேஷன் ஆக்ட்டு 181-வது பிரிவுப்படி ஊர்ஜ்ஜிதம் செய்த தேதிமுதல் 3-வருஷம் காலகெடுவு உண்டு. 5. ப. 202. அலஹபாத் ஐகோர்ட்டார் கால கெடுவு இல்லையென்று தீர்மானித்திருக்கிறார்கள். 5. இ. கே. 263. அவ்வித மனுவுக்கு கோர்ட்டு பீசு ஸ்டாம்பு ஒட்டவேண்டியதில்லை. 13. ப. 670. ஏல சர்டிபிக்கெட்டுக்கு வேண்டிய ஸ்டாம்பை கிரயதாரர் கோர்ட்டில் கொடுக்கவேண்டும். 9. ப. 47. ஏல இஸ்தியாரில் கண்டிருப்பவற்றிற்கும் ஏல சர்டிபிக்கெட்டில் கண்டிருப்பவற்றிற்கும் வித்தியாசமிருந்தால் இஸ்தியாரில் கண்டதுதான் சரி. 1. க. லா. ரி. 460.

### பேயிலிப்புக்குகோகேக்கும் கம்மிஷன்.

(1) ஏலத் தொகை ரூபா 500-க்கு
மேற்படாம லிருந்தால் ... 100-க்கு 5-வீதமும்.

(2) ரூபா 500 - க்கு மேற்பட்டும் ரூபா 5000-க்கு மேற்படாம லிருந்தால் ... முதல் 500 - ரூபாயில் ரூபா 100-க்கு 5-வீத மும் பாக்கி தொகை யில் 100-க்கு 2-வீத மும்

(3) ரூபா 5000-க்கு மேற்பட்டால் முதல் 5000 - வரையில் மேற்கண்ட வீதப்ப டிக்கும் பாக்கி தொ கையில் 100-க்கு 1-வீதமும்.

யாதொரு அசையாப்பொருள் விற்பனை ஊர்ஜ்ஜிதமான பிறகு ஏல தேதிமுதல் கிரயதாரர் புரமாயும் இருந்து வந்ததாக பாவிக்கப் படுமென்பது 65-வது பிரிவால் தெரியவருகிறது. கிரயதாரருக்கு ஏல சர்டிபிக்கெட்டு கொடுக்கு முன் ஏலம் நடத்திய டிக்கிரியை மேல்கோர்ட்டாரால் ரத்து செய்யப்பட்டால் கிரயதாரரின் பாத்தியம் அறுதியாகா தென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 29. அ. 591. ஆனால் விற்பனை ஊர்ஜ்ஜிதமாக அறுதியாகிவிட்டால் கிரயதாரருக்கு சர்டிபிக்கெட்டு பெற பாத்தியமுடையராகிறார். டிக்கிரிதாரர் கிரயதாரரா யிருந்தாலொழிய டிக்கிரி ரத்தாவதால் ஏலம் ரத்தாகாது. ஏல சர்டிபிக்கெட்டு கொடுத்திருந்தாலும் கொடாமலிருந்தாலும் ஏலம் ஊர்ஜ்ஜிதமானவுடனே அந்த தேதி முதல் கிரயதாரரின் பாத்திய முண்டென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 5. இ. கே. 263.

ஏலத்தில் விற்கப்பட்ட அசையாப்பொருளை தீர்ப்பான கடனாளியோ அல்லது அவருக்காக வேறொருவரோ அல்லது ஜப்திக்கு பிறகு கடனாளி உண்டுபண்ணியிருக்கும் சுதந்தரத்தினாலே பாத்தியத்தை கொண்டாடும் யாதொருவருடைய அனுபோகத்திலிருந்தால் மேல்கண்ட ஏல சர்டிபிக்கெட்டு கொடுத்த பிறகு கிரயதாரருக்காவது அல்லது அவரால் நியமிக்கப்படும் நபருக்காவது அதை ஸ்வாதீனப்படுத்தி கொடுக்கப்படும். அவசியமானால் அதிலிருப்பவர்களை அப்புறப்படுத்தி ஒப்பிக்கும்படிக்கும் உத்திரவு செய்யப்படும்

இந்த 95-வது விதியின்கீழ் கிரயதாரருக்கு 2 பாத்தியங்கள் உண்டு. 14. க. 641; 1. இ. கே. 416. முதலாவது, மனு செய்து கொள்ளலாம். அதற்கு லிமிடேஷன் ஆக்ட்டு 181-வது பிரிவுப்படி ஏல சர்டிபிகெட்டு கொடுபட்ட தேதி முதல் 3 வருஷம் கெடுவு காலமுண்டு. 17. ப. 228; 32. ம. 136. அலகாபாத்து ஹைகோர்ட்டார் அபிப்பிராயப்படி ஏலம் ஊர்ஜ்ஜிதமான தேதியி லிருந்து வியாஜ்ஜிய மூலத்தை கணக்கிடவேண்டும். 30. அ. 390.

தவிர சொத்தானது வாடகை அல்லது குத்தகைதாரனுடைய அநுபோகத்திலிருந்தால் அந்த சொத்தில் எல்லாருக்கும் தெரியும் படியான ஒரு இடத்தில் ஏல சர்டிபிக்கெட்டுக்கு ஒரு காபியை ஒட்டியும் சௌகரியமான இடத்திலே தண்டோரா மூலமாய் கடனாளிக்கு இருந்த சுதந்தரம் கிரயதாரருக்கு போய்விட்டதென்று அறிக்கை செய்தும் ஒப்பிக்கும்படி உத்திரவு செய்யப்படும்.

இந்தவிதம் உத்திரவு பெறுவதற்காக செய்யப்படும் மனுவுக்கு லிமிடேஷன் ஆக்ட்டு 181-வது பிரிவுப்படி ஏல சர்டிபிக்கெட்டு கொடுத்த தேதிமுதல் 3 வருஷம் கெடுவுகாலம் உண்டு. 3. ப. 433. ஸ்வாதீனப்படுத்தி கொடுத்தது பிரயோஜன மில்லாதிருந்தால் கடனாளிபேரில் 138-வது பிரிவுப்படி 12-வருஷத்திற்குள் வியாஜ்ஜியம் கொண்டுவரலாம். 10. க. 402. ஸ்வாதீனம் செய்யும் உத்திரவின்பேரில் அப்பீல் கிடையாது. 18. அ. 36.

மேல்சொன்ன பிரகாரம் சொத்தை ஸ்வாதீனம் ஒப்பிப்பதை எதிர்ப்பதை நாம் பார்த்து மிருக்கிறோம் கேட்டுமிருக்கிறோம். அவ்விதம் கடனாளியாவது அல்லது அவனுடைய தூண்டுதலின் பேரில் வேறு மனிதனாவது எதிர்த்தால் அசையாப்பொருளை ஸ்வாதீனப்படுத்தும் பொருட்டு உண்டான டிக்கிரி பெற்றவராகினும் அல்லது சொத்தை ஏலத்தில் விலைக்கி வாங்கியவராகினும் அப்படி தடுக்கப்பட்டதைப் பற்றி மனு பண்ணிக்கொள்ளலாம். கோர்ட்டார் ஸம்மன் அனுப்பி விசாரித்ததின்மேல் நியாயமான காரணமில்லாமல் தடுக்கப்பட்டதாக தெரியவந்தால் மனுதாரருக்கு சொத்தை ஸ்வாதீனப்படுத்தும்படிக்கு உத்தரவு செய்தும் பின்னும் ஸ்வாதீனப்படுத்துகையில் மறுபடியும் எதிர்க்கப்பட்டால் மனுதாரர் கேட்டுக் கொள்ளுவதின்மேல் கடனாளியையாவது அல்லது அவன் தூண்டுதலினாலே பிரவர்த்திக்கிற மனிதனையாவது 30-நாளுக்கு

அதிகப்படாமல் சிவில் ஜெயிலில் போட உத்திரவு 98-வது விதிப்பிர காரம் செய்யலாம்.

ஸ்வாதீனம் ஒப்பிப்பதை வெளிப்படையான நடத்தைகளால் எதிர்த்தால்தான் எதிர்த்ததாக எண்ணப்படும். 25. ப. 478. அந்த விதம் மனு லிமிடேஷன் ஆகட்டு 167-வது பிரிவுப்படி தடுத்ததின் முதல் 30-நாளைக்குள் செய்து கொள்ளவேண்டும். மனுவை காலா வதி தோஷம் என்று தள்ளிவிட்டாலும் காலாவதி நிர்ணயச்சட்டம் 138-வது பிரிவுப்படி 12-வருஷத்திற்குள் கிரம வியாஜ்ஜியமும் கொண்டுவரலாம். 26. அ. 365 ; 6. அ. 75.

ஸ்வாதீனம் ஒப்பிப்பதை தீர்ப்பான கடனாளி அல்லாத வேறொரு மனிதன் தன் ஸ்வாதீனத்தில் நல்ல எண்ணத்தோடு பாத்தியதை கொண்டாடி எதிர்ப்பதாய் கோர்ட்டாருக்கு தெரிய வந்தால் ஸ்வாதீனப்படுத்தி கொடுக்கும்பொருட்டு கொடுத்த மனுவை தள்ளப்படும். அப்படி இல்லாத பட்சத்தில் தீர்ப்பான கடனாளியல்லாத வேறே யாதொரு நபரை அந்த சொத்தின் ஸ்வா தீன மிழக்கும்படியும் கோர்ட்டார் உத்திரவு செய்யக்கூடும். அப்போது அந்த நபர் அதைப்பற்றி கோர்ட்டுக்கு விண்ணப்பம் செய்துகொள்ளலாம். கோர்ட்டார் அதின்பேரில் ஸம்மன் விட்டு விசாரித்து வாஸ்தவமாய் மனுதாரர் கடனாளி தவிர வேறே எவர் நிமித்தமாகவாகிலும் தன் ஸ்வாதீனத்தி லிருந்து வைத்திருந்தா ரென்று தீர்மானித்து மனுதாரருக்கு ஸ்வாதீனம் செய்யும்படிக்கும் கோர்ட்டார் உத்திரவு செய்யலாம். தீர்ப்பான கடனாளி அல்லாத எவருக்கு விரோதமாக 98-வது 99-வது அல்லது 101-வது விதி யின்படி உத்திரவு செய்யப்படுகிறதோ அந்த நபர் அந்த சொத்தின் தற்கால ஸ்வாதீனத்திற்கு தாம் கொண்டாடும் பாத்தியதையை ஸ்தாபிக்க ஒரு வியாஜ்ஜியம் கொண்டுவரலாம். ஆனால் மேல்படி உத்திரவானது அப்படி கொண்டுவரும் வியாஜ்ஜியத்தின் முடிவுக் குட்பட்டு அறுதியானதாகும். அந்தவிதம் தாவாசெய்ய லிமி டேஷன் ஆக்ட்டு 11-வது பிரிவுப்படி 1-வருஷம் கால கெடுவு உண்டு. 29. க. 25 ; 26. ப. 146 ; 27. ம. 25. இது சந்தர்ப்பத்தில் கவனிக்கவேண்டிய விஷயம் ஒன்றுண்டு. அதாவது, ஸ்வாதீனம் ஒப்பிப்பதை தடுத்தல் அல்லது எதிர்த்தல் இது சம்மந்தமான விஷ யங்களை விசாரித்திருந்து கோர்ட்டார் உத்திரவு பிறப்பித்திருந்தால்

பட்டில் கிரமவியாஜ்ஜியத்தின்முடிவுக்கு உட்பட்டுமேல்படி உத்திரவு முடிவு அடைந்ததாக பாவிக்கப்பட்டு செல்லும். ஆனதால் கொடுப்பட்ட மனுவை ருஜா இல்லாத காரணத்தால் வாப்ஸ் வேணுமென்று மனுதாரர் விண்ணப்பம் செய்யவே எதிரி முன்னிலேயில் கோர்ட்டார் ஷை மனுவை டிஸ்மிஸ் செய்தார்கள். பிறகு மனுதாரர் கிரம வியாஜ்ஜியம் கொண்டுவர, எதிரி மேலே சொன்ன 1 வருஷ கெடுவுக்குள் கொண்டுவராததால் காலாவதியாகிவிட்டதென்று கட்சியாட சட்டப்படியுள்ள யாதொரு விசாரணையுமின்றி உத்திரவு ஏற்பட்டதால் லிமிடேஷன் ஆக்ட் 11-வது பிரிவிற்கண்ட 1 வருஷ காலாவதி கெடுவு அந்த வியாஜ்ஜியத்திற்கு பிரயோகப்படமாட்டாதென்று தீர்மானிக்கப்பட்டது. 34. க. 491. இதன் அருத்தம் அடியில் கண்டிருக்கும் மதிராஸ் தீர்ப்பால் செவ்வையாக விளங்கும். சி. பு. கோ. 21-வது ஆடர் 103-வது விதியின்கீழ் தடுத்த விஷயங்களை சரிவர விசாரித்து செய்யும் உத்திரவு பிறந்திருந்தால் தான் அதை ரத்துசெய்யும் பொருட்டும் தன் பாத்தியதையை ஸ்தாபிப்பதற்கும் 1 வருஷத்திற்குள் வியாஜ்ஜியம் கொண்டுவரவேண்டும். அந்த விதம் விசாரித்து உத்திரவு செய்யாமல் மனுதாரரை சிவில் கோர்ட்டில் பரிகாரம் பெற்றுக்கொள்ளலாமென்று மட்டில் கண்டிருந்தால் 1 வருஷ காலத்துக்குள் மேலே கண்ட வியாஜ்ஜியம் கொண்டுவரவேண்டிய அவசியமில்லை. 27. ம. 25.

103-வது விதியின்கீழ் ஏற்படும் உத்திரவின்பேரில் அப்பீல் இல்லாமல் போனாலும் ரிவிஷன் செய்யலாம். 17. அ. 222.

அசையாப்பொருளின்மேல் டிக்கிரியை நிறைவேற்றும்படி கலெக்டருக்கு ஷை டிக்கிரி மாற்றலாம். இது சம்மந்தமான விஷயங்கள் 68 முதல் 72 வரையிலுள்ள பிரிவுகளிலும் சி. பு. கோ. 3-வது ஷெடியூலிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

## டிக்ரிக்காக பணம் செலுத்துதல்.

யாதொரு டிக்கிரிப்படி பணம் செலுத்தும் விதங்கள் 3 உண்டு.

(1) டிக்கிரியை நிறைவேற்றும் கோர்ட்டில் செலுத்தலாம். இது விஷயத்தைப் பற்றி டிக்கிரி பெற்றவருக்கு நோட்டீஸ் கொடுக்கவேண்டும்.

(2) கோர்ட்டுக்கு வெளியில் டிக்கிரி பெற்றவரிடத்திலும் கொடுக்கலாம்.

(3) டிக்கிரிசெய்த கோர்ட்டார் உத்திரவு செய்யும் வேறே விதமாயாவது செலுத்தலாம்.

தவணைத் தேதிகள் கண்ட டிக்கிரித் தொகையை டிக்கிரி பெற்றவன் இறந்துபோக அதில்கண்ட தேதிக்கு கொஞ்சம் நாள் பிறகு கோர்ட்டில் செலுத்தவே, மத்திய காலத்திற்கு கடனாளி வட்டிகொடுக்க வேண்டுமென்றும் மேலே கண்டபடி கோர்ட்டாருக்கு இறந்த விஷயத்தை தெரியப்படுத்தி உத்திரவு வாங்காதது அவன் பிசகென்றும் தீர்மானித்தார்கள். 5. இ. கே. 63. கோர்ட்டுக்கு வெளியில் டிக்கிரி பெற்றவரிடமும் தொகையை கொடுக்கலாமென்று சொன்னோம். அது சம்மந்தமான விஷயம் 21-வது ஆர்டர் 2-வது விதியில் கண்டிருக்கிறது. அந்த விதியை நன்றாய் கவனிக்கவேண்டியது அவசியம். ஏனென்றால் டிக்கிரி நிறைவேற்றும் நடவடிக்கைகளில் தொகை கொடுத்துவிட்டதாக கடனாளி வெகு கேசுகளில் கட்சி சொல்லுவதை நாம் பார்க்கிறோமல்லவா ? எவ்விதமான டிக்கிரியில்கண்ட தொகையை கோர்ட்டுக்கு வெளியிலே கொடுக்கப்பட்டாலும் டிக்கிரி பெற்றவருக்கு திருப்தீகரமாய் முழுதுமாவது சிறிது மட்டிலாவது வேறே விதமாய் ஒழுங்கு செய்யப்பட்டாலும் அது விஷயத்தை டிக்கிரி பெற்றவர் நிறைவேற்றும் கோர்ட்டாருக்கு ஸர்டிபை பண்ணவேண்டும். அதை கோர்ட்டார் பதிவு செய்யவேண்டும். இந்தவிதம் டிக்கிரி பெற்றவர் சர்டிபை செய்ய யாதொரு கெடுவுகாலமுமில்லை. 21. ப. 122. தவிர கடனாளியும் அந்த விஷயத்தைப்பற்றி மனு செய்யலாம். அதன்பேரில் டிக்கிரி பெற்றவருக்கு நோட்டீஸ் கொடுத்து அவர் ஆக்ஷேபனையைத் தெரிந்துகொண்டு ஒழுங்கு செய்தது வாஸ்தவமென்று ஏற்பட்டால் அப்பிரகாரமே அதை கோர்ட்டார் பதிவு செய்வார்கள். இந்தவிதம் மனு செய்துகொள்ள ஒழுங்கு செய்த தேதிமுதல் 90-நாளைக்குள் செய்யவேண்டுமென்று இ. லி. ஆ. 174 வது பிரிவால் தெரியவரும். தவிர மேலே சொன்ன 2-வது விதிப்

பிரகாரம் அப்படி பணம் செலுத்தப்பட்டதையாவது ஒழுங்கு செய்யப்பட்டதையாவது மேலே கண்டபடி ஸர்டிபை பண்ணு மலும் பதிவு செய்யாமலுமிருந்தால் அதை டிக்கிரி நிறைவேற்றும் எந்தக் கோர்ட்டாரும் அங்கீகரிக்க கூடாது. பொதுவாய் டிக்கிரி பெற்றவர் ஸர்டிபை செய்யும்விதம் இரண்டு உண்டு. முதலாவது மனுமூலமாய் தெரிவிக்கலாம். இரண்டாவது ஒழுங்கு செய்யப் பட்டிருந்தால் நிறைவேற்றுமனுவில் எந்தவிதம் என்று போட்டிருக் கும் இடத்திற்கு நேராக எழுதியும் தெரிவிக்கலாம். கடனாளி மனு கொடுத்து அது ரத்தாய்விட்டால் அது 47-வது பிரிவின்கீழ் செய்ததாக பாவித்து அப்பீல் செய்யலாம். 18. ம. 26 ; 16. அ. 129. கிரம வழக்கு கொண்டுவர முடியாது. டிக்கிரி பெற்றவரோ அல்லது கடனாளியோ கொடுக்கும் மனுவை முடிவு செய்யும் உத் திரவின்பேரில் அப்பீலுண்டு. ஆனால் மேலேகண்ட இருவரும் மனுகொடாமல் டிக்கிரி முழுதிலுமோ அல்லது ஒரு பாகமோ ஒழுங்கு செய்யப்பட்டிருந்தும் டிக்கிரி பெற்றவர் அதற்கு விரோத மாய் நிறைவேற்றினால் கடனாளிக்கு கிரம வியாஜ்ஜியமூலமாய் பரி காரம் தேடிக்கொள்ளலாம்.

நிறைவேற்றுகிற சம்மந்தமாய் 47-வது பிரிவின்கீழ் வரக் கூடிய விஷயங்களில் கிரமவியாஜ்ஜியம் கொண்டுவர முடியாது. அப் பர்பர்மாவில் 1909-ம் வருஷம் நடந்த கேசின் விஷயங்கள் என்ன வென்றால் கடனாளிகொடுத்த மனுவை விசாரித்து டிஸ்மிஸ் செய் யப்பட்டு அப்பீலிலும் அசலே உறுதியென்று தீர்மானித்தபிறகு கோர்ட்டுக்கு வெளியில் கொடுத்ததாகச் சொல்லும் தொகை கிடைக்கவேணுமென்று கடனாளி விஜயாஜ்ஜியம் தொடர மாந்தனை மீங்கி 47-வது பிரிவுப்படி வியாஜ்ஜியம் கொண்டுவர கடனாளி தடைப் பட்டிருக்கிறாரென்றும், ரிஸ்ஜுடி கேட்டா (அதாவது ஏற்கனவே தீர்ந்த விஷயம்) என்னும் சட்டப்படி தாவா கொண்டுவர முடியா தென்றும் தீர்மானித்தார். அ. ப. ரூ. 1909-31. ஸர்டிபை பண்ணுவதாய் உறுதி சொல்லி பிறகு மோசத்தாலும் அசட்டை யாலும் டிக்கிரி பெற்றவர் ஸர்டிபை செய்யாத காரணத்தால் இரண் டாம் தடவை தொகை கொடுக்கும்படி நேரிட்ட நஷ்டத்துக்காக வியாஜ்ஜியம் கொண்டுவரலாமென்று சென்னப்பட்டணத்தில் தீர் மானம் செய்திருக்கிறார்கள். 5. ம. 397 ; 30. ம. 545. ஸர்டிபை

செய்யாத கேசில் டிக்கிரி தீர்ந்துபோய் விட்டதாகவும் நிறைவேற்ற பாத்தியமில்லை யென்றும் தாவா கொண்டுவர முடியாதென்று (21. க. 437; 31. க. 480.) தீர்மானித்திருக்கும் கல்கத்தா கேசுகளை பஞ்சாப் சீப் கோர்ட்டார் ஏற்றுக்கொள்ளாது அந்த விதம் கிரம வியாஜ்ஜியம் கொண்டுவரலாமென்று அபிப்பிராயப்படுகிறார்கள். 5. இ. கே. 814. தவிர தீர்ந்த டிக்கிரியை மோசடியாக நிறைவேற்றப்பட்டால் இந்தியன் பினல்கோடு 210-வது பிரிவின்கீழ் குற்றம் டிக்கிரி பெற்றவர்மேல் ஏற்படும். டிக்கிரி பெற்றவன் தொகை பெற்றுக்கொண்டதாக ஸர்டிபைசெய்த பிறகு அந்த டிக்கிரிகாரர்மேல் வாங்கிய வேறொரு டிக்கிரிதாரர் தனக்கு மேற்படியாரிடமிருந்து வரவேண்டிய கடனை மோசம் செய்யும் பொருட்டு அந்தவிதம் ஸர்டிபை செய்ததாய் சொல்லவும் முடியாது. அவ்விதம் சொல்லி ஸர்டிபை செய்யப்பட்ட டிக்கிரியை ஜப்தி செய்யவும் முடியாது. 2. இ. கே. 523.

டிக்கிரி பெற்றவர்கள் கடனாளியின் ஆஸ்தியை எவ்வரசாக பங்கிடு செய்யும் விஷயம் சி. பு. கோ. 73 வது பிரிவில் சொல்லப்பட்டிருப்பதை மிக ஜாக்கிரதையுடன் கவனிக்கவேண்டும்.

எவ்வரசு அடையும் பாத்தியத்திற்கு அடியில் கண்ட கண்டிஷன்களிருக்கவேண்டும் :—

(1) கடனாளியின் ஆஸ்தி நிறைவேற்றும் நடவடிக்கையால் கோர்ட்டார் வசம் வந்திருக்கவேண்டும்.

(2) அப்படிப்பட்ட ஆஸ்தி கோர்ட்டு வசம் வருவதற்கு முன்னமே பலடிக்கிரிதாரர்கள் அந்தக் கோர்ட்டாருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளவேண்டும்.

(3) மேற்படி டிக்கிரிதாரர்களுடைய டிக்கிரிகள் ஒரே கடனாளியின் மேல் பிறப்பிக்கப்பட்ட பணம் செலுத்துவதற்கான டிக்கிரிகளாய் இருக்கவேண்டும்;

(4) மேற்படி டிக்கிரிகள் ஐவேஜு முதலானதுபெற்று தீர்ந்ததாய் இல்லாமல் இருக்கவேண்டும்.

இந்த கண்டிஷன்களெல்லா மிருந்தால் மேற்படி ஆஸ்தியில் பணமாக்கினதற்குண்டான செலவுகளைக் கழித்து பாக்கி தொகையை எல்லா டிக்கிரிதாரர்களுக்கு பங்கு வீதம் செய்யப்படும்,

21-வது ஆடர் 83-வது விதிப்படி 100-க்கு 25 விழுக்காடு கட்டும் தொகை மேலே சொன்ன ஆஸ்தியாகாது. முழுத்தொகையும் கட்டும் வரையில் யாதொரு டிக்கிரிதாரருக்கும் எந்தவிதம் பாத்தியமும் கிடையாது. 26. ம. 179. மேற்படி ஆஸ்தி கடனாளி சொத்திலிருந்து ஏற்பட்டிருக்கவேண்டும். 6. ப. 528. கடனாளி தானாகக் கோர்ட்டில் கொடுக்கும் தொகையும் 8. அ. 67. தன்னை பிடித்த பிறகு கொடுத்த தொகையும் (6. ப. 528.) ஜப்தி செய்யப்பட்ட சொத்துக்களை கடனாளியால் மூன்றாம் மனுஷனுக்கு விற்பதால் பெறும் தொகையும் (28. ம. 380.) கச்சா சில்லில் பிடித்த சொத்தை ஏலம் போடுவதால் வரும் தொகையும் (10. க. வி. நோ. 634.) மேலே சொன்ன ஆஸ்தியாக பாவிக்கப்படமாட்டாது. ஆஸ்தியை வைத்திருக்கும் கோர்ட்டாருக்கு மனு செய்யவேண்டும். கச்சா வாரண்டு வாங்கும் கேசுகளிலும் மேலேசொன்ன விதம் மனு செய்யவேண்டும். ஒரே சொத்தை இரண்டு கோர்ட்டார்கள் ஜப்தி செய்திருந்தால் சின்னக் கோர்ட்டில் நிறைவேற்றிய டிக்கிரிதாரர் பெரிய கோர்ட்டுக்கு மனு செய்துகொள்ளவேண்டும். 16. ப. 683 ; 6. ம. 357. இதற்கு விரோதமாக கல்கத்தா கோர்ட்டார் தீர்மானம் செய்திருக்கிறார்கள். 21. க. 200. ஒரு டிக்கிரியை வேறொரு கோர்ட்டுக்கு மாற்றப்பட்ட பிறகு அந்த டிக்கிரியை மேடோவர் வாங்கினவர் டிக்கிரி பிறப்பித்த கோர்ட்டாருக்கு எவ்வரசுக்காக மனு கொடுக்கவேண்டும் ; மாற்றப்பட்ட கோர்ட்டாருக்கு கொடுக்க முடியாது. 25. அ. 443. அதே விதமாய் ஒரு டிக்கிரி வேறொரு கோர்ட்டுக்கு மாற்றப்பட்ட பிறகு டிக்கிரி பிறப்பித்த கோர்ட்டார் வசம் வரும் கடனாளி ஆஸ்தியை பங்கீடு செய்து கொடுக்க பிறப்பித்த கோர்ட்டாருக்கு மனு செய்து கொள்ளலாம். மாற்றப்பட்ட கோர்ட்டிலிருந்து பிறப்பித்த கோர்ட்டுக்கு மாற்றும்படி கேட்கவேண்டியதில்லை. 1. க. லா. ஜ. 315. மார்ட்கேஜு சொத்தின்பேரில் டிக்கிரி கொடுத்து யேதாவது பாக்கி ஏற்படுமாகில் ஆள் ஜவாப்தாரியின் பேரிலும், துடர்ந்து பெற்றுக்கொள்ளுகிறதென்று கண்டிருந்தால் அது மணி டிக்கிரியாகாது. 25. கல். 580.

ஆனால் இதற்கு விரோதமாக மதுராஸ் ஐகோர்ட் தீர்மானம் வந்திருக்கிறது. 28. ம. 473. மார்ட்கேஜு வியாஜ்ஜியத்தில்

முதலில் மார்ட்டுகேஜ் சொத்திலிருந்தும் பிந்தி இதர சொத்தி லிருந்தும் ஆளைத் தொடர்ந்தும் பெற்றுக் கொள்ளுகிற தென்று ஏற்படும் ருஜினமா டிக்கிரி மணி டிக்கிரி என்றும் பாவிக்கப்படும். 27. க. 285. ஏ. யென்பவனுக்கு பி. சி. இவர்களின் பேரில் டிக்கிரி இருக்கிறது. டி. யென்பவனுக்கு பி. என்பவர் பேரில் மட்டும் டிக் கிரி இருக்கிறது. பி. சம்பந்தப்பட்ட வரையில் இரண்டு டிக்கிரிதா ரர்களுடைய ஒரே கடனாளியாகத் தான் பாவிக்கப்படுவான். 30. க. 583. ஏ. யென்பவனுக்கு பி. பேரில் டிக்கிரி இருக்கிறது. சி. யென்பவனுக்கு பி. வார்சுபேரில் இருக்கிறது. இந்த இரண்டு டிக் கிரி தாரர்களுக்கும் ஒரே கடனாளியென்று பாவிக்கப்படமாட்டாது 25. ப. 494. யாதொரு மார்ட்கேஜ் அல்லது பொறுப்புக் குள்பட்டு யாதொரு சொத்து விற்கப்பட்டால் மார்ட்கேஜ் அல் லது பொறுப்புடையவர் அந்த விற்பனையால் வரும் தொகையில் பாகம் கிடைக்காது. தவிர மார்ட்கேஜ் பொறுப்பு இது உடை யவர் சம்மதியின்பேரில் கோர்ட்டார் அந்த மார்ட்கேஜ் அல்லது பொறுப்பினின்றும் நீக்கி விற்கும்படி உத்தரவு செய்யலாம். அப் படி விற்கப்பட்டால் விற்றுவந்த பணத்தை (1) விற்பனை செலவைக் கழித்து விட்டு (2) மார்ட்கேஜ் அல்லது கொதுவை பாத்தி யதை யுடையவருக்கு தொகை கொடுத்து பாக்கி இருக்கும் தொகையை டிக்கிரி தாரருக்கு எவ்வரசு கொடுக்கப்படும். மார்ட் கேஜ் பாத்தியத்தை உட்படுத்தி விற்கும்படி உத்தரவு செய் தால் சொத்தின்பேரில் உள்ள பாத்தியம் போகாது. ஆனால் விற் பனை தொகைக்கு எந்தவித பாத்தியமும் ஏற்படாது. அப் போது ஏல நோட்டீஸில் இந்த மார்ட்கேஜ் பாத்தியத்தையை செவ்வையாக கண்டெழுதவேண்டும். டிக்கிரி பெற்றவன் மார்ட் கேஜ் பாத்தியதையை தீர்த்து ஏலம் போடவேண்டுமென்று சொன்னால் மார்ட்கேஜ் தாரருக்கு நோட்டீசு கொடுத்து அவர் சம்மதத்தை தெரிந்துகொண்டு தான் அந்த விதம் செய்ய வேண் டும். அப்பொழுது அவருக்கு சொத்தில் இருக்கும் பாத்தியம் போய் விற்பனை தொகையில் முதல் பாத்தியம் ஏற்பட்டுவிடும். இந்த கேசில் ஏல நோட்டீசில் மார்ட்கேஜை எந்தவித பிரஸ்தாபமும் செய்யவேண்டியதில்லை. 3. லோ. ப. ரு. 258. அந்த விதம் கோர்ட் டார் உத்தரவுசெய்ய கட்டாயம் ஒன்றும் இல்லை. 3. லோ. ப. ரு. 275.

இந்த விதிப்பிரகாரம் பாத்திய மில்லாதவர்களுக்கு பங்கீடு செய்து கொடுக்கப்பட்டதாய் நினைத்தால் அதை திரும்ப கொடுத்து விடும்படி அப்படிப்பட்டவர்மேல் அதைப்பெற்றுக் கொள்ள பாத்தியமுள்ளவர் வியாஜ்ஜியம் தொடரலாம். அப்படி வியாஜ்ஜியம் செய்ய ஒருவருஷம் கெடுவுண்டு. பணம் கொடுத்ததி லிருந்து தான் வியாஜ்ஜியமூலம் உற்பத்தி. 11. க. 718. இந்த விதியின் கீழ் எவ்வரசுபெற யாதொரு டிக்கிரிதாரர் தன்னுடைய டிக்கிரியை மோசமில்லாமல் கிரமமாய் பெற்றிருந்தால்தான் பாத்தியம் ஏற்படும். 11. க. 42. ஆனதால், இந்த விதியின் கீழ் உத்தரவு செய்த பிறகும் தொகையை பங்கு விதம் செய்யுமுன்னும் யாதொரு டிக்கிரிதாரர் வேறொரு டிக்கிரிதாரர் டிக்கிரி மோசடியாக பெற்றதென்றும் அது காரணத்தால் அவருக்கு எவ்வரசு கிடைக்க பாத்திய மில்லையென்றும் தாவா கொண்டு வரலாமென்று கல்கத்தா ஐகோர்ட்டார் சொல்லுகிறார்கள். 3. க. லா. ஜ. 385. ஆனால் இதற்கு விரோதமாக சென்னப்பட்டணம் ஐகோர்ட்டு தீர்ப்புவந்திருக்கிறது. 7. ம. லா. ஜ. 277. ஏலம் போட்டு கோர்ட்டுக்கு வரும் தொகையை ஏலம் கறாராவதற்கு முன்பாக பணத்தை எடுக்க முடியுமாவென்று பலர் கேட்கிறார்கள். அந்தவிதம் கொடுக்கலாமென்று பம்பாய் ஜட்ஜிகள் அபிப்பிராயப்படுகிறார்கள். 12. ப. 282. இதற்கு விரோதமாக கல்கத்தா தீர்மானம் ஒன்று இருக்கிறது. 18. க. 242. எவ்வரசுக்காக போடும் மனுவை யேற்றுக்கொள்ள மாட்டேனென்று கோர்ட்டார் சொல்லமுடியாது. கடனாளிக்கு இருக்கும் மற்ற சொத்தின் பேரில் தொடர்ந்து பெற்றுக் கொள்ளக் கூடுமென்று நினைத்து மனுவை ஒத்துக்கொள்ள மாட்டோமென்று சொல்லக்கூடாது. 32. ம. 334.

ஷ விதியின்கீழ் செய்யும் உத்தரவின்பேரில் அப்பீல் கிடையாது. ஐகோர்ட்டில் ரிவிஷன் செய்யலாமா செய்யக் கூடாதா என்னும் விஷயத்தைப்பற்றி தீர்ப்புகள் ஒற்றுமையாயில்லை. கல்கத்தா மதராஸ் தீர்மானங்கள்படி மேற்படி விதியின்கீழ் பிறக்கும் உத்தரவை ஐகோர்ட்டார் ரிவிஷன் செய்யலாம். 9. க. லா. ஜ. 210; 1. இ. கே. 783 ; 32. ம. 334.

இதற்கு விரோதமாக அலகாபாத்திலும் பஞ்சாப்பிலும் பம்பாயிலும், பர்மாவிலும் தீர்ப்புகள் இருக்கின்றன. 2. அ. லா. ஜ. 370; 128. ப. ரி. 1906 ; 28 ப. 45 ; 83. லோ. ப. ரூ. 131.

டிக்கிரியை நிறைவேற்றுவதற்கு சம்மந்தப்படாமல் சி. பு. கோ நிபந்தனேயின்படி யாதொருவரை பிடிக்கவேண்டு மென்றோ அல்லது யாதொரு சொத்தை ஜப்தி செய்ய வேண்டுமென்றோ மனு செய்து கொண்டால் அப்படி மனு செய்துகொள்ளப்படும் கோர்ட்டார் அதிகார யெல்லேக்கு வெளியே அந்த நபரோ சொத்தோ இருக்குமாகில் கோர்ட்டார் யுக்தமாய் தோன்றினல் எந்தக்கோர்ட்டின் அதிகார யெல்லேக்குள் மேற்படி நபர் வசிக்கிறரோ அல்லது மேற்படி சொத்து இருக்கிறதோ அந்த டிஸ்டிரிக்ட் கோர்ட்டாருக்கு ஆளேப் பிடிப்பதற்கு வாரண்டும் சொத்தை ஜப்தி செய்ய உத்தரவும் செலவு தொகையுடன் அனுப்பவேண்டும். டிஸ்டிரிக்ட் கோர்ட்டார் தங்கள் உத்தியோகஸ்தரைக் கொண்டாவது அல்லது கீழ்ப்பட்ட யாதொரு கோர்ட்டார் மூலமாகவாவது மேற்படி உத்தரவுப்படி நிறைவேற்றி அது சங்கதியை உத்தரவு பிறப்பித்த கோர்ட்டாருக்குத் தெரிவிக்கவேண்டும். இந்தப் பிரிவின்படி பிடிக்கவேண்டிய நபரோ ஜப்தி பண்ணவேண்டிய சொத்தோ கீழ் பர்மா சீப் கோர்ட்டார் அதிகார யெல்லேக்குள் இருந்தால் உத்திரவை ரங்கோனில் உள்ள ஸ்மால்காஸ் கோர்ட்டாருக்கு அனுப்பவேண்டும். இந்த விதியின் கீழ் யாதொரு சொத்தை கச்சா ஜப்திசெய்ய முடியாதென்று பம்பாய், சென்னப்பட்டணம் கோர்ட்டார்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். 8. ம. 20; 5. ப. லா. ரி. 570. ஆனல் இதற்கு விரோதமான கல்கத்தா தீர்ப்பு ஒன்று இருக்கிறது. 7. க. வீ. நோ. 216. யாதொரு டிக்கிரி யேற்பட்டு நிறைவேற்றப்பட்ட பிறகு அப்பீலில் ரத்து செய்யப்பட்டால் ரத்து செய்யப்படு முன் டிக்கிரிக்காக கொடுபட்ட யாவற்றையும் அப்பீலில் ஜெயித்தவருக்கு மறுபடியும் கிடைக்கும்படி செய்ய அசல் கோர்ட்டாருக்கு இ. வி. ஆ. 182-வது பிரிவுப்படி அப்பீல் உத்திரவு பிறந்த தேதியிலிருந்து 3 வருஷத்திற்குள் மனு கொடுக்கவேண்டும். அதின்பேரில் திரும்பக் கொடுக்க வேண்டிய செலவு தொகையை கொடுக்கும்படிக்கும் சேரவேண்டிய வட்டி நஷ்ட ஈடு பிறதிபலன் மத்தியகால வரும்படி ஆகிய இவைகளே கொடுத்துவிடும்படிக்கும் 144-வது பிரிவின் கீழ் உத்தரவு செய்யலாம். இந்த பரிகாரங்களே மனு மூலமாய் பெற்றுக் கொள்ளவேண்டுமே ஒழிய வியாஜ்ஜியம் கொண்டுவரமுடியாது.

நியாயம் செய்யும்பொருட்டு சில நடவடிக்கைகள் கோர்ட்டார் செய்ய 94-வது பிரிவு அதிகாரம் கொடுக்கிறது. (1) ஹாஜராவ தற்கு பிரதிவாதி ஏன் ஜாமீன் கொடுக்கக்கூடாதென்றும் காரணத் தைத் தெரிவிக்கும்பொருட்டு அவரைப்பிடித்து கோர்ட்டார் முன் பாக கொண்டுவரும்படி வாரண்டு பிறப்பிப்பதுடன் கூட ஜாமீனுக் காக செய்யப்படும் யாதொரு உத்தரவின்படி அவர் நடக்க தவறி னல் அவரை சிவில் ஜெயிலுக்கும் அனுப்பலாம். பிரதிவாதி தனக் குச் சொந்தமான யாதொரு சொத்தை ஹாஜர் செய்வித்து அதைக் கோர்ட்டார் வசத்தில் வைப்பதற்காக ஜாமீன் கொடுக்கவேண்டு மென்று அவருக்குக் கட்டளை யிடலாம்; அல்லது யாதொரு சொத் தை ஜப்தி பண்ணும்படி உத்தரவு பிறப்பிக்கலாம். இந்த சந்தர்ப் பத்தில் 38-வது ஆர்டரில் பிரஸ்தாபிக்கும் கச்சா ஜப்தி செய்வதும் கச்சாவாரண்டில் பிடிப்பதும் இது விஷயங்களைப்பற்றி இங்கே யெடுத்துச்சொல்வது மிகவும் சௌகரியமாயிருக்கும். செட்டிப் பிள்ளைகள் இந்த அதிகாரத்தின் கீழ் உத்தரவு வாங்க ரொம்பவும் இஷ்டப்படுகிறார்கள். யாதொரு வியாஜ்ஜியத்திலே எக்காலத்திலும் பிரதிவாதி வாதியை தாமசம் பண்ணவேண்டுமென்றாவது கோர்ட்டு கட்டளையை தவிர்க்கவேண்டுமென்றாவது வியாஜ்ஜியத்தில் ஏற் படும் டிக்ரியை நிறைவேற்றுவதை தடுக்க அல்லது தவிர்க்கப் படுத்தவேண்டுமென்றாவது எண்ணங்கொண்டு மறைந்துபோய் விட்டால் அல்லது கோர்ட்டின் அதிகார யெல்லைகளை விட்டுபோய் விட்டாரென்றாகிலும் அல்லது அப்படிச்செய்ய இருக்கிறாரென் றாகிலும் தன் சொத்தை விற்று விட்டால் அல்லது கோர்ட்டின் அதிகார யெல்லைகளுக்கப்பால் கொண்டுபோய் விட்டாரென்றாகிலும் பிரதிவாதி பிரிட்டிஷ் இந்தியாவை விட்டு போவதாயிருந்து அத னாலேற்படும் டிக்கிரி நிறைவேற்றுவதற்கு தடங்கலோ தவக்கமோ வாதிக்கு உண்டாகுமென்றாவது நம்ப நியாயமாய் இடமுண்டென் றாகிலும் பிரமாணப் பத்திரிகை மூலமாகவோ வேறே விதமாகவோ கோர்ட்டார் திருப்தியடைகிற விஷயத்தில் பிரதிவாதிக்கு ஹாஜராகு வதற்கு ஏன் ஜாமீன் கொடுக்கக்கூடாதென்றும் காரணத்தை தெரி விப்பதற்கு அவரைப் பிடித்து கோர்ட்டார் முன்னே கொண்டுவரும் படி வாரண்டு பிறப்பிக்கலாம். வாரண்டில் கண்டிருக்கும் தொகை யை செலுத்திவிட்டால் பிரதிவாதியைப் பிடிக்கக்கூடாது. அந்த விதம் காரணம் தெரிவிக்கத் தவறினல் தாவாவுக்கு போதுமான

பணத்தையாவது வேறு சொத்தையாவது கோர்ட்டில் கொடுத்து வைக்கும்படியாகிலும் அல்லது வியாஜ்ஜியம் முடியும் வரையிலும் வேண்டும்போதெல்லாம் ஹாஜராவதற்கு ஜாமீன் கொடுக்கும்படி உத்தரவு செய்யலாம். அந்த ஜாமீன்தாரர் தன்னை விடுவிக்கும்படி மனு செய்துகொண்டால் கோர்ட்டார் பிரதிவாதியை ஹாஜராகும்படி சம்மன் பண்ணவேண்டும். அல்லது அவனை பிடிக்கும்படி வாரண்டு பிறப்பிக்கலாம். அந்தவிதம் பிரதிவாதி ஹாஜராவதின் மேல் ஜாமீனை ரத்துசெய்து வேறு ஜாமீன் கொடுக்கும்படி பிரதிவாதிக்கு உத்திரவு செய்யவேண்டும். மேலே கண்ட யாதொரு உத்தரவின் பிரகாரம் நடக்க பிரதிவாதி தவறினால் வியாஜ்ஜியம் தீரும் வரையிலுமாவது ஏற்படும் டிக்கிரிக்கு சரிச்சொல்லப்படும் வரையிலுமாவது அவனை சிவில் ஜெயிலில் வைக்கலாம். ஆனால், எந்த விஷயத்திலும் 6—மாதத்திற்குமேல் ஒருவனையும் ஜெயிலில் வைக்கக்கூடாது. வியாஜ்ஜியப் பொருமானம் 50-ரூபாய்க்கு அதிகமாயிராத பட்சத்தில் 6-வாரத்திற்குமேல் வைக்கக்கூடாது. மேலும் அப்படிப்பட்ட உத்தரவுக்கு கீழ் படிந்து நடந்தவுடன் ஜெயிலில் விட்டு விடுதலை செய்யவேண்டும். பிரதிவாதி தனக்கு விரோதமாயேற்படும் டிக்கிரியை நிறைவேற்றுவதற்கு தடங்கலாவது தவக்கமாவது உண்டுபண்ணும் நோக்கத்துடன் தம்முடைய சொத்து முழுவதையுமோ அல்லது ஒரு பாகத்தையோ பறுதீனம் செய்ய இருக்கிறுரென்றுகிலும் கோர்ட்டார் அதிகார எல்லைக்கு அப்பால் தன்னுடைய சொத்தைக் கொண்டுபோக இருக்கிறுரென்றுகிலும் பிரமாணப்பத்திரிகை மூலமாவது வேறே விதமாவது கோர்ட்டார் தெரிந்து திருப்தியடைகிற விஷயத்தில் கோர்ட்டார் ஷை சொத்தையோ அல்லது அதின் விலை மதிப்பையோ வேண்டியபோது ஹாஜர் செய்து கோர்ட்டார் வசம் வைப்பதற்கு ஜாமீன் கொடுக்கவேணுமென்றுவது அல்லது ஜாமீன் ஏன் கொடுக்கக்கூடாதென்றும் காரணத்தைத் தெரிவிக்க அவருக்கு உத்தரவு செய்யலாம். மேலும் சொத்தை முழுவதையாவது யாதொரு பாகத்தையாவது ஈரொட்டாக (கண்டிஷனுய்) ஜப்தி செய்யும்படியும் கோர்ட்டார் உத்தரவு செய்யலாம். இந்த விதியின்கீழ் செய்யும் உத்தரவின்மேல் அப்பீல் உண்டு. 21. ப. 273. மேலே சொன்னபடி காரணம் தெரிவிக்காமலும் ஜாமீன் கொடுக்கத் தவறினுலும் சொத்தை ஜப்திசெய்யும்படி உத்தரவு செய்யலாம். காரணம் தெரிவித்தோ அல்லது

வேண்டிய ஜாமீன் கொடுக்கும் விஷயத்தில் ஜப்தியை விடுதலைசெய்ய வேண்டும். ஜப்தி செய்யப்பட்ட சொத்தில் யாராவது பாத்தியதை கொண்டாடினால் அதை கோர்ட்டார் விசாரிக்கவேண்டும். கோர்ட்டார் கேட்கும் ஜாமீனை பிரதிவாதிக் கொடுத்தாலும் வியாஜ்ஜியம் தள்ளுபடி யானாலும் ஜப்தியை விடுதலை செய்யவேண்டும். தீர்ப்புக்கு முன்னே ஜப்தி செய்யப்பட்டிருந்து பிறகு வாதிக் கனுகூலமாக டிக்கிரி ஏற்பட்டால் அந்த டிக்கிரியை நிறைவேற்றும் படி விண்ணப்பம் செய்து கொள்வதின்மேல் அந்த சொத்தை மறுபடியும் ஜப்தி செய்யும்படி மனு செய்து கொள்ளவேண்டியது அவசியமில்லை. தீர்ப்புக்கு முன் ஜப்தி செய்யப்பட்டதினால் டிக்கிரி ஏற்பட்ட பிறகு நிறைவேற்றும் மனு கொடுக்காம லிருக்கக்கூடாது. 33. ம. 639. தீர்ப்புக்குமுன் ஜப்தி செய்யும் வாதி டிக்கிரிக்குப் பிறகு மறுபடியும் ஜப்தி செய்யாமலே எவ்வரசு பெற பாத்தியம் உண்டு. 31. ம. 502. ஆனால் அதற்கு நிறைவேற்றும் மனு போட்டிருக்கவேண்டும். 12. ப. 400. இந்த அதிகாரத்தின் கீழ் யாதொரு விவசாய விலைப்பொருளை தீர்ப்புக்குமுன்னே ஜப்திசெய்யமுடியாது.

(2) தற்கால இஞ்சங்ஷன் யென்னும் தடை நோட்டிஸ்-யாதொருவியாஜ்ஜியத்திலே விவாதத்திலிருக்கிற சொத்தை அந்த வியாஜ்ஜியத்தைச் சேர்ந்த கட்சிக்கார ரெவராவது பாழக்கவோ சேதப்படுத்தவோ பராதீனப்படுத்தவோ இருக்கிறார் என்றாகிலும் யாதொரு டிக்கிரியை நிறைவேற்றும்பொருட்டு அது அக்கிரமமாய் விற்சப்பட இருக்கிற தென்றாகிலும் பிரதிவாதியானவர் தமக்குக் கடன் கொடுத்தவர்களை மோசம் பண்ணும் நோக்கத்துடன் தம்முடைய சொத்தை அப்புறப்படுத்தவோ ஒரு வகை செய்து விடுவதாகவோ பயமுறுத்துகிறார் அல்லது உத்தேசித்திருக்கிறா ரென்றாகிலும் பிரமாண பத்திரிகை மூலமாகிலும் வேறு விதமாகிலும் ருஜா பண்ணப்படுகிற விஷயத்திலே கோர்ட்டார் அப்படிப்பட்ட காரியத்தை தடுப்பதற்கு இஞ்சங்ஷன் தரலாம். அல்லது வியாஜ்ஜியம் பைசலாகிறவரையில் அல்லது மறு உத்திரவு வரையில் மேலே சொன்னவைகளை நிறுத்தி தடுப்பதற்காக கோர்ட்டாருக்கு யுக்தமாய்த் தோணும் உத்தரவு செய்யலாம். ஒப்பந்தத்துக்கு விரோதமாய் நடக்க வொட்டாமலாவது வேறே எவ்வகைத் தீங்காகிலும் செய்ய வொட்டாமலாகிலும் பிரதிவாதியை தடுக்கும் பொருட்டு கொண்டு

வரப்படும் யாதொரு வியாஜ்ஜிபத்திலே அந்த காரியத்தை அல்லது தீங்கை செய்யவொட்டாமல் பிரதிவாதியைத் தடுப்பதற்காக இஞ்சங்ஷன் கொடுக்கும் படி வாதி மனு செய்து கொள்ளலாம். கோர்ட்டார் அப்படிப்பட்ட உத்தரவு இவ்வளவு காலத்திற்கு செல்லுமென்பதைக் குறித்தாவது கணக்கு வைப்பதைக் குறித்தாவது ஜாமீன் கொடுப்பதைக் குறித்தாவது வேறே யாதொன்றை குறித்தாவது கண்டிஷன்கள் யேற்படுத்தி உத்தரவு செய்யலாம். மேற்படி உத்தரவு கீழ்படிந்து நடக்காவிட்டாலும் மீறி நடந்தாலும் அப்படி நடப்பவரின் சொத்தை ஜப்தி செய்து அவரை சிவில் ஜெயிலில் அடைத்து 6-மாதம் வரையில் கோர்ட்டார் வைக்கலாம். இந்தவிதிப்படி செய்யும் எந்த ஜப்தியும் ஒரு வருஷத்திற்குமேல் செல்லாது. அந்த காலத்தின் முடிவிலே உத்தரவுக்குக் கீழ் படியாமலும் மீறி நடந்து கொண்டு மிருந்தால் ஜப்தி சொத்தைவிற்கலாம். அந்தவரும்படியிலிருந்து யாதொரு நஷ்ட ஈட்டைக்கொடுக்கலாம். பொதுவாய் இஞ்சங்ஷன் உத்தரவு செய்யுமுன் எதிர்க்கட்சிக்காரருக்கு நோட்டீஸ் கொடுக்கப்படும். ஆனால் அவசரக் கேசுகளில் ஒருதலைசார்பாக உத்தரவு செய்யப்படும். ஆனதால் இது விஷயத்தில் ரொம்பவும் கோர்ட்டார்கள் கவனித்து உத்தரவு செய்வார்கள். இஞ்சங்ஷன் உத்தரவினால் அதிருப்தியடையும் எந்தக்கட்சிக்காரரும் கோர்ட்டாரிடத்தில் மனுசெய்து கொள்வதின்பேரில் அந்த உத்தரவை கோர்ட்டார் தள்ளவோ மாற்றவோ அல்லது ரத்துசெய்யவோ அதிகாரமுண்டு. அந்த மனுவின்பேரில் ஏற்படும் உத்தரவின்பேரில் அப்பீல் உண்டு. எதிர் கட்சிக்காரருக்கு நோட்டிஸ் கொடாது இஞ்சங்ஷன் உத்தரவு ஏற்பட்டிருந்தால் அதை மேலே சொன்னவிதம் மனுக்கொடுத்தும் ரத்துசெய்ய முயற்சி செய்யலாம். அல்லது உத்தரவின்பேரில் அப்பீலும் பண்ணலாம். 7. அ. 550. எதிர் கட்சிக்கு நோட்டீஸ் கொடாது இஞ்சங்ஷன் உத்தரவு கொடுக்க முடியாதென்று செய்யும் உத்தரவின்பேரில் அப்பீல் கிடையாது. 12. ம. 186. இஞ்சங்ஷன் உத்தரவு பிறந்ததென்று தெரிந்தவுடனே அதற்கு கீழ்படிந்து நடக்கவேண்டும். அது விஷயம் கோர்ட்டார் நோட்டிஸ் கொடுக்கவில்லையென்று நினைத்து மீறி நடக்கக்கூடாது. அப்படி நடந்தால் கோர்ட்டு உத்தரவை அவமதித்த குற்றமாகும். பொதுவாக மீறின குற்றத்திற்கு எதிர்க்கட்சிக்காரர் மனுசெய்யவேண்டும். யார்பேரில் இஞ்சங்ஷன் உத்தரவு ஏற்பட்டதோ அவர் மாத்திரம்

மீறின குற்றத்திற்கு உத்தரவாதியல்ல. அந்த உத்தரவு பிறந்த தென்று தெரிந்து மீறி நடக்கும்படி யாராவது உதவி செய்தால் அவரும் உடந்தைக் குற்றத்திற்கு உத்தரவாதியாவார். இஞ்சங் ஷன் உத்தரவின்பேரில் அப்பீல் உண்டு. மேலே சொன்னபிறகா ரம் ஆளைப் பிடித்தோ சொத்தை ஜப்திசெய்தோ தாத்கால இஞ்சங் ஷன் பிறப்பித்தோ இருக்கிற யாதொரு வியாஜ்ஜியத்திலே அவ்வி தம் உத்தரவு செய்யத்தகுந்த காரணங்கள் இல்லாமல் மனு செய்து கொள்ளப்பட்டதென்று கோர்ட்டாருக்குத் தோற்றினாலும் வியாஜ் ஜியம் தள்ளுபடியாகி வியாஜ்ஜியம் கொண்டுவந்தவற்கு நியாயமான ஆதாரம், எதுவுமில்லை என்று கோர்ட்டாருக்குத் தோற்றினாலும் பிரதிவாதி கோர்ட்டாருக்கு மனு செய்துகொள்வதின்பேரில் அவ ருக்கு நேரிட்ட செலவுக்காக 1000-ரூபாய்க் கதிகப்படாமல் காம் பன்சேஷன் பிரதிவாதிக்கு வாதி கொடுக்கவேண்டுமென்று உத்தரவு செய்யலாம். இந்தப்பிரிவின்படி யாதொரு கோர்ட்டார் தங்கள் அதிகார வரம்புக்கு மேற்பட்டதொகையை காம்பன்சேஷ னாகக் கொடுக்கக்கூடாது. அப்படிப்பட்ட யாதொரு மனுவை தீர்மானம் செய்தபிறகு மேலேகண்டபடி பிடித்தது ஜப்தி பண்ணி னது அல்லது இஞ்சங்ஷன் உத்தரவு பிறந்தது சம்பந்தமாய் நஷ்ட ஈட்டுக்காக எந்த வியாஜ்ஜியமும் கொண்டுவர முடியாது. வாதி ஜெயித்தபோதிலும் ஜாஸ்தியான சொத்தை ஜப்தி செய்தால் அதற் காக பிரதிவாதிக்கு நஷ்டம் ஈடுசெய்ய வேண்டுமென்று ஒரு பழையகாலத் தீர்ப்பு ஒன்றிருக்கிறது. நஷ்ட ஈட்டுக்காக இந்த விதியின்கீழ் மனு செய்யவேண்டியகடமை பிரதிவாதிக்கில்லை ; கிரம வழக்கு கொண்டுவரலாம். பிரதிவாதி மனுவில்லாமல் கோர்ட்டார் நஷ்ட ஈடு கொடுக்கமுடியாது. இந்த பிரிவின்கீழ் செய்யும் உத் திரவின்பேரில் 104-வது பிரிவின்படி அப்பீலுண்டு.

(3 ரிசீவர் நியமனம் கோர்ட்டாருக்கு நியாயமாகவும் சௌகரி யமாகவும் தோற்றுகிற விஷயத்தில் அவர்கள் உத்தரவு மூலமாய் டிக்ரிக்கு முன்னேயாவது பிற்பாடாவது யாதொரு சொத்துக்கு ரிசீவர் நியமிக்கலாம். மேற்படி சொத்தை யாதொருவர் வசத்திலி ருந்து நீக்கிவிடலாம். அதை ரிசீவர் ஸ்வாதீனத்திலாவது வசத் திலாவது நிர்வாகத்திலாவது வைக்கலாம். பொதுவாய் பிரத்தி யேகமான மனு மூலமாக கோர்ட்டாரை ரிசீவர் நியமிக்கும்படி

விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டும். 2. லோ. ப. ரூ. 222. அதேகேசில் ரிசீவர் நியமனம் பொதுவாக எதிர்கட்சிக்கு மனுக் கொடுக்காமல் செய்யக்கூடாதென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ரிசீவர் நியமிக்குமுன் யாவத்து விஷயங்களேயும் செவ்வையாய்க் கவனித்துப் பார்க்கவேண்டும். பிரதிவாதி தாவாசொத்தை பாத்திய மில்லாமல் பாழாக்கிருரென்று ஏற்படும் கேசில் ரிசீவர் நியமனம் செய்கிருர்கள். 5. க. வீ. நோ. 362. ரிசீவரை நியமனம் செய்யும் உத்தரவின்பேரில் அப்பீல் உண்டு. இதுசம்பந்தமாய் இரங்கோனில் M. L. R. M. A. கடைக்கும் அகம்மது காசீம் பருச்சாவுக்கும் நடந்த கேசை சொல்லவேண்டிய தவசியம். மார்ட்கேஜு வியாஜ் ஜியங்களில் வட்டியானது பாக்கி பட்டிருக்கிறதென்று ஏற்பட்டால் ரிசீவர் சகஜமாய் நியமிக்கலாமென்றும் தஸ்தவேஜு செக்யூரெட்டி யாக பாவித்துக்கொண்டுவரும் கேசுகளில் சொத்தானது டிக்கி ரித்தொகைக்குப் போதாதென்று ஏற்பட்டாலும் ரிசீவர் நியமிக்க லாமென்று தீர்மானிக்கப்பட்டது. 5. லோ. ப. ரூ. 135.

(4) கோர்ட்டாருக்கு நியாயமாகவும் சௌகரியமாகவும் தோ ற்றுகிற வேறே இடை உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம். இந்த இடை உத்தரவுகள் 39-வது ஆர்டர் 6-முதல் 10-வரையிலுள்ள விதிகளில் காணலாம். யாதொரு அசையும்பொருளை இயற்கையாகவே, சீக்கிர த்தில் அழிந்துபோகத்தக்க ரீதியுடைய காரணத்தாலும் அல்லது வேறு காாணத்தாலும் உடனே விற்பனைசெய்யும்படி உத்தரவு செய்யலாம். யாதொரு வியாஜ்ஜியத்தில் சம்பந்தமாயிருக்கிற சொ த்தை மறியல் செய்துவைக்கும்படியாவது பாதுகாக்கும்படியாவது பார்வையிடும்படியாவது உத்தரவு செய்யலாம். இந்தக்காரியங்க ளுக்காக யாதொரு கட்சிக்காரருடைய ஸ்வாதீனத்திலுள்ள நிலத் திலோ கட்டிடத்திற்குள்ளோ பிரவேசிக்க யாதொரு நபருக்கு அதிகாரம் கொடுக்கலாம். வியாஜ்ஜியம் தொடரப்பட்டபின்பு எப் போதாவது பிரதிவாதிக்கு நோட்டிஸ் கொடுத்தபிறகு வாதியான வர் மேற்படி உத்தரவுகளுக்காக விண்ணப்பம் செய்யலாம். ஹாஜ ரானபின்பு எப்போதாவது வாதிக்கு நோட்டீஸ் கொடுத்தபிறகு அந்தவிதம் விண்ணப்பம் செய்யலாம். யாதொரு வியாஜ்ஜியத்தின் விஷயம் பணமாகவோ ஒப்பிக்கப்படத்தக்க வேறே யாதொரு வஸ்துவாகவோ இருந்து கட்சிக்காரர் ஒருவர் அதை வேறொரு

கட்சிக்காரருக்காக டிரஸ்டியாக தாம் வைத்துக்கொண் டிருக்கிறாரென்றாவது அல்லது அது வேறொரு கட்சிக்காரருக்கு சேரவேண்டிய தென்றாவது ஒத்துக்கொண்டால் கோர்ட்டார் தாங்கள் பிந்தி செய்யும் உத்தரவுக்குட்பட்டு ஜாமீன் சகிதமாக வாகிலும் ஜாமீனில்லாமலாகிலும் மேலே சொல்லிய கட்சிக்காரரிடத்தில் ஒப்பிக்கவேண்டும், அல்லது கோர்ட்டில் கட்டவேண்டுமென்று உத்தரவு செய்யலாம். அந்தப்படிசெய்யும் உத்தரவின்பேரில் 43-வது ஆர்டர்படி அப்பீல் உண்டு.

டிக்கிரி பிரதம டிக்கிரி யென்றும் முடிவான டிக்கிரி யென்றும் இருவகைப்படும். வியாஜ்ஜியத்தை பூர்த்தியாய் பைசல் செய்வதற்கு முன் இன்னும் நடவடிக்கைகள் நடத்தவேண்டியிருந்தால் டிக்கிரியானது பிரதம டிக்கிரியாகும். உதாரணமாக, முதலாளிக்கும் ஏஜெண்டுக்கு முள்ள கணக்கு சம்மந்தமாய் கொண்டுவரப்படும் வியாஜ்ஜியத்தில் முடிவான டிக்கிரி செய்வதற்கு முன் கணக்கு எடுக்கும்படி உத்தரவு செய்து ஒரு பிரதம டிக்கிரி கோர்ட்டார் செய்வார்கள். அதே விதமாய் கூட்டுப்பங்கின் பிரிவினைக்காக கொண்டுவரப்படும் வியாஜ்ஜியத்திலும் அந்தவிதம் டிக்கிரி செய்வார்கள். அதே விதமாய் பாக வியாஜ்ஜியத்திலும் செய்வார்கள். யாதொரு தீர்மானத்தினால் வியாஜ்ஜியமானது பூர்த்தியாய் பைசல் செய்யப்பட்டால் அந்த டிக்கிரிக்கு முடிவான டிக்கிரியென்று பெயர்; முடிவான டிக்கிரியின் பேரில் 96-வது பிரிவுப்படி அப்பீல் செய்யவேண்டும். பிரதம டிக்கிரி சம்மந்தப்பட்டவரையிலும் அந்த டிக்கிரியின் பேரில் உடனே அப்பீல் செய்துகொள்ளாத விஷயத்தில் முடிவான டிக்கிரியின்பேரில் செய்துகொள்ளும் அப்பீலில் மேலே கண்ட பிரதம டிக்கிரி சரியல்லவென்று 97-வது பிரிவுப்படி கட்சி சொல்ல முடியாது. யாதொரு வியாஜ்ஜியத்தைச் சேர்ந்த எந்த நடவடிக்கையிலாவது யாதொரு பிசகு குறைவு அல்லது ஒழுங்குத் தப்பிதம், நேரிட்டிருந்தாலும் அதனால் வியாஜ்ஜியத்தின் சாரும்சத்துக்காயினும் கோர்ட்டாருடைய அதிகார வரம்புக்காயினும் பாதகம் உண்டாகாவிட்டால் அப்படிப்பட்ட காரணத்தால் டிக்ரியை அப்பீலில் ரத்துபண்ணவும் கூடாது. சாரும்சத்துக்கு பாதகமுண்டாகும்படி திருத்தவும் கூடாது. யாதொரு வியாஜ்ஜியத்தை மறு விசாரணைக்கு அனுப்பவும் கூடாது.

அப்பர் பர்மாவிலும் லோயர் பர்மாவிலும் ஏற்பட்டிருக்கும் சட்டப்படி முதல் அப்பீலுக்கு கீழ் கோர்ட்டு டிக்கிரி ஜட்ஜிமெண்டு அல்லது உத்தரவு இவைகளுக்கு காபி வாங்கி அப்பீல் மனுவுடன் காலாவதி டயத்துக்குள் தாக்கல் செய்யவேண்டும்; அப்பீல் பிரதிவாதிக்கு நோட்டீஸ் அனுப்புவதற்கு முன்னமேயும் அல்லது அதற்குப்பிறகு அப்பீல் பிரதிவாதி மனு செய்துகொள்வதின் பேரிலும் அப்பீல் செலவுக்காகிலும் அசல் வியாஜ்ஜியச்செலவுக்காகிலும் இவ்விரண்டுக்காகிலும் ஜாமீன் கொடுக்கும்படி அப்பீல் வாதியைக் கேட்கலாம். ஆனால் அப்பீல் வாதி பிரிட்டிஷ் இந்தியாவுக்கு வெளியே வசித்துக்கொண்டிருந்து அப்பீல் சம்மந்தப்பட்ட சொத்தைத் தவிர வேறு அசையாப்பொருள் எதுவும் பிரிட்டிஷ் இந்தியாவுக்குளில்லாத விஷயத்தில் மேலே கண்டபடி கோர்ட்டார் ஜாமீன் கேட்கவேண்டும்; அப்படி ஜாமீன் கொடுக்காத விஷயத்தில் அப்பீலை தள்ளுபடி செய்யப்படும். அப்பீல் கோர்ட்டார் ரிக்கார்டு கட்டை வரவழைத்து அப்பீல் வாதியின் வக்கீலின் கட்சியைக்கேட்டும் கீழ் கோர்ட்டுக்கு நோட்டீஸ் அனுப்பாமலும் அப்பீல் பிரதிவாதிக்கு நோட்டீஸ் அனுப்பாமலும் அப்பீலைத் தள்ளிவிடலாம். அந்த விதம் தள்ளாதபோனால் அப்பீல் பிரதிவாதிக்கு ஈரங்கித் தேதியைக்கண்டு நோட்டிஸ் கொடுத்தும் கீழ் கோர்ட்டுக்கு கேசுக்கட்டை அனுப்பும்படிக்கும் நோட்டீஸ் கொடுப்பார்கள். அப்பீல் ஈரங்கி தினத்திலாவது அல்லது அதைத் தள்ளிவைக்கப்படும் வேறு தினத்திலாவது அப்பீல் வாதி ஹாஜராகாத பட்சத்தில் அப்பீலைத் தள்ளுபடி செய்யப்படும். அப்பீல் வாதி ஹாஜராகி அப்பீல் பிரதிவாதி ஹாஜராகாமலிருந்தால் அப்பீலை ஒருதலையாக விசாரிக்கப்படும். அப்பீல் வாதி ஹாஜராகாத காலத்தில் அப்பீலைத் தள்ளுபடி செய்தால் தான் வராததற்கு போதுமான காரணமிருந்ததென்று கோர்ட்டாருக்கு ருஜுப்படுத்தினால் கோர்ட்டார் செலவைப் பற்றி கண்டிஷன்கள் ஏற்படுத்தி அப்பீலை மறுபடியும் ஏற்றுக்கொள்வார்கள். அந்த விதம் ஏற்றுக்கொள்ள மாட்டோமென்று செய்யும் உத்தரவின்பேரில் அப்பீல் உண்டு. ஆனால் ஏற்றுக்கொள்ளும் உத்தரவின்பேரில் அப்பீல் கிடையாது. 24. அ. 464.

மேலே சொன்னபடி ஒரு தலைபாக விசாரணைசெய்து டிக்கிரி ஏற்பட்டிருந்தால் அப்பீல் பிரதிவாதி தான் வராததற்கு தகுந்த காரணம் இருந்ததென்று ருஜுப்படுத்தினால் செலவுத்தொகையைப் பற்றி கண்டிஷன் ஏற்படுத்தி மறு விசாரணை செய்ய உத்தரவு செய்யலாம்; அந்த விதம் செய்ய கோர்ட்டார் ஆட்சேபித்தால் அதின்பேரில் அப்பீல் உண்டு. அப்பால் பிரதிவாதி தான் கீழ் கோர்ட்டிலே தமக்கு விரோதமாய்த் தீர்மானிக்கப்பட்ட ஆதாரங்களில் எதன்மேலாவது அந்த டிக்கிரிக்கு அனுகூலமாக தான் சொல்லிக் கொள்வதை சொல்லிக் கொள்வதோடு குறுக்கு அப்பீலும் செய்யலாம். உதாரணம்: 1000-ரூபாய்க்கு வியாஜ்ஜியம் கொண்டுவர 500-ரூபாயக்கு மட்டில் வாதிக்கு டிக்கிரி கொடுத்ததின்பேரில் அந்த டிக்கிரி பேரில் பிரதிவாதி அப்பீல் செய்த பிறகு வாதி தனக்கு பாக்கி 500-ரூபாயும் கொடுக்கவேண்டுமென்று சொல்லி தாக்கல் செய்யும் மனுவுக்கு குறுக்கப்பீல் யென்று பெயர். இந்த விதம் குறுக்கப்பீல் செய்ய அப்பீல் நோட்டீஸ் தனக்கு கிடைத்த தேதியிலிருந்து ஒரு மாதத்திற்குள் செய்யவேண்டும். தகுந்த காரணம் இருந்தால் குறுக்கப்பீல் செய்ய சாஸ்தி காலமும் கொடுப்பார்கள். அப்படிச் செய்யும் குறுக்கப்பீலுக்கு ஈரங்கி தேதியன்று கோர்ட்டுபீஸ் கட்டணம் அப்பீலைப்போல கட்டவேண்டும். குறுக்கப்பீல் தாக்கல் செய்யும் தினத்தில் கொடுக்கவேண்டியதில்லை. 25. ம. 24. குறுக்கப்பீல் தாக்கல் செய்திருந்தால் அப்பீல் வாதியின் அப்பீலை வாபஸ் வாங்கிக்கொண்டாலும் அல்லது ஹாஜராகாது தள்ளுபடி செய்யப்பட்டாலும் எல்லாருக்கும் நோட்டீஸ் கொடுத்து குறுக்கப்பீலை விசாரிக்கலாம். பிரதம அம்சத்தின்பேரில் மட்டில் வியாஜ்ஜியம் பைசல் பண்ணியிருந்து அந்த டிக்ரியானது அப்பீலில் ரத்து செய்யப்பட்டால் அப்பீல் கோர்ட்டார் மறு விசாரணை செய்யும்படி கீழ் கோர்ட்டாருக்கு அனுப்பலாம். அப்படிச் செய்யும் உத்தரவின் பேரில் அப்பீல் உண்டு. ஆனால் கீழ் கோர்ட்டில் ஏற்பட்டிருக்கும் சாட்சியம் போதுமானதா யிருந்தால் அப்பீல் கோர்ட்டார் தாங்களே முடிவான பைசல் செய்யலாம். தவிர வியாஜ்ஜியத்தை சரியாக தீர்மானம் செய்ய அவசியமென்று தோணும் கவுச்சைகளை ஏற்படுத்தி அதை விசாரிக்கும்படி கீழ் கோர்ட்டுக்கு அனுப்பலாம். மேலே கண்டவிதம் கீழ் கோர்ட்டுக்கு அனுப்பப்பட்டால் கீழ்

கோர்ட்டார் பைசல் செய்து அனுப்பும் முடிவின்பேரில் கட்சிக்கா ரர்கள் தங்களுக்கிருக்கும் ஆட்சேபணைகளைக் கண்டு செய்யும் மனுக் களை விசாரித்து முடிவு சொல்லவேண்டும்; கட்சிக்காரர்கள் அப்பீல் கோர்ட்டில் எந்தவித சாட்சியமும் விடமுடியாது. ஆனால் கீழ் கோர்ட்டார் ஏற்றுக்கொண்டிருக்கவேண்டிய சாட்சியத்தை ஏற்றுக் கொள்ள மாட்டோமென்று நிருகரித்திருந்தாலும் அல்லது யாதொரு முக்கியமான காரணத்தினால் யாதொரு தஸ்தாவேஜை ஹாஜர் படுத்தும்படியாவது யாதொரு சாட்சியை விசாரணைசெய்யும் படியாவது உத்தரவு செய்தாலும் ஹாஜர்படுத்தவோ விசாரணைசெய் யவோ அந்த கோர்ட்டார் அனுமதி கொடுத்து தாங்களேயாவது கீழ் கோர்ட்டாரைக் கொண்டாவது அந்தவிதம் செய்யலாம். ஆனால் அப்படிச் செய்யும் உத்தரவுக்கு எழுத்து மூலமான கார ணங்கள் இருக்கவேண்டும். அசல் கோர்ட்டாரைப் போலவே அப் பீல் கோர்ட்டாரும் கட்சிக்காரர்கள் முன்னிலையிலாவது அவர்கள் வக்கீல்கள் முன்னிலையிலாவது தீர்ப்பு சொல்லவேண்டும். சகல விஷயங்களையும் யோசித்து டிக்ரியின் ஒரு பாகத்தின்பேரில் அப் பீல் செய்யப்பட்டிருந்த போதிலும் சிலர்மட்டில் அப்பீல் செய் தும் சிலர் செய்யாமலிருந்தாலும் நியாயத்தை முன்னிட்டு எந்த டிக்ரி அல்லது உத்தரவு செய்திருக்கவேண்டுமோ அந்த விதம் தாங்களே செய்ய அதிகாரம் உண்டு. அப்பீலின்பேரில் செய்யும் அப்பீ லுக்கு இரண்டாவது அப்பீலென்று பெயர். எந்த கேசுகளில் இரண்டாவது அப்பீல் உண்டென்பது சி. பு. கோ. 100-வது பிரி வில் பார்க்கலாம். ஹைகோர்ட்டுக்கு கீழ்ப்பட்ட யாதொரு கோர்ட் டாரால் அப்பீலில் ஏற்பட்ட ஒவ்வொரு டிக்ரியின்மேலும் அடியில் கண்ட ஆதாரங்களுள் எதைக்கொண்டாகிலும் ஹைகோர்ட்டாரி டத்தில் அப்பீல் செய்து கொள்ளலாம்.

(1) தீர்மானமானது சட்டத்துக்கோ சட்ட சம்மதமான வழக்கத்துக்கோ விரோதமாயிருக்கிறதென்பது.

(2) தீர்மானத்திலே சட்டத்தைப்பற்றிய அல்லது சட்ட சம் மதமான யாதொரு முக்கியமான அம்சம் பைசலாகா மல் விட்டுபோயிருக்கிற தென்பது.

(3) சி. பு. கோடினாலாவது அல்லது அமுலிலிருக்கும் எந்த சட்டத்தினாலாவது ஏற்படுத்தியிருக்கிற நடவடிக்கை

சம்மந்தமாக முக்கியமான யாதொரு பிசகு அல்லது குறைவு நேரிட்டிருந்து அது காரணமாய் வியாஜ்ஜியத்திலே சாராம்சத்தைப்பற்றி செய்யப்பட்ட தீர்மானத்தில் ஒரு வேளை பிசகு அல்லது குறைவு உண்டாயிருக்கலாமென்பது.

ஒரு தலையாக செய்யப்பட்ட அப்பீல் டிக்ரி பேரிலும் இந்த விதம் அப்பீல் செய்யலாம். ஆனால் அசல் வியாஜ்ஜிய விஷயத்தின் தொகையோ மதிப்போ 500-ரூபாய்க்கு மேற்படாத பட்சத்திலே ஸ்மால்காஸ் கோர்ட்டுகளில் விசாரிக்கப்படத்தக்க தன்மையுள்ள யாதொரு வியாஜ்ஜியத்திலே இரண்டாவது அப்பீல் செய்து கொள்ளக்கூடாது. கீழ் பர்மா 1900ஸ்ரீ கோர்ட்டுகள் ஆக்ட்டு 30-வது பிரிவுப்படி முதல் கோர்ட்டு டிக்ரியை செலவு தொகையல்லாத மற்ற விஷயங்கள் சம்மந்தப்பட்டவரையில் முதல் அப்பீல் கோர்ட்டார் மாற்றியோ திருத்தியோ யிருந்தால் இரண்டாவது அப்பீல் செய்யலாம். ஆனால் அசல் வியாஜ்ஜியத்திலுள்ள விஷயம் ஸ்மால் காஸ் கோர்ட்டுகளால் விசாரிக்கும் தன்மையுள்ளதாகவு மிருக்கக் கூடாது; நில சம்மந்தமானதாயு மிருக்கக்கூடாது. பொறுமானமும் 500 ரூபாய்க்கு மேற்பட்டு மிருக்கவேண்டும்.

மேலே அசல் டிக்கிரிபேரில் செய்யும் அப்பீல்களைப்பற்றி சொல்லியிருக்கும் நிபந்தனைகள் கூடியமட்டில் இரண்டாவது அப்பீல்களுக்கும் பிரயோகப்படுத்தப்படும். சீமை ஆலோசனைசபையிலுள்ள மஹாராஜா அவர்களிடத்தில் செய்துக்கொள்ளப்படும். அப்பீல்கள் விஷயமாய் சி. பு. கோ. 109-வது முதல் 112-வது பிரிவுகளைக்கொண்டும், 45-வது ஆர்டரைக்கொண்டும் தெரிந்துக்கொள்ள வேண்டும். ஒரு தீர்மானத்தை ரிவியூ (புனராலோசனை) செய்யும் விஷயம் 114-வது பிரிவிலும் 47-வது ஆர்டரிலும் பிரஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது.

(1) யாதொரு டிக்கிரியின்பேரில் அப்பீல் செய்ய சட்டமிருந்தும் அப்பீல் செய்யப்படாம லிருக்கிறதோ அந்த டிக்கிரி;

(2) சட்டப்படி அப்பீல் செய்ய முடியாத டிக்கிரி;

(3) ஸ்மால்காஸ் கோர்ட்டிலிருந்து ஐகோர்ட்டாருக்கு ஆலோசனைக்கு அனுப்பப்படுவதின்மேல் செய்யப்பட்ட தீர்மானம்.

இவைகள் தனக்கு விரோதமாக செய்யப்பட்டதென்று நினைக்கும் ஒவ்வொருவரும் டிக்கிரி பிறந்த காலத்தில் தகுந்த முயற்சி செய்தும் தமக்கு தெரியாமையாகவாகிலும் தம்மால் யெடுத்துக் காட்ட கூடாமையாகவாகிலும் மிகுந்த முக்கியமான புதுச்சங்கதி அல்லது சாட்சியத்தைக் கண்டு பிடித்ததனாலோ, வியாஜ்ஜியக் கட்டிலே பிரத்தியட்சமான யாதொரு பிசகு அல்லது தப்பு இருப்பதனாலோ வேறு யாதொரு தகுந்த காரணத்தினாலோ தமக்கு விரோதமாக பிறப்பிக்கப்பட்ட அந்த டிக்ரி அல்லது செய்யப்பட்ட அந்த உத்தரவைக் குறித்துப் புனராலோசனை பண்ணும்படி கேட்டுக் கொள்ளக் கோறினால் அப்படிப்பட்டவர் அந்த டிக்ரி பிறப்பித்த அல்லது அந்த உத்தரவுசெய்த கோர்ட்டாருக்கு தீர்ப்பைக் குறித்துப் புனராலோசனை பண்ணும்படி விண்ணப்பம் செய்துக்கொள்ளலாம். யாதொரு டிக்ரி அல்லது உத்தரவின்மேல் அப்பீல்செய்து கொள்ளாத யாதொரு கட்சிக்காரரானவர் வேறே யாதொரு கட்சிக்காரரால் செய்யப்பட்ட அப்பீல் நடந்துக்கொண்டிருந்தபோதிலும் பாதகமில்லாமலே அந்த அப்பீலுக்குண்டான ஆதாரம் விண்ணப்பதாரருக்கும் அப்பீல் வாதிக்கும் பொதுவாயிருக்கிற விஷயத்திலாவது அப்பீல் பிரதிவாதியாயிருந்து புனராலோசனைக்கு அவர் விண்ணப்பம் செய்துகொள்ளுகிற சங்கதியை அப்பீல் கோர்ட்டுக்கு அவர் தெரிவித்துக் கொள்ளக்கூடுமான விஷயத்திலாவது தவிர, மற்றபடி தீர்ப்பைக் குறித்துப் புனராலோசனை பண்ணும்படி விண்ணப்பம் செய்துக்கொள்ளலாம்.

ரிவியூ செய்யவேண்டிய தீர்ப்பு ஸ்மால்காஸ் கோர்ட்டு தீர்ப்பாயிருந்தால் ரிவியூ மனு டிக்ரி பிறந்த 15 நாளுக்கு முன்னும் ஐகோர்ட்டு அல்லது கீழ் பர்மா சீப்கோர்ட்டு தீர்ப்பாயிருந்தால் 20 நாளைக்குள்ளும் மற்றக் கேசுகளில் 90 நாளைக்குள்ளும் மனு கொடுக்க வேண்டுமென்று இ. லி. ஆ. 161-162-173-பிரிவுகளால் தெரிய வரும். தவிர, ரிவியூ மனுகொடுக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. டிக்ரியிலிருக்கும் பிசகை திருத்த வியாஜ்ஜியமும் கொண்டுவரலாம். 8. க. வீ. நோ. 473. மேலே கண்டபடி முக்கியமான புது சங்கதி

அல்லது சாட்சியம் கண்டு பிடிக்கப்பட்டதென்னும் காரணத்தினலாவது டிக்ரியில் யாதொரு பிரத்தியட்சமான எழுத்துப்பிழை அல்லது கணக்குப் பிழை அல்லது பிசகு இருக்கிறதென்னும் காரணத்தினலாவது அல்லாமல் வேறு யாதொரு காரணத்தினலே ஐகோர்ட்டார் அல்லாத வேறு யாதொரு கோர்ட்டாருடைய டிக்ரி அல்லது உத்தரவை புனராலோசனை பண்ணும்படி செய்யும் யாதொரு மனுவை யார் டிக்ரி பிறப்பித்தாரோ அந்த ஜட்ஜிக்குத்தான் செய்துகொள்ளவேண்டும். ஆனல் டிக்ரியைப் பிறப்பித்த ஜட்ஜி புனராலோசனை மனுவை ஏன் ஏற்றுக்கொள்ளக் கூடாதென்று எதிரிக்கு நோட்டீசுக்கு உத்தரவு செய்திருந்தால் மேலே சொன்ன மனுவை அவருக்குப்பின் வருகிற ஜட்ஜி பைசல் செய்யலாம். ரிவியூ மனுவுடன் டிக்ரி அல்லது தீர்ப்பு காபி கொடுக்கவேண்டியதில்லை. 17. அ. 213. ரிவியூ மனுவுக்கு மேலே சொன்ன காலாவதி கெடுவை நிர்ணயம் செய்வதில் அப்பீல் செய்ததால் நேரிட்ட காலத்தை அவருக்கு அனுகூலமாக கேட்கக்கூடாது. 8. ப. 260. தவிர கோர்ட்டு விடுமுறைக்காக சாத்தி இருந்த தினங்களையும் கழிக்கக்கூடாது. 9. ம. 134. புனராலோசனை செய்ய இரண்டாவது தடவையும் மனுச்செய்யலாம். முதல் மனுசெய்ததால் ஏற்பட்ட காலத்தையும் கழிக்கக்கூடாது. 26. ப. 485. புனராலோசனை செய்யத்தகுந்த காரணமில்லையென்று கோர்ட்டார் நினைத்தால் மனுவைத் தள்ளவேண்டும். ஏற்றுக்கொள்ளவேண்டியதென்று அபிப்பிராயப்பட்டால் எதிரிக்கு நோட்டிஸ் கொடுத்து கண்டிப்பான ருஜுவின்பேரில் ஏற்றுக்கொள்ளவேண்டும். மனுவை தள்ளும் உத்தரவின்பேரில் அப்பீல் கிடையாது. ஆனல் யாதொரு மனுவை ஏற்றுக்கொள்ளும் உத்தரவை அந்த மனுவானது,

(1) மேலே புனராலோசனை மனுக்களை இன்னருக்குத் தான் செய்துகொள்ள வேண்டுமென்று சொன்ன நிபந்தனைகளுக்கு விரோதமாகவாவது,

(2) புனராலோசனை மனு இன்னபடிக்கானல் தள்ளிவிடப் படும் என்றும் இன்னபடிக்கானல் ஏற்றுக்கொள்ளப் படுமென்றும் சொன்ன நிபந்தனைகளுக்கு விரோதமாகவாவது,

30

(3) அதற்கு ஏற்பட்டிருக்கும் கெடுவு காலம் கழிந்த பிறகு போடப்பட்டதென்றும் அப்படிப் போடத்தகுந்த காரணம் இல்லையென்றும் ஆட்சேபிக்கலாம்.

புனராலோசனை மனுவை ஏற்றுக்கொள்ளும் உத்தரவின்மேல் செய்யும் அப்பீலிலாவது அல்லது முடிவான டிக்ரியின்பேரில் செய்யும் அப்பீலிலாவது அந்த விதம் ஆட்சேபிக்கலாம்; விண்ணப்பதாரர் ஆஜராகாத காரணத்தால் தள்ளப்பட்டால், தான் வராததற்கு தகுந்த காரணம் இருந்ததென்று கண்டு தள்ளின தேதியிலிருந்து 15 நாளைக்குள் மனு செய்துகொண்டால் எதிரிக்கு நோட்டீஸ் கொடுத்து சிலவு தொகை விஷயமாய் கண்டிஷன் ஏற்படுத்தி மனுவை ஏற்றுக்கொண்டு விசாரணை செய்யலாம்; புனராலோசனை செய்ய கொடுத்த மனுவின்பேரில் ஏற்படும் உத்தரவையோ புனர் ஆலோசனையின்பேரில் பிறக்கும் டிக்ரியையோ மறுபடியும் புனர் ஆலோசனை பண்ணும்படி மனு செய்யமுடியாது.

ஐகோர்ட்டாருக்கு கீழ்பட்ட யாதொரு கோர்ட்டாரால் தீர்மானிக்கப்பட்டிருப்பதும் அந்த ஐகோர்ட்டாரிடத்தில் அப்பீல் செய்துகொள்ள தகாததுமான யாதொரு வியாஜ்ஜியத்தைச் சேர்ந்த ரிக்கார்டை மேற்படி ஐகோர்ட்டார் வரவழைக்கலாம்.

(1) சட்டத்தினால் தங்களுக்குக் கொடுக்கப்பட்டிராத யாதொரு அதிகாரத்தை செலுத்தி இருப்பதாகவாவது,

(2) அப்படிக் கொடுக்கப்பட்டுள்ள யாதொரு அதிகாரத்தை செலுத்த தவறியிருப்பதாகவாவது,

(3) தங்களுடைய அதிகாரத்தை செலுத்துகையிலே சட்டத்துக்கு விரோதமாகவோ முக்கியமான விஷயத்தில் ஒழுங்குக் குறைவாகவோ நடந்திருப்பதாகவாவது காணப்பட்டால் ஐகோர்ட்டார் மேற்படி வியாஜ்ஜியத்தில் தங்களுக்கு தகுதியாய்த் தோன்றுகிற உத்தரவைச் செய்யலாம்.

கட்சிக்காரர் மனுவில்லாமலேயும் (33. க. 756.) டிஸ்டிரிக்ட் கோர்ட்டார் ரிப்போர்ட்டின்பேரிலும் (4. ம. 217.) ஐகோர்ட்டார் ரிவிஷன் அமுல் செய்யலாம். பொதுவாய் ஐகோர்ட்டார் இந்த விதிப்படி ரிவிஷன் செய்யமாட்டார்கள். 28. அ. 72. ஆனால்

பெருக்க தீங்கு நேரிடும்படியான கேசுகளில் தலையிடுவார்கள். 31. ப. 138.

ஒழுங்குக் குறைவால் நியாயம் ஏற்பட்டிருந்தால் ஐகோர்ட்டார் ரிவிஷன் மனு ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். 8. க. வீ. நோ. 621. அப்பீலில்லாத கேசுகளில்மட்டில் ரிவிஷன் உண்டு. 20. ப. 480. ஆனதால் அப்பீலுள்ள கேசுகளில் ஐகோர்ட்டார் தலையிடமாட்டார்கள். 20. ம. 155. இரண்டாவது அப்பீலிருக்கும் கேசுகளிலும் தலையிடமாட்டார்கள். 12. அ. 581. முடிவான டிக்ரியிலிருந்து அப்பீலிருந்தால் பிரதம டிக்ரியை ரிவிஷன் செய்யமாட்டார்கள். 11. அ. 383. மற்ற பரிகாரங்களிருக்கும் கேசுகளிலும் ரிவிஷன் கிடையாது. 31. ப. 138. ஆனால் சில ஐகோர்ட்டார்கள் அபிப்பிராயப்படி மற்ற பரிகாரங்களிருந்தாலும் முக்கியமான கேசுகளில் தலையிடுவார்கள். 12. க. வீ. நோ. 16. அப்பீல் மனுவை இந்த விதிப்பிரகாரம் ரிவிஷன் மனுவாக பாவிக்கப்படும். 27. அ. 480. ரிவிஷன் மனுவை அப்பீலாகவும் பாவிக்கப்படும். 23. ம. 101.

டிக்ரியை திருத்த மனுகொடுப்பதற்கு காலாவதி கிடையாது. 21. க. 259.

டிக்ரியிலுள்ள எழுத்து பிசகுகளையும் தற்செயலாய் தவறு செய்யப்படுவதினால் நேரிடும் பிசகுகளையும் கோர்ட்டார் எப்போதாகிலும் தாங்களேயாவது கட்சிக்காரர்களில் எவராவது மனு செய்துகொள்வதின்பேரிலும் 152-வது பிரிவுப்படி மாற்றலாமென்பதை முன்னமே சொன்னோமல்லவா? மற்ற விஷயங்கள் சம்பந்தப்பட்டவரையில் யாதொரு டிக்ரியையும் ரிவியூ செய்யாமல் திருத்த முடியாதென்று 20-வது ஆர்டர் 3-வது பிரிவால் விளங்கும். தவிர டிக்ரியிலுள்ள பிசகை வியாஜ்ஜிய மூலமாகவும் திருத்தக்கூடும் என்று மேலேகண்டோம். 8. க. வீ. நோ. 473. ஆனாலும் டிக்ரி பிறந்த வெகுகாலத்திற்கு பிறகு அதாவது காலாவதியானபிறகு டிக்ரியை திருத்த மனுவை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். ஒரு கேசில் கோர்ட்டு ஏலத்துக்கு பிறகும் டிக்ரியை திருத்தியிருக்கிறார்கள். 14. ம. 150. டிக்ரியைத் திருத்த அதைப் பிறப்பித்த கோர்ட்டாருக்கு மனு செய்துகொள்ளவேண்டும். டிக்ரிபேரில் அப்பீல் ஏற்பட்டால் நிறைவேற்றக்கூடிய டிக்ரி அப்பீல்கோர்ட்டு டிக்ரிதான்.

அப்பீலில் கீழ்கோர்ட்டு டிக்ரி உறுதி என்று ஏற்பட்டால் அப்பீல் கோர்ட்டார் தான் டிக்ரியைத் திருத்தவேண்டும். கீழ்கோர்ட்டு டிக்ரி மாற்றப்பட்டிருந்தாலும் அதேவிதம்தான். ஒரு கேசில் அசல் டிக்ரியை அப்பீலில் உறுதி செய்யப்பட்டபிறகு அசல் கோர்ட்டார் டிக்ரியைத் திருத்த அப்படி திருத்தியது பிசகென்றும் எந்த விதமான நடவடிக்கையும் நடத்தாமலிருந்தால் திருத்தப்பட்ட டிக்ரி கட்சிக்காரர்களை கட்டுப்படுத்து மென்றும் அது பிசகு என்று நிறைவேற்றும் நடவடிக்கையில் ஆட்சேபனைசெய்ய முடியாதென்றும் தீர்மானமாயிருக்கிறது. 9. க. வீ. நோ: 605. கட்சிக்காரர்களுக்கு நோட்டீஸ் கொடுத்து தான் டிக்ரியைத் திருத்த வேண்டும். 7. அ. 276. டிக்ரியை திருத்தும் உத்தரவின்பேரில் அப்பீல் உண்டா அல்லது ரிவிஷன்தான் உண்டா என்னும் விஷயத்தைப்பற்றி தீர்மானங்கள் ஒற்றுமையாயில்லை. ஆனாலும் நமது அபிப்பிராயம் என்னவென்றால், டிக்ரியை சரியாகத் திருத்தப்பட்டிருந்து டிக்ரிக்குமட்டில் ஆட்சேபனையும் திருத்துதலுக்கு ஆட்சேபனை இல்லாமலிருந்தால் திருத்தப்பட்ட டிக்ரிக்கு அப்பீல் செய்யவேண்டும். ஆனால் டிக்ரிக்கு ஆட்சேபனை செய்யாது திருத்துதலுக்கு மட்டில் ஆட்சேபனை செய்தால் அப்படி திருத்திய உத்தரவை ரிவிஷன்தான் செய்யவேண்டும். ஆனால் அசல் டிக்ரிக்கும் திருத்துதலுக்கும் ஆட்சேபனை செய்தால் என்ன செய்கிறதென்று தீர்ப்புகளில் சொல்லாதபோனாலும் முடிவான டிக்ரியின்பேரில் ஆட்சேபிக்கலாமென்று புலப்படுகிறது.

## பொது விதிகள்.

யாதொரு காரியத்தை செய்ய முதலில் கோர்ட்டாரால் காலம் கொடுக்கப் பட்டிருந்தால் அந்தக் கோர்ட்டாருக்கு யுக்தமாய் தோன்றினால் அவர்கள் முதலில் கொடுத்தகாலம் கழிந்து போயிருந்தாலும் அப்போதைக்கப்போது அந்த காலத்தை 148-வது பிரிவுப்படி அதிகப்படுத்தலாம். யாதொரு தஸ்தாவேஜுக்காக சட்டப்படி கட்டவேண்டிய கட்டணம் முழுவதுமோ அல்லது பாகமோ செலுத்தப்படாமலிருக்கிற விஷயத்தில் கோர்ட்டாருக்கு யுக்தமாகத் தோன்றினால் கட்டும்படி நடவடிக்கையின் எந்தக்காலத்திலும் 149-வது பிரிவுப்படி அனுமதி கொடுக்கலாம். நியாயம் நடந்தேருவதற்காகவும் கோர்ட்டுக் கட்டளைகளை கெட்ட விதமாய்

உபயோகப்படுத்தப் படுவதை தடுப்பதற்கும் அவசிய மாயிருக்கக் கூடிய உத்தரவுகளை செய்ய சி. பு. கோடில் வெளிப்படையான விதிகளில்லாத போனாலும் கோர்ட்டாருக்கு சகஜமாய் அதிகாரமுண்டு. நூதனமாக ஏற்படுத்தியிருக்கும் இந்த 151-வது பிரிவை எப் போதும் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். தவிர திருத்தம் செய்ய 153-வது பிரிவில் கொடுத்திருக்கும் பொதுவான அதி காரத்தையும் கவனிக்கவேண்டும். அதாவது எந்த வியாஜ்ஜி யத்தைச் சேர்ந்த எந்த நடவடிக்கையிலாவது நேரிட்ட குறை வையோ பிசகையோ கோர்ட்டார் செலவு தொகையைப் பற்றி ஆகி லும் வேறே விஷயத்தைப்பற்றி ஆகிலும் தங்களுக்கு யுத்தமாய் தோற்றுகிற திட்டங்கள் பண்ணி எப்போதேனும் சரிப்படுத் தலாம்.

---

# 17-வது அத்தியாயம்.

## இன்சால் வென்ஸீ விஷயங்களைப்பற்றிய 1907-ம் ஹ் த்திய 3-வது ஆக்டைக் குறித்து.

இந்த ஆக்ட் இராஜதானிப் பட்டணங்களுக்கும் ரெங்கூன் பட்டணத்துக்கும் வெளியே உள்ள கோர்ட்டார்கள் பரிபாலிக்க வேண்டிய சட்ட திட்டங்களை எடுத்துச் சொல்லுகிறது. சென்ற இரண்டு மூன்று வருஷங்களாக இன்சால்வெண்டு மனுக்கள் வெகு சாக நிறைவேறுகின்றன. அது சம்மந்தமான சில விஷயங்களை அடியில் எடுத்துச்சொல்லுவோம். ஒரு கடன்காரனை டிக்ரிக்காக பிடித்த வுடனே அவன் இன்சால் வென்ட் மனு கொடுக்க மனதில் முடிவு செய்து கொள்ளுகிறான். அந்தவிதம் செய்து கொள்ளும் ஒவ்வொரு மனுவும் எழுத்து மூலமாய் இருக்கவேண்டும். ஸிவில் பிராதைப்போல் உறுதிமொழி எழுதவேண்டும். பொதுவாக அந்த மனுவை கடனாளி எங்கே வசிக்கிறாரோ அல்லது தொழில் நடத்துகிறாரோ அந்தயிடத்திலாவது அல்லது அவர் பிடிக்கப்

பட்டு காவலில் வைக்கப்பட்டிருந்தால் எங்கே காவலில் இருக்கிருரே அந்த இடத்திலாவது இந்த ஆக்டின்படி அதிகாரம் செலுத்துகிற கோர்ட்டாருக்கு மனு செய்துகொள்ளவேண்டும். அந்த விதம் அதிகாரம் செலுத்தும் கோர்ட்டு டிஸ்டிரிக்ட்கோர்ட்டு தான்; ஆனால் அந்தக் கோர்ட்டுகளைப் போல் அதிகாரம் செலுத்தும்படி டிஸ்டிரிக்ட் கோர்ட்டாருக்கு கீழ்ப்பட்டுள்ள யாதொரு கோர்ட்டாருக்கு கவர்ன்மெண்டார் அதிகாரம் கொடுக்கலாம். கடனாளியின் கடன் 500-ரூபாயாக யிருந்தாலன்றி மற்றபடிக்கும் அல்லது யாதொரு டிக்ரியை நிறைவேற்றி அவர் பிடிக்கப்பட்டு அல்லது காவலில் வைக்கப்பட்டாலன்றி மற்றபடிக்கும் அல்லது மேற்படி டிக்ரியை நிறைவேற்றுகையில் அவருடைய சொத்தை ஜப்தி செய்ய உத்தரவு ஏற்பட்டு இருந்தாலன்றி மற்றபடிக்கும் அவர் அந்த விதம் தீவாளி மனுக்கொடுக்க முடியாது.

கோர்ட்டில் கொடுக்கப்பட்ட யாதொரு தீவாளி மனுவை கோர்ட்டார் அனுமதியில்லாமல் வாபஸ் வாங்கமுடியாது. 11-வது விதிப்படி தீவாளி மனுவில் காணவேண்டிய விஷயங்களாவன:—

(1) கடனாளி கடன்களை கொடுக்க சக்தியற்றவரு யிருக்கிறதாகவும்.

(2) தான் சாதாரணமாய் வசிக்கிற அல்லது தொழில் நடத்துகிற இடத்தையும் அல்லது தான் பிடிக்கப்பட்டிருந்தாலும் காவலில் வைக்கப்பட்டிருந்தாலும் காவலில் வைக்கப்பட்டிருக்கிற இடத்தையும்.

(3) எந்த கோர்ட்டாருடைய டிக்ரியை அனுசரித்து தன்னைப் பிடிக்கப்பட்டதோ அந்த கோர்ட்டின் பெயரையும் அந்த டிக்ரியின் விவரங்களையும்.

(4) தன்னுடைய செல்லுகளை தனக்குத் தெரிந்திருக்கிற மட்டில் கொடுக்கவேண்டி யிருக்கும் நபர்களின் பெயர்களும் இருப்பிடங்களும்.

(5) தன் சகல சொத்தின் தொகையும் விபரங்களும்.

(*a*) பணமாய் இராத அப்படிப்பட்ட சகல சொத்தின் மதிப்பைப் பற்றிய விபரமும்.

(b) அப்படிப்பட்ட யாதொரு சொத்து எங்கே இருக்கிறதோ அந்த இடத்தையும்.

(c) தன் யாவத்து சொத்தையும் கோர்ட்டார் இஷ்டப்பிரகாரம் செய்து கொள்ளும்படி அவர்கள் வசத்தில் ஒப்பிக்க தனக்கு இஷ்டமிருப்பதாய் ஒரு உறுதி மொழியும் அந்த மனுவில் கண்டிருக்கவேண்டும்.

மனுவை ஏற்றுக்கொண்டால் விசாரணைக்காக ஒரு தேதியை ஏற்படுத்தி 12-வது பிரிவின்கீழ் கோர்ட்டார் கடன்காரர்களுக்கு சர்க்கார் கெஜட்டில் பிரசுரம் செய்வதின் மூலமாகவும் வேறுவிதமாகவும் நோட்டீஸ் கொடுக்கவேண்டும். இந்தவித உத்தரவு பண்ணுகிற காலத்திலாகிலும் அதற்கு பிறகும் தீர்ப்புக்கு முன்னும் எப்போதாகிலும் அடியில்கண்ட உத்தரவுகளைச் செய்யலாம்.

(1) மனு முடிவாகும் வரையில் கடனாளி ஹாஜராவதற்கு ஜாமீன் கொடுக்கவேண்டுமென்றும் இல்லாத வரையில் சிவில் ஜெயிலில் இருக்கவேண்டுமென்றும்,

(2) மத்திய காலத்தில் கடனாளியின் சொத்துக்கு ஒரு ரிசீவரை நியமிக்கும்படிக்கும்,

(3) சி. பு. கோடுபடி ஜப்தி செய்யமுடியாதென்று சொல்லப்பட்டிருக்கும் சொத்துகள் நீங்கலாக கடனாளி வசம் இருக்கும் சொத்துக்களை ஜப்தி செய்து கைப்பற்றும்படிக்கும்,

(4) கடனாளியை உடனே பிடிப்பதற்கு வாரண்டு பிறப்பித்து மனு பைசலாகும் வரையில் ஜெயிலில் இருக்கவேண்டுமென்றாகிலும் அல்லது ஜாமீன்பேரில் விடுதலைசெய்ய வேண்டுமென்றாகிலும் உத்தரவு செய்யலாம்.

ஆனால் கடனாளி தன் கடன்காரர்களை மோசம் செய்யவேண்டுமென்றோ அவர்களுக்கு தொகை செலுத்துவதில் காலதாமதம் செய்யவேண்டுமென்றோ கோர்ட்டார் பிறப்பித்திருக்கும் யாதொரு கட்டளைப்படி நடவாமல் தப்பித்துக்கொள்ள வேண்டுமென்றோ எண்ணங்கொண்டு,

(1) ஒளித்துக்கொண்டிருக்கிறார் என்றாகிலும் அந்தக் கோர்ட்டாருடைய அதிகார எல்லைக்கப்பால்போயிருக்

கிறுரென்றுகிலும் அந்தவிதம் ஒளித்துக்கொள்ளவோ போகவோ இருக்கிறுர் என்றுகிலும்,

(2) விசாரணை நடக்கும்போது தன் கடன்காரர்களுக்கு வெகுவாய் உபயோகமாகத்தக்க யாதொரு தஸ்தாவேஜையாவது சொத்தையாவது வெளிப்படுத்த தவறியிருக்கிறுரென்றுகிலும் மறைத்திருக்கிறுரென்றுகிலும் அழித்திருக்கிறுரென்றுகிலும் பிறருக்கு மாற்றி இருக்கிறுரென்றுகிலும் மேலேகண்ட எல்லையினின்றும் அப்புறப்படுத்தி யிருக்கிறுரென்றுகிலும் அல்லது அந்தவிதம் செய்ய இருக்கிறுரென்றுகிலும் கோர்ட்டார் தெரிந்து திருப்தி அடைந்தாலன்றி மற்றப்படி மேலேசொன்ன (2) (3) (4) பகுதிகளில் கண்டிருக்கும் உத்தரவை செய்யக்கூடாது.

மனு விசாரணை தினத்தில் கடனுளியை விசாரணை செய்து கடன்காரர்களுக்கு கடனுளியை கேள்வி கேட்கும்படி அனுமதி கொடுப்பார்கள். தவிர கடன்காரர்கள் மனுவை பைசல் செய்ய அவசியமான யாதொரு சாட்சியம் விடவேண்டுமென்று கோர்ட்டாருக்குத் தெரிவித்தால் அவர்கள் பதினுலாவது பிரிவுப்படி வாயிதா கொடுக்கவேண்டும்.

கடன்காரர்களால் ஒத்துக்கொள்ளப்பட்டு கோர்ட்டாரால் அங்கீகரிக்கப்படும் யாதொரு ராஜியையாவது ஏற்பாட்டையாவது பிரேரேபிக்க கடனுளி சக்தியற்றவருயிருந்தால் கோர்ட்டார் உத்தரவின் மேல் கடனுளியின் யாவற்று சொத்தும் கோர்ட்டாரால் நியமிக்கப்படும் ரிசீவர் புறம்போய்விடும். மேலும் அது கடன்காரர்களுக்குள் பங்கிட்டுக் கொடுக்கப்படும்; தவிர, கடனுளியை, ஜெயிலிலிருந்தால் விடுதலை செய்யவேண்டும். தீர்ப்பு உத்தரவின் தேதிக்குப் பிறகும் கடனுளி விடுதலையாவதற்கு முன்னும் அவரால் சம்பாதிக்கப்படும் சகல சொத்தும் ரிசீவர் புறமாக சேர்ந்து கடன்காரர்களுக்குள் பங்கிடுசெய்யவேண்டும். கடனுளியாவது கடன்காரர்களில் எவராவது வேறே யாராவது ரிசீவர் செய்த நடவடிக்கையால் அதிருப்தியடைந்தால் அதைப்பற்றி அவர் கோர்ட்டாருக்கு மனு செய்துக்கொள்ளலாம். அப்படி செய்யவேண்டுமானுல் ரிசீவர் செய்யும் உத்தரவின் தேதிமுதல் 21 நாளைக்குள் செய்யவேண்டும். கடன்காரர்கள் ஜாப்

தாவில் எந்தக் கடன்காரர் பேராவது காணுதிருந்தால் தன் பெயரை சேர்க்கவேண்டுமென்று 24-வது பிரிவுப்படி மனுசெய்துக்கொள்ளலாம். தனக்குக் கொடுக்கவேண்டியிருக்கும் கடன் விவரங்கள் கண்டுள்ள பிரமாணப் பத்திரத்தைப் போஸ்டு மூலமாகவும் அனுப்பப்படலாம்.

தீர்ப்பு உத்தரவு செய்யப்படுவதற்கு முன்பாகிலுஞ்சரி செய்யப்பட்ட பிறகாகிலுஞ்சரி யாதொரு கடனாளி தம்முடைய கடனைத் தீர்த்துவிடுவது விஷயமாய் ராஜி செய்துகொள்ளுவதாகப் பிரேரேபனை செய்தனுப்பினாலும், தம்முடைய காரியங்கள் விஷயமாய் ஒரு ஒப்பந்த ஏற்பாடு செய்துகொள்வதாகப் பிரேரேபனை செய்தனுப்பினாலும், கோர்ட்டார் அந்தப் பிரேரேபனையைப்பற்றி ஆலோசிப்பதற்காக ஒரு தினத்தை நிஷ்கரிஷை செய்யவேண்டும். மேலும் அவர்கள் சகல கடன்காரர்களுக்கும் ஒரு நோடீஸ் கொடுக்கவும் வேண்டும். எந்தக் கடன்காரர்களுடைய கடன் தொகைகள் ருஜு செய்யப்பட்டு அவர்கள் தாங்களே ஹாஜராகிறார்களோ அல்லது ப்ளீடரை தங்களுக்குப் பர்த்தியாக ஹாஜர் செய்விக்கிறார்களோ அந்தக் கடன்காரர்களின் மொத்த கடன் தொகையில் முக்கால் பங்களவுக்குக் கடன் கொடுத்து அவர்களில் பெரும்பாலராயிருப்பவர்கள் ஷை பிரேரேபனையைப்பற்றி யோசித்தபிறகு அதை அங்கீகரிக்கத் தீர்மானித்தால், அந்தப் பிரேரேபனையானது கடன்காரர்களால் கிரமமாய் அங்கீகரிக்கப்பட்டதாகக் கொள்ளப்படும். கடனாளி தம்முடைய பிரேரேபனையிற்கண்ட அம்சங்களைத் திருத்துவது பொதுவாகக் கடன்காரர்களுக்குப் பிரயோசனகரமாயிருக்குமென்று கோர்ட்டார் அபிப்பிராயப்பட்டால், ஷை கடனாளி அந்தப்படியே சபையில் மேலேகண்ட அம்சங்களைத் திருத்திக் கொள்ளலாம். ரிஸீவர் நியமிக்கப்பட்டிருந்தால் அந்த ரிஸீவருடைய ரிபோர்ட்டைக் கேட்ட பிறகும் யாதொரு கடன்காரராவது கடன்காரருக்காக யாராவது ஏதாகிலும் ஆட்சேபனை செய்தால் அந்த ஆட்சேபனையைப்பற்றி யோசித்த பிறகும், கோர்ட்டார் ஷை பிரேரேபனையிற்கண்ட அம்சங்கள் நியாயமானவையல்லவென்றோ பொதுவாய்க் கடன்காரர்களுக்குப் பிரயோசனகரமான வைகளாயிருக்கக் கூடியவையல்ல வென்றோ அபிப்பிராயப்பட்டால், அந்தக் கோர்ட்டார் ஷை பிரேரேபனையை அங்கீகரிக்கமாட்டோமென்று நிராகரிக்க

வேண்டும். எந்தவிஷயம் ருஜூப்படுத்தப்படுகிறபட்சத்திலே கோர்ட்டார் கடனாளியைவிடுதலை செய்யமாட்டோமென்று நிராகரிக்கவேண்டியதாகவோ விடுதலை செய்வதைச் சிறிது காலத்துக்கு நிறுத்தி வைக்கவேண்டியதாகவோ அல்லது விடுதலை செய்யும்போது சில திட்டங்களேற்படுத்தி அவைகளுக்குட்பட்டு விடுதலை செய்யவேண்டியதாகவோ இருக்குமோ அப்படிப்பட்ட விஷயம் ருஜூவானால், ஷை கோர்ட்டார் கடனாளியின் சொத்திலிருந்து செலுத்தவேண்டியவைகளென்று ருஜூப்படுத்தத் தக்கவைகளாய் ஈட்டின்மேலல்லாமல் மற்றப்படி கொடுக்கப்பட்டிருக்கும் சகல கடன்களிலும் ரூபா ஒன்றுக்கு ஆறு அணாவுக்குக் குறையாமல் தொகை செலுத்துவதற்காக நியாயமான ஜாமீன் ஷை பிரேரேபணையில் காட்டப்பட்டிருந்தாலன்றி மற்றப்படி அந்தப் பிரேரேபணையை அங்கீகரிக்கமாட்டோமென்று நிராகரிக்கவேண்டும். வேறே எந்த விஷயத்திலும் கோர்ட்டார் ஷை பிரேரேபணையை அங்கீகரிக்கலாம். அல்லது அங்கீகரிக்கமாட்டோமென்று நிராகரிக்கலாம்.

கோர்ட்டார் அந்தப் பிரேரேபணையை அங்கீகரித்தால், அதன் அம்சங்கள் கோர்ட்டாருடைய உத்தரவில் சேர்த்து எழுதப்படும்; மேலும், அந்தக் கோர்ட்டார் 24-வது பிரிவிற்கண்ட நிபந்தனைகளின்படி ஒரு ஷெடியூல் தயார் செய்யவேண்டும்; தீர்ப்பு உத்தரவு ஏதாவது பிறப்பிக்கப்பட்டிருந்தால் அது ரத்துசெய்யப்படுவதோடுங் கூட, ஷை ராஜி அல்லது வேறே ஏற்பாடானது மேலேகண்ட ஷெடியூலில் பதியப்பட்டுள்ள எந்தக் கடன்களுக்காகிலும் சம்பந்தப்படுகிறமட்டிலே, அந்த ஷெடியூலில் பதியப்பட்டுள்ள சகல கடன்காரர்களையும் கட்டுப்படுத்தும். ஷை ராஜி அல்லது வேறே ஏற்பாட்டின்படி பாக்கியாயிருக்கும் தவணைத்தொகையைச் செலுத்துவதில் தவறு நேரிட்டாலும், அந்த ராஜி அல்லது வேறே ஏற்பாட்டை இன்னும் அனுசரிப்பதனால் அநியாயம் நடக்கும் அல்லது அக்கிரமமாய்க் காலதாமதம் நேரிடுமென்றாகிலும் கோர்ட்டாருடைய அங்கீகாரமானது மோசடியாய்ப் பெறப்பட்டதென்றாகிலும் கோர்ட்டார் அபிப்பிராயப்பட்டாலும், அவர்கள் தங்களுக்குத் தகுதியாகத் தோற்றுகிற பட்சத்திலே, கடனாளியைக் கடனிறுக்கச் சக்தியற்றவரென்று தீர்மானித்து, ஷை ராஜி அல்லது வேறே ஏற்பாட்டின்படியாவது அதை அனுசரித்தாவது கிரமமாய் யாதொரு ட்ரான்ஸ்பர்

செய்யப்பட்டிருந்தாலும் தொகை செலுத்தப்பட்டிருந்தாலும் வேறே யாதொரு காரியம் நடத்தப்பட்டிருந்தாலும் அது செலாவணியாவதற்குப் பாதகமில்லாமலே அந்த ராஜி அல்லது வேறே ஏற்பாட்டை ரத்துசெய்துவிடலாம்.

கடனிறுக்கச் சக்தியற்றவரின் சொத்தைப் பங்கீடு செய்கையிலே மற்றக் கடன்களைக் காட்டிலும் முன்னதாகச் செலுத்தவேண்டுமென்று கட்டளையிட்டுள்ள சகல கடன்களையும் அந்தப்படி செலுத்துவதற்கு நிபந்தனை கண்டிராத யாதொரு ராஜி அல்லது வேறே ஏற்பாட்டைக் கோர்ட்டார் அங்கீகரிக்கக்கூடாது.

ஈட்டின்மேல் கடன் கொடுத்திருக்கும் யாதொரு கடன்காரர் தம்மிடத்தில் ஈடாக வைத்துள்ள சொத்தைப் பணமாக்குகிற பட்சத்திலே, அவர் வாஸ்தவமாய் அப்படி கிடைத்த தொகையைக் கழித்தபிறகு தமக்கு இன்னும் பாக்கியாயிருக்கும் மிகுதித் தொகைக்காக ருஜூ கொண்டுவரலாம். அவ்வித கடன்காரர் தம்மிடத்தில் ஈடாக வைத்துள்ள சொத்தைக் கடன்காரர்களின் பொதுவான பிரயோசனத்தின்பொருட்டு விட்டுவிட்டால், அந்தக்கடன்காரர் தமக்குச் சேரவேண்டிய கடன்தொகை முழுவதற்கும் ருஜூ கொண்டுவரலாம். மேலும் அவர் தம்மிடத்தில் ஈடாக வைத்துள்ள சொத்தை (மேலேகண்டபடி) பணமாக்காமலும் விட்டுவிடாமலுமிருந்தால், அவர் தமக்குச் சேரவேண்டிய கடனை ஷெடியூலில் பதிவு செய்வித்துக்கொள்வதற்கு முன்னமே, ஈடாகவைத்துள்ள ஷை சொத்தின் விவரங்களையும், அதற்குத் தாம் என்ன மதிப்பு ஏற்படுத்துகிறாரோ அந்த மதிப்பையும், மேலேகண்டபடி தாம் ருஜூ செய்கையிலே காணவேண்டும்; அன்றியும், அவர் மேலே சொன்னபடி ஏற்படுத்தப்பட்ட மதிப்பைக் கழித்த பிறகு தமக்கு இன்னும் பாக்கியாயிருக்கும் மிகுதிப்பணத்தின் விஷயத்தில் மாத்திரம் ஈவுத் தொகைபெற அர்ஹராவார். ஈடாக வைத்துள்ள யாதொரு சொத்துக்கு மேலே கண்டபடி மதிப்பு ஏற்படுத்தப்பட்டால் கோர்ட்டார் ஏற்படுத்தப்பட்ட மதிப்புத்தொகை கடன்காரருக்குச் செலுத்தப்படுவதன்மேல் ஷை சொத்து பணமாக்கப்படுவதற்கு முன்னதாக எப்போதாகிலும் மீட்டுக்கொள்ளலாம். யாதொரு கடன்காரர் தம்மிடத்தில் ஈடாக வைத்துள்ள சொத்துக்கு மதிப்பேற்படுத்தின

பிறகு அதைப் பணமாக்குகிற பட்சத்திலே, அந்தப்படி வாஸ்தவத்தில் கிடைத்த தொகையை கடன்காரர் முன்னமே ஏற்படுத்தியிருக்கும் யாதொரு மதிப்பின் தொகைக்குப் பர்த்தியாகக் கொள்ள வேண்டியதோடுங்கூட, கடன்காரர் ஏற்படுத்தியிருக்கும் திருத்தமான மதிப்பைப் போலவே அதைச் சகல விஷயங்களிலும் பாவிக்கவும் வேண்டும். ஈட்டின்மேல் கடன் கொடுத்திருக்கும் யாதொரு கடன்காரர் மேலேகண்ட நிபந்தனைகளின்படி நடவாவிட்டால், அவர் யாதொரு ஈவுத்தொகையில் எந்தப் பாகத்தையாவது பெறமாட்டார்.

1. கடனிறுக்கச் சக்தியற்றவருடைய சொத்தைப் பங்கீடு செய்கையில்.—

*a.* மஹாராஜா அவர்களுக்காவது யாதொரு பிரதேச அதிகாரிக்காவது சேரவேண்டிய சகல கடன்களையும்,

*b.* மனு கொடுத்துக்கொண்ட தேதிக்கு முன்னதாக நான்கு மாதகாலம் கடனிறுக்கச் சக்தியற்றவர்களுக்குச் செய்துள்ள ஊழியத்நிமித்தம் யாதொரு க்ளர்க்கு (குமாஸ்தா) ஊழியக்காரர் அல்லது வேலைக்காரனுக்கு இருபது ரூபாய்க் கதிகப்படாமல் மொத்தத்தில் சேரவேண்டிய சகல சம்பளத்தையும் அல்லது கூலிகளையும்.

மற்றக் கடன்களுக்கெல்லாம் முன்னமே செலுத்திவிட வேண்டும்.

2. கடனிறுக்கச் சத்தியற்றவருடைய சொத்தானது (1) குறிப்பிட்ட உட்பிரிவிற்கண்ட கடன்களைத் தீர்த்துவிடுவதற்குப் போதுமானதா யிராவிட்டாலன்றி மற்றப்படி, ஷை கடன்களை ஒரே சரியாகப் பாவிக்கவேண்டியதோடுங்கூட, அவைகளைப் பூர்த்தியாய்ச் செலுத்திவிடவும்வேண்டும். அந்த சொத்தானது ஷை கடன்களைத் தீர்த்துவிடுவதற்குப் போதாததாயிருக்கிற விஷயத்திலே, ஷை கடன்களை எவ்வரசாய் செலுத்தவேண்டும்.

3. பரிபாலனச் செலவுகளாகவோ மற்றப்படியோ அவசியமாயிருக்கும் தொகைகளைக் கடனிறுக்கச் சக்தியற்றவருடைய சொத்திலிருந்து நிறுத்திக்கொண்டபிறகு மிகுதியாயுள்ள பாகமானது-(1) குறிப்பிட்ட உட்பிரிவிற்கண்ட கடன்களைத் தீர்த்துவிடுவதற்கு எம்மட்டில் போதுமானதாயிருக்கிறதோ அம்மட்டிலே, அந்தக் கடன்களை உடனே தீர்த்துவிடவேண்டும்.

4. பங்குக்காரர்களின் விஷயத்திலே, பங்குக்காரர்களுக்குப் பொதுவாகவுள்ள சொத்தானது - பங்குக்காரர்களுக்குப் பொதுவான கடன்களைச் செலுத்துவதற்கு முதலில் உபயோகிக்கத் தக்கதாகும்; ஒவ்வொரு பங்குக்காரருக்கும் பிரத்தியேகமாயுள்ள சொத்தானது அவருடைய பிரத்தியேகமான கடன்களைச் செலுத்துவதற்கு முதலில் உபயோகிக்கத்தக்கதாகும். பங்குக்காரர்களின் பிரத்தியேகமான சொத்தில் மிகுதி ஏதாவதிருந்தால், அது பங்குக்காரர்களுடைய பொதுவான சொத்தின் பாகமாயிருந்தா லெப்படியோ அப்படியே அதன் விஷயத்தில் பிரவர்த்திக்கவேண்டும்; பங்குக்காரர்களின் பொதுவான சொத்தில் ஒவ்வொரு பங்குக்காரருக்குமுள்ள சுதந்தரங்களுக்கும் பாத்தியதைகளுக்கும் தக்கபடி பங்குக்காரர்களுடைய பிரத்தியேகமான சொத்தின் பாகமாயிருந்தா லெப்படியோ அப்படியே அதன் விஷயத்தில் பிரவர்த்திக்கவேண்டும்.

(5) இந்த ஆக்டிற்கண்ட நிபந்தனைகளுக்குட்பட்டு, ஷெடியூலில் பதிவு செய்யப்பட்ட சகல கடன்களையும்-ஒன்றைவிட மன்றொன்றை சிலாக்கியமாகப் பாவிக்காமல், முறையே அந்தக் கடன் தொகைகளின் வீதத்துக்குத் தக்கபடி செலுத்தவேண்டும்.

(6) மேலேகண்ட கடன்களைச் செலுத்திவிட்ட பிறகு மிகுதி ஏதாவதிருந்தால், அதை ஷெடியூலில் பதிவு செய்யப்பட்ட சகல கடன்களும் எந்தத் தேதியில் கடனுளி

கடனிறுக்கச் சக்தியற்றவரென்று தீர்மானிக்கப்பட்டதோ அந்தத் தேதிமுதல் வருஷமொன்றுக்கு நூற்றுக்கு ஆறு விழுக்காடு வட்டி செலுத்துவதற்காக உபயோகிக்கவேண்டும்.

யாதொரு கடனாளியின் சொத்தின்மேல் டிக்ரியை நிறைவேற்றும்படி உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்தால், எவரும் - தீர்ப்புத்தரவின் தேதிக்கு முன்னதாய் விற்பனை மூலமாகவோ வேறே விதமாகவோ (டிக்ரியை) நிறைவேற்றிக்கொண்டிருக்கும்போது பணமாக்கப்பட்ட ஆஸ்தியின் விஷயத்திலன்றி மற்றப்படி, ரிஸீவரின்மேல் டிக்ரியை நிறைவேற்றிப் பிரயோசனமடைவதற்கு அர்ஹராகமாட்டார். எந்த சொத்தின்மேல் டிக்ரி நிறைவேற்றப்படுகிறதோ அந்த சொத்தின் விஷயத்திலே ஈட்டின்மேல் கடன் கொடுத்திருக்கிற கடன்காரருக்குள்ள சுதந்தரங்களுக்கு இந்த பிரிவிலுள்ள தெதனுலும் பாதக முண்டாகமாட்டாது. (டிக்ரியை) நிறைவேற்றும் பொருட்டுச் செய்யப்படுகிற விற்பனையில் யாதொரு கடனாளியின் சொத்தை எவராகிலும் நல்ல எண்ணத்துடன் கிரயத்திற்கு வாங்கினுல், அந்தச் சொத்தின் சம்பந்தமாக அவரடையும் பாத்தியதையானது ரிஸீவருக்குள்ள பாத்தியதையைக் காட்டிலும் சகல விஷயங்களிலும் சிலாக்கியமாகும்.

யாதொரு கடனாளியைச் சேர்ந்ததாய் (டிக்ரியை) நிறைவேற்றும் விற்பனை செய்யத்தக்க யாதொரு சொத்தின்மேல் டிக்ரியை நிறைவேற்றும்படி உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்து, அந்தக் கடனாளிக்கு விரோதமாகத் தீர்ப்புத்தரவு செய்யப்பட்டிருக்கிறதென்று ஷை சொத்தை விற்பனை செய்வதற்கு முன்னமே அந்தப்படி நிறைவேற்றும் கோர்ட்டாருக்கு நோடீஸ் கொடுக்கப்பட்டிருந்தால், அந்தக் கோர்ட்டார் விண்ணப்பம் செய்துகொள்ளப் படுவதன்மேல் அந்த சொத்தானது கோர்ட்டார் வசத்திலிருக்கிற பட்சத்திலே அதை ரிஸீவரிடத்தில் ஒப்பித்துவிடும்படி கட்டளையிடவேண்டும்; ஆனால் நிறைவேற்றுவதற்கான செலவுகள் மேலே கண்டபடி ஒப்பித்துவிடப்பட்ட சொத்தினின்றும் முதலில் செலுத்தத்தக்க செலவுகளாகும். ஷை ரிஸீவர் அந்தச் செலவுகளைச் செலுத்துங் காரியத்துக்காக ஷை சொத்தையோ அல்லது ஷை சொத்தில் போதுமான யாதொரு பாகத்தையோ விற்பனை செய்யலாம்.

சொத்தின் விஷயமாகக் கல்லியாணமாவதற்கு முன்னும் அந்தக் கல்லியாண சம்பந்தமாகவும் செய்யப்பட்ட அல்லது நல்ல எண்ணத்துடனும் சரியான பிரதிபலனுக்காகவும் விக்கிரய மூலமாய் வாங்கினவருக்கோ வேறே விதமாய் அந்த சொத்தில் பாத்தியதை அடைந்திருப்பவருக்கோ அனுகூலமாகச் செய்யப்பட்ட ட்ரான்ஸ்பராயிராத வேறே யாதொரு ட்ரான்ஸ்பரானது - ட்ரான்ஸ்பர் செய்கிறவர் ட்ரான்ஸ்பரான தேதிக்குப் பிறகு இரண்டு வருஷகாலத்துக்குள்ளாகக் கடனிறுக்கச் சக்தி யற்றவரென்று தீர்மானிக்கப்பட்டால், ரிஸீவர் சம்மந்தப்படுகிற மட்டில் செலாவணியாகமாட்டாது; மேலும், அதைக் கோர்ட்டார் ரத்து செய்யலாம்.

தம்முடைய கடன்களைச் செலுத்தவேண்டிய காலத்தில் அவைகளைத் தம்முடைய சொந்த பணத்திலிருந்து செலுத்த அசக்தராயிருக்கும் யாதொரு நபர் ஒரு கடன்காரருக்கு மற்ற கடன்காரர்களைக் காட்டிலும் விசேஷ அனுகூலம் செய்யும் நோக்கத்துடன் அந்த கடன்காரர் சார்பாகச் சொத்தையாவது அதிலுள்ள யாதொரு பாத்தியதையையாவது ட்ரான்ஸ்பர் பண்ணுவதும், தொகை செலுத்துவதும் கடமை ஏற்படுத்திக்கொள்வதும், நியாய விவகாரம் நடத்துவதும் அல்லது நியாய விவகாரத்துக்கு உட்படுவதும் - அந்தப்படியெல்லாம் செய்யப்பட்ட தேதிக்குப் பிறகு மூன்றுமாத காலத்துக்குள்ளாகக் கொடுத்துக்கொண்ட மனுவின்மேல் அப்படிப்பட்ட நபர் கடனிறுக்கச் சக்தியற்றவரென்று தீர்மானிக்கப்பட்டால், மோசமாய்ப் பண்ணினதென்றும், செலுத்தினதென்றும், ஏற்படுத்திக்கொண்டதென்றும், நடத்தினதென்றும், உட்பட்ட தென்றும் எண்ணப்படுவதோடுங்கூட, ரிஸீவர் சம்பந்தப்பட்ட மட்டில் செலாவணியாகவும் மாட்டா; மேலும் அவைகளைக் கோர்ட்டார் ரத்து செய்யவேண்டும். ககடனிறுக்கச் சக்தியற்றவருக்குக் கடன் கொடுத்திருக்கும் கடன்காரர் மூலமாகவாவது அவருக்குட்பட்டாவது நல்ல எண்ணத்துடனும் சரியான பிரதி பலனுக்காகவும் உரிமையடைந்திருக்கிற யாதொரு நபரின் பாத்தியதைகளுக்கு பாதகமுண்டாகமாட்டாது.

(a) கடனிறுக்கச் சக்தியற்றிருப்பவர் தமக்குக் கடன்கொடுத்திருக்கும் கடன்காரர்களில் எவருக்காயினும் யாதொரு தொகை செலுத்துவதாவது,

(*b*) கடனிறுக்கச் சக்தியற்றிருப்பவருக்கு யாதொரு தொகை செலுத்துவதாவது எதையாகிலும் ஒப்பிப்பதாவது,

(*c*) கடனிறுக்கச் சக்தியற்றிருப்பவர் தகுதியான பிரதிபல னுக்காக யாதொன்றை ட்ரான்ஸ்பர் பண்ணுவதாவது,

(*d*) கடனிறுக்கச் சக்தியற்றிருப்பவராகிலும் அவரோடு கூட வாகிலும் தகுதியான பிரதிபலனுக்காகச் செய்துகொள்ளும் யாதொரு ஒப்பந்த உடன் படிக்கையாவது காரியமாவது,

இந்த ஆக்டிலுள்ள தெதனுலும் சட்ட சம்மதமற்றதாய்ப் போய்விடமாட்டாது :—

ஆனல், அப்படிப்பட்ட யாதொரு நடவடிக்கையானது தீர்ப் புத்தரவின் தேதிக்கு முன்னதாக நடந்திருக்கவேண்டும்.

(1) ஈவுத்தொகையைக் கணக்கிடுகையிலே ரிஸீவரானவர் அடியிற்கண்டவைகளுக்கு ஏற்பாடு செய்வதற்குப் போதுமான ஆஸ் தியைக் கையிருப்பில் நிறுத்திவைக்கவேண்டும். அவையாவன :—

(*a*) தாங்கள் ருஜுகொண்டுவருதற்குச் சாதாரணக் கடிதப் போக்கு வரத்து செய்யும் முறைப்படி போதுமான காலம் பெற்றி ருக்க முடியாத தூரத்திதுள்ள இடங்களிலே வாசஞ்செய்யும் நபர் களுக்குச் சேரவேண்டியவையென்று கடனிறுக்கச் சக்தியற்றவர் கொடுக்கும் ஸ்டேட்மென்ட் மூலமாகவாவது மற்றபடியாவது காணப்பட்டு, இந்த ஆக்டின்படி ருஜுப்படுத்தத்தக்க கடன்கள் ;

(*b*) இந்த ஆக்டின்படி ருஜுப்படுத்தத்தக்க எந்தக் கடன் களுக்காகத் தாவா செய்திருந்து அவைகளின் தொகை இன்னும் நிஷ்கரிஷை செய்யப்படவில்லையோ அந்தக் கடன்கள் ;

(*c*) எந்த ருஜு அல்லது தாவாவின் விஷயத்தில் விவாதம் நேரிட்டிருக்கிறதோ அந்த ருஜு அல்லது தாவா ; மேலும்,

(*d*) சொத்தின் பரிபாலனத்துக்காகவோ மற்றப்படியோ அவசியமாயிருக்கும் செலவுகள்.

(**2**) (1) குறிப்பிட்ட நிபந்தனைகளுக்குட்பட்டு, கையிருப்பி லுள்ள பணத்தை யெல்லாம் ஈவுத்தொகையாக பங்கீடு செய்ய வேண்டும்.

(3) யாதொரு ஈவுத்தொகையை அல்லது ஈவுத்தொகைகளை நிர்ணயிக்கிறதற்கு முன்னமே எந்தக் கடன்காரராவது தம்முடைய கடனை ருஜூப்படுத்தி யிராவிட்டால், அவர்-அந்தக்காலத்திலே ரிஸீவரிடத்தில் இருக்கிற யாதொரு பணத்தைப் பிற்பாடு செலுத்த வேண்டிய யாதொரு ஈவுத்தொகை அல்லது ஈவுத்தொகைகளைச் செலுத்துவதற்காக உபயோகிப்பதற்கு முன்னமே, தாம் பெற்றுக் கொள்ளத் தவறியிருக்கும் யாதொரு ஈவுத்தொகை அல்லது ஈவுத் தொகைகளை ஷை பணத்திலிருந்து பெற்றுக்கொள்ள அர்ஹராவார்; ஆனால், ஷை கடன்காரர்-தம்முடைய கடன் ருஜூப்படுத்தப்படு வதற்கு முன்னே நிர்ணயிக்கப்பட்ட யாதொரு ஈவுத்தொகையைப் பங்கீடு செய்கையிலே தமக்குப் பங்கு கிடைக்கவில்லையென்னுங் காரணத்தினால் மேலேகண்டபடி பங்கீடு செய்திருப்பதைத் தடைப் படுத்த அர்ஹராகமாட்டார்.

(4) கடனிறுக்கச் சக்தியற்றவருடைய சொத்து முழுவதையு மாவது அனுவசியமாய் வெகுகாலத்துக்கு ரிசீவருக்கு வேலை இரு ந்து கொண்டேயிருக்கும்படி செய்யாமல் ஷை சொத்திலே எவ்வள வைப் பணமாக்கக் கூடுமென்று கோர்ட்டார் அபிப்பிராயப்படுகிறார் களோ அவ்வளவையாவது ரிஸீவர் பணமாக்குவதன்மேல் அவர் கடைசியாக ஈவுத் தொகையை நிர்ணயிக்கவேண்டும்; ஆனால், அந் தப்படி செய்வதற்கு முன்னே அவர் - யார் கடன்காரராயிருப்பதாக வெளியிடப்பட்டிருந்து ருஜூப்படுத்தப்பட்டிருக்கவில்லையோ அந்த நபர்களுக்கு நிஷ்கரிஷை பண்ணி யிருக்கிறவிதமாய் நோடீஸ் கொடுத்து, அதில் ஏற்படுத்தியுள்ள காலவரையறைக்குள் அவர் கள் தாவாவை ருஜூப்படுத்தாத பட்சத்திலே அந்த தாவாவைக் கவ னிக்காமலே கடைசியாக ஈவுத்தொகை நிர்ணயிக்கத் தொடங்குவா ரென்று தெரிவிக்கவேண்டும், மேலேகண்டபடி ஏற்படுத்தும் கால வரையறை கழிந்தபிறகு, அல்லது அப்படிப்பட்ட தாவாதாரர் எவ ராவது விண்ணப்பஞ்செய்துகொள்வதன்மேல் தம்முடைய தாவாவை ஸ்திரப்படுத்துவதற்காகக் கோர்ட்டார் இன்னும் அதிக காலகம் கொடுக்கிற பட்சத்திலே அப்படிப்பட்ட அதிககாலம் கழிந்தபிறகு, கடனிறுக்கச் சக்தியற்றிருப்பவருடைய சொத்தை - ஷெடியூலில் பதிவுசெய்யப்பட்டுள்ள கடன்காரர்களுக்கு, மற்ற எந்த நபர்களின் தாவாவையும் கவனிக்காமலே பங்கீடு செய்யவேண்டும்.

(5) யாதொரு ஈவுத்தொகைக்காக ரிஸீவர்மேல் வியாஜ்ஜியமும் நடத்தக்கூடாது; ஆனால், ரிஸீவர் யாதொரு ஈவுத்தொகையைச் செலுத்தமாட்டேனென்று நிராகரித்தால், ஷெட்யூலில் பதிவு செய்யப்பட்டுள்ள யாதொரு கடன்காரர் விண்ணப்பஞ் செய்துகொள்வதன்மேல், ரிஸீவரானவர் அந்த ஈவுத்தொகையைச் செலுத்தவேண்டுமென்றும், அந்தத் தொகை எவ்வளவு காலம் வரையில் கொடாமல் நிறுத்திவைக்கப்பட்டதோ அந்தக் காலத்திற்காக அந்தத் தொகைக்கு வட்டியையும் விணப்பம் செய்துகொள்வதற்கான செலவுகளையும் தம்முடைய சொந்த பணத்திலிருந்து செலுத்தவேண்டுமென்றும் ஷை ரிஸீவருக்குக் கோர்ட்டார் உத்தரவு செய்யலாம்.

கடனிறுக்கச் சக்தியற்றவர் தமக்குக் கடன்காரர்கள் கடன் கொடுத்திருக்கும் தொகைகளை இந்த ஆக்டில் நிபந்தனை கண்டிருக்கிறபடி வட்டி சகிதமாகப் பூர்த்தியாய்ச் செலுத்திவிட்டபிறகும், இந்த ஆக்டின்படி நடவடிக்கை நடத்தியதற்காகப் பிடித்துள்ள செலவுகளைப் பூர்த்தியாய்ச் செலுத்தி விட்டபிறகும் மிகுதிப்பணம் ஏதாவதிருந்தால், அதைப் பெற்றுக்கொள்ள அர்ஹராவார்.

தீர்ப்புத்தரவு பிறப்பிக்கப்படுவதற்கு முன்னேயாவது பிறகாவது யாதொரு கடனாளி,

a. தன் சொத்தை பற்றியும் தான் கொடுக்கவேண்டியிருக்கும் கடன் ஜாபிதாக்களிலே வேண்டுமென்று பொய்ப் பதிவுகள் செய்தாலும்,

b. மோசடியாகவாகிலும் தொந்தரவுண்டாக்கவேண்டுமென்னும் எண்ணத்துடனாகிலும் யாதொரு சொத்தையோ கணக்குப் புத்தகத்தையோ மறைத்தாலும் அழித்தாலும் ட்ரான்ஸ்பர் பண்ணினாலும் அப்புறப்படுத்தினாலும் ஹாஜர்படுத்தமாட்டேனென்று நிராகரித்தாலும்,

c. கெட்ட எண்ணத்துடன் வேறே யாதொரு காரியத்தைச் செய்தாலும்,

கோர்ட்டார் எழுத்துமூலமான உத்தரவைக்கொண்டு, ஒரு வருஷத்துக்கு மேற்படாத ஒரு காலவரையறைக்கு வெறுங்காவல் தண்டனையை அவருக்கு விதிக்கலாம்; அப்படிப்பட்ட ஒவ்வொரு

விஷயத்திலும் கோர்ட்டார் குற்றமாயுள்ள சங்கதிகளையும் ஷெ கடனாளி எதாவது ஸ்டேட்மென்ட் கொடுத்திருந்தால் அதையும் எழுதிவைக்கவேண்டும்.

தீர்ப்பு உத்தரவுக்குப் பிறகு எப்போதாவது கடனாளியானவர் விடுதலை உத்தரவுக்காகக் கோர்ட்டாருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளலாம்; அப்படி அவர் செய்துகொள்ளும் பட்சத்திலே கோர்ட்டார் ஷெ விண்ணப்பத்தைக் குறித்தும் அதன் விஷயமாய் ஆட்சேபனைகள் எவையேனும் செய்யப்பட்டால் அவைகளைக் குறித்தும் விசாரணை செய்வதற்காக ஒரு தினத்தை நிஷ்கரிஷை பண்ணவேண்டும்; அந்த தினத்தைப்பற்றி, கடன்காரர்களுக்கு நோட்டீஸ் கொடுக்கவேண்டும். கோர்ட்டார் யாதொரு கடன்காரருடைய ஆட்சேபனையைப் பற்றியும் ரிஸீவர் நியமிக்கப்பட்டிருக்கிற விஷயத்திலே ரிஸீவருடைய ரிபோர்ட்டைப்பற்றியும் ஆலோசித்த பிறகு,

a. அறுதியான விடுதலை உத்தரவு கொடுக்கலாம் அல்லது கொடுக்கமாட்டோமென்று நிராகரிக்கலாம்; அல்லது

b. ஷெ உத்தரவு அமுலுக்கு வருவதைக்குறித்து ஒரு காலம் வரையில் நிறுத்திவைக்கலாம்; அல்லது,

c. கடனிறுக்கச் சக்தியற்றவருக்கு (பிரஸ்தாப காலத்துக்குப் பிறகு சேரத்தக்க யாதொரு சம்பாத்தியம் அல்லது வருமானத்தின் சம்பந்தமாகவாவது அவர் பிற்பாடு சம்பாதிக்கும் சொத்தின் சம்பந்தமாகவாவது திட்டங்கள் எவையேனும் ஏற்படுத்தி அவைகள் சகிதமாக விடுதலை உத்தரவு கொடுக்கலாம்.

அடியிற் கண்ட சங்கதிகளிலெதுவாவது ருஜுவாவதன்மேல் கோர்டார்-அறுதியான விடுதலை உத்தரவு கொடுக்கமாட்டோமென்று நிராகரிக்கவேண்டும். அந்தச் சங்கதிகள் எவை யென்றால்:—

(a) கடனிறுக்கச் சக்தியற்றவருடைய ஆஸ்தியின் விலைமதிப்பானது, அவருடைய கடன்களிலே ஈட்டின்மேலல்லாமல் வாங்கிய கடன்களின்மேல் ரூபாய்க்கு எட்டணா வீதப்படியுள்ள தொகைக்குச் சரியாயிராமலிரு

ப்பதன் காரணம் எவைகளுக்காக அவரை உத்தரவாதியாய் எண்ணுவது நியாயமல்லவோ அப்படிப்பட்ட விஷயங்களை அவர் கோர்ட்டாருக்குத் திருப்திகரமாகக் காட்டினாலன்றி மற்றப்படி, அவருடைய ஆஸ்தியின் விலை மதிப்பு மேலே கண்ட பிரகாரம் இருப்பது ;

(b) கடனிறுக்கச் சக்தியற்றவர் செய்யும் தொழிலிலே வழக்கமாய் வைக்கப்படுவைகளும், எவைகளை வைத்திருப்பது தகுதியாகுமோ அப்படிப்பட்டவைகளும், அவர் கடனிறுக்கச் சக்தியற்றவராவதற்கு அடுத்து முந்திய மூன்று வருஷங்களுக்குள்ளே அவர் தொழில் சம்பந்தமாக நடத்தின நடவடிக்கைகளையும் பண விஷயமாய் அவருக்குள்ள நிலைமையையும் போதுமான மட்டில் காட்டக்கூடியவைகளும் ஆகிய கணக்குப் புத்தகங்களை அவர் வைத்திருக்கவில்லை என்பது ;

(c) தாம் அப்படி சக்தியற்றிருப்பதைத் தெரிந்துகொண்ட பிறகு வியாபாரம் செய்துகொண்டேயிருந்திருக்கிறாரா என்பது ;

(d) இந்த ஆக்டின்படி ருஜுவாகத்தக்க யாதொரு கடனை வாங்கியிருந்து, அதை வாங்கினபோது தாம் அதைச் செலுத்திவிடக்கூடியவரா யிருப்பாரென்று எதிர்பார்ப்பதற்கு வெகுவாக நியாயமான ஆதாரமெதுவும் இராமலிருந்திருப்பது (அப்படிப்பட்ட ஆதாரம் இருப்பதாக ருஜுப்படுத்தும் கடமை அவரைப் பொறுத்ததாகும்) ;

(e) தம்முடைய கடன்களைத் தீர்ப்பதற்கான ஆஸ்தியிலே நஷ்டம் ஏதாவது நேரிட்டிருந்தால் அல்லது அந்த ஆஸ்தியில் குறைவு ஏதாவது நேரிட்டிருந்தால் அதற்குத் திருப்திகரமான காரணம் சொல்லத் தவறுவது ;

(f) (லாபம் வரும் அல்லது நஷ்டம் வரும் என்னும்) நிலையில்லாத துணிகரமான காரியங்களில் முன்யோசனை யில்லாமல் பிரவேசித்ததனாலாவது, வாழ்க்கையிலே நியாய விரோதமாக மிதமிஞ்சி தாராளமா யிருப்பதனாலாவது

சூதாடுவதனுலாவது, தம்முடைய தொழில் சம்மந்த மான காரியங்களில் எவ்வளவு அசட்டையாயிருப்பது குற்றமாகுமோ அவ்வளவு அசட்டையாயிருப்பதனுலா வது மேலே கண்டபடி சக்தியற்றவரா யிருக்கிருரென் பது அல்லது அப்படி அவர் சக்தியற்றிருப்பதற்கு மேலே கண்டவை சிறிதுமட்டில் காரணமாயிருந்தி ருக்கின்றன ;

(g) தம்முடைய கடன்கள் செலுத்தத்தக்கவைக ளாகிற போது அவைகளைச் செலுத்தக் கூடாதவராயிருக்கை யிலே, மனு கொடுத்துக்கொள்ளப்பட்ட தேதிக்கு முந்திய மூன்றுமாதத்துக்குள்ளாக - தமக்குக் கடன் கொடுத்திருப்பவர்களில் ஒருவரை மற்றவர்களைக் காட் டிலும் அக்கிரமமாய்ச் சிலாக்கியமாகப் பாவித்திருக் கிருரென்பது ;

(h) முன்னே எப்போதாவது கடனிறுக்கச் சக்தியற்றவ ராகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிருர், அல்லது தமக்குக் கடன் கொடுத்தவர்களோடு ராஜியாவது (வேறே) ஏற் பாடாவது செய்துகொண்டிருக்கிருரென்பது ;

(i) தம்முடைய சொத்தையோ அதில் யாதொரு பாகத்தை யோ மறைத்து அல்லது அப்புறப்படுத்திவிட்டாவது வேறே யாதொரு மோசம் அல்லது மோசடியான நம்பிக்கைத் துரோகம் என்னும் குற்றம் செய்தாவது இருக்கிருரென்பது.

விடுதலை உத்தரவினுல் :—

(a) மகாராஜா அவர்களுக்குச் சேரவேண்டிய யாதொரு கட னிலிருந்தாவது,

(b) கடனிறுக்கச் சக்தியற்றவர் சம்பந்தப்பட்டிருந்த யா தொரு மோசம் அல்லது மோசடியான நம்பிக்கைத் துரோகத்தின் மூலமாய் வாங்கியிருக்கும் கடனிலிருந் தாவது ஏற்றுக்கொண்டிருக்கும் பொறுப்பிலிருந்தா வது,

(c) அவர் சம்பந்தப்பட்டிருந்த யாதொரு மோசத்தின் மூலமாக எதன் விஷயமாய்க் கடன்காரர்கள் தம்மைத் தொந்தரவு பண்ணுமலிருக்கும்படி செய்துக்கொண்டிருக்கிருரோ அப்படிப்பட்ட யாதொரு கடன் அல்லது பொறுப்பிலிருந்தாவது,

அவர் விடுவிக்கப்படமாட்டார். மற்றப்படி கடனிறுக்கச் சக்தியற்றவர் ஷெடியூலில் பதிவு செய்யப்பட்ட சகல கடன்களினின்றும் விடுதலை உத்தரவினுல் விடுவிக்கப்படுவார். மனுகொடுத்துக் கொள்ளப்பட்ட தேதியில், கடனிறுக்கச் சக்தியற்றவரோடு பங்குக்காரராகவாவது அவரோடு கூட்டாய் ட்ரஸ்டியாகவாவது அவரோடு கூட்டாய்க் கடமைப்பட்டவராகவாவது அவரோடு கூட்டாய் யாதொரு ஒப்பந்தஞ் செய்துக்கொண்டவராகவாவதிருந்த எந்த நபராகிலும் அவருக்கு ஜாமீனுயிருந்த எந்த நபாாகிலும் விடுதலை உத்தரவினுல் விடுவிக்கப்படமாட்டார்.

டிஸ்ட்ரிக்ட் கோர்ட்டாருக்குக் கீழ்ப்பட்ட கோர்ட்டார் கடனிறுக்கச் சக்தியற்றவர் சம்பந்தமாக அதிகாரம் செலுத்துகையிலே பிறப்பித்த உத்தரவினுல் துன்பமடைந்த யாதொரு நபர் டிஸ்ட்ரிக்ட் கோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ளலாம்; அப்படி அவர் அப்பீல் செய்து கொள்வதன்மேல் டிஸ்ட்ரிக்ட் கோர்ட்டார் பிறப்பிக்கும் உத்தரவு முடிவானதாகும். ஆனுல், ஹைகோர்ட்டார் டிஸ்டிரிக்ட் கோர்ட்டார் தீர்மானித்தயாதொரு அப்பீலிலே பிறப்பிக்கப்பட்ட உத்தரவு சட்ட சம்பந்தமானதா என்று திருப்திகரமாய்த் தெரிந்து கொள்ளுங் காரியத்துக்காக (பிரஸ்தாப) கேஸை வரவழைத்து, இதன் சம்பந்தமாய்த் தங்களுக்கு யுக்தமாகத் தோற்றுகிற உத்தரவை ஜாரிசெய்யலாம். கீழ்க்கோர்ட்டார் பிறப்பித்த உத்தரவின்மேல் செய்துகொள்ளப்படும் அப்பீலில்லாமல் மற்றப்படி டிஸ்ட்ரிக்ட் கோர்ட்டார் பிறப்பிக்கிற வேறே யாதொரு உத்தரவினுல் துன்பமடையும் யாதொரு நபர் ஹைகோர்ட்டிலே அப்பீல் செய்துக் கொள்ளலாம். டிஸ்டிரிக்ட் கோர்ட்டில் செய்துகொள்ளப்படும் அப்பீல்களுக்கும் ஹைக்கோர்ட்டில் செய்துகொள்ளப்படும் அப்பீல்களுக்கும் நிர்ணயித்திருக்கிற காலம் - முறையே முப்பது தினமும் தொண்ணூறு தினமுமாகும்.

கடனாளி விடுதலை செய்யப்படாமலிருப்பதாக யாதொரு நபருக்குத் தெரிவிக்காமலே அந்த நபரிடத்திலிருந்து ஐம்பது ரூபாய் அளவுக்காவது அதற்கு மேற்படவாவது கடன் வாங்குகிற பட்சத்தில், அவரைக் குற்றவாளி என்று மாஜிஸ்ட்ரேட் தீர்மானித்தால் அவருக்கு ஆறு மாதத்துக்கு அதிகப்படாத யாதொரு காலவரையறைக்குக் காவல் தண்டனையாகிலும் அபராதமாகிலும் இவ்விரண்டு தண்டனையுமாகிலும் விதிக்கவேண்டும்.

---

# 18-வது அத்தியாயம்.

## சிவில் சம்மந்தமான கிரிமினல் விஷயங்களைக்குறித்து.

---

இந்த அதிகாரத்தில் செட்டிப் பிள்ளைகளுக்கு வேண்டியவரையிலுள்ள கிரிமினல் சட்டத்தை யெடுத்து எழுதப்பட்டிருக்கிறது.

கோர்ட்டார் பிறப்பிக்கும் சம்மனை நிராகரிப்பதோ அல்லது அதை சர்வ்செய்ய வொட்டாமல் தடுப்பதோ இது சம்மந்தமான விஷயங்கள் இ. பி. கோ. 10-வது அதிகாரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. யாதொரு ஜட்ஜு பிறப்பிக்கும் ஸம்மனையோ நோட்டீஸையோ உத்தரவையோ தன்பேரில்சர்வ்செய்யாமலிருக்கும் பொருட்டு ஒடி ஒளிந்தால் அது 172-வது பிரிவுப்படி குற்றமாகும். அதற்கு ஒரு மாதம் வெருங்காவல் அல்லது 500-ரூபாய் அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும். ஆனால் ஷை ஸம்மன் முதலியவற்றால்தான் கோர்ட்டுக்கு ஹாஜராகவேண்டு மென்றாவது அல்லது ஒரு தஸ்தாவேஜை ஹாஜர் செய்யவேண்டு மென்றாவது கண்டிருந்தால் 6-மாத காவலும் அல்லது 1000-ரூபாய் அபராதமும் அல்லது இரண்டும் விதிக்கப்படும். இந்தவிதம் கேஸ் செய்ய மேலே சொன்ன கவர்மெண்டு உத்தியோகஸ்தரின் சாங்கிஷன் (அனுமதி) இல்லாமல் செய்யக்கூடாது. சி. பு. கோ. விதிகள்படி பிறப்பிக்கும்

தடை நோட்டிஸ், தாத்கால இஞ்சங்ஷன், சொத்தை ஜப்தி செய்யும் உத்தரவு இவைகளின்பேரில் இந்த விதமாய் கேஸ் செய்யலாம். ஆனால் சிவில் கோர்ட்டார் வாரண்டுகளுக்கு இந்தப்பிரிவு சம்பந்தமில்லை. எவனொருவன் தன் பேரிலாவது மற்றவர்பேரிலாவது யாதொரு ஸம்மனேயோ நோட்டீஸையோ உத்தரவையோ சர்வ் செய்வதை வேணுமென்று தடுக்கிறானோ அவன் 173-வது பிரிவுப்படி குற்றவாளியாவான். மேலே சொன்னபிரிவில் கண்டபிரகாரம் தான் தண்டனை விதிக்கப்படும். தவிர மேலே சொன்னவிதம் கேஸ் செய்வதற்கு அதிகாரியின் உத்தரவுவேண்டும். சர்வ்செய்த பிறகு ஸம்மனை தூக்கி எறிவது இந்த பிரிவின்கீழ் குற்றமாகாது. 5. ம. 200. ஸம்மனை வாங்கமாட்டேனென்று சொல்லுவதும் குற்றமல்ல. 5. ம. 199. அசல் ஸம்மன் பின்பக்கத்தில் ஸம்மன் காபியை பெற்றுக்கொண்டதாக எழுதமாட்டேனென்று சொல்லுவதும் குற்றமாகாது. 20. க. 358. யாதொருவரை ஸம்மனில் கண்ட இடத்திற்கும் நேரத்திலும் வர உத்தரவு செய்யப்பட்டிருந்து அந்த விதம் வராமலாவது அல்லது வந்திருந்து கோர்ட்டார் உத்தரவன்னியில் கோர்ட்டைவிட்டு போனாலாவது 174-வது பிரிவுப்படி மேலே சொன்ன தண்டனைக்குள்ளாவான். கோர்ட்டில் ஹாஜராயிருக்கும் சாட்சி ஒருவரை வேறுதேதிக்கு வரும்படியாக வாய்மொழியான உத்தரவு கோர்ட்டார் கொடுத்தாலும் போதும். இந்த விதம் இந்தப்பிரிவின் கீழ்குற்றம் ஏற்படுத்துவதற்கு முன், முதலில் ஸம்மன் சட்டப்படி சர்வாயிருக்கவேண்டும். கேஸ் செய்வதற்கு உத்தியோகஸ்திரின் அதிகாரம்வேண்டும். தவிர எதிரி வேணுமென்று வரவில்லையென்று ஏற்படவேண்டும். ஒரு சாட்சிக்கு ஒரே நேரத்தில் இரண்டுகோர்ட்டில் வேலையிருக்கலாம். அவ்விதக்கேசுகளில் இந்தப்பிரிவின் கீழ் தண்டிக்கமாட்டார்கள். 10. வீ. ரி. 33. ஒரு கேசில் ஸம்மனில் கண்டபடி 10-மணிக்கு ஹாஜராகி சுமார் ஒரு மணிவரையில் காத்திருந்தும் வெகுநேரம் வரையில் ஜட்ஜு வரமாட்டாரென்று சொல்லப்பட்டதின் பேரில் சாட்சிகோர்ட்டை விட்டுப்போகவே அவரை இந்தப்பிரிவின் கீழ் தண்டிக்க அது பிசகென்று ஐகோர்ட்டார் தீர்மானித்தார்கள். 14. வீ. ரி. 20.

வேறொரு கேசில் ஸம்மனில்கண்ட தேதியன்று ஜட்ஜு கோர்ட்டுக்கே வரவில்லை. சாட்சியும் வரவில்லை. அதற்காக இந்தப்

பிரிவின் கீழ் தண்டிக்க முடியாதென்று சென்னபட்டணத்தில் தீர்மானமாயிருக்கிறது. 20. ம. 31. கோர்ட்டார் கணக்குகளை ஹாஜர் செய்யும்படி செய்யும் உத்தரவின்படி நடக்கத் தவறினால் அது 175-வது பிரிவுப்படி குற்றமாகும். அதற்கும் மேலே சொன்ன தண்டனைதான். தவிர கோர்ட்டார் சாங்ஷன் அன்னியில் கேஸ் செய்யமுடியாது. சாட்சிசொல்லுமுன் பிரமாணம் செய்யமாட்டேனென்று சொன்னால் அது 178-வது பிரிவுப்படி குற்றம் அதற்கு 6-மாதம் வெறுங்காவல் அல்லது 1000-ரூபாய் அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும். கோர்ட்டார் கேட்கும் கேள்விகளுக்கு பதில் சொல்ல மாட்டேனென்றால் அது 179-வது பிரிவுப்படி குற்றமாகும். அதற்கு மேலே கண்ட தண்டனை விதிக்கப்படும். யாதொரு சொத்தை கோர்ட்டார் பிறப்பிக்கும் கிரமமான உத்தரவுப்படி எடுக்கவோ அல்லது வசப்படுத்தவோ தடுத்தால் அது 183-வது பிரிவின் கீழ் குற்றமாகும். அதற்கு 6-மாதம் காவல் அல்லது 1000-ரூபாய் அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும். வாய்மொழியான ஆட்சேபணை இந்தப்பிரிவின் கீழ் தடுத்ததாக பாவிக்கப்படமாட்டாது. ஆனால் அவ்வித ஆட்சேபணையுடன் பயத்தைக் கொடுக்கும்படியான வார்த்தைகள் சொன்னால் அது குற்றமாகும். 6. ப. லா. ரி. 254. கோர்ட்டார் உத்தரவு இருந்து ஆனால் அதை நிறைவேற்றுவதில் சட்டவிரோதமான சில காரியங்கள் சொத்தை வசப்படுத்தும் உத்தியோகஸ்தர் செய்திருந்தாலும் அதைத் தடுக்கப்படாது. உதாரணமாக இறந்தவன் கொடுக்கவேண்டிய கடனுக்காக ஏ-என்பவன் வசத்திலுள்ள இறந்தவன் சொத்தின்பேரில் டிக்ரி ஏற்பட அந்த சொத்துடன் ஏ-யின் சொந்த சொத்தையும் சேர்த்துப்பிடித்தால் ஏ-என்பவன் தடுக்கலாமா தடுக்கக்கூடாதா? சென்னபட்டணம் தீர்மானப்படி தடுப்பது குற்றமாகும். 21. ம. 78. தவிர சொத்தை பிடிக்கையில் வாரண்டு கைவசம் இல்லாமலிருந்தால் அதைத் தடுப்பது குற்றமாகாது. 27 அ. 258. கோர்ட்டு உத்திரவுப்படி நடத்தும் யாதொரு ஏலத்தை வேணுமென்று நடத்தவொட்டாமல் தடுத்தல் 184-வது பிரிவுப்படி குற்றமாகும். அதற்கு 1 மாதம் காவல் அல்லது ரூபா-500 அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும். ஆனால் நல்ல எண்ணத்தோடு ஏல் சமயத்தில் தனக்கு அதில் பாத்தியம் உண்டென்றுசொல்

வந்தால் குற்றமேற்படாது. 27. அ. 258. அந்தவிதம் நடக்கும் ஏலத்தில் யாதொருவன் வாங்கவேணுமென்னும் எண்ணமில்லாமல் வேடிக்கையாக ஏலம் கேட்டாலும் தானும் அல்லது வேறுயாருக்குக்காக கேட்கிறானோ அவரும் அந்தப்படி ஏலத்தில் கேட்க சட்டம் இடம் கொடுக்கவில்லை யென்று தெரிந்து கேட்டாலும்185-வது பிரிவுப்படி 1-மாதம் காவல் அல்லது ரூபா 500 அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும். யாதொரு கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர் தான் ஏலத்தில் கேட்கவோ வாங்கவோ கூடாதென்று சட்டமிருந்தும் தானாவது வேறொருவர் பேரிலாவது அல்லது பிறருடன் கூட்டாக வாவது சேர்ந்து கேட்டாலும் வாங்கினாலும் அது 169-வது பிரிவுப் படி குற்றமாகும். சொத்தை கவர்ன்மெண்டார் எடுத்துக் கொள்ளுவதுடன் 2-வருஷ தண்டனை அல்லது அபராதம் அல்லது இரண்டும் விதிப்பார்கள். வேணுமென்று சட்ட சம்மந்தமான நடவடிக்கையில் பொய் சாட்சியம் கொடுத்தாலும் அந்த நடவடிக்கையில் உபயோகப்படுத்தும் பொருட்டு பொய் சாட்சியம் கல்பனை செய்தாலும் 7-வருஷம் தண்டனையுடன் அபராதமும் 193-வது பிரிவுப்படி விதிக்கப்படும். இந்தவிதம் கேஸ் செய்ய கிரிமினல் புரோஸீஜர் கோடு 195-வது பிரிவுப்படி கோர்ட்டார் உத்திரவு கொடுக்கவேண்டும். விவாத பத்திரங்களில் (பிறுது, ரிட்டன் ஸ்டேட்டுமெண்டு) பொய் யான உறுதிமொழி செய்தாலும் பொய்சாட்சியமாகும். ஒன்றுக் கொன்று விரோதமாயிருக்கும் இரண்டு ஸ்டேட்டுமெண்டுகள் விஷயத்தில் அவைகளை எந்த விதத்திலும் ஒற்றுமையாக்க முடியா மலிருந்தால் தான் கோர்ட்டார் தண்டிக்கவேண்டும். 28. ப. 533. ஏ-என்பவனை ஒரு இடத்தில் பார்த்ததாகவும் பிறகு ஏ-என்பவனை அந்த இடத்தில் பார்க்கவில்லை யென்றும் சாட்சியம் சொன்னால் இரண்டில் ஒன்றுகட்டாயம் பொய்யாகத்தானே இருக்கவேண்டும். ஆனால் ஒருவன் கருப்பு நிறமுள்ள குதிரையின் மேல் சவாரி செய்தானென்றும் பிறகு சாம்பல் நிறமுள்ள குதிரை பேரில் சவாரி செய்ததாயும் சாட்சியம் கொடுத்தால் இரண்டும் ஒன்றுக் கொன்று விரோதமாயிருந்தாலும் அவைகள் பொய்யாக இருக்கவேண்டிய அவசியமில்லை. குதிரைமேல் சவாரி செய்தது வாஸ்தவமாகயிருக்கக்கூடும் நிறம் சம்மந்தப்பட்ட வரையில் பிசகு ஏற்பட்டிருக்கலாம். ஆனதால் அந்தக் கேசில் கோர்ட்டார் தண்டிக்கமாட்டார்கள். ஒரு கேசில்

டையும் வேறு சிலரும் ஒரு இடத்தில் சூதாடினதை தான் பார்த்த தாக சாட்சியம் சொல்லப்பட்டது. வேறு தேதியில் அந்த சாட்சி யை கிருஸ் கேள்வி கேட்கும் காலத்தில் டீயை தனக்கு தெரியா தென்றும் அவன் சூதாடினதை தான் பார்க்கவில்லை யென்றும் சொல்ல, ஒரே வாக்கு மூலத்தில் அந்த விதம் ஏற்படும் முன்னுக்கு பின் விரோதமான சாட்சியத்தின் பேரில் தண்டனை விதிக்கக்கூடா தென்று லாயர் பாஷியம் அய்யங்கார் அபிப்பிராயப்பட்டும் மற்ற ஜட்ஜிகள் தண்டிக்கலாமென்று தீர்மானித்தார்கள். 26. ம. 55. பொய்யை வேணுமென்று சொல்லப்பட்டிருக்கவேண்டும். பொய் யென்று தெரிந்திருந்தாலும் அல்லது பொய்யென்று நம்பியிருந்தா லும் அல்லது வாஸ்தவமென்று நம்பப்படாமலிருந்தாலும் போதும், ஒருவன் கொண்டுவரும் சாக்ஷி பொய்சொல்லுவதால் சாட்சியை கொண்டு வருபவன் தண்டனைக்குள்ளாக மாட்டான். ஆனாலும் லஞ்சம் முதலானது கொடுத்து பொய் சாட்சியம் கொடுக்கும்படி செய்து அந்த சாட்சியத்தை தன் கட்சிக்கு உபயோகிப்பதால் பொய் சாட்சியம் என்னும் குற்றம் போலவே அதையும் பாவிக்கப் படும். தவிர பொய் பிரமாணப் பத்திரிகை யாதொரு கட்சிக்காரர் கொடுத்தாலும் அந்த விதமாகவே பாவிக்கப்படும்.

யாதொரு தஸ்தாவேஜை யாதொரு கோர்ட்டில் சாட்சியமாக உபயோகப்படுத்த வொட்டாமல் ஒளித்தோ அல்லது நாசம் செய் தோ அல்லது திருத்தியோ செய்தால் அது 204-வது பிரிவுப்படி குற்றமாகும். அதற்காக 2-வருஷம் தண்டனை அல்லது அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும். யாதொரு வியாஜ்ஜியத்தில் ஒருவன் பொய்யாக வேறொருவனென்று சொல்லி யாதொரு ஸ்டேட்டுமெண்டு செய்தாலும் தீர்ப்பு செய்யலாமென்று ஒத்துக் கொண்டாலும் அந்த ஆள் மாராட்டமானது 205-வது பிரிவுப்படி குற்றமாகும். அதற்கு 3-வருஷம் தண்டனை அல்லது அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும். யாதொரு வியாஜ்ஜியத்தில் ஏற் படும் டிக்கிரிக்காக நிறைவேற்ற வொட்டாமல் தன் சொத்தை மோசடியாக ஒளித்தாலும் அப்புறப்படுத்தினாலும் வேறொருவருக்கு கொடுத்தாலும் அது 206-வது பிரிவுப்படி குற்றமாகும். அந்த சொத்தை மேலே கண்ட விஷயம் தெரிந்து மோசடியாக பெற்றா லும் அல்லது அதில் தனக்கு பாத்தியமிருக்கிறதென்று சொன்ன

லும் அது 207-வது பிரிவின் கீழ் குற்றமாகும். தான் கொடுக்க வேண்டியது ஒன்றுமில்லாம லிருக்கையில் கொடுக்க வேண்டிய துண்டென்று சொல்லி டிக்ரி பிறப்பிப்பதாலும் கொடுக்கவேண்டிய தொகைக்குமேல் டிக்ரி பிறப்பிக்கும்படி செய்தாலும், தன் பேரில் ஏற்பட்டிருக்கும் டிக்ரியை தீர்த்த பிறகு தீராததுபோல் தன் சொத்தின்பேரில் மறுபடியும் நிறைவேற்றும்படி மோசடியாக செய்தாலும் அது 208-வது பிரிவுப்படி குற்றமாகும். யாதாமொருவனை கெடுக்கவோ அல்லது அருவெறுப் புண்டுபண்ணவோ பொய்யான வியாஜ்ஜியம் கொண்டு வந்தால் அது 209-வது பிரிவின்கீழ் குற்றமாகும். மேல் கண்ட குற்றங்களுக்கெல்லாம் 2-வருஷம் தண்டனை அல்லது அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும். தான் வாங்கிய டிக்கிரி தீர்ந்த பிறகு மறுபடி நிறை வேற்றினல் அது 210-வது பிரிவின் கீழ் குற்றமாகும். சாதாரணமாக டிக்கிரி ஏற்பட்ட பிறகு கடனாளிகள் ரசீது பெற்றுக்கொண்டு தொகைகளை கொடுக்கிறார்கள். பிறகு டிக்கிரிதாரர்கள் ரசீது தொகைகளை கழியாமலே நிறைவேற்று மனுகொடுக்கிறார்கள். அதன்பேரில் கடனாளிக்கு நோட்டீஸ் கொடுக்கப்பட்டு அவன் ஆஜராகி ஆக்ஷேபணை செய்யாமலிருந்தோ அல்லது செய்த ஆக்ஷேபணையை அங்கீகாரம் செய்யாவிட்டாலோ நிறைவேற்ற கோர்ட்டார் செய்யும் உத்திரவின்பேரில் தான் இந்த பிரிவின் கீழ் குற்றம் பூர்த்தியாகும். அதாவது நிறைவேற்று மனு போட்டவுடனே குற்ற மாகாதென்பது கருத்து 13. ப. ரி. 1902. கடனாளி சொல்லும் ஆக்ஷேபணையின்பேரில் டிக்கிரியை நிறைவேற்ற கோர்ட்டார் உத்திரவு செய்யாவிட்டால், அப்போது குற்றம் ஏற்படாது. 23. க. 971. தன்னை பிடிக்காமல் தடுத்தாலும் பிறரை பிடிக்கவொட்டாமல் தடுத்தாலும் அல்லது அப்படி பிடித்த பிறகு தான் தப்பியோடினாலும் பிறரை தப்பி ஓடுவித்தாலும் அது 225-வது பிரிவுப்படி குற்றமாகும். 6-மீ தண்டனை அல்லது அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும். டிக்கிரி நிறைவேற்றவரும் பேதா, வாரண்டை தன் வசம் வைத்திருக்கவேண்டும். ஏனென்றால் அதைப் பார்த்து அதில் கண்டிருக்கும் தொகையை கொடுத்தால் கடனாளியை உடனே விட்டு விடவேண்டும். ஆனதால் அந்த விதம் வாரண்டில்லாமல் கடனாளியை பிடித்தால் கடனாளிதான் தப்பி ஓடலாம். 5. அ. 318 ; 23. க. 896. வாரண்டில் பேர் சரியாக எழுதியிருக்க

வேண்டும். குணராஜ சிங் மகன் டேபிசிங்கை பிடிக்கவேண்டு மென்று வாரண்டில் எழுதியிருக்க றெங்கலால் சிங் மகன் டேபி சிங்கை பிடிக்க அவர் தப்பி ஓடினது குற்றமாகாதென்று தீர்மா னிக்கப்பட்டது. 28. க. 399. ஏஜென்டின் பேரில் நம்பிக்கை மோசம் செய்ததாக கேஸ்கொண்டு வரவேண்டுமானல் 409-வது பிரி வுப்படி கொண்டுவரவேணும். அதில் ருஜு செய்யவேண்டிய அம் சங்களாவன. எதிரி ஏஜென்டாயிருந்தாரென்றும், இந்த தோரணி யில் சொத்து அவர் வசம் கொடுக்கப்பட்டது அல்லது அவர் விசா ரணையிலிருந்ததென்றும் அவர் அது சம்மந்தமாய் நம்பிக்கை மோசம் செய்தாரென்றும் ருஜு செய்யவேண்டும் அதற்கு ஆயசு வரையில் தண்ணீர்மேல் ஏற்றுவார்கள் அல்லது 10-வருஷம் தண் டனையும் அபராதமும் போடுவார்கள். கூட்டு பங்கு்க்காரர்களுக்குள் ளும் நம்பிக்கை மோசக்கேஸ் கொண்டுவருகிறதை இந்த தேசத்தில் நாம் பார்க்கவில்லையா? இது சம்மந்தமாய் சமீப காலத்தில் கல் கத்தா ஐகோர்ட்டார் செய்திருக்கும் தீர்மானத்தை செவ்வையாக கவனிக்கவேண்டும். கூட்டுப்பங்குக்காரர்மேல் கேசு 406-வது பிரி வுப்படி போடுமுன் அவரை கணக்கு கொடுக்கும்படி கேட்கவேண் டும். ஏனென்றல் ஒவ்வொரு கூட்டுப்பங்குக் காரருக்கும் தன்வசம் வரும் பணத்தை செலவுசெய்ய அதிகாரமுண்டு. ஆனதால் அந்த விதம் கணக்கு கொடுக்கும்படி கேட்காத கேசுகளில் நம்பிக்கை மோசம் ஏற்படாதென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. 35. க. 1108.

சில சமயங்களில் பர்மாக்காரர்கள் நெல்லு அல்லது வேறு தானியம் வாங்கி கட்டுவதற்காக ஏராளமான பணத்தை வாங்கிக் கொண்டு அந்தவிதம் செய்யாமலிருந்து விடுகிறார்கள். ஒரு கேசில் அந்த விதம் நெல்லுவாங்கி சப்ளை செய்வதாக ரூ. 1355-வாங்கிக் கொண்டு அப்படி வாங்காது சொந்தப்பிரயோஜனம் செய்துகொண் டவனை 406-வது பிரிவின் கிழ் தண்டித்தார்கள் 3. லோ. ப. ரூ-200. இன்னும் சில கேசுகளில் காண்டிராக்ட் வேலை சம்மந்தமாய் செட் டிப்பிள்ளைகளுடன் செய்யும் எக்ரிமெண்டில் பணம் கடன் வாங்குகி றவன் வேலை சம்மந்தமாய் தனக்கு கிடைக்கும் எல்லா செக்குகளை யும் செட்டிக்கு கொடுப்பதென்றும் ஷை யாருக்குத் தெரியாமல் பணமாக்குகிற தில்லையென்றும் கண்டெழுதி வருகிறார்கள். மாந்

தனியில் 1908-ம் வருஷத்தில் நடந்த கேசில் இதைப்போல எக்ரிமெண்டு பிறந்திருந்தது. வாதி சுடத்ராயிபிசசுர்தாஸ் என்பவர் தனக்கு தெரியாமலே இரண்டு செக்குகளை எதிரி அகமபிஸ்திரி பணமாக மாற்றிவிட்டதாய் நடவடிக்கை எடுக்க, அது 406-வது பிரிவுப்படி குற்றமாகுமென்று தீர்மானிக்கப்பட்டது. அ. ப. ரூ. 1908. 138.

யாதொரு சொத்தை திருட்டு சொத்தென்று தெரிந்தாவது அப்படி தெரிந்துகொள்ள காரணமிருந்தாவது மோசமான எண்ணத்துடன் பெற்றுக்கொண்டாலும் வைத்திருந்தாலும் அது 411-வது பிரிவுப்படி குற்றமாகும். அதற்கு 3-வருஷம் தண்டனை அல்லது அபராதம் அல்லது இரண்டும் விதிக்கப்படும். ஆனால் ஆசாமிக்காரன் கொண்டுவரும் நகையை நிறுத்து பப்ளிக்காக புரோநோட்டில் கையெழுத்து வாங்கி நகையின் விவரத்தையும் குறித்து கிரமமான தொகை அதன் பேரில் கொடுத்தால் குற்றமாகாது.

பொதுவாக கிரிமினல் கேசுகளுக்கு காலாவதி கிடையாது. 10. அ. 350. ஆனால் எந்த கிரிமினல் சட்டத்திலாவது கெடுவு காலம் காணப்பட்டிருந்தால் மட்டில் அந்த கெடுவு காலத்திற்குள் நடவடிக்கை செய்யவேண்டும். 20. ப. 543.

ஒரே விஷயத்தைப்பற்றி சீவிலிலும் கிரிமினலிலும் நடவடிக்கைகள் ஏற்பட்டால் எந்த நடவடிக்கையை நிறுத்தவேண்டியது என்று கேட்டால் பொதுவாக கிரிமினல் நடவடிக்கை முந்தியும் அதற்குப் பிந்தி சிவில் நடவடிக்கையும் நடத்தப்பட்டிருந்தால் கிரிமினல் நடவடிக்கையை சிவில் நடவடிக்கை முடியுமட்டில் நிருத்திவைக்க முடியாது. 6. இ. கே. 181. ஒரு கேசில் ஒரு ப்ராமிசரி நோட்டின்பேரில் கொண்டு வந்த வியாஜ்ஜியத்தில் பிரதிவாதி ஒரு கடிதத்தை தாக்கல் செய்தார். வாதி அது போர்ஜரி என்று சொல்லி உடனே கிரிமினல் தரப்பில் நடவடிக்கை நடத்த ஐகோர்ட்டார் கடிதம் போர்ஜரியா அல்லவா என்னும் விஷயத்தை முக்கியமாய் சிவில் கேசில் விசாரிக்கவேண்டிய அம்சமாயிருப்பதால் கிரிமினல் கேசை நிருத்தினார்கள். 7. இ. கே. 317.

---

PRINTED BY THOMPSON AND CO., AT THE "MINERVA" PRESS, MADRAS.

